# 1995

வேதம் காண்பிக்கும் வழியில்
என்னை நீர் நடத்திடும்;
இன்றைக்கும் ஒவ்வோரடியில்
என்னை ஆதரித்திடும்;
எனக்கு நீர்மாத்திரம்
பத்திர அடைக்கலம்.

* * *

இவ்விடம் வாழ்த்து சீட்டு ஒட்டவும்

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூறும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே . . .

## ஆசிரியர் உரை

"நீங்கள் இடறலடையாதபடிக்கு இவைகளை உங்களுக்குச் சொன்னேன் அவர்கள் உங்களை ஜெப ஆலயங்களுக்குப் புறம்பாக்குவார்கள்; மேலும் உங்களைக் கொலை செய்கிறவன் தான் தேவனுக்கு தொண்டு [ஊழியம்] செய்கிறவன் என்று நினைக்குங் காலம் வரும்". யோ. 16:1 என்று இயேசு சொன்னார். அப்படியே மத வைராக்கியம், சபை வைராக்கியம், உபதேச வைராக்கியங்களினால் குருடாகி தங்களோடு ஒத்துப் போகாதவர்களை ஒழித்துவிடவேண்டும், ஒடுக்கிவிட வேண்டும், அடக்கிவிட வேண்டும். தங்களுக்கு இரண்டு கண்களும் பொட்டையாய்ப் போனாலும் பாவமில்லை. மற்றவனுக்கு ஒரு கண்ணாவது பொட்டையாக வேண்டு மென்று நினைக்கும் தீயவர்கள் பெருகிப்போன காலமிது. அதிலும் அவக்கேடு என்னவென்றால் தான் தேவனுக்கு தொண்டு செய்கிறேன் என்று நினைத்து திரிவது தான். தேவஜனங்கள் எச்சரிக்கையாக இருப்போமாக. பிறரை எரிச்சலுடன் தூஷிப்பதும், செய்திகளைத் திரித்துக் கூறுவதும் ஒருவகை அசுத்த ஆவியே. இப்படிப்பட்ட அசுத்த ஆவிகளுக்கு இடங்கொடாதிருங்கள். அப்படிப் பட்டவர்களோடு தொடர்பும் கொள்ளாதிருங்கள். நீங்கள் கேள்விப்படுகிற துர்ச் செய்தியை நன்றாய் விசாரியுங்கள்; முடிந்தால் நேரடியாக சந்தித்து விசாரியுங்கள்; அல்லது தொடர்பெடுத்து உண்மைதானா என்று சரியாய் அறியாமல் அடுத்தவர்களுக்குச் சொல்லாதிருங்கள். சமீபத்தில் ஒருகுருடர் தன்னைச் ஜாமக்காரன் என்று சொல்லிக் கொண்டு பிதற்றியிருக்கிறார். குருடனாயிருக்கிறது மட்டுமல்ல, செவிடனுமாயிருக்கிறதையும் கண்டு பிடித்தோம். குருடனான ஜாமக்காரரைக் காவலாளியாக எண்ணிப் பின்பற்றுகிறவர்களுக்கு ஐயோ! குருடனுக்கு குருடன் வழிகாட்டினால் இருவரும் குழியில் விழுவார்களல்லவோ. பிறரை தூஷிக்கும் இவர்களுக்கு கலிக்கம் போடுவோம். அவர்கள் தங்களைத் தேவனுக்குத் தொண்டு செய்கிறோம் என்று நினைக்கிறார்களே. பெரிய பெரிய ஆண்டவன்மார்களும் மதாதிபதிகளும் தங்கள் முற்பிதாக்களும் [பட்டத்தார்] தாங்களும் தவறிழைத்தோம் தவறுக்காக வருந்துகிறோம் என்று கீழிறங்கியிருக்கிறார்கள்; கீழிறங்கி வருகிறார்கள்; ஆனபடியால் இப்படிப்பட்டவர்கள் அப்போதும்சரி இப்போதும்சரி புள்ளிக்காரனுடைய ஏஜெண்ட்டுகளே வெளி. 12:10. நாம் சத்தியத்தை சத்தியமாய்ச் சொல்லுவோம்; சத்தியத்தையே பின்பற்றுவோம். இந்த ஆண்டுமுழுவதும் இறைஆசீர்வாதம் சூரியனைப்போலும், பனியைப்போலும் இறங்குவதாக. கர்த்தருடைய நாமத்தில் ஆசீர்வதிக்கிறோம்.

கிறிஸ்துவுக்குள,

N. Lazar

[CHIEF PASTOR N. LAZAR]

# கிறிஸ்தவ மார்க்கம் (தொடர்ச்சி)

## கர்த்தருடைய பந்தி

இது சபையின் முக்கிய உபசேங்களில் ஒன்று. இயேசுவானவருடைய பரிசுத்த இரத்தம் நமக்காக சிந்தப்பட்டதையும், அவருடைய சரீரம் நமக்காக அடிக்கப்பட்டதையும் நினைவு கூரும்படி நடக்கிற ஒன்றுதான் கர்த்தருடைய பந்தி என்று அழைக்கப்படுகிறதாகும்.

இரட்சிக்கப்பட்டு ஞானஸ்நானம் பெற்றவர்கள் பரிசுத்தாவியும் பெறவேண்டுமென்பது அப்போஸ்தலர்களுடைய உபதேசம் [அப். 1:5,8; 2:38; 8:14-18; 10:44-46; 19:1,2] பரிசுத்தாவியின் அபிஷேகம் பெற்றோரே கிறிஸ்துவின் மறை உடலில் ஸ்நானம் பண்ணப்பட்டவர்கள், இணைக்கப்பட்டவர்கள். ஞானஸ்நானம் என்றாலே, தண்ணீர் முழுக்கையும் பரிசுத்தாவியின் ஸ்நானத்தையும் சேர்த்தே வேதத்தில் கூறப்பட்டுள்ளது.

எபிரேயர் ஆறும் அதிகாரத்தில் [6:2] ஸ்நானங்களுக்கடுத்த உபதேசம் என்று எழுதப்பட்டுள்ளது. ரோமர் 6-ம் அதிகாரம், 1 கொரி. 12:13; கொலோ. 2:12 ஆகிய இடங்களில் ஞானஸ்நானம் என்று சொல்லப்பட்டிருக்கிறது கிறிஸ்துவுக்குள்ளாகும் அனுபவமாகும். அது கிறிஸ்துவின் சரீரத்துக்குள்ளாக்கப்படுவதாகும் (கலா. 2:27).

ஆனபடியால், புதிய ஏற்பாட்டின் விசுவாசியென்றால் ஜலத்தினாலும், ஆவியினாலும் ஸ்நானம் பெற்றவனே (யோ. 3:3,5)

கர்த்தருடைய பந்தியின் முக்கியத்துவங்கள்:-

1. என்னை நினைவு கூரும்படி இதைச் செய்யுங்கள் என்பது இயேசுவானவரின் கட்டளை [1 கொரி. 11:23-25; லூக். 22:19].

2. இராப்போஜனத்தில் பங்குபெறுகிறவன் தேவனோடு ஐக்கியப்பட்டவனாயிருக்கிறான். என்பதைத் தெரிவிக்கிறது (1 கொரி. 10:16).

3. இயேசுவின் மரணத்தை நினைவு கூருகிறது [1 கொரி. 11:24].

4. தேவனுடைய பிள்ளைகளுக்குள் ஐக்கியத்தைக் காட்டுகிறது [1 கொரி. 10:16,17].

5. தேவனுடைய ராஜ்ஜியத்தில் நாமனை வரும் அவரோடே கூட பந்தியிருப்போம் என்பதைக் காட்டுகிறது [மத். 26:29].

6. இயேசுவானவர் இதுவரை வரவில்லையென்பதையும் அவர் திரும்ப வருவார் என்பதையும் காட்டுகிறது (1 கொரி. 11:26).

7. இயேசுவானவர் நமக்காக மரித்தார். அடக்கம் பண்ணப்பட்டார் உயிர்த்தெழுந்தார் அவர் சீக்கிரமாய் வருவார் என்பதையும்; நாம் பரிசுத்த ஜீவியம் செய்ய வேண்டுமென்பதையும் ஞாபகப்படுத்துகிற ஒன்றுதான் கர்த்தருடைய பந்தி [1 கொரி. 11:24-29].

இராப்போஜனத்தில் பங்கு பெறுகிறவர்களின் தகுதிகள்:-

1. இரட்சிக்கப்பட்டு ஞானஸ்நானம் பெற்று பரிசுத்தாவியின் அபிஷேகம் பெற்று மாறுபாடான சந்ததியை விட்டு விலகினவர்கள் திருவிருந்தில் பங்கு பெறலாம் (அப். 2:38-42).

2. வேதாகமத்துக்கு விரோதமான ஐக்கியம் வைத்துக் கொள்ள கூடாது. அது பிசாசின் மேஜையாகும் (1 கொரி. 10:20,21)

உட்பிரிவு:-

A. இரட்சிக்கப்படாதவர்களின் இராப்போஜனத்தை தேவன் ஏற்றுக் கொள்ள மாட்டார். ஆகையால் தேவன் இரட்சிக்கப்படாதவர்களோடு கூடக் கூடிய இராப்போஜனம் பாவத்தால் தீட்டுப்படுவதால் அதை கர்த்தர் ஏற்றுக்கொள்வதேயில்லை.

B. இதேப்பிரகாரம் இராப்போஜனம் கொடுக்கத் தகுதியில்லாதவர்களிடம் பெறுவதையும் தேவன் ஏற்றுக்கொள்ளமாட்டார்.

C. வேதாகமத்தின் ஒழுங்கின்படி நடத்தப்படாத இராப்போஜனத்தையும் தேவன் ஏற்றுக் கொள்ளமாட்டார்.

3. ஜீவியத்தில் பரிசுத்தமில்லாதவர்கள் இராப்போஜனத்தில் பங்கு பெறக் கூடாது.

4. நியாயப்பிரமாணத்தில் பஸ்கா என்கிற பண்டிகையைக் காணுகிறோம். பஸ்காப் பண்டிகையின் நாளிலே ஒரு ஆட்டுக்குட்டியை அடித்து, இரத்தத்தை எடுத்து, வீட்டு வாசல்களின் நிலைக்கால்களிலும், மேற்பக்கத்திலும் பூச வேண்டும். சங்கார தூதன் நடுராத்திரியில் வரும்போது, இரத்தம் பூசப்படாத வீடுகளிலுள்ள முத்தமகன் கொல்லப்படுவான். இதுபோல எகிப்தாகிய பாவ அடிமைத்தனத்திலிருக்கிறவர்களுக்கு [ரோம. 7:14] பஸ்கா ஆட்டுக்குட்டியாகிய (1 கொரி. 5:7) இயேசுகிறிஸ்துவின் ரத்தத்தினல் கிடைக்கும் மீட்பைக் குறிக்கிறது.

இப்படி மீட்கப்பட்டவர்கள் செங்கடலைக் கடந்து, வனாந்தரத்துக்கு வந்து பஸ்காவை ஆசரிக்க வேண்டும் (யாத். 12:42; எண். 9:4; உபா. 16:1-18). இதுபோல எகிப்தாகிய உலகத்திலிருந்து பஸ்கா ஆட்டுக்குட்டியானவராகிய இயேசுகிறிஸ்துவின் ரத்தத்தால் மீட்கப்பட்டவர்கள், செங்கடலாகிய ஞானஸ்நானத்தைப் பெற்று [1 கொரி. 10:1-3] வனாந்தரமாகிய பிரித்தெடுக்கப்பட்ட (மாறுபாடான சந்தியை விட்டு விலகி) அனுபவத்திற்குள் வந்தவர்கள் நினைவு கூரும் பஸ்காவாகிய இராப்போஜனத்தில் பங்கு பெறவேண்டும்.

பஸ்கா:-

இயேசு, சிலுவையின் மரணம் இதனல் இரட்சிப்பு உண்டாகிறது.

செங்கடல்:-

ஞானஸ்நானத்தின் நிழல். இஸ்ரவேலர்கள் செங்கடலைக் கடந்து மோசேக்குள்ளாக ஞானஸ்நானம் பெற்றதுபோல விசுவாசிக்கிறவர்கள் ஞானஸ்நானம் பெற்று கிறிஸ்துவுக்குள்ளாக வேண்டும் (கலா. 3:27).

வனாந்திரம்:-

அவிசுவாசிகளை விட்டு பிரித்தெடுக்கப்பட்ட அனுபவம் அப். 2:40.

5. அந்நிய ஜாதிக்காரர்கள் சாப்பிடக் கூடாது. யாத். 12:4.

ஆகையால் நீங்கள் அந்நியரும் பரதேசிகளுமாயிராமல் பரிசுத்தவான்களோடே ஒரே நகரத்தாரும் தேவனுடைய வீட்டாரும் [எபே. 2:19] என்று பவுல் சொல்லுகிறபடியால் அந்நிய புத்திரர்கள் என்பது இரட்சிக்கப்படாதவர்களைக் குறிக்கும். அந்நியர்கள் பஸ்காவை புசிக்கக் கூடாததுபோல இரட்சிக்கப்படாதவர்கள் திருவிருந்தில் பங்கு பெறக்கூடாது.

6. பணத்தினல் கொள்ளப்பட்ட அடிமையானவன் புசிக்கலாம். அழிவுள்ள வஸ்துக்களாகிய வெள்ளியினலும், பொன்னினலும் மீட்கப்படாமல் குற்றமில்லாத மாசற்ற ஆட்டுக்குட்டியாகிய இயேசுகிறிஸ்துவின் விலையேறப்பெற்ற ரத்தத்தினலே நம்மை மீட்டுக் கொண்டார் (1 பேது:1 18,19). பணத்தினல் கொள்ளப்பட்ட அடிமையானவன் பஸ்காவைப் புசிக்கிறது போல, இயேசுவின் இரத்தத்தினல் மீட்கப்

பட்டவர்கள் இராப்போஜனத்தில் பங்கு பெறலாம்.

7. விருத்தசேதனம் பண்ணப்பட்டவர்கள் பங்கு பெறலாம் (யாத். 12,44).

புதிய ஏற்பாட்டில் விருத்தசேதனம் என்பது மறுபடியும் பிறப்பதைக் காட்டுகிறது [அப். 7:51; ரோம. 2:28,29]. விருத்தசேதனம் பண்ணப்படாதவர்கள் பஸ்காவில் பங்குபெறக் கூடாதது போல மறுபடியும் பிறவாதவர்கள் ராப்போஜனத்தில் பங்கு பெறக் கூடாது.

8. பரதேசியும், கூலியாளும் புசிக்க வேண்டாம் (யாத் 12:45). நாம் அந்நியரும் பரதேசிகளும், கூலியாட்களுமல்ல நாம் தேவனுடைய பிள்ளைகளாயிருக்கிறோம் (எபே. 2:12).

9. ஒருவன் பிரேதத்தினால் தீட்டுப்பட்டிருந்தாலும் பிரயாணமாய் தூரமாய் போயிருந்தாலும் கர்த்தருக்குப் பஸ்காவை ஆசரிக்க வேண்டாம். அவர்கள் அதை இரண்டாம் மாதம் ஆசரிக்க வேண்டும். [முதலாம் மாதம் ஆசரிக்க கூடாது எண். 9: 9-11].

பிரேதம் என்பது அக்ரமங்களிலும் பாவங்களிலும் மரித்திருக்கிறவர்களை அவிசுவாசிகளைக் குறிப்பிடுகிறது [எபே. 2:1].

தூரப்பிரயாணம் - இருதயத்தில் தேவனை விட்டு தூரமாயிருப்பதைக் குறிப்பிடுகிறது (எபே. 2:13; ஏசா. 59:2). அதாவது. அவிசுவாசிகளாய் இருதயத்தில் தீட்டுப்பட்டவர்களும், தேவனிடத்திலிருந்து தூரப்பட்டவர்களும் அந்த தடவை நடைபெறுகிற இராப்போஜனத்தில் பங்குபெறாமல் தீவிரமாய் தங்களைப் பரிசுத்தப்படுத்தி அடுத்த தடவை நடக்கிற ராப்போஜனத்தில் பங்கு பெற வேண்டும்.

எகிப்திலிருந்து புறப்பட்ட இஸ்ரவேல் புத்திரர் வனாந்தரத்தில் வந்த பிறகும் சோர்புண்டான உடனே அவர்களுக்கு எகிப்தின் பாவஎண்ணம் உண்டாயிற்று. அவர்கள் இருதயத்தில் எகிப்துக்குப் போனார்கள். அதுபோல ஆவிக்குரிய சோர்வு உண்டாகும் போது விசுவாசிகளுக்கு விட்டு வந்த பாவங்களும், ஆராதனைகளும் நினைவு வரலாம். அப்படிப்பட்ட சோர்வு வந்தால் அவைகளிலிருந்து விடுபட்டு பரிசுத்தம் அடைந்த பின்பு தான் ராப்போஜனத்தில் பங்கு பெற வேண்டும்.

10. ஒருவன் சுத்தமுள்ளவனாகவும், பிரயாணமாய் போகாதவனாயுமிருந்தும் அவன் பஸ்காவை ஆசரிக்காமற்போனால் அந்த ஆத்துமா கர்த்தரின் பலியை குறித்த காலத்தில் நினைவு கூரும் பஸ்காவை செலுத்தாமற்போனபடியால் ஜனத்தாரில் இராமல் அறுப்புண்டு போவான் (எண். 9:13). ஒருவன் ஜீவியத்தில் பரிசுத்தமுள்ளவனாயிருந்தும் ராப்போஜனத்தில் பங்கு பெறாவிட்டால் அவனுக்கு தண்டனை உண்டு ஏனென்றால் நான் வருமளவும் என்னை நினைவு கூரும்படி இதைச் செய்யுங்கள் என்று கட்டளையிட்டதை அவன் மீறுகிறான்.

(தொடரும்)

"ஆதலால் பழைய புளித்தமாவோடே அல்ல, துர்க்குணம் பொல்லாப்பு என்னும் புளித்தமாவோடும் அல்ல, துப்புரவு உண்மை என்னும் புளிப்பில்லாத அப்பத்தோடே பண்டிகையை ஆசரிக்கக்கடவோம்" 1 கொரி. 5:8.

# திருச்சபை

(தொடர்ச்சி)

அடித்தளம்:-

போடப்பட்டிருக்கிற அஸ்திபாரமாகிய இயேசுகிறிஸ்துவையல்லாமல் வேறே அஸ்திபாரத்தை போட ஒருவனாலும் கூடாது (1 கொரி. 3:11). அடித்தளம் அல்லது அஸ்திபாரம் என்பது, சாலோமோன் கட்டிய தேவலாய கற்கள் 19 அடி நீளமும், 4 அடி அகலமும், 8 அடி உயரமுமமாயிருந்தது. ஒரு தேவலாயத்தின் அடிக்கற்கள் இவ்வளவு பெரிய வடிவில் அமைந்திருப்பதற்கு ஒரு நல்ல காரணம் உண்டு. மூலை தலைக்கல்லின் அளவு அக்காலத்தில் அவ்வண்ணமாயிருந்தது.

அந்த மூலைக்கல்லின் அளவுகளினாலேயே முழு கட்டடத்தின் ஆழம் பார்க்கப் படுகிறது. கட்டடத்தின் படுக்கைநிலை, செங்குத்தான நிலை, இவற்றின் அளவுகளெல்லாம் முடிவில் மூலைக்கல்லுடன் தொடர்புடையனவாக இருந்தன. மூலைத்தலைக்கல் அதனுடைய பருமனாலும், அது மற்ற அளவுகளுக்கு அடிப்படையாக அமைவதாலும், அடித்தளத்தின் இன்றியமையாத ஒரு பகுதியாக அது அமைந்து விடுகிறது.

எனவே இயேசுவானவரைப் பற்றி இவ்வாறு சொல்லலாம். கடவுளுடைய வீட்டில் மூலைத்தலைக்கல்லாக அவர் இருக்கிறார். அவருக்குள் எல்லாம் உடன் அமைந்திருக்கிறது. அல்லது இசைவாய் கூட்டி கட்டப்பட்டிருக்கிறது.

ஆம்! அவர் [இயேசு கிறிஸ்து] திருச்சபையின் ஆவியின் வாழ்க்கைக்கு அடித்தளமாக இருக்கிறார்.

கடவுளது வீட்டையோ, ஆலயத்தையோ கட்டுவதில் காணப்படும் மிக முக்கியமான காரியம் தலைக்கல்லின் திட்டவட்டமான அளவுகளை அறிந்து கொள்வதாகும். கிறிஸ்து எண்ணற்ற வழிகளில் திருச்சபைக்கு அடித்தளமாக இருக்கிறார். நாம் இதனுடைய பல கூறுகளை ஆராய்ந்தால் அது விளங்கும். ஒரு சில அளவுகளை ஆராய்வோம்.

அவர் திருச்சபையின் ஆவியின் வாழ்க்கைக்கு அடித்தளமாக இருக்கிறார். மூலைக்கல்லின் அமைப்பின்படி நம்முடைய ஆவியின் வாழ்க்கையை அமைத்துக் கொள்வதில் நாம் எந்த அளவுகளைப் பின்பற்ற வேண்டும். நாம் மூலைத்தலைக்கல்லை அளந்து அறிதலின் மூலம் நாம் நம்முடைய ஆவியின் வாழ்க்கையை கட்டுவதற்கான விளக்க விபரங்களை காணலாம்.

பல அளவுகளை ஒரே நேரத்தில் நாம் அவசரப்பட்டு பார்ப்பதைவிட ஒரு சில அளவுகளைப் பார்ப்போம். நாம் கவனமாய்ப் பார்ப்பதன் மூலம் நமது ஆவியின் வாழ்க்கை ஒரு மரணம் நிகழ்ந்த பின்னரே தொடங்குகிறது என்பதை அறிகிறோம்.

இயேசுவானவர் நமக்கு கோதுமை மணியின் உவமையைச் சொல்லுகிறார். கோதுமை மணியானது நிலத்தில் விழுந்து சாகாவிட்டால் தனித்திருக்கும்; செத்ததேயாகில் மிகுந்த பலனைக் கொடுக்கும் (யோ. 12:24). இந்த அளவு இயேசுவின் வாழ்க்கையில் தெளிவாக காணப்படுகின்றது.

1. பெத்லகேம் மாட்டுத்தொழுவத்துக்கு வருவதற்காக அவர் பரலோகத்தின் மகிமைகளுக்கு மரித்தார்:-

ஆதித்திருவார்த்தை மனித உருவில் பிறப்பதற்கு எவ்வளவு பெரிய அருள் பாலித்தார் என்பது இதன் மூலம் விளங்குகிறது. அவர் தேவனுடைய ரூபமாயிருந்தும், தேவனுக்குச் சமமாயிருப்பதைக் கொள்ளையாடின பொருளாக எண்ணாமல் தம்மைத்தாமே வெறுமையாக்கி அடிமை

யின் ரூபமெடுத்து மனுஷர் சாயலானார் (பிலி. 2:6,7). இந்த செய்கையில், இயேசு ஆவியின் வாழ்க்கைக்கு பெருமையின் மரணம் ஒன்று தேவை என்பதை கற்பித்துள்ளார்.

2. அவர் தம்முடைய சரீரபிரகாரமான பசி ஆர்வங்களை தீர்த்துக்கொள்ளும் ஆசைக்கு மரித்தார்:-

பசியுள்ளவராகயிருந்தார், சரீரத்தின் பசியை சாத்தான் கருவியாக கொண்டு சாத்தான் சொன்ன ஆலோசனைக்கு இயேசு மரண அடிகொடுப்பதை பார்க்கிறோம். மனுஷன் அப்பத்தினாலே மாத்திரமல்ல தேவனுடைய வாயிலிருந்து புறப்படுகிற ஒவ்வொரு வார்த்தையினாலும் பிழைப்பான் என்று எழுதியிருக்கிறதே என்றார் (மத். 4:4).

நமது வாழ்க்கை சரீர தேவைகளைத் திருப்தி செய்து கொள்வதிலும், நமது வாழ்க்கையின் சுகத்திலும், ஆடம்பரத்திலும், நமது சரீரம் விரும்பும் ஆசைகளை நாம் மறுப்பதும், நாம் கேள்விப்படாத செய்தியாகவே ஒருவேளை இருக்கலாம். இப்போதும் கூட நாம் ஆவியின் வாழ்க்கை வாழ விரும்பினால் தேகத்தின் இச்சைகளை மறுக்க வேண்டும். இயேசுவுக்கு நாற்பது நாட்கள் சோதனைக்குப் பின்பு இருந்த பசியைவிட அவர் மற்ற வேளைகளில் பசியாயிருந்தபோது அந்த பசி குறைவாயிருந்ததாக நாம் நினைக்க முடியாது.

சந்தேகத்துக்கிடமின்றி அவர் சரீரத்தின் படி வாழாமல் ஆவியின்படி வாழ வேண்டுமென்றால் வாழ்க்கையின் பல நிலைகளில் பசியுள்ளவராக இருந்திருக்க வேண்டும். நாம் நம்முடைய மேன்மையான இயற்கை விருப்பங்களை திருப்தி செய்து கீழ்த்தரமான சுபாவங்களில் பசித்தேவைகளை ஒதுக்கிவிட உடனே ஆவன செய்ய வேண்டும். இல்லையென்றால் வேறு எதிர்மாறான வாழ்க்கை வாழவேண்டியவர்களாவோம்.

சரீரத்தின் இச்சைகளைத் திருப்திபடுத்தாமல் மறுப்பதின் மூலம் ஒரு மரணம் கட்டாயம் நம்மில் இடம் பெறவேண்டும். இது ஆவியின் வாழ்க்கையில் தொடர்ந்து செயல்பட வேண்டிய ஒன்றாகும்.

3. இயேசு பழிவாங்கும் பண்புக்கும் பண்பின் விருப்பத்திற்கும் மரித்தார்:-

இயேசு பிறரை பழிவாங்குமாறு சோதிக்கப்பட்டார். ஆம், அவர் நம்மைப் போல் எல்லாவகையிலும் சோதிக்கப்பட்டார் என்றாலும் அவர் பாவஞ்செய்யவில்லை. உலகத்தில் அவரை வெறுத்தவர்கள் மீது பழிவாங்க வேண்டுமென்ற எண்ணத்தின் சோதனை அவருக்கு இருந்திருக்கலாம். அவரை எவ்வளவு அநீதியாக நடத்தினார்கள். அவர் நீதி விசாரணை செய்யப்பட்டபோது மட்டுமல்ல இன்னும் பல நேரங்களில் பல விதங்களில் அவர் அநீதியாய் நடத்தப்பட்டார். இருந்தபோதிலும் பழிவாங்குதலை தமது தந்தைக்கே விட்டுவிட்டார்.

நாம் ஆவிக்குள்ளாக நமது வாழ்க்கையை மூலைத்தலைக்கல்லாகிய கிறிஸ்துவின்படி அமைத்து கொள்ளுகிறவர்களாயிருந்தால் நமது வாழ்க்கையில் இந்த பழிவாங்கும் பண்புக்கு கண்டிபபாக ஒரு மரணம் இடம் பெறவேண்டும்.

4. சகிப்புத்தன்மை இல்லாத பண்புக்கும் அருவருப்புக்கும் ஆண்டவருடைய இருதயத்தில் ஒரு மரணம் இடம் பெற்றது:-

எத்தனையோ முறை கிறிஸ்துவின் பொறுமை சோதிக்கப்பட்டது. நாள் முழுவதும் உபதேசம் செய்து நோயாளிகளை குணமாக்கிய பிறகு தோழமை அன்புக்காக சீடர்களிடம் திரும்பியபோது ஆண்டவர் அங்கே அவர்களிடம் மாம்சத்துக்குரிய பண்புகளையும் தன்னலத்தையுமே கண்டார். இத்தகைய நேரங்களில் அருவருப்பும், பொறுமையற்ற மனநிலையுமே தோன்றும். ஆனல் இத்தகையநிலை நம்

யின் ரூபமெடுத்து மனுஷர் சாயலானர் (பிலி. 2:6,7). இந்த செய்கையில், இயேசு ஆவியின் வாழ்க்கைக்கு பெருமையின் மரணம் ஒன்று தேவை என்பதை கற்பித்துள்ளார்.

2. அவர் தம்முடைய சரீரபிரகாரமான பசி ஆர்வங்களை தீர்த்துக்கொள்ளும் ஆசைக்கு மரித்தார்:-

பசியுள்ளவராகயிருந்தார், சரீரத்தின் பசியை சாத்தான் கருவியாக கொண்டு சாத்தான் சொன்ன ஆலோசனைக்கு இயேசு மரண அடிகொடுப்பதை பார்க்கிறோம். மனுஷன் அப்பத்தினலே மாத்திரமல்ல தேவனுடைய வாயிலிருந்து புறப்படுகிற ஒவ்வொரு வார்த்தையினலும் பிழைப்பான் என்று எழுதியிருக்கிறதே என்ருர் (மத். 4:4).

நமது வாழ்க்கை சரீர தேவைகளைத் திருப்தி செய்து கொள்வதிலும், நமது வாழ்க்கையின் சுகத்திலும், ஆடம்பரத்திலும், நமது சரீரம் விரும்பும் ஆசைகளை நாம் மறுப்பதும், நாம் கேள்விப்படாத செய்தியாகவே ஒருவேளை இருக்கலாம். இப்போதும் கூட நாம் ஆவியின் வாழ்க்கை வாழ விரும்பினல் தேகத்தின் இச்சைகளை மறுக்க வேண்டும். இயேசுவுக்கு நாற்பது நாட்கள் சோதனைக்குப் பின்பு இருந்த பசியைவிட அவர் மற்ற வேளைகளில் பசியாயிருந்தபோது அந்த பசி குறைவாயிருந்ததாக நாம் நினைக்க முடியாது.

சந்தேகத்துக்கிடமின்றி அவர் சரீரத்தின் படி வாழாமல் ஆவியின்படி வாழ வேண்டுமென்ருல் வாழ்க்கையின் பல நிலைகளில் பசியுள்ளவராக இருந்திருக்க வேண்டும். நாம் நம்முடைய மேன்மையான இயற்கை விருப்பங்களை திருப்தி செய்து கீழ்த்தரமான சுபாவங்களில் பசித் தேவைகளை ஒதுக்கிவிட உடனே ஆவன செய்ய வேண்டும். இல்லையென்ருல் வேறு எதிர்மாறன வாழ்க்கை வாழவேண்டியவர்களாவோம்.

சரீரத்தின் இச்சைகளைத் திருப்திபடுத்தாமல் மறுப்பதின் மூலம் ஒரு மரணம் கட்டாயம் நம்மில் இடம் பெறவேண்டும். இது ஆவியின் வாழ்க்கையில் தொடர்ந்து செயல்பட வேண்டிய ஒன்ருகும்.

3. இயேசு பழிவாங்கும் பண்புக்கும் பண்பின் விருப்பத்திற்கும் மரித்தார்:-

இயேசு பிறரை பழிவாங்குமாறு சோதிக்கப்பட்டார். ஆம். அவர் நம்மைப் போல் எல்லாவகையிலும் சோதிக்கப்பட்டார் என்ருலும் அவர் பாவஞ்செய்யவில்லை. உலகத்தில் அவரை வெறுத்தவர்கள் மீது பழிவாங்க வேண்டுமென்ற எண்ணத்தின் சோதனை அவருக்கு இருந்திருக்கலாம். அவரை எவ்வளவு அநீதியாக நடத்தினர்கள். அவர் நீதி விசாரணை செய்யப்பட்டபோது மட்டுமல்ல இன்னும் பல நேரங்களில் பல விதங்களில் அவர் அநீதியாய் நடத்தப்பட்டார். இருந்தபோதிலும் பழிவாங்குதலை தமது தந்தைக்கே விட்டுவிட்டார்.

நாம் ஆவிக்குள்ளாக நமது வாழ்க்கையை மூலைத்தலைக்கல்லாகிய கிறிஸ்துவின்படி அமைத்து கொள்ளுகிறவர்களாயிருந்தால் நமது வாழ்க்கையில் இந்த பழிவாங்கும் பண்புக்கு கண்டிப்பாக ஒரு மரணம் இடம் பெறவேண்டும்.

4. சகிப்புத்தன்மை இல்லாத பண்புக்கும் அருவருப்புக்கும் ஆண்டவருடைய இருதயத்தில் ஒரு மரணம் இடம் பெற்றது:-

எத்தனையோ முறை கிறிஸ்துவின் பொறுமை சோதிக்கப்பட்டது. நாள் முழுவதும் உபதேசம் செய்து நோயாளிகளை குணமாக்கிய பிறகு தோழமை அன்புக்காக சீடர்களிடம் திரும்பியபோது ஆண்டவர் அங்கே அவர்களிடம் மாம்சத்துக்குரிய பண்புகளையும் தன்னலத்தையுமே கண்டார். இத்தகைய நேரங்களில் அருவருப்பும், பொருமையற்ற மனநிலையுமே தோன்றும். ஆனல் இத்தகையநிலை நம்

ஆண்டவரிடம் காணப்பட்டதா? இல்லவே இல்லை என்றுதான் நாம் பதில் சொல்ல முடியும்.

ஏனென்றால் இவற்றுக்கு அவருடைய இருதயத்தில் ஒரு மரணம் இடம் பெற்று விட்டது. அவர் கெத்சமனே தோட்டத்துக்குள் சென்றபோது முழங்காலிட்டு ஜெபத்தில் பெலவீனமுள்ள தனது சீடர்களுக்காய் பிதாவிடத்தில் தமது இருதயத்தை ஊற்றினர். நாம் நமது வாழ்க்கையை இந்தவகையில் அமைத்துக் கொள்வோமா?

5. இயேசு பட்டம் பதவிகளுக்கு நேரிடும் சோதனைக்கு மரித்தார். மித மிஞ்சிய ஆர்வமுள்ள உலக ஆதாய மனமுடைய அவருடைய சீடர்கள் அவரை பலமுறை அரசராக்க முயன்றதை நாம் சுவிசேஷத்தில் படிக்கிறோம். அவர் அரசராகும்படி உலகத்துக்கு வரவில்லையா? அவர் யூதருக்கு ராஜாவாகிய இயேசு என்று அழைக்கப்பட்டாரே! ஆம். அவர் அரசராவதற்கு தான் வந்தார். ஆனல் அவரைப் பின்பற்றியவர்கள் விரும்பிய மாதிரி இல்லை.

மினுமினுக்கும் பட்டயங்கள் இல்லாமல், யுத்தநடைபோடும் போர்வீரர்கள் இல்லாமல், உலக ஆடம்பரமோ, ஆசாரங்களோ இல்லாமல் அரசராக வந்தார். ஆனல் அவர் குறுக்கு வழியில் மகிமையடைவதற்கு போதிக்கப்பட்டார். ஆனல் தீயோனின் ஆலோசனைக்கு இணங்கும் இயல்புக்கு இயேசு முன்னமே மரித்துவிட்டார்.

நாம் கிறிஸ்துவின் வழி முறைகளிலா? அல்லது உலகத்தின் வழி முறைகளிலா? மேன்மையடைய விரும்புகிறோம்! ஆவியின் வாழ்க்கையை அமைத்துக் கொள்வதற்கு நாம் மூலைத்தலைக்கல்லை அளந்ததில் நமக்குகிட்டிய அளவுகள் இவை சிலவாகும்.

2. திருச்சபையின் நம்பிக்கைக்கு அடித்தளம்கிறிஸ்துவே:-

நமது பரலோக வாழ்க்கையின் நம்பிக்கை கிறிஸ்துவின்மேல் கட்டப்பட்டதாக இருக்க வேண்டும். மூலைத்தலைக்கல்லை நாம் அளந்துபார்ப்போமாக. அவர் மகா பரிசுத்த ஸ்தலத்துக்குள் பிரவேசித்து, தம்முடைய சொந்த ரத்தத்தினல் நித்திய மீட்பை உண்டுபண்ணினர் (எபி. 9:2,3,7 11,12). சாமானியமாய்த் தொழுதுகொள்ளும் மக்கள் மகா பரிசுத்த ஸ்தலத்துக்குள் நுழையமுடியாதபடி திரை ஒன்றும் தடுத்து நின்றது. கிறிஸ்துவின் மரணத்தின்போது அந்த திரை கிழிந்து விட்டது. எல்லாரும் மகா பரிசுத்த ஸ்தலத்துக்குள் நுழையவழி திறக்கப்பட்டது. பரலோகத்தில் நடந்த காரியம் பூலோகத்தில் நடைமுறைப்பட்ட பின் ஒருவகை மாதிரியே இது.

அந்த மார்க்கத்தின் வழியே பிரவேசிப்பதற்கு அவருடைய ரத்தத்தினல் நமக்குத் தைரியம் உண்டாயிருக்கிறது. (எபி. 10:20) இயேசுவின் சரீரம் கிழிக்கப்பட்டு அதிலிருந்து இரத்தம் சிந்தப்பட்டபோது பரலோகம் எல்லாருக்கும் திறந்து விட்டது. நம்முடைய பாவங்களை நீக்கும் கிருபாதார பலி அவரே. நம்முடைய பாவங்களை மாத்திரமல்ல சர்வலோகத்தின் பாவங்களையும் நிவிர்த்தி செய்கிற கிருபாதார பலியாயிருக்கிறர். நமது பரலோக வாழ்வின் நம்பிக்கை இயேசுகிறிஸ்து சிந்திய இரத்தத்தின் மீது கட்டப்பட வேண்டும்.

இங்கு அழுத்தமாகக் கூறவேண்டிய இன்னெரு கருத்து இருக்கிறது. பிரதான ஆசாரியன் உள்ளே நுழைவதற்கு இரத்தமே கதவைத் திறந்தது. இரத்தத்தைப் பயன்படுத்தாமல் பாவமன்னிப்பு இல்லை. பலியிடப்பட்ட தேவாட்டுக்குட்டியின் 'இரத்தத்திலும் இதே நிலைமை அமைந்துள்ளது. தூய்மைப்படுத்தும் மூலப்பொருள் இரத்தமாகும். ஆனல் அந்த இரத்தைத் பயன்படுத்தாவிட்டால் கடவுளைத் தொழுதுகொள்ளுகிறவர்கள் பரலோகத்துக்குள் நுழைவதற்கு திட்டமும் உண்மையுமான வழி இல்லவே இல்லை. நீர் எந்த இரத்தத்

தைப் பயன்படுத்தியிருக்க வேண்டும். இந்த இரத்தம் எவ்வாறு பயன்படுத்தப்பட்டது என்பதை அறிவதற்கு நீங்கள் பெந்தேகோஸ்து திருநாளில் தேவபக்தியுள்ள மனிதர்கள் இந்த இரத்தத்தைப் பயன்படுத்தி பரலோக வாழ்வை சுதந்தரித்து கொண்ட வரலாற்றை அறியவேண்டும். அவர்கள் மனந்திரும்பி பாவ அறிக்கை செய்து மூழ்கி ஞானஸ்நானம் பெற்று இரத்தத்தால் பாவ மன்னிப்பை பெற்றுக் கொண்டார்கள் (அப். 2:38-42).

ஆனால் இந்த நித்திய வாழ்வின் நம்பிக்கை இதைத் தவிர வேறே அடித்தளம் மீது கட்டப்பட்டிருக்குமானால் நம்முடைய நம்பிக்கை பொய்யாகிவிடும். ஆதலால் நம்முடைய ஆவிக்குரிய வாழ்க்கையில் நம்பிக்கையின் அடித்தளம் இயேசுகிறிஸ்துவே.

[தொடரும்]

"விடுகட்டுகிறவர்களாகிய உங்களால் அற்பமாய் எண்ணப்பட்ட அவரே மூலைக்குத் தலைக்கல்லானவர்" அப். 4:11.

# மனிதனும் பாவமும் [தொடர்ச்சி]

கீழை நாடுகளில் தத்துவம் மனிதன் எப்பொழுதும் உயர்வான தெய்விக பாகமென்றும், தாழ்வான ஜடப்பொருள் பாகமென இரு கூறுகளாக குறித்து பேசுகிறது. மனிதனில் உள்ள தெய்விக அம்சம் தீங்கின் இருப்பிடமென கருதமுடியாததாலால் பாவம் தாழ்வான பாகமாகிய உடலோடு சம்பந்தப்படுகிறது. இவ்விதமாக மனிதனில் உள்ளுக்குள்ளான பாகமான மையம் தீமையினால் தீண்டப்படாததாயும், தீட்டுப்படாததாயும் மதிக்கப்படுகின்றன.

பாவம் தனது இருப்பிடத்தை உடலில் கொண்டுள்ளதெனவும், அதில் பிரதானமான சிற்றின்பங்களாகிய ஆண், பெண் அக்கிரமக்கூட்டுறவுகள், பெருந்தீனி, மதுபானத்தனம், குடிவெறி, களியாட்டம் ஆகியவையும், மாம்சஇச்சையின் பல்வேறு போகங்களும் அடங்கியுள்ளன எனவும் கருதுகின்றன ஆனால் பரிசுத்த வேதாகமம் இதை மறுக்கின்றது. மாம்சம் என்று பைபிளில் குறிப்பிடப்படுவது உடலைமாத்திரமல்ல பாவத்தினால் பாதிக்கப்பட்ட முழு மனிதனையுமே சுட்டிக் காட்டுகிறது. ஆகையால் முழு மனிதனுமே சுத்திகரிக்கப்பட வேண்டுமென வேதாகமம் சுட்டிக்காட்டுகின்றது [1 தெச. 5:23; 2 கொரி. 7:1].

உடலின்மீது விசேஷமாக குற்றம் சாட்டுவதற்கு யாதொரு காரணமும் இல்லை. நீ ஏன் உன் உடலை வெறுக்கிறாய். உன் சகோதரன் உண்மையில் அதைக்காட்டிலும் வேறொருவனும் இல்லையே. உடலும் ஆன்மாவைப் போலவே கடவுளின் படைப்பும், சுமையாயிருக்கிறது. அது மகா அதிசயமாய் அமைக்கப்பட்டதோர் ஆன்மாவின் கருவியாகும். நான் அதிசயவிதமாய் உண்டாக்கப்பட்டேன் ஆதலால் உமக்கு நன்றி செலுத்துகிறேன் என்றால்

லவா சங்கீதக்காரன் சொல்லுகிறார் [சங். 139:14].

மேற்கிலும், கிழக்கிலும், துறவிகளாலும், தபசிகளாலும் உடலுக்கு இழைக்கப்பட்ட கொடிய இம்சைகள் உண்மையிலேயே ஒரு பெருங்குற்றமே. உடல் நமது அமைப்பில் மற்ற எந்த பாகத்தையும்விட அதிக பாவமுள்ளதென கருதுவதற்கு யாதொரு காரணமுமில்லை. அதற்கு மாறாக அது ஆன்மாவில் ஓர் ஆர்வமுள்ள வேலை ஆளாக உள்ளது. தலைவன் சரியாய் இருப்பின் ஏவலனும் சரியாய் இருப்பான். மனித உயிரின் சிதைவு உடலினன்று, ஆன்மாவிலேயே ஆரம்பமாகின்றது. எப்படியெனில் மனிதர்கள் இருதயத்திலிருந்து பொல்லாத சிந்தனைகளும் வெளிப்படுகின்றன இவைகளெல்லாம் மனிதனுடைய உள்ளத்திலிருந்து புறப்பட்டு மனிதனை தீட்டுப்படுத்தும் (மாற். 7:21).

பாவத்தின் உள்ளியல்பு:-

நமது அமைப்பின் உள்ளுக்குள்ளான பாகமும், மையமுமாகிய இருதயமே கடவுளுக்கு விரோதமாக கலகம் விளைவிக்கின்றது. பாவத்தின் சாரம், மனிதன் தனக்குத்தானே தலைவனாயிருக்க விரும்புகிறான். தன் விதியை தன் கரத்தில் எடுத்துக்கொண்டு கடவுளை விட்டு விலகி இருக்குமாறு நன்மை தீமை அறிந்து கடவுளைப்போல ஆக நாடுகிறான் [ஆதி. 3:5]. கடவுளுக்காகப் படைக்கப்பட்டவன், கடவுளைச் சார்ந்து வாழ படைக்கப்பட்டவன், கடவுளை தன் வாழ்க்கையின் மையத்தினின்று அகற்றி தன்னையே மையமாக்கிக் கொள்ளுகிறான்.

பாவம் கடவுள்மீதுள்ள நம்பிக்கையை நீ யாதாமோர் நன்மையை கடவுள் தனக்குக் கொடுக்க விரும்பாமல் மறைத்து வைத்துள்ளார் என்கிற அவநம்பிக்கை அவனில் ஆரம்பமாகிறது. பாவமானது பெருமை, தன்நேசம், அகங்காரம் இவை மனிதனுடைய இயற்கையன்று, சாத்தானால் அவனுக்குள் ஊதப்பட்டுள்ளது என்பதை நாம் அறியவேண்டும்.

மனிதன் அதிகாரம், ஆஸ்தி, அறிவு ஆகியவற்றை பெறுகிறதற்கு தன்னையே சார்ந்து அவைகளின்மீது நம்பிக்கை வைக்கிறான். அதின் மறுபக்கம் மனிதனின் அகங்காரம் உள்ளது. அவன் தனக்கு நலமானது இன்னதென்று கடவுள் அறிவதைக் காட்டிலும் தான் அதிகமாய் அறிவதாய் நம்பி தன்னைத்தானே பராமரித்துக்கொள்ள ஆசிக்கிறான். அவனுடைய பாவம், அவநம்பிக்கை, ஐயம், சுயாதீனத்துக்குப் போட்டியிடும் ஆவல் ஆகியவைகள் கலந்த அம்சங்களால் அமைகின்றது. இவ்விதமாக கடவுள் மையத்திலிருந்து அகற்றப்படுகிறார். மனிதன் தன்னைத்தானே தன் வாழ்க்கையின் மையமாக்கிக் கொள்கின்றான். அதாவது அவன் தன்னில்தானே கோணலடைகிறான். இப்பாவத்திலிருந்து மற்ற எல்லாப்பாவங்களும் புறப்படுகின்றன.

(தொடரும்)



"பாவம் செய்கிற ஆத்துமாவே சாகும்" எசே. 18:4.





# இந்தப்பிள்ளையை எனக்காக வளர்த்திடு

புத்திரபாக்கியம் என்பது தேவன் நமக்கு கொடுக்கும் பிரதான ஆசீர்வாதமாகும். இயற்கையாக ஆணும், பெண்ணும் சேர்ந்து வாழ்ந்துவிடுவதால் குழந்தைகளைப் பெற்றுவிடுவதில்லை. அதற்கு தேவ கிருபையும், ஆசீர்வாதமும் இருந்தால் மட்டுமே பிள்ளைகளைப் பெற்றுக் கொள்ள முடியும். ஏனென்றால் குழந்தை இல்லாமல் ஏங்குகிற எத்தனையோ குடும்பங்களை நாம் பார்க்கிறோம். தேவன் இல்லை என்று சொல்லுகிற புத்தியீனர்கள் இதற்கு காரணம் சொல்ல முடியாது.

பிள்ளைகள் கர்த்தரால் வரும் சுதந்திரம். கர்ப்பத்தின் கனி அவரால் கிடைக்கும் பலன் (சங். 127:4). பல ஆண்டுகள் குழந்தையில்லாமல் மலடியாயிருந்து தேவனை விசுவாசித்து புத்திரபாக்கியம் பெற்ற குடும்பங்கள் அநேகம். தேவனால் கூடாத காரியம் ஒன்றுமில்லை. மலடியை சந்தோஷமான பிள்ளைத்தாய்ச்சியாக்கி வீட்டிலே குடியிருக்கப் பண்ணுகிறார் (சங். 113:9). முதிர்ந்த வயதுடைய ஆபிரகாமுக்கும், ஸ்திரீகளுக்குள்ள வழிபாடு நின்றுபோன நிலையில் இருந்த சாராளுக்கும் கர்த்தர் புத்திரபாக்கியம் கொடுத்தார்.

மலடியாயிருந்த எலிசபெத்தும் முதிர் வயதிலே யோவான் ஸ்நானகனைப் பெற்றாள். ஈசாக்கு மலடியாயிருந்த தன் மனைவிக்காக கர்த்தரை நோக்கி வேண்டுதல் செய்து இரட்டைபிள்ளைகளைப் பெற்றார்கள் (ஆதி. 25:21).

பிள்ளைகள் கர்த்தருக்கு உரியவர்களாக இருக்கிறார்கள் என்றும் நம்மிடத்திலே வளர்க்கும்படி கொடுத்திருக்கிறார் என்றும். நாம் எண்ண வேண்டும். ஏனென்றால் பிள்ளைகள் நம்மிடத்தில் வாழ்ந்து கொண்டு வாரிசாக, பாசநேசத்திற்குரியவர்களாக இருந்தாலும் அவர்களுடைய உயிரின்மேல், ஜீவனின் மேல் நமக்கு அதிகாரமில்லை. 'பிள்ளைகள் கர்த்தரால் வரும் சுதந்திரம்'.

பிள்ளைகளை சிறுவயதிலிருந்தே நல்வழியில் வளர்க்க வேண்டும். "ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது" என்பது பழமொழி. சிறு பிள்ளைகள் 3 வயது முதல் 5வயது வரை பெற்றோர்கள் மற்றும் பழகுகிறவர்களின் நடைமுறைகளை கவனிக்கிறார்கள்என்றும், 5 வயது முதல் 10 வயது வரை அதைத் தன்னகப்படுத்திக் கொள்ளுகிறார்கள் என்றும்!ஒவ்வொருடைய ஆள்த்தன்மை [personality] சிறுபிள்ளையிலேயே உருவாகிவிடுகிறது என்றும் மனோதத்துவ அறிஞர்கள் கூறுகிறார்கள். ஆகவே பிள்ளைகள் நல்லவர்களாக வளர்வதற்கு பெற்றோர்கள் நல்ல மாதிரியாக திகழவேண்டும்.

பிள்ளைகளுக்கு எது சரி? எது தவறு? என்று அடிக்கடி போதிக்க வேண்டும். பிள்ளைகளை கர்த்தருடைய சிட்சையிலும், போதனையிலும் வளர்ப்பாயாக (எபே. 6:4). பிள்ளையானவன் நடக்க வேண்டிய வழியிலே அவனை நடத்து; அவன் முதிர்வயதிலும் அதை விடாதிருப்பான் (நீதி. 22:6). கர்த்தருடைய வார்த்தைகளை உங்கள் பிள்ளைகளுக்கு உபதேசித்து நீங்கள் வீட்டிலே உட்கார்ந்திருக்கும் போதும் வழியிலே நடக்கிறபோதும், படுத்துக் கொள்கிற போதும், எழுந்திருக்கும் போதும் அவைகளைக் குறித்து பேசுவீர்களாக; அவைகளை உங்கள் வீட்டு நிலைகளிலும், வாசல்களிலும் எழுதுவீர்களாக (உபா. 11:20,21; ஆதி. 18:19). வீடுகளில் அறிவூட்டும் வேத வசனங்களை எழுதி சுவர்களில் மாட்டி வைத்திருப்பது நல்லது.

பிள்ளைகளைப் பெற்றோர்கள் கண்டித்து வளர்க்க வேண்டும். அதிகமாக செல்லம் கொடுத்து வளர்க்கிற பெற்றோர்கள் பிற்காலத்தில் பிள்ளைகள் கெட்டுப்போய் வேதனை அளிக்கத்தக்கதாய் ஜீவிக்கும் போது கண்ணீர் வடிக்கிறார்கள். பிரம்பைக் கையாடாதவன் தன் மகனைப் பகைக்கிறான்; அவன் மேல் அன்பாயிருக்கிறவனோ அவனை ஏற்கெனவே தண்டிக்கிறான் [நீதி. 13:24] பிரம்பும் கடிந்து கொள்ளுதலும் ஞானத்தைக் கொடுக்கும் தன் இஷ்டத்திற்கு விடப்பட்ட பிள்ளையோ தன் தாய்க்கு வெட்கத்தை உண்டுபண்ணுகிறான் (நீதி. 29:15). பிள்ளையின் நெஞ்சில் மதியீனம் ஒட்டிருக்கும்; அதைக் தண்டனையின் பிரம்பு அவனைவிட்டு அகற்றும் (நீதி. 22:15).

பிள்ளையைத் தண்டியாமல் விடாதே; அவனை பிரம்பினால் அடித்தால் அவன் சாகான்; நீ பிரம்பினால் அடிக்கிறதினால் பாதாளத்திற்கு அவன் ஆத்துமாவைத் தப்புவிப்பாயே (நீதி. 23:13,14). பிள்ளைகளை யார் கண்டித்தாலும் நல்லது என்று எண்ண வேண்டும் (கலா. 4:1,2). ஒரு சிலர் என் பிள்ளையை கண்டிப்பதற்கு நீர் யார்? என்று சண்டைபோட்டு தங்கள் பிள்ளைகள் கெட்டுப்போவதற்கு காரணமாகிறார்கள்.

பிள்ளைகளை தேவபக்தியில் வளர்க்க வேண்டும். மோசேயின் தாய் சிறுபிள்ளையிலேயே அவருக்குப் பாலூட்டும்போது விசுவாசத்தையும், தேவனைப் பற்றிய வைராக்கியத்தையும் தன் ஜனங்கள் எகிப்திலே இருந்ததான அடிமைத்தனத்தைப் பற்றியும், இனிமேல் வரப்போகிற இளைப்பாறுதலைப் பற்றியும் போதித்தபடியினாலே பார்வோனின் குமாரன் என்னப்படுவதை வெறுத்து, பாவ சந்தோஷத்தை வெறுத்து தேவ ஜனங்களோடே துன்பத்தை அனுபவித்தார் (யாத். 2:9; எபி. 11:24,25) அம்மாவும், பாட்டியும் விசுவாசிகள் ஆனபடியால் அவரும் உத்தம விசுவாசியாயிருந்தார் (2 தீமோ. 1 5).

பிள்ளைகளை சிறுவயதிலேயே இரட்சிப்புக்குள்ளாக வழிநடத்துவது மிகப் பெரிய ஊழியமாகும். கிறிஸ்து இயேசுவைப்பற்றும் விசுவாசத்தினாலே உன்னை இரட்சிப்புக்கேற்ற ஞானமுள்ளவனாக்கத்தக்க பரிசுத்த வேத எழுத்துக்களை நீ சிறுவயதுமுதல் அறிந்தவனென்றும் உனக்குத் தெரியும் (2 தீமோ. 3:15). ஞாயிறு பாடசாலை ஊழியம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. ஜான் வெஸ்லி, சார்லஸ் வெஸ்லி போன்ற பரிசுத்தவான்கள் சிறுபிள்ளையிலேயே இரட்சிக்கப்பட்டவர்கள். சிறுபிள்ளைகளை கர்த்தர் அதிகமாக நேசிக்கிறார் (மாற். 10:14).

பிள்ளைகளை எப்படி வளர்க்க வேண்டும். என்று அதிகமாக நாம் ஜெபம் செய்ய வேண்டும். மனோவா, சிம்சோனை எப்படி வளர்ப்பது என்று வேண்டிக் கொண்டார் (நியா. 13:12). தேவ ஆலோசனையின்படியே வளர்க்க வேண்டும். தேவ சித்தத்துக்கு ஒப்புக்கொடுத்து வளர்க்க வேண்டும்.

இந்தப் பிள்ளையை எனக்காக வளர்த்திடு. நான் உனக்கு சம்பளம் கொடுக்கிறேன் என்று கர்த்தர் சொல்கிறார் (யாத். 2:9). தேவைகளை நமக்குத் தருவார். ஆகவே பிள்ளைகளைப் பெறுவது மட்டுமல்ல அவர்களை வளர்த்து, ஆளாக்கி, நல்லவர்களாக குடும்பத்திற்கும், தேவனுடைய சபைக்கும், தேசத்திற்கும் பிரயோஜனமுள்ளவர்களாக வளர்ப்பது பெற்றோருடைய கடமையாகும்.

'தந்தை மகற்கு ஆற்றும் நன்றி அவையத்து
முந்தியிருப்ப செயல்' - குறள்.

பிள்ளைகள் போற்றப்படுகிறவர்களாக உயர்ந்த ஸ்தானத்தில் இருக்கிறார்கள் என்று கேள்விப்படும்போதும், பார்க்கும்போதும் அது பெற்றோர்களுக்கு மகிழ்ச்சியைத் தரும்.

'ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும் தன் மகனைச்
சான்றோன் எனகேட்ட தாய்' – குறள்.

நீதிமானுடைய தகப்பன் மிகவும் களிகூருவான்; ஞானமுள்ள பிள்ளையைப்பெற்றவன் அவனால் மகிழுவான்; உன் தகப்பனும், தாயும் சந்தோஷப்படுவர்கள்; உன்னைப் பெற்றவள் மகிழுவாள் [நீதி. 23: 24,25].

பெண் பிள்ளைகளை கற்புள்ள கன்னியாக விவாகம் முடித்து கொடுக்கும் வரை பெற்றோர்கள் கவனமாக இருக்க வேண்டும். அதேபோல ஆண் பிள்ளைகளும் படித்து நலமான வேலை செய்து சொந்தக் காலில் நிற்கவும், குடும்ப பொறுப்பை ஏற்றுக்கொள்ளும் தகுதியடையும் வரை வளர்ப்பதும் அவசியமாகும்.

ஊழியர்கள் பிள்ளைகளை வளர்ப்பதில் அதிக கவனம் செலுத்த வேண்டும். அநேகர் ஊழியம் செய்கிறோம் என்று சொல்லி கணவன் ஒருபக்கமும், மனைவி ஒரு பக்கமும் பிள்ளைகளை விட்டு விட்டுப் போய் பிள்ளைகள் கெட்டு நரகத்திற்குப் போக ஏதுவாகிறார்கள். பிள்ளைகளை நல்ல முறையில் வளர்ப்பது ஊழியத்திற்கு வேண்டிய தகுதிகளில் ஒன்றாகும் (தீத். 1:6; 1 தீத். 5:8; 1 தீமோ. 3:4).

ஒரு தேசத்தின் மந்திரியின் மகன் தவறு செய்தால் அது அந்த மந்திரியையேப் பாதிக்கும் அவருடைய பெயருக்கு இழுக்கு உண்டாகும். ஆசாரியனாகிய ஏலி தன் பிள்ளைகளை வளர்ப்பதில் அசதியாக இருந்தபடியால் ஆசாரித்துவத்தை இழந்து போனார். தேவனைப்பார்க்கிலும் தன் குமாரர்களைக் கனம் பண்ணினார் (1 சாமு. 2:29). அவர்களை தேவனை அறிகிற அறிவில் வளர்க்கவில்லை (1 சாமு. 2:12).

அவர்கள் கொடிய பாவிகளாக இருந்தார்கள். அதை அறிந்திருந்தும் அவர்களை அடக்காமற்போன பாவத்தினிமித்தம் சாபம் உண்டானது (1 சாமு. 3:13,14). ஊழியர்களுடைய பிள்ளைகள் கெட்டுப் போனால் ஊழியத்தையே இழக்க நேரிடும். பிள்ளைகளை இரட்சிப்புக்குள் வழி நடத்தி ஊழியத்திற்கு உதவியாக வளர்க்க வேண்டும். பிள்ளைகளை ஊழியத்திற்காக வளர்ப்பது நல்லது (யாத். 40:14,15). கர்த்தருடைய ஊழியமானது உலகத்திலுள்ள எந்த வேலையைக் காட்டிலும் உயர்ந்தது. பிள்ளைகளை வளர்த்து தேவ பக்தியுள்ள சந்ததியாக நிறுத்துவோமாக! (மல். 2:15) உன் காரியம் எப்படி?

"உமது அடியாளுக்கு ஒரு ஆண்பிள்ளையைக் கொடுத்தால், அவன் உயிரோடிருக்கும் சகல நாளும் அவனைக் கர்த்தருக்கு ஒப்புக்கொடுப்பேன்" 1 சாமு. 1:11.

## வேத பாடம் [தொடர்ச்சி]

### எண்ணாகமம்

### எண் 20:13

இங்கே இஸ்ரவேல் புத்திரர் தண்ணீர்க்காக கர்த்தரோடே வாக்குவாதம் பண்ணினதினால் இதற்கு மேரிபாவின் தண்ணீர் என்று பெயருண்டாயிற்று. மேரிபா என்றால் வாக்குவாதம் என்று அர்த்தமாகும்.

### எண். 20:14-21

மோசே காதேஸிலிருக்கிற ஏதோமின் ராஜாவிடத்திற்கு ஸ்தானாதிபதிகளை அனுப்பி உங்கள் தேசத்தின் வழியாய் கடந்து செல்ல உத்தரவாகவேண்டும். நாங்கள் ராஜபாட்டையிலே போவோம். எதையும் சேதப்படுத்தமாட்டோம் ஆகாரம், தண்ணீர் பணங்கொடுத்து, கிரயங்கொடுத்து வாங்குகிறோம். கால்நடையாய் மாத்திரம் கடந்துபோவோம் என்று கேட்டார்கள் ஆனால், ஏதோம் அதற்கு அனுமதி கொடுக்கவில்லை.

ஆகவே இஸ்ரவேல் புத்திரர்கள் ஏதோமை விட்டு விலகிப்போனார்கள் (உபா. 2:3). அவ்விதமாக அவர்கள் ஏதோமை விட்டு பிரயாணப்பட்டு ஓர் என்னும் மலைக்கு போய் சேர்ந்தார்கள்.

### எண். 20:22-29

ஓர் என்னும் மலைக்கு இஸ்ரவேல் புத்திரர் வந்தபோது கர்த்தர் மோசேயையும் ஆரோனையும் நோக்கி ஆரோன் தன் ஜனத்தாரோடு சேர்க்கப்படும் நாள் வந்தது.மேரிபாவின் தண்ணீரைப்பற்றிய காரியத்தில் நீங்கள் என் வாக்குக்கு கீழ்படியாமற்போனபடியால் நான் இஸ்ரவேலருக்கு கொடுக்கிற தேசத்தில் பிரவேசிப்பதில்லை நீ ஆரோனையும் அவன் குமாரனாகிய எலெயாசாரையும் கூட்டிக்கொண்டு, அவர்களை ஓர் என்னும் மலையில் ஏறப்பண்ணி, ஆரோன் உடுத்துயிருக்கிற வஸ்திரங்களைக் கழற்றி அவைகளை அவன் குமாரனாகிய எலெயாசாருக்கு உடுத்துவாயாக, ஆரோன் அங்கே மரித்து தன் ஜனத்தாரோடே சேர்க்கப்படுவான் என்றார்.

கர்த்தர் கட்டளையிட்டபடியே மோசேயும், ஆரோனும், எலெயாசாரும் மலையின் மேல் ஏறினார்கள். ஆரோன் உடுத்தியிருந்த வஸ்திரத்தைக் கழற்றி மோசே எலெயாசாருக்கு உடுத்தினார். அப்பொழுது அங்கே ஆரோன் மலை உச்சியிலே மரித்தான். பின்பு மோசேயும், எலெயாசாரும் மலையிலிருந்து இறங்கினார்கள். மூன்று மனிதர்களாக மலையின் மேல் ஏறினார்கள். இரண்டுபேர் மாத்திரம் இறங்கினார்கள். ஆரோன் ஜீவித்துப்போனான் என்று இஸ்ரவேல் புத்திரர் அறிந்து ஆரோனுக்காக முப்பது நாட்கள் துக்கங்கொண்டாடினார்கள்.

ஒரு பிரதான ஆசாரியன் [முதலாம் பிரதான ஆசாரியன்] மரணத்திற்கு முன்பே அடுத்த பிரதான ஆசாரியனை கர்த்தர் ஏற்படுத்தினதை இங்கே நாம் பார்க்கிறோம். இவ்விதமாக இறைவனுடைய நடபடிகள் திட்டமாக இருக்கிறது.

மோசேயும், ஆரோனும் தேவனுடைய வார்த்தைக்குக் கீழ்படியாமல் மலையை அடித்த பாவத்தை, மலையை அடித்த சம்பவத்தை பரிசுத்தாவியானவர் தொடர்ந்து பல இடங்களிலே சுட்டிக்காட்டுகிறார். சில பாவங்கள் மன்னிக்கப்படும். சில பாவங்களுக்கு மன்னிப்புண்டு; தண்டனையுமுண்டு.

மேரிபாவின் தண்ணிருக்கடுத்த விஷயத்தில் நீங்கள் என் வார்த்தைக்குக் கீழ்படியாதபடியினால் என்னை பரிசுத்தம் பண்ணாமல், என்னை விசுவாசியாமற்போனபடியால், என்று மறுபடியும் மறுபடியும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. அப்படியே சில அக்கிரமம், பாவங்கள், சில துணிகரமான மீறுதல்கள் மறுபடியும் மறுபடியும் சுட்டிக்காட்டப்படும். [உபா. 32:51; சங். 106:32; யாத்.17:2; எண். 27:14] ஆகிய வசனங்

களில் மேரிபாவின் வாக்குவாதத்தின் தண்ணீர் என்று கூறப்படும். யாத்திராகமம் 17-ம் அதிகாரத்தின் சம்பவமும், எண்ணாகமம் 20-ம் அதிகாரத்தின் சம்பவமும் இந்த இரண்டு இடத்திலேயும் வாக்குவாதத்தின் தண்ணீர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

## எண். 21:1-3

இஸ்ரவேல் புத்திரர்கள் வேவுகாரர் காண்பித்த வழியாக வருகிறார்கள் என்று தெற்கேயுள்ள கானானிய அரசனாகிய ஆராத்ராஜா கேள்விப்பட்டபோது, அவன் இஸ்ரவேல் புத்திரருக்கு விரோதமாக படையெடுத்து வந்து யுத்தம் பண்ணி அவர்களின் சிலரை பிடித்து சென்றான். இஸ்ரவேல் புத்திரர் கர்த்தரிடத்தில் பிரதிக்கினைபண்ணி அவர்களை எங்கள் கையில் ஒப்புக்கொடுத்தால், அவர்கள் பட்டணங்களை சங்காரம் பண்ணுவோம் என்றார்கள்; அப்படியே கர்த்தர் ஒப்புக்கொடுத்தார். அவர்கள் கானானியரையும் பட்டணங்களையும் சங்காரம் பண்ணினார்கள்.

## எண். 21:4-9

இஸ்ரவேல் புத்திரர்கள் ஏதோம் தேசத்தை சுற்றிக்கொண்டு ஓர் என்னும் மலையை விட்டு சிவந்த சமுத்திரத்தின் வழியாய்ப் பிரயாணப்பட்டார்கள். வழியினிமித்தம் ஜனங்கள் மனமடிவடைந்தார்கள். போதுமான அப்பமும், தண்ணீரும் திருப்தியாயிருக்கவில்லை. மேலும் அவர்கள் கடவுள் தங்களுக்கு கொடுத்த ஆகாரத்தையும் அற்பமாக எண்ணினார்கள். அவர்கள் அங்கே கடவுளுக்கு விரோதமாக முறுமுறுத்தார்கள். இதனிமித்தம் அவர்களைக் கடிக்கும்படி தேவன் அவர்களுக்குள் கொள்ளிவாய் சர்ப்பங்களை அனுப்பினார். பாவஞ்செய்தவர்கள் கடிக்கப்பட்டு இதினிமித்தம் செத்தார்கள். அப்பொழுது ஜனங்களெல்லாரும் ஒரு பொய்யான மனந்திரும்புதல் உடையவர்களாய் மோசேயினிடத்தில் வந்து தங்களுக்காய் விண்ணப்பம் பண்ணும்படி கேட்டுக்கொண்டார்கள், மோசே கர்த்தரை நோக்கி விண்ணப்பம் பண்ணினபொழுது, வெண்கலத்தால் ஒரு கொள்ளிவாய் சர்ப்பத்தை உண்டுபண்ணி ஒரு கம்பத்தின் நுனியிலே கட்டி அதை பாளயத்தின் நடுவிலே நிறுத்து; எவன் சர்ப்பத்தினால் கடிக்கப்பட்டானோ அவன் அதை நோக்கிப்பார்த்தால் பிழைப்பான் என்று நிவாரணத்தை அருளினார்.

சிலர் வைத்தியரையும், வைத்தியங்களையும் தேடினார்கள். சிலர் தங்கள் சொந்த முயற்சியையும், அறிவையும் அதிகமாய் உபயோகித்தார்கள். ஆனால் சிலர் கர்த்தர் கட்டளையிட்ட நிவாரணத்தை நோக்கிப்பார்த்து பிழைத்தார்கள். சொந்த அறிவையும், அனுபவத்தையும், முறைகளையும் உபயோகித்தவர்களெல்லாம் மரித்துப்போனார்கள். கர்த்தர் பிழைக்கும்படி ஏற்படுத்தின நிவாரணத்தை நோக்கிப்பார்த்தவர்கள் பிழைத்தார்கள்.

இப்படியே பாவ சர்ப்பத்தினால் கடிக்கப்பட்ட மக்கள் தங்கள் சொந்த முயற்சியினாலும், அறிவினாலும், தங்களுக்குத் தெரிந்தவைகளினாலும் தங்களை பாவத்திலிருந்து இரட்சித்துக்கொள்ள பிரயாசப்படுகிறார்கள். அது மரணத்தை உண்டுபண்ணுகிறது. மனுமக்கள் பிழைக்கும்படியாய் தேவன் தம்முடைய குமாரனாகிய இயேசுகிறிஸ்துவை சிலுவையில் மரணமடைவதற்கு ஒப்புக்கொடுத்தார். சிலுவையில் அறையப்பட்ட கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை நோக்கிப்பார்ப்பதினால் மக்கள் பிழைப்பார்கள்; பாவம் நீங்கி சுத்தமாவார்கள். அவர்கள் நித்திய ஜீவனைப் பெற்றுக்கொள்வார்கள். யோ. 3:14-16.

(தொடரும்)

"பூமியின் எல்லையெங்குமுள்ளவர்களே என்னை நோக்கிப்பாருங்கள்" ஏசா. 45:22.

# பெண்கள்

[தொடர்ச்சி]

கலியாண காலங்களில் பெண்களுக்கு கற்புள்ள அருந்ததியையும், காட்டில் கற்பிழந்ததினால் கல்லாய் சமைந்த அகலியையையும் அம்மி மிதக்கிற ஒரு சடங்கின் மூலமாக காட்டுவது தமிழ்நாட்டில் வழக்கம். தாய், தந்தையருடைய முயற்சி குறைவினாலும், கெட்டபழக்கத்தினாலும் துர்கிரியைகளைக் கற்றுக் கொண்ட ஒரு துஷ்டையினுடைய துர்சரீரத்தை அடியில் எழுதுகிறோம்.

பாவங்களுக்கெல்லாம் அவள் பண்டகசாலை. நன்மையெல்லாம் அவளுக்கு நஞ்சு. தீமையெல்லாம் அவளுக்குத் தேவாமிர்தம். தப்புகளெல்லாம் அவளுக்கு சர்வமானியம். வம்புவார்த்தைகளெல்லாம் அவளுக்கு வாய்ப்பாடம். பொய்பிலே அவள் பூரணம். உண்மை பேசுவதில் அவள் ஊமை. புண்ணியம் என்றால் போராட்டம். குற்றங்களெலலாம் கொண்டாட்டம்.

சுயகுற்றங்களைப் பார்ப்பதில் சுத்த குருடி. அந்நிய குற்றங்களைப் பார்ப்பதில் அவளுக்கு ஆயிரம் கண். ஏழைகளுக்கும் அவளுக்கும் ஏழாம் பொருத்தம். பிச்சை கேட்டோரை சிட்சை செய்வாள். தானம், பரிதானமேயல்லாமல் வேறு தானம் இல்லை. தியாகம் பிராணதியாகமேயல்லாமல் வேறு தியாகம் இல்லை.

எச்சிற்கையாலும் காகம் ஒட்டாள். அறுத்த கைக்கு சுண்ணாம்பு கொடாள். பிள்ளைகள் ஆத்திச்சூடி படிக்கும் பொழுது தாயென்று பிடித்தாலும் அவள் சண்டைக்கு வருவாள். அவள் முன்னே யாராவது ஈயைப் பார்த்து ஈயென்று சொன்னாலும் கோபிப்பாள். அவளுக்கு கோயில் இல்லை, குருவுமில்லை, பூஜை இல்லை, புனஸ்காரம் இல்லை, பணமே தெய்வம். பணமே குரு பணமே சீவனம். பணமே பாவனம்.

கண்ணாடி தன் முகம் தெரிவது போல அவள் யாரைப் பார்த்தாலும் தன்மயமாகத் தோன்றுவதால் தன் குற்றத்தைப் பிறர் மேல் ஏற்றி அவதூறு பேசுவதே அவளுடைய சுபாவ குணம். அவள் திருடியானதால் எல்லாரையும் திருடி என்று சொல்லுவாள். அவள் பொய்பேசுகிறவளாதலால் எல்லாரையும் பொய்யரென்று நினைப்பாள்.

அவள் வஞ்சகியானதால் எல்லோரையும் வஞ்சகியென்று தூஷிப்பாள். அவளுடைய வாய்க்குப் பூட்டு போட்டாலும் தூஷணைபேசாமல் இராள். அவள் காதுகளை தைத்து வைத்தாலும் கோள் வார்த்தை கேளாமல் இராள். அவள் கைகளைக் கட்டி வைத்தாலும் திருடாமல் இராள். அவள் கால்களில் விலங்கு போட்டாலும் அண்டை வீட்டுக்குப் போய் சண்டை செய்யாமல் இருக்க மட்டாள்.

அவளுக்கும், அவள் புருஷனுக்கும் ஜென்ம பகை. புருஷன் ஒன்று சொன்னால் அவள் ஒன்பது செய்வாள். அவன் வேண்டுமென்பதை அவள் வேண்டாம் என்பாள். அவன் தெற்கு என்றால் இவள் வடக்கு என்பாள். அவன் கருப்பென்பதை அவள் வெளுப்பு என்பாள். புருஷனுக்கு எது இஷ்டமோ அது அவளுக்கு அநிஷ்டம். [இஷ்டமில்லை]. புருஷனுக்கு யார்மித்திரர்களோ, அவர்களெல்லாம் அவளுக்குச் சத்துருக்கள்.

புருஷனுக்கு யார் பகைவர்களோ, அவர்களெல்லாம் அவளுக்கு இஷ்டர்கள். புருஷனே அவளுக்கு விஷமாயிருக்கும் போது புருஷனுடைய பந்துக்களை அவள் எப்படி மதிப்பாள்? மாமி சுமங்கலியாய் இருப்பதை தான் அமங்கலியாய் இருப்பது போல் எண்ணுவாள். மாமிக்கு தலைவலித்தால் இவளுக்கு கிரீடம்தரித்ததுபோல,

நாத்தனுருக்கு ஒரு பிள்ளை பிறந்தால் இவளுக்கு ஒரு பிள்ளை இறந்ததுபோல.

ஒரகத்திக்கு ஒரு சுகம் உண்டானல் இவளுக்குத் துக்கம் சம்பவித்ததுபோல, அவள் கழுத்தில் தாலி இருப்பது இவள் கழுத்தில் தாலி இல்லாததுபோல, அவளுக்கும் அவள் பிள்ளைகளுக்கும் ஓயாத பெரும் பகை. பிள்ளைகளை அவளும் நேசிக்கிறதில்லை, பிள்ளைகளும் அவளை நேசிப்பதில்லை. பிள்ளைகள் இஷ்டப்படி அவள் நடவாள், அவள் இஷ்டப்படி பிள்ளைகளும் நடவார்கள்.

தன் புருஷனையும், பிள்ளைகளையுமே பகைக்கிறவள். அந்நியரைப் பகைக்காமல் இருப்பாளா? அவளுக்கு ஊரெல்லாம் பகை. அவளுடைய கேட்டை விரும்புகிறவர்கள் தவிர அவளுடைய க்ஷேமத்தை பிரார்த்திக்கிறவர்களில்லை. அவளுடைய மன அசுத்தம் எப்படியோ அப்படியே சரீர அசுத்தமும் உடையவளாய் இருக்கிறாள்.

அவளுடைய தேகத்தில் எந்தக் காலத்திலும் ஜலம்பட்டிருக்குமோ என்னமோ அறியோம்! அவள் தேகத்தின் அழுக்கைத் திரட்டினல் பல வண்டி பாரம் ஏற்றலாம். அவளுடைய துணி நெருப்பிலே போட்டாலும் வேகாது. அவளுடைய தேகத்தில் புஷ்பம்பட்டால் தேகநாற்றத்தை புஷ்பம் வாங்கிக் கொள்ளுகிறதேயல்லாமல் புஷ்ப வாசனை தேகத்தில் சாறுகிறதில்லை.

அவளுடைய தேகம்போலவே அவளுடைய வீடும் அசுத்தங்களுக்கு ஆலயமாக இருக்கிறது. அசுத்தத்தில் ஜெநிக்கிற பல பூச்சிகளும், புழுக்களும் அவளுடைய வீட்டில் புத்திர, பௌத்திரகளத்கிராதிகளுடனே க்ஷேமமாய் வாழ்ந்து கொண்டிருக்கும். அவளுடைய வீட்டின் அசுத்தங்களையும், அவளுடைய துன்மார்க்கத்தால் வரும் துன்பங்களையும் அவளுக்கும் அவளுடைய குடும்பத்தாருக்கும் நடக்கிற ஓயாத சண்டைகளையும், வியாச்சியங்களையும் விரோதங்களையும் பார்க்குமிடத்தில் அவளுடைய வீட்டைப் பூலோக நரகமென்று சத்தியமாய்ச் சொல்லலாம்.

மேற்படி ஸ்திரீ துன்மார்க்கமாய்க் கெட்டுப் போவதற்கு அவளுடைய தாய் தகப்பன்மாருடைய அஜாக்கிரதையே முக்கிய காரணமாயிருக்கிறதால் ஸ்திரீகளுக்குப் பாலசிட்சை செய்வது அத்தியாவசியமாயிருக்கிறது. தெய்வபக்தியே சகல புண்ணியங்களுக்கும் அஸ்திபாரமாயும், சிகரமாயுமிருப்பதால் தெய்வபக்தியை முந்தி போதிக்க வேண்டும்.

**திருச்சபையார் கவனத்திற்கு:-**

திருச்சபையின் தேவ ஊழியர்கள், விசுவாசிகள் "புதிய எருசலேம் செய்தி"க்கு அனுப்புகிறதான அனுபவ சாட்சிகள், கர்த்தர் தங்கள் வாழ்வில் நடப்பித்ததான அதிசய, அற்புதங்கள், கட்டுரைகள் யாவும் மிகவும் தெளிவானதாகவும், அழகாகவும், 2 பக்கங்களுக்கு உட்பட எழுதி அனுப்பவும்.

புதிய எருசலேம் செய்தி

தெய்வநேசம் உண்டாவதற்கு தெய்வ சொருப நிர்த்தாரணஞ் செய்வது அவசியமானதாகையால் அண்டகோளங்களையும் அணுவில் அடக்க எத்தனித்ததுபோலும், ஆகாயத்துக்கு மையம் காட்டுவதுபோலவும், நரிவாலைக்கொண்டு கடலாழம் பார்ப்பதுபோலும், மானச சாக்ஷியாயும் சர்வசாக்ஷியாயும் விளங்காய் நின்ற கடவுளுடைய அனந்த கலியாண குணங்கள் சிலவற்றை சிற்றறிவுடையோனாகிய நாம் எமக்குத் தெரிந்தமட்டில் ஒருவாறெடுத்துரைக்கத் துணிந்தோம்.

கடவுள் ஆணுமல்ல பெண்ணுமல்ல அலியுமல்ல அவருக்கு உருவமில்லை, பேருமில்லை, யாருமில்லை. நேருமில்லை. அவருக்குத் தாயுமில்லை. தந்தையுமில்லை, தாரமுமில்லை. தனயனுமில்லை. அவருக்கு உட்புமில்லை. தப்புமில்லை. அவர் பூதமுமல்ல. நாதமுமல்ல, சரமுமல்ல அசரமுமல்ல. காணப்பட்ட ஒரு பொருளும் அல்ல.

பஞ்சேந்திரியங்களுக்கு அவர் அதிசயமானவர். ஞானேந்திரியங்களுக்கு எட்டாத துரியாதீதர். அவர் மகாபிரபு. மண்டலாபதி; ஏகசக்கராபதி, தேவாதி தேவன் ராஜாதிராஜன், அவர் சர்வஞானர், சர்வ சக்தர். சர்வேசுவரர். சர்வகாரணர், சர்வகற்பிதா. சர்வநியந்திர சர்வாந்தரியாமி அவர் பிதா. நாம் பிள்ளைகள். அவர் குரு. நாம் சீஷர்கள். அவர் ராஜா. நாம் குடிகள். அவர் ஆண்டவர், நாம் அடிமை. அவர் அன்னனர் தாதா, நாம் யாசகர். அவர் செல்வர், நாம் தரித்திரர் அவர் தர்மாத்துமா, நாம் கர்மாத்துமா. அவர் நித்தியர், நாம் அநித்தியர். அவர் அரூபி. நாம் குரூபி. அவர் தீனகிருபாசகர், சீலமனோகரர், ஞானதிவாசகர், நற்குணசாசகர், பரம பவித்திரர். புத்தமித்திரர். தர்ம சமுத்திரர், சகல விசித்திரர், அகில நிர்வாசகர். இகபரர், தியாக இன்பபிரபாகர், மோட்ச தாதா, மூலவேதா.

சாட்சாத்மாதா சர்வஞானதா. ஆதிமத்தியாந்த் ரகிதர். ஜோதி நித்தியர். சுத்த சகிதர், வேத சித்தாந்த விகிதர், போதவிர்த்தாந்த விருதர், கபடநாடக சூத்திரர், தவன கோடிகாத்திரர், உபஞான நேத்திரர், அபயமோக்ஷ சேத்திரர். பாவ நாசகர். சீவநேசர் தேவராசர், மாவிலாசர், இப்படிப்பட்ட அதிகோசர அசரீர அகண்டாகார அபார உதார நிர்விகார மனோகர குணகர சராசர தராதர பராபர வஸ்துவினுடைய அந்நியாதிருசியமான மகோன்னதைப் பிரதாபந் தெரிவதற்கு அவரால் வகுக்கப்பட்ட அகில புவனசராசரங்களின் தன்மையை ஸ்தூலமாயேனும் அறிந்து கொள்ள வேண்டுவது அவசியம்.

(தொடரும்)

---

"போதுமென்கிற மனதுடனே கூடிய தேவ பக்தியே மிகுந்த ஆதாயம்"

1 தீமோ. 6:6,

---

ஞானஸ்நானம் பெற்று திருச்சபையோடு சேர்த்து கொள்ளப் பட்டவர்கள்:-

| நாள் | கிளை | நபர்கள் |
|---|---|---|
| 13.12.94 | சேலம் | 25 |
| 15.12.94 | சென்னை | 16 |
| 25.12.94 | பம்பாய் | 5 |

"தேவனைத் தேடு"
"SEEK GOD"

Regd. No. 040088/84
Postal Regd. No. MH BY NE-94/94
Tamil Monthly Magazine

தேவனுக்கு மகிமையுண்டாவதாக!

# திண்டுக்கல்லில் புதிய எருசலேம் சபை எழுப்பப்பட்டது.

கர்த்தருக்கு ஸ்தோத்திரம்! 9. 12. 1994 வெள்ளிக் கிழமையன்று அண்ணா மாவட்டத்திலுள்ள திண்டுக்கல்லில் புதிய எருசலேம் சபையின் கிளை பரிசுத்த ஆராதனையுடன் ஸ்தாபிக்கப்பட்டது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். இந்த ஊழியம் அம்மாவட்டம் முழுவதும் பரவ எல்லோரும் ஜெபிக்க கேட்டுக் கொள்கிறோம்.

### அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   15 [புதன்] பிப்ரவரி 1995
   16 [வியாழன்] மார்ச் 1995
   17 [திங்கள்] ஏப்ரல் 1995
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :
   CHIEF PASTOR N. LAZAR
   "NEW JERUSALEM CHURCH"
   CHURCH LANE, TILAK NAGAR,
   DARGA ROAD, BHANDUP,
   BOMBAY-400 078 INDIA.
3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.
5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரு. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078 Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 128 - FEB. '95

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

- மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும்., இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே . . .

# ஆசிரியர் உரை

தேவ ஜனங்கள் மாம்ச சித்தத்திற்கு, இராட்ஷச குணங்களுக்கு இடங் கொடுக்கக் கூடாது. துரோகங்கள், பிரிவினைகள், பொய் சொல்லுதல், மாருட்டம் பண்ணுதல், கலகம் பண்ணுதல், எதிர்த்து நிற்றல், பலவிதமான துர் இச்சைகளுக்கு இடங்கொடுத்தல், பொருளாசைக்கு இடங்கொடுத்தல் இப்படிப்பட்ட மாம்ச கிரியைகளெல்லாம் அழிக்கப்படக் கூடியவைகளாக இருக்கின்றன. இவைகள் இராட்ஷசக் குணங்களாகும் [கலா. 5:19-21; மாற். 7:20-23]. தேவனுக்குப் பயந்து தெய்வீகத் திட்டத்தை அறிந்து தேவ ஜனங்களோடுகூட எப்பொழுதும் ஐக்கியத்தைக் காத்துக்கொண்டு, யுத்தம் செய்யாமல், வாக்குவாதம் பண்ணுமல் ஐக்கியத்திலே எப்பொழுதும் காணப்படுவது அவசியம். கிறிஸ்தவ வாழ்க்கை என்று சொல்லப்படுகிறது தேவனோடும், திருச்சபையோடுமுள்ள ஐக்கியமாகும். தேவனோடு ஐக்கியமாகிய அப்போஸ்தலரோடு, சீஷர்களோடு, விசுவாசிகளோடு ஐக்கியமாயிருந்தால் சரியாயிருக்கிறுன். சபை ஐக்கியத்தில் ஒருவன் குறைவுபடுகிறுன் என்றுல் அவன் தேவனேடு உள்ள ஐக்கியத்தில் விரிசல் உண்டாகிறது; அவனுக்கும் தேவனுக்கும் இடையில் உள்ள ஐக்கியத்தில் விரிசல் உண்டாகிறது. ஒருவன் தேவனேடு உள்ள ஐக்கியத்தில் சரியில்லை என்றால் சபையாருக்கும், அவனுக்கும் ஐக்கியக் கேடு உண்டாகும். அபிப்பிராய பேதங்கள் உண்டாகும். இவன் தெய்வீக நியமத்திற்கு எதிர்த்து நிற்பான். பிரிவினை ஆவிகள் கிரியை செய்யும் இவைகளுக்கு இடம் கொடுக்கிறவர்கள் மகா தண்டனையடைவார்கள். அவர்கள் தேவ ஜனங்களுக்கு விரோதமாய் யுத்தம் செய்யப் புறப்பட்டு தங்களுடைய எல்லா ஆசீர்வாதங்களையும் இழந்து போவார்கள் என்று வேதாகமம் நமக்கு எச்சரிக்கிறது. ஆனபடியினல் மாம்ச கிரியைகள், இராட்ஷச சுபாவங்கள் ஆகியவைகளுக்கு இடங்கொடுக்காது ஞானஸ்நானத்தில் மரித்தவன் அடக்கம் பண்ணப்பட்டவனாகவே இருக்கட்டும் என்று புதிதான ஜீவனுள்ளவனாய், தெய்வீக சுபாவமுடையவர்களாய், ஆவிக்குரிய கனியுடையவர்களாய் தேவ ஜனங்கள் ஜீவிக்க, தாழ்மையைக் கடைபிடிக்க, ஐக்கியத்தைக் காத்துக் கொள்ள ஜாக்கிரதையாயிருப்பீர்களாக; பரிசுத்த ஆவியானவர் தேவ ஐக்கியத்தை உண்டுபண்ணுவாராக. ஆமென்!

கிறிஸ்துவுக்குள்,

[CHIEF PASTOR N. LAZAR]

# கிறிஸ்தவ மார்க்கம் [தொடர்ச்சி]

## கர்த்தருடைய பந்தி

**தகுதியில்லாமல் இராப்போஜனத்தில் பங்கு பெறுவதால் உண்டாகும தண்டனை :-**

வேதத்தின் சட்டத்திற்கு விரோதமாய் ஒருவன் கர்த்தருடைய பந்தியில் பங்கு பெற்றால் கண்டிப்பாய் தண்டனை கிடைக்கும் என்பதற்கு சந்தேகம் இல்லை. ஒருவன் கர்த்தருடைய பந்தியில் பங்குபெறும்போது தன்னைத்தான் நிதானிக்க வேண்டும் (1 கொரி. 11:23). ஏதாவது அசுத்தம் அவனில் இருக்குமானால் அவன் கர்த்தருடைய மேஜையில் பங்குபெறக் கூடாது. அப்படி பங்கு பெறுவதினால் சிலர் பெலவீனரும், வியாதியுள்ளவர்களுமாயிருக்கிறார்கள். இப்படிப்பட்ட தண்டனை கிடைக்கப்படுகிறவர்களுக்கு ஜெபம் பண்ணினாலும் விடுதலை சுலபமாகக் கிடைக்காது. சிலர் மரணம் கூட அடைவார்கள் (1 கொரி. 11:30). ஒருவன் மரணத்துக்கு ஏதுவல்லாத பாவம் செய்தால் அவனுக்காக ஜெபிக்கலாம் என்றும், மரணத்துக்கு ஏற்ற பாவம் செய்தால் அவனுக்காக ஜெபம்பண்ண அவசியம் இல்லை என்றும் வேதத்தில் கூறப்பட்டுள்ளது (1 யோவ. 5:16). ஆகையால் பாவம் செய்து கொண்டு இராப்போஜனம் எடுப்பது மரணத்திற்குரிய பாவம் [1 கொரி. 11:30] எனப்படும்.

யூதாசுக்கு இயேசுவானவர் இராப்போஜனம் கொடுத்தார் என்று சிலர் தப்பிதமாக நினைக்கிறார்கள். இயேசுவானவர் இராப்போஜனம் நடத்திய இரவில் சீஷர்களுடைய கால்களைக் கழுவினார் (யோவா. 13:12-15). பஸ்காவை ஆசரித்தார் (மத். 26:17–19). திருவிருந்தை [நற்கருணையை] ஸ்தாபித்தார் (மத். 26:26). எகிப்தில் நடந்த பஸ்காவுக்கும், இயேசுவானவர் ஆசரித்த பஸ்காவுக்கும் சற்று வித்தியாசம் உண்டு. ஆட்டுக்குட்டியை அடித்து அதின் இரத்தத்தை நிலைக்கால்களிலும், வாசற்படியிலும் தெளித்து விட்டு புளிப்பில்லாத அப்பத்தோடும், கசப்பான கீரையோடும் கூட இறைச்சியை சுட்டு சாப்பிடவேண்டும் என்பது தான் எகிப்தில் நடந்த பஸ்காவின் சட்டம் (யாத். 12:8). ஆனால் இராப்போஜனம் இயேசுவானவர் நடத்தும்போது ஆட்டுக்குட்டியை அடிக்கவில்லை. ஏனென்றால் அடிக்கப்படவேண்டிய ஆட்டுக்குட்டியானவர் அவர்தான். எனவே அவர் அப்பத்துணிக்கையை எடுத்து தோய்த்து அவர்களுக்குக் கொடுத்தார்.

இராப்போஜனம் நடத்தியது அப்படியல்ல. அப்பத்தை எடுத்து அசீர்வதித்துப் பிட்டு அவர்களுக்குக் கொடுத்தார் [தோய்த்துக் கொடுக்கவில்லை, பிட்டு அப்படியே கொடுத்தார்]. பின்புதான் பாத்திரத்தை எடுத்து ஆசீர்வதித்து இதிலே பானம் பண்ணுங்கள் என்று சொன்னார். இராப்போஜனத்தை நடத்துவதற்கு முன்பு பஸ்காவை ஆசரிக்கும்போது உங்களில் ஒருவன் என்னைக்காட்டிக் கொடுப்பான் என்று இயேசு சொன்னார். அப்பொழுது யோவான் அவன் யார் என்று கேட்கும்போது இயேசுவானவர் பிரதியுத்தரமாக "நான் இந்த துணிக்கையைத் தோய்த்து எவனுக்குக் கொடுப்பேனோ அவன்தான் என்று சொல்லி அதை யூதாசுக்குக் கொடுத்தார். அதோடு நீ செய்யவேண்டியதைச் சீக்கிரமாய்ச் செய் என்று சொன்ன உடனே அவன் எழுந்து வெளியே போனான்." அதற்குப் பிறகுதான் இராப்போஜனம் அல்லது கர்த்தருடைய பந்தி நடத்தப்பட்டது. இதிலிருந்து இயேசுவானவர் யூதாசுக்கு இராப்போஜனம் கொடுக்கவில்லை என்பது தெளிவாய்த்

தெரிகிறது. நீ யூதாசுக்கு இராப்போஜனம் கொடுக்காதே (யோவா. 13:21-30).

ஆனால் ரோமன் கத்தோலிக்கர், C. S. I, C. N. I; Methodist, மார்த்தோமா முதலிய சபைகளில் ஒருசிலர் தகுதியில்லாமல் இராப்போஜனம் எடுக்கிறவர்களும், நடத்துபவர்களும் இருந்தபோதிலும் தண்டனை வரவில்லை என்று நினைக்கலாம் [என் ஞானஸ்நானமே எடுக்காத ஒருவன் போய் மண்டியிட்டாலும் திருவிருந்து கொடுத்து விடுவார்கள்] அது சபைகளாயிராமல் சங்கங்களாக மாத்திரம் இருக்கிறது. அதினால் தான் சபையின் அங்கத்தினர்கள் சங்க பணம் கொடுக்கிறார்கள். ஆகையால் அதைச் சபையாயும் அது கொடுக்கும் இராப்போஜனத்தை இராப்போஜனமாகவும் பரலோகம் ஏற்றுக் கொள்ளாது. ஆகையால் தான் தண்டனையும் கிடைக்கவில்லை.

## இராப்போஜனம் நடத்த வேண்டிய இடம்:-

இது ஒரு முக்கியமான கேள்வியாக முன் இருந்தது. இராப்போஜனம் தேவனுடைய ஆலயத்தில் வைத்து தான் நடத்த வேண்டும் என்றும், வீடுகளில் வைத்து நடத்தக் கூடாது என்றும் சிலர் சொல்லுகிறார்கள். அவர்களுக்குத் தேவனுடைய ஆலயம் என்ன என்று தெரியாது. உலகத்தில் ஒரே ஒரு ஆலயம் இருந்தது. அது A. D. 70 கிறிஸ்துவிக்குப்பின் 70-ம் ஆண்டில் ரோம அரசாங்கத்தாரால் அழிக்கப்பட்டது. இப்பொழுது நாம் காண்கிற கட்டிடங்கள் புதிய ஏற்பாட்டின் ஆலயங்கள் அல்ல. புதிய ஏற்பாட்டில் ஆலயம் என்பது கட்டிடமல்ல; ஆலயம் என்பது ஜீவனுள்ள தேவனுடைய சபையே (1 தீமோ.3:15). ஆகையால் இராப்போஜனம் சபையில் வைத்து தான் நடத்தப்படவேண்டும் (1 கொரி.10:15,16).

## இராப்போஜனம் நடத்த வேண்டிய நேரம்:-

இராப்போஜனம் [Supper] என்று சொல்லப்பட்டிருப்பதினால் இரவுதான் நடத்தப்படவேண்டும் என்று சிலர் நினைக்கிறார்கள். இராப்போஜனத்திற்கு அப்பம்பிட்குதல் என்ற வார்த்தையும் உபயோகிக்கப்பட்டுள்ளது. இயேசுவானவர் முதன் முதலில் நடத்தியபோது இரவில் நடத்தியதால் இராப்போஜனம் என்று சொல்லப்பட்டது 1 கொரி. 11:26ல். ஆகையால் நீங்கள் இந்த அப்பத்தைப் புசித்து இந்தப் பாத்திரத்தில் பானம் பண்ணும் போதெல்லாம் என்று காண்கிறபடியால் எல்லா சந்தர்ப்பங்களிலும் என்றுதான் அர்த்தம். மூன்று மாதம் இருட்டும் மூன்று மாதம் பகலும் உள்ள இடங்களும் ஆறுமாதம் பகலும் ஆறுமாதம் இரவும் உள்ள இடங்களும் உண்டு. இரவில் மாத்திரம் இராப்போஜனம் நடத்த வேண்டும் என்பது உபதேசமானால் மேலே கூறப்பட்ட இடங்களில் வசிக்கும் விசுவாசிகள் ஆறு மாதப் பகலில் எப்படி இராப்போஜனம் நடத்த முடியும் ஆகையால் நேரம்முக்கியமல்ல இராப்போஜனம்தான் முக்கியம்.

## இராப்போஜனம் நடத்த தகுதியுள்ளவர்கள்:-

தேவனுடைய சபையில் ஞானஸ்நானம் திருவிருந்து முதலியவைகளை நடத்துவதற்காக தேவனால் அழைத்து தெரிந்து கொள்ளப்பட்டு அபிஷேகம் பண்ணப்பட்டவர்களை அப்போஸ்தலர் கை வைத்து ஆசீர்வதித்து ஊழியத்துக்கு அனுப்ப வேண்டும் (அப். 13:1-3; 14:23; 6:6; தீத். 1:5). இவர்களால் ஞானஸ்நானம், இராப்போஜனம் முதலியவைகள் நடத்தப்படவேண்டும். உதாரணம் ஞானஸ்நானம் நடத்தியவர் பிலிப்பு என்ற சுவிசேஷகர் அப். 8:12,38. திருவிருந்து நடத்தியவர் அப்போஸ்தலரை

கியபவல் (அப். 20:7). தேவனுடைய ஊழியக்காரர் அல்லாமல் விசுவாசிகளுக்கு திருவிருந்து நடத்துவதற்கு அதிகாரமில்லை என்று வேதம் கூறுகிறது (ரோம.12:3-8). சபையின் ஊழியர்கள்.

(தொடரும்)

"என் மாம்சத்தைப் புசித்து, என் இரத்தத்தைப் பானம் பண்ணுகிறவனுக்கு நித்திய ஜீவன் உண்டு; நான் அவனைக் கடைசி நாளில் எழுப்புவேன்" (யோவா. 6:54).

---

## திருச்சபை (தொடர்ச்சி)

### 3. திருச்சபையின் முன்னேற்றத்திற்கு அடித்தளம் கிறிஸ்துவே:-

முன்னேற்றத்துக்கு கிறிஸ்து தூண்டுதல் அளிக்கிறார். அவர் திருவாய் மலர்ந்தருளிய சொறுகளைக் கேளுங்கள். அப்பொழுது இயேசு சமீபத்தில் வந்து அவர்களை நோக்கி, வானத்திலும், பூமியிலும் சகல அதிகாரமும் எனக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் நீங்கள் புறப்பட்டுப்போய் சகல ஜாதிகளையும் சீஷராக்கி, பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஞானஸ்நானங் கொடுத்து திருச்சபையைக் கட்டி நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள். உலகத்தின் முடிவுபரியந்தம் சகல நாட்களிலும் நான் உங்களுடனே கூட இருக்கிறேன் என்றார் (மத். 28:18-20; 16:18,19).

கிறிஸ்துவின அதிகாரத்துவம் திருச்சபையின் முன்னேற்றத்துக்கு அதிக தூண்டுதலாகும். திருச்சபையை நடத்துவதற்கு கிறிஸ்து இப்போது உலகத்தில் சரீரத்தில் இல்லை. விண்ணுலகத்திலே இருக்கிறார். ஆனாலும் தமது ஊழியம் பரவுவதற்கு விசுவாசிகளான ஆண்களையும், பெண்களையும் சார்ந்திருக்கிறார். கிறிஸ்து என்னையும் உங்களையும் இந்த ஊழியத்தைச் செய்யுமாறு எதிர்பார்க்கிறார்.

எனவே நாம் கிறிஸ்துவின் அதிகாரத்தை முழுவதுமாக ஏற்றுக்கொண்டு திருப்பணிசெய்யும் போது தான் எல்லா நாட்டு மக்களையும் கிறிஸ்துவுக்கு சீடராக்க முடியும். இயேசு தம்முடைய சீடர்களுக்கு உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுகிறது போல பூமியிலேயும் செய்யப்படுவதாக என்று வேண்டுதல் செய்யும்படி கற்பித்தார்.

நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவுக்கு ஊழியஞ்செய்யும்படி தூண்டுதல், கிறிஸ்துவின் அதிகாரத்துவம் மட்டுமல்லாமல் அவர் எப்பொழுதும் கூட இருப்பதற்கான அவருடைய வாக்குறுதியுமாகும். கடவுள் எப்போதும் நம்மோடிருக்கிறார் என்னும் மன உணர்வுதனை நாம் இழந்து விட்டோமானால் எந்த பிரயோஜனமுமில்லை. அப்போஸ்தலனாகிய பவுல் எந்த நேரமும் தான் கடவுளுக்கும், கிறிஸ்துவுக்கும் உடன வேலையாளாயிருக்கிறேன் என்பதை உணர்ந்து வந்தார். நாம் கிறிஸ்துவுடன் சேர்ந்து ஊழியஞ் செய்கிறோம் என்னும் மன உணர்வு தொடர்ந்து இருந்தால் தான் உண்மையில் இயேசுவுக்காக அவரு

டைய தொண்டில் முன்னேற்றமடைய முடியும்.

திருச்சபையின் வளர்ச்சிக்கு தொடர்ந்து முயன்று நாம் புதிய திட்டங்களை, முறைகளை வகுக்கிறோம். இந்நாளில் தீவிரமாய் செயல்படும் இத்தகைய போக்கு மனிதனை கருத்தில் வைக்கத் தவறிவிடுகிறது. அல்லது அமைக்கப்படும் திட்டத்துக்கு மனிதனை அமிழ்த்திவிடுகிறது. ஆனால் மற்ற எல்லாவற்றையும் விட மனிதனை அதிகமாய் பயன்படுத்த வேண்டுமென்பது கடவுளின் திட்டம்.

கடவுள் வகுத்தருளியுள்ள செயலாற்றலின் திட்டம், முறைமை மனிதனே. எல்லாம் கிறிஸ்துவை சார்ந்திருக்கிறது என்பதை நீங்கள் காணவில்லையா? உங்களையும் எல்லாம் சார்ந்திருக்கிறது என்பதை நீங்கள் காண வேண்டும். எல்லாம் கிறிஸ்துவை சார்ந்திருக்கிறது; எல்லாம் நம்மை சார்ந்திருக்கிறது; எல்லாம் கிறிஸ்து நம்முடன் இருந்து செய்யும் ஊழிய நிலையைச் சார்ந்திருக்கிறது என்று நாம் நம்புகிறோம்.

2. முன்னேற்றத்துக்கான துணைப்பொருள்களை கிறிஸ்து அருளுகிறார். வழிப்பிரயாணத்தின் சக்திக்கு அவரே ஜீவ அப்பம். ஜீவ அப்பம் அல்லது உயிர்தரும் உணவினை நாம் எண்ணும்போது, பழைய உடன்படிக்கையின் காலத்தில் விண்ணுலகத்திலிருந்து அனுப்பப்பட்ட மன்னாவை நாம் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். அது இஸ்ரவேல் மக்கள் எல்லாருக்கும் உயிர் கொடுத்து காக்க வல்லதாயிருந்தது. ஆனால் அவர்கள் அதனுடைய நன்மையைப் பெற வேண்டுமென்றால் ஒவ்வொருவரும் தங்களுக்குத் தேவையானதை சேர்த்துக்கொள்ள வேண்டியதாயிருந்தது.

இப்பொழுதும் அப்படியே நாம் ஒவ்வொருவரும் பரலோகத்திலிருந்து அனுப்பப்பட்ட மன்னாவை சேர்த்துக் கொள்ள வேண்டும். கிறிஸ்து ஆவியின் வாழ்க்கைக்கு உணவூட்டி நாம் விரும்புகிற முன்னேற்றத்தை அடைவதற்கு, நமக்கு சக்தியளிப்பதற்கு முன்னால் நாம் கிறிஸ்துவை நமது சொந்தமானவராக்கி விட்டிருக்கிறோமாவென்று சரியாய்ப் பார்த்துக்கொள்ள வேண்டும்.

நாம கவனிக்க வேண்டிய இன்னொரு கருத்து என்னவென்றால், மன்னா ஒவ்வொரு நாளும் சேர்த்துக் கொள்ளப்பட்டது. அது போல நமது சரீர இச்சைகளை வெறுத்து நாள்தோறும் ஜீவ அப்பத்தை உணவாக்கிக் கொள்ள வேண்டும்.

3. திருச்சபையின் முன்னேற்றமானது தனிப்பட்ட நிலையிலும் கூட்டான நிலையிலும் அடங்கியிருக்கிறது. அவர் அதிகாரத்தையும் தூண்டுதலையும் அருளுகிறதை விட நமது முன்னேற்றத்துக்கு மிகப்பெரும் பரிசையும் அருளுகிறார். அந்தப்பரிசு தேவன் அருளும் ஆத்துமாக்களே. இந்த ஆத்துமாக்களின் இரட்சிப்பே கிறிஸ்துவின் சரீரத்தின் உண்மையான முன்னேற்றமும் பரிசுமாகும்.

திருச்சபையானது வேகமாய் வளர்ந்து வருகிறதை கவனிக்க. இது உண்மையான நம்முடைய பணிக்கு தேவன் அருளும் பரிசாக இருக்கிறது. ஒரு ஆத்துமாவை கிறிஸ்துவண்டை நடத்த சரியாக அந்த ஆத்துமாவுக்கு நற்செய்தியை விளங்கும்படி அறிவித்து, அந்த ஆத்துமாவை கர்த்தரண்டை நடத்துகிறது எவ்வளவோ மகிழ்ச்சியான காரியம். அந்த ஆத்துமா கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டு ஜீவனுள்ள தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்துவை விசுவாசிக்கிறேன் என்று சொல்லி, அந்த ஆத்துமா திருமுழுக்கு பெற்றுக் கொள்ளுகிறபொழுது அந்த ஆத்துமாவின் பழைய மனிதனைப் புதைத்து விட்டு புதிய மனிதன் உயிரோடு எழுப்பப்படுகிறான். அப்பொழுது ஒரு புதிய குழந்தை கிறிஸ்துவுக்குள்ளாகப் பிறக்கிறது. இத்தகைய அறிவு, இத்தகைய வாய்ப்பு

திருச்சபைக்கு தொடர்ந்து அருளப்பட்டு வருகிறது. ஆனபடியால் திருச்சபையின் முன்னேற்றமானது கிறிஸ்துவே அடித்தளமாகக் கொண்டு இயங்குகிறது என்பதாம்.

(தொடரும்)

"நான் நட்டேன் அப்பொல்லோ நீர்ப் பாய்ச்சினான், தேவனே விளையச் செய்தார்" (1 கொரி. 3:6).

## மனிதனும் பாவமும் [தொடர்ச்சி]

### பாவமானது பொய் துரோகம்:-

மனிதனின் மெய்யான உயிர் கடவுளே. வாழ்க்கையின் நோக்கம் மனிதன் கடவுளோடு கொள்ளும் கூட்டுறவே. அதிக நலமும், வளமுமான வாழ்க்கை எய்தலாம் என்று நம்பி தற்பிரியத்தினாலும், தன்னையே மகிமைப்படுத்துவதினாலும் கடவுளை விட்டு விலகிச் செல்வது தன்னையே ஏமாற்றிக்கொள்வதாகும். பாவத்தில் எப்பொழுதுமே பொய், துரோகம் ஆகியவற்றின் ஓர் அம்சம் சம்பந்தப்பட்டுள்ளது. அது தற்பிரியத்தின் பேரோ, அடிப்படையோ இல்லாவிடினும் அதனோடே கூடவே பாவமும் நிகழ்கிறது. அப்போஸ்தலனாகிய பவுல் தன்னையே ஏமாற்றும் குருட்டுத்தனம் அறியாமையின் விளைவு என்று, ஆனாலும் அறியாமை பாவத்தின் விளைவு என்று கூறுகிறார். அவர்கள் கடவுளை அறிந்தும் அவரைக் கடவுளென்று மகிமைப்படுத்தாமலும், அவருக்கு நன்றி செலுத்தாமலும் இருந்து தங்கள் சிந்தனைகளில் வீணரானார்கள். விவேகமில்லாத அவர்கள் இருதயம் இருண்டு போயிற்று (ரோ. 1:21).

பாவத்தைப் பற்றிய விவிலிய விவரணத்தில் பெரும்பாலும் துரோகமும், வஞ்சகமும் பாவத்தின் சிறப்பு அம்சங்களாகக் காணப்படுகின்றன. பாம்பு தனது தந்திரத்தினால் ஏவாளை வஞ்சித்தது போன்று பாவம் உண்மையில், உண்மையின், புனிதத் தன்மையினின்று இருதயத்தைத் தூரப்படுத்துவதினால், எப்பொழுதுமே மனதை மாசுபடுத்துகின்றது (2 கொரி. 11:3; ஆதி. 3:13; எபி. 3:13; ரோ. 7:11; எபே. 4:25) இயேசு, பிசாசைப் பற்றி அவன் பொய்களின் பிதா எனக் கூறுகிறார் (யோவா. 8:44; 2 தெச. 2:9), இவ்விதமாக பாவம் தனது பேரில் பொய்யின் ஓர் அம்சத்தைக் கொண்டுள்ளபடியால், அது எப்பொழுதுமே பொய்யையும், துரோகத்தையும் சுவாசித்துக் கொண்டே இருக்கும்.

### பாவமானது சிற்றின்ப போகம்:-

பாவம் என்பது நாம் பார்த்துள்ளபடி முதன்மையாக சிற்றின்ப போகம் ஆனால் கடவுள் மீதுள்ள அவநம்பிக்கை, கீழ்ப்படியாமை, கடவுளுக்கு விரோதமான கலகம், கடவுளை விட்டு தூரமாய்ச் செல்ல ஒருவன் தனது வாழ்க்கையின் மையத்திலிருந்து கடவுளை விலக்கி விட்டு தன்னையே மையமாக்கிக் கொள்ளுதல் இவைகளே. இவற்றினால் மனிதன் தன்னுடைய வாழ்க்கையின் மெய்யான மையத்திலிருந்து தூரம் போகின்றபடியால் அவனது முழு அமைப்பிலும் ஒழுங்கீனமும், குழப்பமுமே விளையும். இவ்வொழுங்கீனம் அவனது ஆத்மிக வாழ்க்கையை மட்டுமின்றி உடல் வாழ்க்கையையும் பாதிக்கிறது. எப்பொழுதுமே சிற்றின்பத்தை பிரதம பாவமாக்கி அதை உடல் வாழ்க்கையின் விளைவெனக் கொண்டது கிரேக்கரின் தத்துவ ஞானம்

இதைக் கிறிஸ்தவ இறையியலினின்று நீக்கி விடுவோமாயின் கிறிஸ்தவ இறையியல் முழுவதுமே புனிதன் அகஸ்டின், தோமா, அக்குவினஸ், லூத்தர், கால்வின், சுக்கர், பெஸ்லி ஆகியோரின் கருத்தின்படி அவிசுவாசம், கீழ்ப்படியாமை ஆகியவைகளே பிரதம பாவங்கள். சிற்றின்பம் அதன்விளைவே என ஒருமுகமாகச் சொல்லுகின்றார்கள்.

மனிதன் தன் வாழ்க்கையின் மெய்மையத்தை இழந்து விட்டபடியால் சுயசித்தத்தைத் தனது மையமாக காத்துக்கொள்ளச் சக்தியற்றவனுயுள்ளான். அவன் தனது உடல் நாட்டங்களை அடக்கி ஆளும் சக்தியை இழந்து விட்டு பெருந்தீனி, குடிவெறி, சுகபோகம், ஒழுக்கம் தவறிய ஆண் பெண் கூட்டுறவு போன்ற தகாதவிதமான மாமிச இச்சைகளை நிறைவேற்றுவதற்கு இரையாகி விடுகின்றான். இவ்வாசை நுகர்ச்சியின் மூழ்குதல் ஒரு புறத்தில் ஒருவகை சுயநலமாயிருப்பதைக் கொண்டு மற்றொரு புறத்தில் இது பாவம் உண்டாக்கியுள்ள குழப்பத்தினின்று தப்புவதற்கான ஒரு முயற்சியாயும் அவன் இவைகளில் ஈடுபடுகின்றான்.

### பாவம் ஒரு ஐக்கியக்கேடு:-

பாவம் முதலாவது ஒரு சமயம் சார்ந்த கருத்து. அதாவது அது மத மண்டலத்தில் ஏற்படும் ஒரு குழப்பம். அது கடவுளுக்கு விரோதமானது. சங்கீதக்காரன் தேவரீர் ஒருவருக்கே நான் விரோதமாக பாவம் செய்து உமது பார்வையில் தீமையானதை நடப்பித்தேன் என்கிறார் (சங். 51:4). பிரதானமாக அது சுயநலமும், பெருமையும் கொண்டு கடவுளின்பால் அவநம்பிக்கையாகும். அது அவருக்கு விரோதமான கலகமாகும். என்றாலும் பாவத்தினின்று பிரிக்க முடியாதவாறு அதனோடு சம்பந்தப்பட்ட ஒழுக்க அம்சம் ஒன்று உள்ளது. அந்த ஒழுக்க அம்சத்தில் தான் பாவத்தைப் பற்றி அது தன்னயம், பெருமை, துரோக சிற்றின்பப் போகம் என்று சொல்லப்பட்டுள்ளது ஏற்கையிலேயே கவனித்துள்ளோம்.

கடவுளோடுள்ள உறவைக் குழப்புவது என்றால் அது நிச்சயமான மனிதனுக்கு இடையேயுள்ள உறவு மண்டலத்திலே குழப்பத்தை உண்டாக்கும் என்பதை நாம் நன்றாக உணரும் போது இவ்வொழுக்க அம்சம் மேலும் தெளிவாய்த் துலங்கும். பாவம் சுயநலமும், பெருமையுமாயிருப்பதால் அது பிறராகிய மனிதரோடு நமக்குள்ள உண்மையான உறவினையும் நிச்சயமாக முறித்துவிடும். மனிதன் பாவத்தின் மூலமாகத் தன்னைத்தானே தனது வாழ்க்கையின் மையத்தில் வைத்துக் கொண்டபடியால் அவன் இயல்பாகவும், ஏறக்குறைய முழுதுமாக உணர்வோடு, உணர்வற்ற நிலையிலும், மற்ற எல்லாப் பொருட்களையும்மட்டுமல்ல, தன்னைப்போன்ற மற்ற மனிதரையும் தன் சுயநலநோக்கங்களுக்காகவும், தனது சொந்த ஆசைகளை நிறைவேற்றுவதற்காகவும், அமைந்துள்ள சாதனங்களாக அவன் கருதி அவற்றிற்காக அவர்களைப் பயன்படுத்துவான்.

நாம் பார்த்துள்ளபடி பாவம் தனது பேரிலேயே பொய், வஞ்சனை ஆகியவற்றின் ஓர் அம்சத்தைக் கொண்டுள்ளது. இந்த அம்சம் சுயநலத்தினால் செயல்படுத்தப்பட்டு, தூண்டப்படுமாயின் மனித உறவுகள் யாவையும் பாதித்து தீட்டுப்படுத்துவது நிச்சயம். ஆதலால் பாவம் பிரதானமாகக் கடவுள் மீதுள்ள அவநம்பிக்கையாயிருப்பதால் அது மனிதர்களுக்கிடையே அவநம்பிக்கையை உருவாக்குகிறது.

(தொடரும்)

"...விசுவாசத்தினாலே வராத யாவும் பாவமே. ரோம. 14:23.

# ரோமன் கத்தோலிக்க குடும்பத்தாருடன் உரையாடல்

ரோமன் கத்தோலிக்க குடும்பத்தைச் சேர்ந்த மரிய ஜோசப் என்ற வாலிப சகோதரன், சத்திய மார்க்கத்தை அறிந்து புதிய எருசலேம் சபையில் விசுவாசியாகி விட்டார். இவர் தன்னுடைய உறவினர்களும் சத்தியத்தை அறிய வேண்டும் என நல்லெண்ணங்கொண்டு, விசுவாச மார்க்கத்தை விளக்கிக் காண்பிப்பதற்காக எங்களை அழைத்துச் சென்றார். அந்தக் குடும்பத்தினர் தெய்வ பக்தி உள்ளவர்களாக தெரிந்தது. எங்களை அன்புடன் உபசரித்து விசாரித்தார்கள். சகோ. மரிய ஜோசப்பின் தாத்தா, பாட்டி, இரண்டுமாமாக்கள், அவர்களுடைய துணைவியார்கள் ஆகியோர் அந்த வீட்டில் கூடி வந்தனர். பெரியவரது ஒரு சகோதரன் கத்தோலிக்க குருவானவர்; இரண்டு சகோதரிகள் கன்னியாஸ்திரிகளாக இருக்கிறார்கள்.

நான் அவர்களிடத்திலே பேச ஆரம்பித்து, கிறிஸ்தவர்களாகிய நாம் உண்மையிலேயே பாக்கியம் பெற்றவர்கள். எத்தனையோ மனிதர்கள் இயேசுவை தெய்வம் என்று அறிய முடியாதவர்களாக இருக்கையில், அவர் தெய்வம் என்று நாம் அறியும்படியான ஒரு சிலாக்கியம் கிடைத்திருக்கிறதென்றால் நாம் பாக்கியம் பெற்றவர்களே. ஆதியிலே தேவன் மனுஷனை ஆணும், பெண்ணுமாய்ப் படைத்து, அவர்களுக்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து கொடுத்து, அவர்களோடே உலாவிக் கொண்டிருந்தார். ஆனால் ஆதாமோ, இறைவனுடைய கட்டளையை மீறி பாவம் செய்தான். ஆதாம் செய்தது மகா பெரிய பாவமாகும். விலக்கப்பட்ட மரத்தின் கனியைத்தானே புசித்தார் என்று எண்ணக் கூடாது. சாத்தானுடைய வார்த்தையைக் கேட்டு இறைவனுடைய வார்த்தையில் விசுவாசமில்லாமல் மீறுதல் செய்தார் ஆதாம். மனைவி, கணவனை விட்டு சோரம் போனதற்கு ஒப்பாக இருக்கிறது ஆதாம் செய்த பாவம். பாவம் மனிதனையும், தெய்வத்தையும் பிரித்துவிட்டது. இறைவனுடைய முகம் மனுஷனுக்குத் தென்படாமல் போயிற்று. பாருங்கள் வீட்டுக்குள் தொட்டியில் ஒரு செடியை வைத்தால் ஜன்னல் வழியாக சூரியனை நோக்கி வளர ஆரம்பிக்கும் இது செடியின் இயற்கையான தத்துவம்.

அந்தப் பிரகாரம் மனிதன் தெய்வத்தை வழிபடும்படி இயற்கையான தத்துவ முடையவனாக இருக்கிறான். நாகரீக சமுதாயத்தோடு தொடர்பற்ற காட்டு ஜாதி மக்களைப் பாருங்கள். அவர்கள் ஆடைகூட இல்லாதிருக்கலாம், வேறு எந்த நாகரீகமும் இல்லாதவர்களாக இருக்கலாம். ஆனால் அவர்கள் தங்களுக்கென்று ஒரு தெய்வத்தை வைத்திருப்பார்கள் அல்லது அவர்களின் தலைவனை தெய்வமாக ஆராதிப்பார்கள். தெய்வ வழிபாடு செய்ய வேண்டும் என்ற இயற்கையான தத்துவம் மனிதனுக்குள் இருக்கிறது. ஆனால் இறைவன் யார் என்பதை அறியவில்லை.

ஆகையால் சிலர் குரங்கை (அனுமான்) தெய்வமாக வழிபடுகிறார்கள். சிலர் நாயை, சிலர் பாம்பை, சிலர் பன்றியை, சிலர் பறவைகளை, சிலர் பசுவை தெய்வங்களாகப் பாவித்து வழிபாடு செய்கிறார்கள்; நமக்கு ஒரு தகப்பன் தான் உண்டு, ஒரு தாய்தான் உண்டு; நம்மை பிறப்பித்தவர்கள் இவர்களே. இந்த வண்ணமாய் நம்மை உருவாக்கினவரே தெய்வம். இந்த மாடு நம்மை உருவாக்கிற்று, இந்த பாம்பு நம்மை உருவாக்கிற்று, இந்த பறவை, இந்த பிராணி நம்மை உருவாக்கிற்று, என்று சிந்திக்கும் ஆற்றல் அநேகருக்

கில்லை. ஆனபடியால் தான் வேதம் அவர்களை அஞ்ஞானிகள் என்று சொல்லுகிறது. ஆவியாயிருக்கிற கடவுளை மனிதர்களாகிய நாம் காணமுடியாமல் போனபடியால், நாம் காணக்கூடிய வகையில் இறைவன் நம்மைப்போல் இயேசு என்ற பெயரில் மனுஷனாய் வெளிப்பட்டார். இயேசு என்ற பெயருக்கு ஜனங்களின் பாவங்களை நீக்கி இரட்சிப்பவர் என்று அர்த்தம் (மத். 1:21).

இவரை தெய்வம் என்று ஏராளமானவர்கள் அறியவில்லை. ஆனால் கிறிஸ்தவர்களாகிய நாம் இவரை தெய்வம் என்று அறிந்து கொண்டோம். ஆனபடியால் தான் கிறிஸ்தவர்களாகிய நாம் பாக்கியமுள்ளவர்கள் என்றேன். அப்படியிருந்தும் தெய்வத்தண்டை கிறிஸ்தவர்கள் சேரமுடியாதபடி அலகு [சாத்தான்] திசை திருப்பி விடுகிறான். தகப்பன் இவர்தான் என கண்டு தூர இடத்திலிருந்து தேடிவருகிறவனை எதிராளி ஏமாற்றி, உன் தகப்பன் செத்துப்போய்விட்டான் என்று ஏமாற்றி திசை திருப்பி விடுகிறது போல, அலகு ஜனங்களை திசைதிருப்பி விட்டுவிட்டான். தகப்பனை தவறவிட்ட பிள்ளை ஆறுதலற்று தவிக்கிறது போல, இறைவனைக் காணாதபடி வருத்தப்பட்டு தவிக்கிறவர்களை நோக்கி, இயேசு: "வருத்தப்பட்டு பாரம் சுமக்கிறவர்களே, நீங்களெல்லாரும் என்னிடத்தில் வாருங்கள், நான் உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன் (தெய்வத்தைக் காட்டுவேன் என்றார்)".

இயேசு கிறிஸ்துவை நாம் விசுவாசித்து ஏற்றுக் கொள்ளும்போது பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ளுவோம். தெய்வம் பிதா, குமாரன், பரிசுத்த ஆவியாக இருக்கிறார். ஒரு வீட்டில், டிராயிங் ரூம், பெட் ரூம், கிச்சன் எல்லாம் சேர்ந்துதான் வீடு எனப்படும். வீடு ஒன்றுதான். அந்தப்பிரகாரம் தெய்வம் ஒன்றுதான், அவர் பிதா, குமாரன் பரிசுத்தாவியாக இருக்கிறார். பரிசுத்தாவி வந்தால் பிதாவும், குமாரனும் அவரோடே சேர்ந்தே இருப்பார்கள். பரிசுத்தாவியைப் பெற்றுக் கொள்வது மிகவும் அத்தியாவசியமான காரியமாகும். ஸ்நானகர் அருளப்பர் இயேசுவைக் குறித்து சொல்லும்போது நான் ஜலத்தினால் ஞானஸ்நானம் கொடுக்கிறேன். எனக்குப்பின் ஒருவர் வருகிறார். அவர் பாதரட்சையின் வாரை அவிழ்ப்பதற்கும் நான் பாத்திரன் அல்ல. அவர் பரிசுத்த ஆவியினாலும், அக்கினியினாலும் ஞானஸ்நானம் கொடுப்பார் என்றார்.

மேலும் இதைக் குறித்து பழைய ஏற்பாட்டில் சொல்லியிருக்கிறது, பைபிள் இருக்கிறதா வாசியுங்கள் என்றேன். பழைய ஏற்பாடு இல்லை, கத்தோலிக்க புதிய ஏற்பாடு இருக்கிறது என்றார்கள். அப். 1:4,5-ல் இயேசுவானவர் பரமேறுமுன் பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ளும்படி எருசலேமில் காத்திருக்கச் சொன்னார். அவர்கள் காத்திருந்த போது, பலத்த இடிமுழக்கத்துடன், அக்கினி மயமான நாவுகள் அவர்கள் மேல் இறங்கி, அவர்கள் பரிசுத்த ஆவியினால் நிறைந்து பற்பல பாஷைகளைப் பேசினார்கள். சத்தம் உண்டானபடியால் பண்டிகைக்கு வந்த பல தேசத்து யூதர்கள் கூடி வந்து பார்க்க, அவர்கள் எப்படி இவர்கள் நம்முடைய பாஷையில் பேசுகிறார்கள் என்று ஆச்சரியப்பட்டார்கள். ஒரு பாஷையும் விளங்காத சிலர் குடித்துவிட்டு உளறுகிறார்கள் என்றார்கள். அப்பொழுது ராயப்பர் எழுந்து இதைச் சொன்னார்.

இது இறைவாக்கினரான யோவேல் கூறிய நிகழ்ச்சியே. கடவுள் கூறுவது: "இதோ! இறுதி நாட்களில் எல்லார் மேலும் என் ஆவியைப் பொழிவேன். உங்கள் புதல்வர் புதல்வியர் இறைவாக்கு உரைப்பர். உங்கள் இளைஞர் காட்சிகள் அருளப் பெறுவர். உங்கள் முதியோர் கனவுகள் காண்பர். ஆம் அப்பொழுது என் அடியான் என் அடியாள் ஒவ்வொருவர் மீதும் என் ஆவியைப் பொழிவேன். அவர்களும் இறைவாக்கு உரைப்பர் (அப்.2:16-18).

மேலும்நிக்கொதேமு என்ற ஒரு போதகனிடம் இயேசுசொல்கிறார்: "ஒருவன்ஜலத்

தினாலும் ஸ்பிரீத்து சாந்துவினாலும் மறுபிறப்பு அடையாதிருந்தால் சர்வேஸ்வரனுடைய இராஜ்ஜியத்தில் பிரவேசிக்கமாட்டான் என்று மெய்யாகவே மெய்யாகவே உனக்குச் சொல்கிறேன் என்றார்'' அரு. 3:5.

ஆனபடியால் நீங்கள் ஞானஸ்நானம் பெற்று ஸ்பிரீத்து சாந்துவைப் பெற்றுக் கொள்ள வேண்டும். இல்லாவிடில் சர்வேஸ்வரனுடைய இராஜ்ஜியத்திற்கு போக முடியாதல்லவா. ஆகையால் ஸ்பிரீந்துசாந்தைப் பெறுங்கள் என்று சொல்லி முடித்தேன். தொடர்ந்து அவர்கள் பல கேள்விகள் கேட்க ஆரம்பித்தார்கள்.

(தொடரும்)

''நாம் இனிக் குழந்தைகளாயிராமல், மனுஷனுடைய சூதும் வஞ்சிக்கிறதற்கேதுவான தந்திரமுமுள்ள போதகமாகிய பல வித காற்றினாலே அலைகளைப் போல அலைகிறவர்களாயிராமல்'' எபே. 4:14.

# வேத பாடம் [தொடர்ச்சி]

## எண்ணாகமம்

*எண். 21:10-20*

இஸ்ரவேல் புத்திரர் பிரயாணப்பட்டுபோய் ஒபேத்திலே பாளயமிறங்கினார்கள் என்று அவர்கள் பாளையமிறங்கின விபரம், பிஸ்காவின் உச்சிக்குப் போகுமட்டுமுள்ள விபரம் எழுதப்பட்டுள்ளது. எண். 20:1-21:20 வரை அவர்கள் 13 இடங்களிலே பாளயமிறங்கி தங்கின விவரங்கள் எழுதப்பட்டிருக்கிறது. இவைகளின் விபரம் கர்த்தருடைய யுத்த புஸ்தகத்தில் எழுதியிருக்கிறதென்று வசனம் 15-லே எழுதப்பட்டிருக்கிறது. அதோடுகூட 33-ம் அதிகாரம் 42-முதல் இந்த விபரங்கள் காணப்படுகின்றன. அவர்கள் பேயேருக்குப் போனபொழுது அவர்களுக்கு அற்புதமாக கிணற்றிலிருந்து தண்ணீர் ஊறி வந்ததாக தெரிகிறது இதைக் குறித்து அவர்கள் பாடல் பாடினார்கள் என்று நாம் அறிவோம். இது இஸ்ரவேலர்கள் பாடிய மூன்றாவது பாடலாகும்.

முதலாவது அவர்கள் யாத் 15-ம் அதிகாரம் முதல் வசனத்திலே அவர்கள் பாடல் பாடுகிற சம்பவம் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இரண்டாவது அவர்கள் 20-ம் வசனம் 21-ம் வசனத்திலே இரண்டாவது பாடல் அவர்கள் பாடின விபரம் குறிப்பிடப்பட்டிருக்கிறது இது இஸ்ரவேலர்கள் பாடிய மூன்றாவது பாடலாகும்.

இறைவன் இஸ்ரவேல் ஜனங்களை மிகவும் அற்புதமாகவும், அதிசயமாகவும் வழி நடத்தி வருகிறார். பெரும் திரளான கூட்டமாய் அவர்கள் புறப்பட்டு வருகிறார்கள். அவர்களுக்கு இடமும், ஆகாரமும், தண்ணீரும் போதுமான சுகாதார வசதிகளும், இயற்கையின் நல்ல அனுபவங்களையும் கொடுக்கிறார். அதற்காக நாம் தேவனை ஸ்தோத்தரிப்போமாக. இப்படியே தேவ ஜனங்களுடைய பிரயாணங்களில் விசேஷித்த தேவ ஆசீர்வாதங்கள் பொங்கி வழிகிற அனுபவங்கள் உண்டாகும். விசேஷித்த பாடல்கள்

உருவாகும். ஒவ்வொரு மனிதனுடைய வாழ்க்கையிலும் விசேஷித்த காலங்களும், பாடல் பாடும் காலங்களும் உண்டு.

## எண் 21:21-32

எமோரியரின் ராஜாவாகிய சீகோன் இஸ்ரவேலர்களைத் தன் நாட்டின் வழியாய்ப் போகிறதற்கு உத்தரவு கொடாதது மாத்திரமல்ல, அவர்களுக்கு எதிராக வந்து அவன் யுத்தம் தொடுத்தான். இதைத் தொடர்ந்து இஸ்ரவேல் ஜனங்கள் எமோரியர்களை முறியடித்து எமோரியரின் ராஜாவையும் கொன்று போட்டு அவனுடைய தேசங்களையெல்லாம் பிடித்துக் கொண்டார்கள். சீகோனுடைய பட்டணங்கள் 60. அவன் 60 பட்டணங்களின் மேல் ஆளுகையில் இருந்தான். அவைகளெல்லாம் இஸ்ரவேலர்களுடைய கைவசமாயிற்று. இவ்விதமாக எமோரியர்கள் முறியடிக்கப்பட்டார்கள், துரத்திவிடப்பட்டார்கள்.

## எண். 21:33-35

பின்பு பாசானுக்குப் போகிற வழியாய்த் திரும்பினார்கள், பாசான் ராஜாவாகிய ஓக் என்பவன் தன் ஜனங்களோடு கூட இஸ்ரவேலர்களுக்கு எதிராக யுத்தம் செய்யப் புறப்பட்டு வந்தான். கர்த்தர் மோசேயை நோக்கி அவனுக்குப் பயப்படவேண்டாம்; அவனையும், அவன் ஜனங்கள் எல்லாரையும், அவன் தேசத்தையும் உன் கையில் ஒப்புக் கொடுத்தேன்; நீ சீகோனுக்குச் செய்த பிரகாரம் இவனுக்கும் செய் என்றார். அப்படியே அவர்கள் ஓக்கையும், ஓக்கினுடைய தேசத்தையும் பிடித்தார்கள். ஓக்கையும் அவனுடைய ஆட்களையும் கொன்று போட்டார்கள்; மீதியானவர்கள் துரத்தப்பட்டுப் போனார்கள். இவ்விதமாக இஸ்ரவேலர்கள் பாசானின் ராஜாவையும் பிடித்தது மாத்திரமல்ல, அவனுடைய தேசத்தையும் பிடித்துக் கொண்டார்கள். இந்த இராஜ்யத்தின் ராஜாக்கள் எல்லாம், இந்த இராஜ்யத்தின் குடிமக்களும் இராட்ஷசர்களாக இருந்தார்களென்று தெரியவருகிறது.

அந்நாட்களிலே உலகத்தில் ராட்சதர்கள் பரவியிருந்தார்கள். அவர்களுடைய ஆளுகையிலே ஆங்காங்கு ஆளப்பட்டது. மக்களும் தவறானவர்களாய்ப் பாவத்திலே ஜீவித்தனர். இதினிமித்தம் அவர்களுடைய தேசங்கள் இஸ்ரவேலர்களுக்குக் கையளிக்கப்பட்டன. இவ்விதமாகவே இந்த இராஜ்யங்களும், உலகத்திலுள்ள மக்களும் பாவத்தைக் கட்டிக் கொண்டு வருகிறார்கள். ஒருநாள் அவர்கள் தங்களுடைய அரசியல் செல்வாக்குகளையும், தங்களுக்குரிய சுதந்திரத்தையும் இழந்து போவார்கள். அவைகள் தேவ ஜனங்களுக்கு ஒப்புக்கொடுக்கப்படும் என்று சொல்லி இந்த வேத பாகம் நமக்குச் சுட்டிக் காட்டுகிறது.

உபாகமம் 2:26-37 வரையும் இந்த சம்பவங்கள் மறுபடியும் குறிப்பிடப்பட்டுள்ளன. இவைகள் மூலமாக நாம் அறிந்து கொள்ளுகிற சத்தியங்கள் மிகவும் முக்கியமானவை. உலகத்தில் முன் நடந்ததே பின்பும் நடக்கப் போகிறது என்பதை தேவ ஜனங்களாகிய நாம் அறிந்துகொள்ள வேண்டும்.

அம்மோனியரையும், இன்னும் சில பட்டணங்களையும் தேவன் விட்டுவிடும்படியாக, விலக்கி விடும்படியாகக் கட்டளையிட்டார். அப்படியே தேவன் நீதி, நியாயங்களை நடப்பிக்கிறார். தேவனுக்குப் பயந்து எந்த மதமாயிருக்கட்டும், எந்த ஜாதியாயிருக்கட்டும் தேவனுக்குப் பயந்து நன்மை செய்கிறவர்கள் தப்புவிக்கப்படுவார்கள். அவர்களுக்கு

இறைவன் நல்லாசீர்வாதங்களைக் கட்டளையிடுவார். தேவ ஜனங்களோ விசேஷித்த ஆசீர்வாதங்களையும், ஆளுகையையும், அதிகாரத்தையும், சுதந்திரங்களையும் பெற்றுக் கொள்வார்கள் என்பதாம் உபா. 3:1-17. இந்த இராஜாக்களும், இந்த இராஜ்யத்தின் குடிமக்களும் இராட்சதர்களாக இருந்தார்கள். அவர்கள் தேசம் பிரிக்கப்பட்டு இஸ்ரவேலர்களுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்ட சம்பவம் விளக்கப்பட்டிருக்கிறது.

[தொடரும்]

---

"இந்த நாலுபேரும் காத்தூரிலே இராட்சதனுக்குப் பிறந்தவர்கள்; இவர்கள் தாவீதின் கையினாலும் அவன் சேவகரின் கையினாலும் மடிந்தார்கள்" 2 சாமு. 21:22.

---

## "திறவு கோல்கள் என்னும் அதிகாரம், பாவ சங்கீர்த்தனம்"

*300 "திறவு கோல்களென்னும அதிகாரமாவதென்ன?*

அது மெய்யான மனஸ்தாபம் உடையவர்களுக்குப் பாவங்களை மன்னிக்கவும், அப்படியில்லாதவர்களுக்கு அவர்கள் மனந்திரும்பாதிருக்கும் மட்டும் பாவங்களைக் கட்டிவைக்கவும், கிறிஸ்து பூமியிலுள்ள தமது சபைக்குக் கொடுத்த விசேஷித்த அதிகாரம்.

*301. இது எவ்விடத்தில் எழுதியிருக்கிறது?*

பரிசுத்த யோவானென்பவர் எழுதின சுவிசேஷத்தின் 20-ம் அதிகாரத்தில் தான். அதாவது: இயேசுநாதர் தமது சீஷர்கள் மேலூதி, அவர்களை நோக்கி பரிசுத்த ஆவியை வாங்குங்கள்; எவர்கள் பாவங்களை மன்னிக்கிறீர்களோ அவர்களுக்கு மன்னிக்கப்பட்டிருக்கிறது; எவர்கள் பாவங்களை வைக்கிறீர்களோ, அவர்கள் பேரில் அவைகள் கட்டப்பட்டிருக்கிறது:" [கத்தெகிஸ்மு]

**Martin Luther.**

---

### பரிசுத்தவிவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Bro. துரை | Sis. சுபோதா | வளனியூர் | 19.1.95 |

# வானவில்

அன்று மழைக்காலமாதலால், காலையிலும் கார்மேகங்கள் வானத்தில் காணப்பட்டன. கதிரவனும் மெள்ள மெள்ள எழும்பிக் கொண்டிருந்தான். திடீரென்று மழையும் சிறிது நேரத்தில் பெய்யலாயிற்று. சூரியஒளிக்கதிர்கள் மழைத்துளியில் பட்டு சிதறின. அப்பொழுது அழகான வானவில் தோன்றியது. அவ்வானவில்லில் [VIBGYOR] சிவப்பு, ஆரஞ்சு, மஞ்சள், பச்சை, நீலம், கருநீலம், ஊதா ஆகிய ஏழு நிறங்கள் காணப்பட்டன. செடி, கொடிகள் பச்சை நிறமாக தோன்றுகிறதற்கு காரணம் அவை சூரிய வெண்ணொளியிலுள்ள பச்சை நிறத்தை மாத்திரம் பிரதிபலித்து மற்றநிறங்களை உட்கிரகித்துக் கொள்கின்றன. ஒரு பொருள் சிவப்பு நிறமாக காட்சியளிக்கிறது என்றால் அப்பொருள், சூரியஒளியின் மற்ற எல்லா நிறங்களையும் உட்கிரகித்து சிவப்பு நிறத்தை மாத்திரம் பிரதிபலிக்கிறது என்று அர்த்தம். ஆனல் கறுப்புநிறமாக தோன்றுகிற பொருள் எல்லா வண்ணக் கதிர்களையும் உட்கிரகித்து எந்த நிறத்தையும் பிரதிபலிக்காது. வெண்மையான பொருள் மாத்திரம் சூரிய ஒளியை முழுமையாக பிரதிபலிக்கும்.

இன்றைய கிறிஸ்தவ அமைப்புகளும் இவ்வாறே தங்கள் தங்களது நிறத்தை காட்டுபவைகளாக இருக்கின்றன. அவர்களின் கனியினல் அவர்களை அடையாளம் கண்டு கொள்ளலாம் என்று வேதம் விளம்புகிறது. பொதுவாக கிறிஸ்தவர்கள் வேதத்தை நாமே படித்து, அதை அறிந்து கொண்டு, அதைக் ஏ(ற்)கக்கொள்ளமுடியும் என்று நினைக்கிறர்கள். அதன் விளைவு, வேதத்தில் கொடுக்கப்பட்ட சில வார்த்தைகளை, சில வாக்குத்தத்தங்களைப் பிடித்து கொண்டு சத்தியத்தை அரைகுறையாக கைக்கொள்ளுகிறர்கள். அதை தேவன் அவ்வாறு அவர்களுக்கு கற்பிக்கவும் இல்லை. தேவன் தமது சரீரமாகிய திருச்சபைக்கு மாத்திரமே பூரண சத்தியத்தை வெளிப்படுத்தியிருக்கிறர். திருச்சபைக்கு வெளியே இருக்கும் சபைகள் என்று சொல்லிக்கொள்ளுகிற அமைப்புகளின் நிறங்கள் [உபதேசங்கள்] பின்வருமாறு காணப்படுகின்றன.

சிவப்பு:- பிதா ஒருவர்தான் தெய்வம். அவர்தான் யேகோவா. நாங்கள் அவரது சாட்சிகள். குமாரனும், பரிசுத்த ஆவியும் இறைவன் இல்லை என்று திரித்துவத்தை மறுதலிக்கிறர்கள்.

ஆரஞ்சு:- இயேசு கிறிஸ்துவின் நாமத்தில்தான் ஞானஸ்நானம் கொடுக்க வேண்டும் (பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்தில் அல்ல) என்று இயேசு நாமக்காரர்கள் சொல்கிறர்கள்.

மஞ்சள்:- பெந்தேகோஸ்தே நாளில் பரிசுத்த ஆவியானவர் ஏற்கனவே பூமியில் இறங்கி வந்து விட்டார். எனவே நாம் பரிசுத்த ஆவியின் அபிஷேகத்திற்காக ஜெபிப்பது தவறு என்று சொல்கிறர்கள் பிரதரன் சபையாரும், இன்னும் சிலரும்.

பச்சை:- அப்போஸ்தலர் என்பவர் திருமணம் முடிக்கக் கூடாது. ஸ்திரீகளால் தங்களைக் கறைப்படுத்தக் கூடாது, மருந்து எடுக்கக் கூடாது என்று போதிப்பவர் ஒரு சாரார். இவர்கள் தங்களை மணவாட்டி என்று சொல்லிக்கொள்வார்கள்.

நீலம்:- திருச்சபை என்று ஒன்றும் கிடையாது. சுயாதீன ஊழியம்தான் சிறந்தது. மக்கள் எந்த சபைக்கும் செல்லலாம், எங்கே சென்றாலும் இரட்சிக்கப்படுவார்கள். போதகரை மாதிரியாகப் பார்க்காதே; போதகத்தைப் பார் என்று உபதேசிக்கிறர்கள் ஒரு பிரிவினர் இவர்கள் எந்த அஸ்திபாரமுமில்லாத சுயாதீனப்பிரசங்கிகள்.

கருநீலம்:- இறைவனுக்கு முன்பாக

ஆண் என்றும், பெண் என்றும் வேறுபாடில்லை; எல்லோரும் சமம். ஆகவே பெண்களும் ஊழியம் செய்யலாம், மேய்ப்பராக இருக்கலாம். இவ்வாறு சமத்துவம் பேசி, சமய சீர்திருத்தம் செய்வதாக நினைத்துக் கொள்கின்றனர் சிலர். இவர்கள் பாபிலோனிய மார்க்கத்தார்.

ஊதா:- நகை அணிவது தவறல்ல. பூட்ஸ் போட்டுக்கொண்டு ஆராதித்தாலும் பாவமல்ல. பாவமன்னிப்பு டிக்கட் பணம் கட்டினால் கிடைத்துவிடும். இனி பரலோகமே நமக்குத்தான் - என்கிறார்கள் சிலர். இவர்கள் உலகத்துக்கு ஒத்த வேஷம் போடுகிறவர்கள்.

கருப்பு:- விக்கிரக ஆராதனை செய்கிறார்கள். இன்னும் சிலர் கல்லறைக்குச் சென்று மரித்தோரை வணங்குகிறார்கள். இவர்கள் ஆத்ம மரணம் அடைந்தவர்கள்.

இவர்கள் மாத்திரமல்ல, பலநிறங்கள் காட்டும் பச்சோந்திகளும் உண்டு. எந்த கம்பெனியில் (அமைப்பில்) அதிக சம்பளம் தருகிறார்களோ அந்த அமைப்பின் ஊழியத்திற்கு மாறிச் சென்றுவிடுகிறார்கள் சில ஊழியர்கள்.

திருச்சபையின் நிறமோ வெண்மை. அது பரிசுத்தம். அதைக் காணவிரும்புவோர் வேத வெளிச்சத்தால் அதைக் கண்டு கொள்ளலாம். சகோதரனே! சகோதரியே! உனது நிறம் என்ன? மாம்சத்தால் கறைப்பட்டிருக்கிற உன் வஸ்திரத்தை வெறுத்துவிடு (யூதா. 23). திருச்சபைக்கு வா! கிறிஸ்து உன்னை இரட்சிப்பார். கர்த்தர் உனக்கு வெண்மையும், பிரகாசமும், சுத்தமுமான இரட்சிப்பின் வஸ்திரத்தை உடுத்துவார் (வெளி. 19:8).

ஜலப் பிரளயத்தினால் உலகம் திரும்பவும் அழிந்து போகாதபடிக்கு தேவன் "வானவில்லை" வானத்தில் சாட்சியாக வைத்தார் (ஆதி. 9:13-15). திருச்சபையை தேவன் பூமியில் திரும்பவும் எழுப்பியுள்ளார். மழை பெய்யும் போது வானவில் மேகத்தில் தோன்றும். அப்பொழுது தேவன் வானவில்லைப் பார்த்து பூமியைத் திரும்பவும் ஜலப்பிரளயத்தினால் அழிக்க மாட்டார். அந்த ஆதி ஜலப்பிரளயத்தின்போது நோவா செய்வித்த பேழைக்குள் பிரவேசித்தவர்கள் பாதுகாக்கப்பட்டார்கள். அதுபோல திருச்சபைக்குள் பிரவேசிக்கிறவர்கள் இரட்சிக்கப்படுவார்கள். மற்றவர்கள் கைவிடப்படுவார்கள்.

அன்று வானவில்லை நித்திய உடன்படிக்கையாக, சாட்சியாக தேவன் வானத்தில் வைத்ததுபோல, இன்று திருச்சபையை தமது சாட்சியாக பூமியில் வைத்திருக்கிறார். பகலில் மழைபெய்யும்போது மேகத்தில் வானவில் தோன்றும். கிறிஸ்துவானவர் திரும்ப வரும்போது [இரண்டாம் வருகையில்] திருச்சபை அவருடன் மகிமையில் தோன்றும், எடுத்துக்கொள்ளப்படும். அல்லேலூயா!

"நான் பூமிக்கு மேலாய் மேகத்தை வருவிக்கும் போது அந்த வில் மேகத்தில் தோன்றும்" ஆதி. 9:14.

# தேவனுடைய கிருபையின் சுவிசேஷம்:

சுவிசேஷம் என்றால் நற்செய்தி என்று அர்த்தம். ஒவ்வொருவருக்கும், ஒவ்வொரு ஜனங்களுக்கும் வெவ்வேறு செய்தி நற்செய்தியாயிருக்கும். தேவனுடைய கிருபையின் சுவிசேஷமோ எல்லா ஜனத்துக்கும் நற்செய்தியாகும் (அப். 20:24)

பாருங்கள்:-

பெலிஸ்தருக்கு-: இஸ்ரவேலர்கள் யுத்தத்தில் முறியடிக்கப்பட்டதும், இஸ்ரவேலின் அரசனாகிய சவுலும், அவர் குமாரரும் மரித்துப் போனதும் சந்தோஷத்தை உண்டாக்கும் நற்செய்தியாயிருந்தது. (1 சாமு. 31:9; 2 சாமு. 1:20; 1 நாளா. 10:9).

அமலேக்கியனுக்கு:- சவுல் செத்தது நற்செய்தியாயிருந்தது (2 சாமு. 4:10).

தாவீதுக்கு:- யுத்தத்தின் வெற்றி நற்செய்தியாய்க் காணப்பட்டது (2 சாமு. 11:7)

கூஷிக்கு:- யுத்தத்தின் வெற்றி நற்செய்தியாய்க்காணப்பட்டது (2சாமு. 18:31.)

குஷ்டரோகிகளுக்கு:- கர்த்தர் பஞ்சத்தை நீக்கியது நற்செய்தியாயிருந்தது (2 இராஜா 7:9). தேவனுடைய எந்த ஆசீர்வாதங்களும் நற்செய்தி என்று அறிவிக்கப்படுகிறது. கடவுள் அருளும் எந்த விடுதலையும் நற்செய்தியாகும் (சங். 96:2).

ஒருவருக்கு ஆண்குழந்தை பிறந்ததென்றால் அது சந்தோஷ செய்தியாயிருக்கிறது மனிதர்களுக்கு பிரியமான காரியம் நடந்தால் உங்களுக்குத்தெரியுமா? ஒரு சந்தோஷமான செய்தி என்று அதைக்கூறுகிறார்கள்; ஒருவருக்கு சந்தோஷமான செய்தி மற்றவர்களுக்கு வருத்தமாயிருக்கலாம், துக்கசெய்தியாயிருக்கலாம். ஒரு கூட்டத்தாருக்கு இனத்தாருக்கு சந்தோஷ செய்தி அடுத்த கூட்டத்தாருக்கு, இனத்தாருக்கு துக்கமாயிருக்கலாம்.

மேசியாவின் [இயேசுகிறிஸ்துவின்] ஆசீர்வாதங்கள் நற்செய்தி என்று அறிவிக்கப்பட்டுள்ளது (ஏசா. 40:9; 61:1-3). இன்னும் பல நல்ல காரியங்களின் அறிவிப்பு சுவிசேஷம், நற்செய்தி என்று அழைக்கப்படுகின்றன [கலா. 3:8].

ஆனால் இங்கு சுவிசேஷம் [Gospel] எனப்படுவது தேவனுடைய கிருபையின் சுவிசேஷம் என்பது கர்த்தராகிய இயேசு கிறிஸ்து ஆகும். [அப். 13:28-33]. எல்லா ஜனத்துக்கும் மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கும் நற்செய்தி இயேசுகிறிஸ்துவே மற்ற செய்திகள், மற்ற மதங்கள், கொள்கைகள், மதக் கர்த்தாக்களின் பிறப்புகள் எல்லா ஜனத்துக்கும் நற்செய்தியல்ல கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவாகிய சுவிசேஷம் எல்லா ஜனத்துக்கும், உங்களுக்கும் வெறும் நற்செய்தியல்ல மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கும் நற்செய்தியாகும். இன்று 1995 வருடமாக இயேசு கிறிஸ்துவை ஆத்மதரிசனம் கண்டவர்கள், அவரைக் கேள்விப்பட்டு அவரை தங்கள் தெய்வமாக. இரட்சகராக ஏற்றுக்கொண்ட எல்லா ஜனங்களுக்கும் அது மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கிவருகிறது. அது அவர்களைப் பாவத்திலிருந்தும், சாபத்தினின்றும் விபச்சாரத்தினின்றும், அக்கினியினின்றும், வியாதியிலிருந்தும் பிசாசு பிடியிலிருந்தும், பாரம்பரிய பழக்க வழக்கங்களிலிருந்தும், மாயையிலிருந்தும் விடுவித்து மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கி மனிதனை தேவனோடு ஐக்கியப்படுத்திவருகிறது இதற்கு நிகரில்லை.

இறைவன் அப் பவுலை உன்னையுள்

ளவர் என்று கண்டு இந்த ஊழியத்தை ஒப்புவித்தார் [1 தெச. 2:4]. இந்த சுவிசேஷமாகிய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவுக்கு விரோதமான செய்தியோ, உபதேசமோ தவறு என்று சத்திய வேதம் அறிவிக்கிறது வேறு எந்த மகானோ மனிதனோ தேவதூதனோ வந்து வேறே ஒரு சுவிசேஷம் அல்லது நற்செய்தி என்று அறிவித்தாலும் அது மனிதனை இரட்சிக்காது. அது தவறு [கலா. 1:8,9].

இந்த சுவிசேஷம் எங்கே அறிவிக்கப்படுகிறதோ அது மெய்யான கடவுளைப் பற்றிய செய்தியாயிருப்பதால் [எந்த எதிர்ப்பின் மத்தியிலும்] மக்கள் இறைவன் இயேசுவை விசுவாசித்து ஏற்றுக்கொண்டு கிறிஸ்தவர்களாய் மாறுகிறார்கள். கிறிஸ்துவின் சுவிசேஷம் தெய்வீக வல்லமையாகும் [ரோ. 9:16; 1 கொரி. 1:18,22-24]. இந்த நற்செய்தி ஊழியம், சுவிசேஷத்திற்காக அப். பவுல் போன்றவர்கள் எல்லாப்பாடும் பட்டார்கள் (1 கொரி. 9:22,23); சந்தோஷமாக இந்த ஊழியத்தைச் செய்தார்கள் (1 கொரி. 9:17; கொலோ. 1:24); சுவிசேஷத்தை பிரசித்தப்படுத்துவதை ஆத்மீக வழிபாடாக [ஆராதனை] கொண்டார் அப். பவுல் (ரோ. 15:15; 1:1).

இந்த கிருபையின் காலத்திலே கிருபையின் வாசல் அடைபடுமுன்னே நீ கர்த்தராகிய இயேசுவை விசுவாசி. உனக்கும் மிகுந்த சந்தோஷம் உண்டாகும்.

"கிருபையினால் ஒரு பங்கு மீதியாயிருக்கிறது" ரோம. 11:5.

# பெண்கள் [தொடர்ச்சி]

இந்த பூமி எவ்வளவு பெரிதென்று நாமெல்லாரும் அறிந்திருக்கிறோம். இந்த பூமியிலும் சூரியன் 13 லட்சம் பங்கு அதிக பெரிதாயிருக்கிறது. அந்த சூரியனைப்போல அநேக கோடி சூரியன்களும், சந்திரன்களும் ஆகாய விரிவிலே நட்சத்திரங்களாகக் காணப்படுகின்றன. நாம் பார்க்கின்ற நட்சத்திரங்களைத்தவிர நம்முடைய பார்வைக்கு எட்டாத தூரத்திலும் அதற்கு மேலும் கீழும் எல்லாவிதப் பக்கங்களிலும் அடுக்கடுக்காய் எண்ணிக்கையில்லா நட்சத்திரக் கூட்டங்கள் இருக்கின்றன. அவை ஒன்றுக்கொன்று சமீபமாய் நமக்குக்காணப்பட்டாலும் அவைகளுக்கும் இந்த பூமிக்கும் எவ்வளவு தூரமோ அப்படியே அவைகள் ஒவ்வொன்றுக்கும் ஒன்றுக்கொன்று வெகுதூரமுடையவைகளாய் இருக்கின்றன.

இந்த சூரியனைச் சுற்றி பூமி முதலிய பல கிரகங்கள் சுற்றுகிறது போலவே நட்சத்திரங்களாகிய ஒவ்வொரு சூரியனையும் பல கோளங்கள் சுற்றி ஓடுகின்றன. அப்படியானால் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட சந்திர, சூரியன்களையும், புவனக் கோடிகளையும் எண்ணத்தொலையுமா? எட்டிலடங்குமா? அந்த பிரமாண்ட கோடிகளுக்குள் பூமி ஒரு அணுவுக்குச் சமானமல்லவா. சகல புவனங்களையும் தாங்கி படியளக்கிற கர்த்தாவுக்கு சிறிது கோபம் ஜெனித்தால் அண்ட அடுக்குகள் குலைந்து ஒன்றோடொன்று மோதி சூரிய மண்டலம் சந்திர மண்டலத்தின் மேலும், சந்திர மண்

டலம் பூமண்டலத்தின் மேலும் விழுந்து சின்ன பின்னமாகி சிதறுண்டு போகுமென்பது சந்தேகமா!

பல அண்ட கோடிகளும் பரமேஸ்வரருடைய பாதத்தூள்களாய் இருக்கின்றன. சூரியன், அக்கினி முதலிய சுடர்கள் கடவுளுடைய திவ்விய பிரகாச மேனியிலிருந்து சிதறிய சிறு பொறிகள். சமுத்திரங்களும், மேகங்களும் அவருடைய கிருபா நேத்திரத்திலிருந்து பெருகி வரும் மிகச் சிறு துளிகள். சண்டமாருத புயல்கள் அவருடைய சிறு விரலின் அசைவு. உன்னதப் பர்வதங்கள் அவர் விளையாடும் பந்துகள். அவருடைய பிள்ளைகளாகிய நமக்காக அவரால் நியமிக்கப்பட்ட ஊழியக்காரர்களே பஞ்சப்பூதாதிகள். கற்ப கோடி காலங்கள் அவருக்குக் கனப்பொழுது. தமக்குத் தேகமில்லாதிருந்தும் சகல ஜீவன்களுக்கும் தேகங்கள் கொடுப்பவர் அவரே. தாம் உண்ணாமல் மற்ற உயிர்களுக்கு உணவளிப்பவர் அவரே. தாம் நித்திரை செய்யாமல் மண்ணுயிர்களைத் தூங்கவைத்து காவலாய் இருப்பவர் அவரே. தாம் நடவாமல் திரியாமல் எள்ளுக்குள் எண்ணெயைப் போல எங்கும் நிறைந்திருப்பவர் அவரே. தாம் கைவேலை செய்யாமல் நினைத்த மாத்திரத்தில் அண்ட கோடிகளை ஒன்றாக்கி இரட்சிப்பவர் அவரே. அந்த அண்ட கோடிகளை சரட்டில்லா பம்பரம் போல ஆட்டுகின்றவரும் அவரே. இக்கிரியை ஆனந்தங்களையெல்லாம் நமக்குக் காட்டுகின்றவரும் அவரே. கிருபா நேத்திரத்தால் நம்மைப் பார்ப்பவரும் அவரே. துஷ்டசத்துருக்கள் மேல் சாத்திரம் செய்கிற சத்தியரும் அவரே. பக்தர்களுக்கு மோட்ச வியாபாரம் செய்கிற வைசியரும் அவரே. அண்டங்களை ஆட்டுகிற சூத்திரரும் அவரே. ஜீவ கோடிகளுக்கு வேளாண்மை செய்கிற வேளாளரும் அவரே. சர்வலோக நாயகரும் அவரே. அண்ட வீடுகளைக் கட்டிய தெய்வதட்சநாரும் அவரே. தேக கடன்களைச் செய்கிற குயவனும் அவரே. தாசர் வார்த்தையைத் தட்டாதவரும் அவரே.

ஒரு சிறிய வஸ்துவைக்கொண்டு பெரிய விஷயங்களையும், சிற்சில ஜலத்துளியைக் கொண்டு பெரிய உடல்களையும், ஒருதானியத்தைக் கொண்டு கோடி தானியங்களையும் செய்கிறஜாலவித்தைக்காரரும் அவரே. மனுஷர்களுக்கும், விலங்குகளுக்கும், பட்சிகளுக்கும், புஸ்பங்களுக்கும் பல வர்ணங்களையும், அலங்காரங்களையும் அமைத்து அருளிய சித்திரக்காரரும் அவரே. ஆத்தும அரசன் குடியிருக்கும் பொருட்டு இரண்டு கால் நாட்டி, இரத்தமாகிய நீர் சேர்த்து, மாம்ச சுவரெழுப்பி, எலும்புக் கழிகளைப் பரப்பி, நரம்புக்கயிறுகளால் கட்டி, தோலாகிய கூரை வேய்து ஒன்பது வாசலிட்டு சரீர வீட்டைச் செய்த கொத்தனும் அவரே. அந்த வீடு பிராண வாயுவால் சஞ்சரிக்கச் செய்தவரும் அவரே.

நமக்குத் தெரியாமல் நம்முடைய சித்தங்களை வசிக்கிற சித்தரும் அவரே. தேக வீடு தானே வளரவும், நிமிரவும், குனியவும், நடக்கவும், ஓடவும், இருக்கவும், படுக்கவும், தூங்கவும் பல வேலைகளைச் செய்யவும், உண்ணவும், உண்ணுகின்ற பதார்த்தங்களை ஜீரணித்து உடலெங்கும் பரப்பவும், மனமானது சஞ்சரிக்கவும், ஆலோசிக்கவும், துக்கிக்கவும், பஞ்சேந்திரங்களின் பல இன்பங்களை அனுபவிக்கவும், நம்முடைய சுயாதீனமில்லாமல் சுவாசமானது தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கவும் செய்த பரம தயா நிதியும் இவரே.

இந்த பூமியை கடவுள் உண்டாக்கி எத்தனையோ காலமாகியும் என்றும் புதியதும், வளப்பமாயும், செழிப்புமாயும் இருக்கின்றது. ஒரு பொருளை நாம் வீட்டில் வைத்திருந்தால் எத்தனை காலமானாலும் அந்த பொருள் மட்டுமே இருக்குமல்லாமல் அது வேறு பொருட்களை உண்டாக்

"தேவனைத் தேடு"
**"SEEK GOD"**
Regd. No. 040088/84
Postal Regd. No. MH BY NE-94/94
Tamil Monthly Magazine

காது. பூமியோவென்றால் ஒன்றை கோடியாகச் செய்கின்றது. ஒரு நெல்லு விதைத்தால் எண்ணமுடியாத அநேக நெற்களை உண்டாக்குகின்றது ஒரு மரக்கால் தானியத்தை இருபது மரக்காலாகவும், பத்து மரக்கால் தானியத்தை இருநூறு மரக்காலாகவும் பூமி விளைவிக்கின்றது. கடவுளுடைய ஆசீர்வாதத்தினால் பூமி முதலிய பஞ்ச பூதங்களும், சகல வஸ்துக்களும் மனுஷர்களுக்கு ஊழியக்காரர்கள் போல் வேலைகள் செய்கின்றன என்பதை அடியில் விவரித்துக் காட்டுவோம்.

(தொடரும்)

---

"தேவனே உமது ஆலோசனைகள் எனக்கு எத்தனை அருமையானவைகள்; அவைகளின் தொகை எவ்வளவு அதிகம்" சங். 139:17.

---

### அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   16 [வியாழன்] மார்ச் 1995
   17 [திங்கள்] ஏப்ரல் 1995
   15 [திங்கள்] மே 1995
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs 15-00
   வெளிநாடு Rs 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :
   CHIEF PASTOR N. LAZAR
   "NEW JERUSALEM CHURCH"
   CHURCH LANE, TILAK NAGAR,
   DARGA ROAD, BHANDUP,
   BOMBAY-400 078 INDIA.
3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்
5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078.

# ஆசிரியர் உரை

"உலகத் தோற்ற முதற்கொண்டு தேவனுக்கு தம்முடைய கிரியைகளெல்லாம் தெரிந்திருக்கிறது" (அப். 15:18). உலகத் தோற்ற முதற்கொண்டு அந்தம் மட்டும் நடைபெறப்போகிற சம்பவங்களும், அவைகளை தாம் நடப்பித்து நிறைவேற்றப் போகிறதுமான காரியங்களை தேவன் அறிந்திருக்கிறார். தேவன் திட்டமிட்டிருக்கிறார், தேவன் தீர்மானித்திருக்கிறார். அவருடைய தீர்மானத்தின்படியே நடக்கும்.

பிசாசும், கீழ்ப்படியாத மனிதர்களும் எவ்வளவு தான் போராடினாலும், உலகத்தில் பாவம் நிறைந்துபோனாலும், துரோகங்கள் காணப்பட்டாலும், அவிசுவாசம் உண்டானாலும் அன்பில்லாமல் போனாலும் தேவன் தம்முடைய சித்தத்தை நிறைவேற்றி, தீமையை இந்த உலகத்தில் கட்டுப்படுத்துவார். இறைவனுடைய வாக்குக்கு கீழ்ப்படிகிறவர்கள் எண்ணவியாலா, சொல்லொண்ணா பாக்கியங்களைப் பும், ஆசீர்வாதங்களையும் இம்மையிலும், மறுமையிலும் பெருகிறார்கள்; பெற போகிறார்கள். இறைவனோடுள்ள ஐக்கியம், தேவனோடுள்ள தொடர்பு மகா பெரிய வல்லமை, சக்தியாக இருக்கிறது அதினால் மனிதனுடைய ஆத்துமா நிரந்தர சமாதானத்தைப் பெற்று மகிழ்கிறது. வல்லமையைப் பெற்றுக் கொள்கிறது. அவனுடைய சரீரமும் ஆரோக்கியமாய் காணப்படும்.

உலகத்தில் தேவன் தமக்குக் கீழ்ப்படிகிறவர்களுக்கு மென்மேலும் பரிசுத்த ஆவியை தந்தருளுகிறார் [அப். 2:33,38; 5:32]. நாம் மென்மேலும் தேவ ஆவியினால் நிரம்பி களிகூறுகிறதும், தேவசித்தம் செய்கிறதும் உலகத்தில் இறைவனுடைய பணியாற்றுகிறதும், மகா சிறந்த பாக்கியமாகும். ஆனபடியினால் தேவ ஜனங்கள் பாவத்தை அற அகற்றி அவைகளை அறிக்கை செய்து விட்டுவிட்டு தங்களைப் பரிசுத்தப்படுத்திக்கொண்டு தேவ ஆவியை மென்மேலும் பெற்று தேவனில் களிகூறுவீர்களாக! கர்த்தர் தம்முடைய சித்தத்தை நிறை வேற்றியே முடிப்பார். ஆமென்!

கிறிஸ்துவுக்குள்,

[CHIEF PASTOR N. LAZAR]

# கிறிஸ்தவ மார்க்கம் [தொடர்ச்சி]

தேவ ஊழியர்களே சபையின் ஊழியத்தை நடத்த வேண்டும் என்று நாம் முந்தின கட்டுரையில் சொன்னோம்.

### சபையின் ஊழியர்கள்

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்ததினால் சபைக்கு ஊழியர்களும், கிருபை வரங்களும் கொடுக்கப்பட்டது [எபே. 4:7-13; 1 கொரி. 12:28]. தேவனானவர் சபையிலே முதலாவது அப்போஸ்தலரையும், இரண்டாவது தீர்க்கதரிசியையும், மூன்றாவது போதகர்களையும் இப்படி தம்முடைய ஊழியங்களை நியமித்தார். ஊழியர்களை பிதாவாகிய தேவன் நியமித்தார் என்று (1 கொரி. 12:28 – லும் இயேசுவானவர் நியமித்தார் என்று எபே. 4:8-13 லும், பரிசுத்த ஆவியானவரால் நியமிக்கப்பட்டார்கள் என்று அப். 20:28 லும் கூறப்பட்டிருக்கிறபடியால் பிதா, குமாரன், பரிசுத்த ஆவியானவராகிய திரித்துவத்தால், திரித்துவ தேவனால் சபையின் ஊழியர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள் என்று விளங்குகிறது. இதற்காக தேவன் தமது ஊழியர்களை தமது சபைக்குக் கொடுத்தார்.

1. எந்த மனிதனையும் கிறிஸ்து இயேசுவுக்குள் தேறினவனாயும் நிறுத்தும்படிக்கு அவரையே (இயேசு) நாங்கள் அறிவித்து எந்த மனுஷனுக்கும் புத்தி சொல்லி எந்த மனுஷனுக்கும் எல்லா ஞானத்தோடும் உபதேசம் பண்ணும்படிக்கு தேவன் தமது ஊழியர்களை நியமித்தார் (கொலோ. 1:28.).

2. மேலும் நாம் அனைவரும் தேவனுடைய குமாரனைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமைப்பட்டவர்களாகி கிறிஸ்துவின் நிறைவான வளர்ச்சியின் அளவுக்குத் தக்கதாக பூரண புருஷராகும் வரைக்கும் பரிசுத்தவான்கள் சீர் பொருந்தும் பொருட்டு சுவிசேஷ ஊழியத்தின் வேலைக்காகவும் கிறிஸ்துவின் சரீரமான சபையானது பக்திவிருத்தியடைவதற்காகவும் தேவன் ஊழியர்களை ஏற்படுத்தினார் (எபி. 4:11,12).

3. சபையை ஆளுகை செய்யவும், தவறு செய்கிறவர்களுக்கு தண்டனை கொடுக்கவும் தேவன் தமது சபையில் ஊழியர்களை வைத்திருக்கிறார். (1 தீமோ. 5:20,22; மத். 18 16-18; 2 கொரி. 5:1-5).

4. தாம் ஒருவராய் சாவாமையுள்ளவரும், சேரக்கூடாத ஒளியில் வாசஞ்செய்கிறவரும் மனுஷரில் ஒருவரும் கண்டிராதவருமாயிருக்கிறவருடைய சந்நிதியில் ஆத்துமாக்களுடைய கணக்கை கொடுக்க வேண்டியதற்காகவும் ஊழியர்களை ஏற்படுத்தியுள்ளார் [எபி. 13:17].

இந்த ஊழியர்கள், ஊழியங்கள் பற்பல விதமாக காணப்படுகிறது. தேவனால் அதிகாரப்படுத்தப்பட்ட ஊழியர்களே. திருச்சபையின் நியமங்களை, சாக்கிரமந்துக்களை கையாட வேண்டும்

### இரண்டு விதமான அப்போஸ்தலர்கள் உண்டு.

1. மகா பிரதான அப்போஸ்தலர் 2 கொரி. 12:11.

2. அப்போஸ்தலர் அப். 14:14; 1கொரி. 9:5; 1 தெச. 2:6.

இவர்களும் அப்போஸ்தலர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். மகா பிரதான அப்போஸ்தலர்கள் 12 பேர்கள் – மட்டும் தான். மற்ற அப்போஸ்தலர்களைப்பற்றியும் வேதாகமத்தில் எழுதியிருக்கிறது

அப்போஸ்தலனுடைய அடையாளம்:-

அப்போஸ்தலன் என்றால் அனுப்பப் பட்டவன் என்று அர்த்தமாம். ஏதோ சில பட்டம் பெற்று, வித்தியாசமான சில வஸ்திரம் தரித்தால் அப்போஸ்தலன் ஆகலாம் என்று சிலர் நினைக்கிறார்கள். முடியவே முடியாது. வேறு சிலர் Seminor அல்லது Bible Study படித்து பட்டம் பெற்ற பிறகு கொஞ்சம் வேதாகம ஞானம் பெற்று பிரசங்கத்தைக் கற்றுக் கொண்டால் அப்போஸ்தலர் ஆகலாமென்று நினைக்கிறார்கள்; அது தவறான நினைவு. இன்னும் சிலர் எல்லாவற்றையும் விட்டு விட்டவர்கள் அப்போஸ்தலர் என்று எண்ணுகிறார்கள். எல்லாவற்றையும் கொஞ்சம் கொஞ்சமாக உபதேசத்தையும் விட்டு விடுகிறவர்களாக கடைசியில் எல்லாவற்றையும் விட்டுவிடுவார்கள் போல இருக்கிறது. அப்போஸ்தலன் என்றால் அப்போஸ்தலருடைய அடையாளங்கள் 2 கொரி. 12:12ல் சொல்லப்பட்டிருக்கிற பிரகாரம் பொறுமை, அற்புதங்கள், அடையாளங்கள், வல்லமைகள் என்பதே. இவைகள் இல்லாதவன் அப்போஸ்தலன் அல்ல.

அப்போஸ்தலன் பிதாவாகிய தேவனாலும், இயேசுகிறிஸ்துவினாலும் அழைக்கப்பட்டு, அதிகாரப்படுத்தப்பட்டு அனுப்பப்பட்டிருக்க வேண்டும். அப்போஸ்தலனுடைய அடையாளங்கள் அவர்களிலே காணப்பட வேண்டும்.

*அப்போஸ்தலனுக்குரிய அதிகாரங்கள்:*

முதலாவது பாவங்களை மன்னிக்கும் அதிகாரமுடையவனே அப்போஸ்தலன் [யோவா. 20:20,21]. அப்போஸ்தலனுடைய அடையாளங்களில் அடுத்தது அவரால் சபைகள் உண்டாகும் (1 கொரி. 9:2). ஆனால் ஒரு சபையும் கட்டாதவர்கள் அப்போஸ்தலன் என்ற பெயரில் இருப்பதை இன்றைக்குக்காணலாம். இவர்கள் தேவனால் அல்ல மனுஷனால் ஏற்படுத்தப்பட்ட அப்போஸ்தலர்கள். பரலோகம் இவர்களை அப்போஸ்தலராய் ஏற்றுக் கொள்ளாது.

*அப்போஸ்தலனுடைய பொறுப்பு:-*

பல சபைகளுடைய மேற்பார்வைகள் அப்போஸ்தலனுடைய பொறுப்பாகும். தீத் 1:5; அப். 20:17–30. தவறு செய்தவர்களுக்குத் தண்டனை கொடுக்கவும், சத்தியத்திலிருந்து விலகிப்போகிற ஊழியர்களை சபையை விட்டு விலக்கவும் அப்போஸ்தலனுக்கு அதிகாரம் உண்டு (1 கொரி. 5; 1–5; 1 தீமோ. 1:19,20; 2 கொரி. 2:16–18). தேவனால் தெரிந்து கொள்ளப்பட்டு அழைக்கப்பட்ட ஊழியக்காரர்களை, பரிசுத்த ஆவியின் நடத்துதலின் படி கை வைத்து ஜெபித்து ஊழியத்துக்கு அனுப்புவது அப்போஸ்தலனுடைய வேலைகளில் ஒன்றாகும் – (அப். 13:13; அப். 6:1–6; தீத். 1:5; 1 தீமோ. 5:22). அப்போஸ்தலர்கள் ஜெபத்திலும், தேவ வசனத்தை போதிக்கிற ஊழியத்திலும் உறுதியாய்த் தரித்திருக்க வேண்டும். இயேசுவானவர் அப்போஸ்தலனை ஒரு உறையாக அணிந்திருக்கிறார். மற்றவர்கள் எந்த அளவுக்கு அவர்கள் தங்களை ஒப்புக் கொடுக்கிறார்களோ அந்த அளவுக்கு கர்த்தர் எடுத்து கருவியாய் உபயோகிப்பார். ஆனால் அப்போஸ்தலனை மாத்திரம் இயேசுவானவர் தன்னுடைய உறையாக அணிந்து அவன் மூலமாய் செயல்படுவார்.

*தீர்க்கதரிசிகள்:-*

சபையின் அஸ்திபார ஊழியத்தில் இந்த பெயரும் காணப்படுகின்றது [எபே. 2:20]. கர்த்தருடைய வருகை வரையிலும் தீர்க்கதரிசிகளைக் கர்த்தர் சபையில் எழுப்பிக் கொண்டேயிருப்பார் (அப். 21:10). தேவனிடத்திலிருந்து பெற்றுக் கொண்டவைகளை மனுஷனுடைய முகத்தைப் பாராமல் சத்தியத்தைப் பேசுகிறவர்கள் தான் தீர்க்கதரிசிகள் [அப். 21:8,9].

**தீர்க்கதரிசியினுடைய ஊழியங்கள் :-**

1. சபையைக் கட்டும்பணியில் இவர்கள் அப்போஸ்தலனோடு சேர்ந்து உழைப்பார்கள் (எபே. 2:20).

2. சபையை போதனையில் பலப்படுத்துவது தீர்க்கதரிசியினுடைய கடமை (அப். 13:1,2; 1 கொரி. 14:29; அப். 11:27,28.

3. தேவனுடைய சபையில் தீர்க்கதரிசிகள் வேதாகமத்துக்கு விரோதமாய்ப் பேசாமல் சபையின் பக்திவிருத்திக்கு ஏற்ப பேச வேண்டும் [அப். 21:8-11; அப். 15:22].

(தொடரும்)



"இவைகளிலே கிறிஸ்துவுக்கு ஊழியஞ் செய்கிறவன் தேவனுக்கு பிரியனும் மனுஷரால் அங்கிகரிக்கப்பட்டவனுமாயிருக்கிறான்" ரோம. 14:18.





# திருச்சபை

(தொடர்ச்சி)

அஸ்திபாரம்: எபி 6:1-3 ல் என்பவைகளாகிய அஸ்திபாரத்தை மறுபடியும் போடாமல் என்றிருக்கிறது.

அஸ்திபாரம் அப்போஸ்தலர் தீர்க்கதரிசிகள் மாத்திரமல்ல உபதேசங்களுமாம்.

கிறிஸ்தவம் நான்கு தூண்களின் மேல் நிற்கிறது.

1. இயேசுகிறிஸ்துவின் கன்னிகை பிறப்பு.

2. அவருடைய பரிசுத்த வாழ்க்கை.

3. அவருடைய பரிசுத்த மரணம்.

4. அவருடைய மகிமையான உயிர்த்தெழுதல். திருச்சபையோ ஏழு தூண்களின் மேல், உபதேசங்களின் மேல் நிற்கிறது. அஸ்திபாரமில்லாத கட்டடம் விழுந்து போவது போல் அஸ்திபார உபதேசமில்லாத கூட்டங்கள் விழுந்துபோகின்றன. விழுந்துப்போகும். சில கூட்டங்களைப் பற்றி ஜனங்கள் இப்படிப் பேசிக்கொள்வார்கள் [illegible] அஸ்திபாரமில்லாத [illegible] சபைகள் [illegible] உபதேச விசுவாசப் பிரமாணங்களை உடையவைகளென்று. ஆனபடியால் ஆட்கள் மாத்திரமல்ல, உபதேசங்கள் அஸ்திபாரங்கள் ஆகும். கிறிஸ்தவ உபதேசங்கள் முக்கியமான 52 கள் இருந்தாலும், அதைவிட அதிகமாயிருந்தாலும் அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும். ஞானம் தன் வீட்டைக் கட்டி தன் ஏழு தூண்களையும் சித்திரம் தீர்த்து நீதி. 9:1 என்று வேதம் திட்டமாய் சொல்லுகிறது. சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு என்றும்.

1. ஞானஸ்நானம்

2. திருவிருந்து

சிலர் மூன்று என்றும்.

1. ஞானஸ்நானம்

2. பரிசுத்த ஆவியின் அபிஷேகம்

3. திருவிருந்து என்றும்.

ரோமன் மார்க்கத்தார் ஏழு என்றும்.

1 ஞானஸ்நானம்

2 உறுதி பூசுதல்

3. நற்கருணை

4. பச்சாத்தாபம்

5. அவஸ்தை பூசுதல்

6. குருதத்துவம்

7. மெய்விவாகம்

பெந்தேகோஸ்தேகாரர்கள்.

1. மனந்திரும்புதல்

2. ஞானஸ்நானம்

3. பரிசுத்தாவியின் அபிஷேகம்

4. திருவிருந்து

5. வேறுபாட்டு ஜீவியம், தெய்விக சுகம்

6. கர்த்தருடைய வருகை

7. நித்திய நியாயத்தீர்ப்பு என்று சொல்லுகிறார்கள் இவைகளெல்லாம் மனிதர்கள் கூடி ஆலோசனை பண்ணி முடிவெடுத்துக் கொண்டவைகளே.

இன்னும் சிலர் உங்கள் அஸ்திபார உபதேசங்கள் என்னவென்று கேட்டால் மலங்க, மலங்க விழிப்பார்கள். அதாவது எந்த அஸ்திபாரமுமில்லாதவர்கள் இவர்கள். சில கூட்டத்தின் தலைவர்கள் அல்லது போதகர்கள் விழுந்து போனால் அந்தக் கூட்டங்கள் சிதறுண்டு போகின்றன. காரணம் அங்கே அஸ்திபாரமில்லை. அவர்கள் நம்பிக்கை இயேசுவின் மேல், தேவனுடைய வார்த்தையின் மேல் [அஸ்திபார உபதேசங்களின் மேல்] இல்லை அங்கே மெய்யான அப்போஸ்தலன் இல்லை, மெய்யான அஸ்திபார உபதேசமுமில்லை

இந்தக் கல்லின்மேல் என் சபையைக் கட்டுவேன்; பாதாளத்தின் வாசல்கள் அதை மேற்கொள்வதில்லை (மத். 16:18) என்று இயேசுவானவர் இயம்பினார். முற்காலங்களில் பட்டணங்களின் பிரதான வாசலுக்கு ஒலிமுகவாசலென்று பெயர் உண்டாயிருந்தது. அந்த ஒலிமுக வாசலின் இரு பக்கங்களிலும் மேடைகள் அமைக்கப்பட்டிருக்கும். பட்டணத்தின் மூப்பர்கள் அங்கே கூடி வந்து அமருவார்கள். வழக்கு வாதுகள் பஞ்சாயத்துகள் விசாரிக்கப்பட்டு தீர்ப்பு வழங்குவார்கள்; முடிவெடுப்பார்கள். (ரூத் 4:1,2). அப்படியே பாதாளத்தின் வாசலில் பெயல்செபூலும் [பிசாசுகளின் தலைவனாகிய சாத்தான்] அவனுடைய கூட்டமாகிய குட்டி பிசாசுகளும் கூடிவருகின்றன. அந்த பிசாசு கூட்டங்கள் திருச்சபையை மேற்கொள்ள முடியாது என்று இயேசுவானவர் திருவுளம் பற்றினார்; ஆம். அவர் கட்டுகிற திருச்சபையை, அவர் அஸ்திபாரம் போட்டு கட்டுகிற திருச்சபையை அவருடைய அஸ்திபார உபதேசங்களைப் பற்றிக் கொண்டு அவைகளின் மேல் நிற்கிற திருச்சபையை சாத்தான்கள் மேற்கொள்ள முடியாது.

மனிதர்கள் கூடி வந்து ஆலோசித்து ஏற்படுத்திய உபதேசங்களைப் பின்பற்றுகிறவர்கள், அல்லது அந்த கூட்டங்கள் விழுந்துபோவதில் ஆச்சரியமல்லவே. அவைகள் அஸ்திபாரம் இல்லாதவைகள். சில கூட்டங்கள் தங்களுக்கு இயேசு கிறிஸ்து தான் அஸ்திபாரம் என்கிறார்கள்; நல்லதே. அப்படியானால் அந்த சபைகள் விழுந்து போவதேன், சிதறிப் போவதேன் பிரிந்து போவதேன், இயேசுகிறிஸ்து பிரிந்திருக்கிறாரா? இல்லையே. இவர்களுக்கு சபை கட்ட தேவன் கட்டளையிடவில்லை; அஸ்திபார உபதேசங்கள் தேவனால் கையளிக்கப்படவில்லை, அதனால் தான் உபதேச பிரிவினை போதிப்பு பிரிவினை, நடத்திப்பு பிரிவினையுண்டாக்கி பிரிந்து போகிறார்கள் "அவர்கள் நம்மை விட்டு பிரிந்துபோனார்கள்; ஆகிலும் அவர்கள் நம்முடையவர்களாயிருக்கவில்லை; நம்முடையவர்களாயிருந்தார்களானால் நம்முடனே நிலைத்திருந்

திருப்பார்களே, எல்லாரும் நம்முடையவர்களல்லவென்று வெளியாகும்படிக்கே பிரிந்து போனார்கள்" (1 யோவா. 2:19).

"ஏனெனில் அநேகர் வேறுவிதமாய் நடக்கிறார்கள்; அவர்கள் கிறிஸ்துவின் சிலுவைக்குப் பகைஞரென்று உங்களுக்கு அநேகந்தரம் சொன்னேன், இப்பொழுது கண்ணீரோடும் சொல்லுகிறேன். அவர்களுடைய முடிவு அழிவு, அவர்களுடைய தேவன் வயிறு, அவர்களுடைய மகிமை அவர்களுடைய இலச்சையே, அவர்கள் பூமிக்கடுத்தவைகளைச் சிந்திக்கிறார்கள்" (பிலி. 3:18,19).

பிரிந்து போகிறவர்களைக் குறித்து கர்த்தரும் அப்போஸ்தலர்களும் கண்ணீர் வடித்தார்கள். ஆனால் இந்நாட்களில் தேவனால் அனுப்பப்படாத போலிப் பிரசங்கிகள் சபைகள் பிரிந்திருப்பது நல்லது தான் சுவிசேஷம் தீவிரமாய்ப்பரவும் என்றும், அங்கேயும் பரிசுத்த ஆவியானவர் அற்புதம் அடையாளம் செய்கிறார் என்றும் மக்களுக்கு சொல்லித்திரிகிறார்கள். அதற்குக் காரணம் இவர்களுக்கு பிழைப்பு நடக்க வேண்டுமே. ஊர் இரண்டுபட்டால்தானே கூத்தாடிக்குக் கொண்டாட்டம். இவர்களுக்கு மதிப்பும், ஒருகூட்டமும், பதவியும் வேண்டும்; இடம் கண்டு ஜனங்களுக்குப் பிரியமாய் மாற்றி மாற்றி, திரித்து பிரசங்கித்து நடக்கலாமல்லவா? இந்த சுயாதீனப் பிரசங்கிகளைப் பற்றி விவரமாய் அவர்களுடைய துர்பபோதனைகள், துர்க்கிரியைகளைப் பற்றி வேறொரு சமயம் விவரமாய் எழுதுவோம்.

நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து தாம் உயிர்த்தெழுந்த பின்பே பரிசுத்த ஆவியினாலே அப்போஸ்தலர்களுக்கு கட்டளையிட்டார் (அப். 1:1-3). அந்தக்கட்டளைகளில் முதல் கட்டளையும், அதிகாரமும் அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள் என்பதே (யோ 20:19-23). இயேசுவின் திருப்பணி தொடர்ந்து திருச்சபையின் மூலமாக நிறைவேற்றப்பட்டு வருகிறது

## இயேசுகிறிஸ்து கட்டளையிட்ட அஸ்திபார உபதேசங்கள்:-

1 உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள்.

2. விசுவாசித்து ஏற்றுக்கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்திலே ஞானஸ்நானம் கொடுங்கள்.

3. திருச்சபையைக் கட்டி நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்.

4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்.

5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்.

6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவு கூறும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார் என்பதே.

இவைகளின் மேல் கிறிஸ்தவ உபதேசங்களெல்லாம் நிற்கின்றன அல்லது அடங்கும். திருச்சபையின் அஸ்திபார உபதேசங்கள் இவைகளே. இந்த அஸ்திபாரத்தின் மேல் கட்டப்பட்டு நிலைக்கும். குடிசைக்கு அஸ்திபாரம் போட்டு கட்டடம் கட்டினால் விழுந்து விடும் என்பது நம்மெல்லாருக்கும் தெரியும் இயேசுகிறிஸ்து அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும் உபதேசங்களும் இவைகளே. மெய்யான சபை திட அஸ்திபாரமுள்ளது

ஆகையால் உபதேசசட்டங்களும் அஸ்பாரமாகும். அப்போஸ்தல உபதேச சட்டங்களும் திருச்சபைக்கு இருக்க வேண்டும். அது அவசியம் (2 தெச. 2:15).

(தொடரும்)

"ஆகிலும் தேவனுடைய உறுதியான அஸ்திபாரம் நிலைத்திருக்கிறது; கர்த்தர் தம்முடையவர்களை அறிவாரென்பதும், கிறிஸ்துவின் நாமத்தைச் சொல்லுகிற எவனும் அநியாயத்தை விட்டு விலகக்கடவனென்பதும், அதற்கு முத்திரையாயிருக்கிறது" 2 தீமோ. 2:19.

# மனிதனும் பவமும்

[தொடர்ச்சி]

கடவுளிடமிருந்து விலகும் பிளவு எவ்வளவுக்கு அதிகமோ அவ்வளவுக்கு அதிகமாய் மனிதனுக்கிடையிலும் உறவு முறிந்துவிடுகிறது. ஆகையால் பகைகள், சண்டை, பொறாமைகள், கோபங்கள், பிரிவினைகள், மதப்பேதங்கள் ஆகியவைகள் மாம்சத்தின் கிரியைகளின் பட்டியலில் சேர்க்கப்படுகின்றன (கலா. 5:19 முதல்). அப்போஸ்தலன் ஐக்கியம் இழந்த கலாத்தியரை ஒருவரில் ஒருவர் கடித்து பட்சித்தால் ஒருவரால் ஒருவர் அழிவீர்கள். அப்படி நேரிடாதபடி எச்சரிக்கிறார் (கலா. 5:15). சில வேளைகளில் நாம் பாவத்தின் ஐக்கியங்களைப் பற்றிப் பேசுகின்றோம்.

பாவத்தில் ஐக்கியம். இது ஒரு கருத்தில் ஒருவருக்குப் பொருத்தமாயிருக்கலாம். ஒரு கொள்ளைக் கூட்டம் ஒருவகை ஐக்கியத்தில் இருக்கக் கூடும். ஆயினும் அதை இணைக்கும் ஐக்கியமாக சுயநலநோக்கு ஆயதாதலால் அவ்வித ஐக்கியம் இயற்கைக்கு மாறானதும், நிலையற்றதுமான ஐக்கியமே. அது தன் சுயநல நோக்கத்திற்காக உள்ளதாகும். இப்பொழுது உடனே கலைந்துவிடும் கடைசியில் சாட்சிகள் தெரிவித்துள்ளபடி ஜெர்மெனியில் நடந்த நாசி ஆட்சியில் எறக்குறைய பூரணமானதோர் அவநம்பிக்கை நிலவியது. அது எல்லோரும், எல்லோர் மீதும் கொண்ட அவநம்பிக்கையாயிருந்தது. சாத்தானின் ஆட்சி தன்னில் தானே பிரிவினையுள்ளது. தக்க பிரமாணத்தோடே பாவமும், தீமையும் எல்லோரையும், எல்லோருக்கும் விரோதமாக நடத்துகின்றன.

கூட்டுப்பாவம்:-

இதுவரையும் பாவத்தின் தனிப்பட்ட அம்சத்தைக் குறித்துக் கவனித்தோம். பாவியும் ஒரு தனி மனிதன் என்ற நிலையில் மாத்திரம் ஆராய்ந்தோம். இருந்தாலும் மூந்திய அதிகாரம் பாவத்தைப் பற்றிய பிரச்சனையை. அதன் விளைவுகள் சம்பந்தப்பட்டவற்றை மனித உறவுகளின் மண்டலத்துக்குக் கொண்டு வந்தது. இப்பொழுது நாம் பாவத்தின் தனி மனிதன் சம்பந்தத்துக்கு மேற்பட்ட கூட்டுத்தன்மையில் ஆராய்வோம்.

ஒரு மனிதன் ஒரு தனி ஆள் மட்டுமல்ல. அவன் ஒரு சங்கத்தின் அங்கமாயிருக்கிறான். ஆதலால் பாவம் என்பது தனி நபர்களின் பாவம் உட்புகுந்து, அது ஒரு சங்கத்தின் பாவமாயும் அமைகின்றது. இந்து மத கருமம் சித்தாந்தத்தின் கர்மா அடிப்படைத் துறைகளில் ஒன்று. அது ஆன்மா, தனது சொந்த சுமைகளைச் சுமந்து சொந்தக் கனியைப் புசிக்கின்ற

ஒரு தனிப்பட்ட பொருளெனக் கருதுவதாகும். அது தவறு. ஒரு தனி ஆத்துமா எவ்வகையாயிலும் தனிப்பட்டதொரு பொருளன்று. ஒவ்வொரு தனி நபரும் ஆயிரக் கணக்கான வகைகளாலும், ஆயிரக்கணக்கான பிணைப்புகளாலும் மற்ற யாவரோடும் இணைக்கப்பட்டிருக்கிறான். மனுக்குலம் தனி நபர்களின் திறன் மட்டுமல்ல; தனது ஏராளமான கிளைகளோடும், தலைகளோடும் கூடிய மரத்தைப் போன்று ஓர் அங்கக் கட்டுமானமாகும்; எண்ணற்ற உயிரணுக்களைக் கொண்டதோர் உடல். இது உயிரிணங்களை சம்பந்தப்பட்டது மாத்திரமல்ல. அதற்கு மேலாக ஆவி சம்பந்தமாயும் பொருந்துகின்றது. தனி ஆட்களாயுள்ள நாம் அநேக மனித உறவுகளில் ஏனைய நமதோடு மிகவும் நெருங்கிய தொடர்புடையவர்களாய் வைக்கப்பட்டிருக்கிறோம். குடும்பம், குலம், நாடு, வம்சம் ஆகியவற்றின் பாவ சூழ்நிலை, பாவமார்ந்த பாரம்பரியங்கள், பழக்க வழக்கங்கள் ஆகியவை சம்பந்தப்பட்ட சங்கமாகிய மனுக்குலத்தின் சகல அங்கத்தினரையும் தாக்குகின்றன. ஓர் அங்கத்தின் பாவம் உடல் முழுவதையும் பாதிக்கின்றது.

ஆதலால் நாம் ஒரு குடும்பத்தின், குலத்தின், நாட்டின், இதரவற்றின் பாவத்தைப் பற்றிப் பேசுகின்றோம். தனி ஆள் ஒரு பாவ சூழ்நிலையில் வைக்கப்பட்டிருக்கின்றான். அதில் அவனுக்கு ஒரு பங்கு உள்ளது. அதற்கு தானும் தனது பங்கு பாவத்தை சேமிக்கின்றான் ஆகையால் கூட்டுப்பாவம் ஒரு நினைவுப் பொருள் மட்டுமன்று, பயங்கரமான ஒரு நிஜப்பொருளாகும். "ஐயோ! அதமானேன்; நான் அசுத்த உதடுகளுள்ள ஜனங்களின் நடுவில் வாசமாயிருக்கிறேன்" என்று ஏசாயா தீர்க்கதரிசி கதறினார் [ஏசா. 6:5].

ஆனபடியினால் மனிதர்கள் கூட்டுப் பாவத்தில் உட்பட்டிருக்கிறார்கள். அநேக சமயங்களில் கூட்டமாக சேர்ந்தும் பாவங்கள், அக்கிரமங்கள், அநியாயங்கள், கொலைகள் நடத்துகிறார்கள். அல்லவென்றால் அதைத் தடுக்கவோ, எதிர்க்கவோ செய்யாவிட்டால் அதற்கு அவர்கள் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள். ஆனபடியினால் சங்கீதக்காரன், இதோ நான் அக்கிரமத்தில் பிறந்தவன்; என் தாய் என்னைப் பாவத்தில் கர்ப்பந்தரித்தாள் என்றார். இது உடல் மட்டுமல்ல. ஆன்மாவிலிருந்தும் புறப்படப் பண்ணுகிறது என்னும் மறவியற் கூற்று. தெர்துல்லியன் என்பவரின் கருத்துமாகும்.

பாவத்தின் கூட்டுத்தன்மை அதன் சகல அம்சங்களோடுங் கூட தெரிவிக்கத்தக்க இது ஒரு விளக்க உரை. மறவாக அந்தப் பாவம் என்பதாகும். இதனால் நமது பாரம் பரிய இருளில் தேற்ற நாட்டங்கள் மாத்திரமல்ல; நாம் நிற்கிறதும், ஆனால் நாம் பங்கு பெறுவதும், பங்கு கொடுப்பதால் முழுச் சூழ்நிலையும் குறிக்கிறது. ஆகையால் தனிப்பாவம் கூட்டுப்பாவத்தை உருவாக்குகிறது. கூட்டுப்பாவிகளாக அவர்கள் செயல்படுவதின் மூலமாக நிரூபிக்கப்படுகின்றது. அல்லவென்றால், அதற்கு எதிராக குரல் கொடுக்கவில்லையென்றால், அந்தப் பாவத்திற்கு அவர்கள் பங்குள்ளவர்களென்று நிரூபிக்கிறார்கள்.

(தொடரும்)

"...மற்றவர்கள் செய்யும் பாவங்களுக்கும் உடன்படாதே..." 1 தீமோ. 5:22



# ரோமன் கத்தோலிக்க குடும்பத்தாருடன் உரையாடல் [தொடர்ச்சி]

கேள்வி 1: குழந்தையிலேயே ஞானஸ்நானம் பெற்றது சரியில்லையா?

பதில் : மாற். 16:16 ல் விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான் என்று இருக்கிறது: அப். 2:38 ல் மனந்திரும்பி, பாவமன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற வேண்டும் என்று சொல்லியிருக்கிறது. ஒரு சிறு பிள்ளைக்கு விசுவாசம் கிடையாதே. விசுவாசம் கேள்வியினாலல்லவா வரும் (ரோம. 10:17).

அதனால் குழந்தை ஞானஸ்நானம் தெளிப்பு ஞானஸ்நானம் செல்லாது. மேலும் பாருங்கள் "அண்ணகன் (காந்தாசி என்னும் எத்தியோப்பிய இராக்கியின் வல்லப அண்ணகன்), இதோ தண்ணீர் இருக்கிறதே. நான் ஞானஸ்நானம் பெற தடைஎன்ன என்று சொல்ல ஃ பிலிப்பு: நீர் முழு இருதயத்தோடும் விசுவாசித்தால் பெறலாம் என்றார்" [அப். 8:36,37].

கேள்வி 2: ஞானஸ்நானம் மனந்திரும்பி எடுக்க வேண்டுமானால் எந்த வயதில் எடுக்க வேண்டும்?

பதில்: வடஇந்தியாவில் சிறு பிள்ளைகளுக்கு திருமணம் செய்து வைத்துவிடுவார்கள். பையன் இறந்து போய்விட்டால், இந்தப் பெண் கடைசிவரை விதவையாயிருக்க வேண்டும். இது கொடுமை என்று சிசுவிவாகத்தை சட்டம் தடை செய்கிறது. ஆணும், பெண்ணும் வயது வந்த பின் திருமணம் செய்வது நல்லது என்று நாம் ஒப்புக் கொள்ளுகிறோம். அதுபோல நன்மை எது, தீமை எது என்றறிகிற அறிவு வந்தபின் ஞானஸ்நானம் பெறலாம். இத்தனாவது வயதில் ஞானஸ்நானம் பெற வேண்டும் என்ற வயது வரம்பு கிடையாது.

கேள்வி 3: ஞானஸ்நானம் பெறுமுன் பிள்ளைகள் மரித்துப்போனால் எங்கு போவார்கள்? (மோட்சமா? நரகமா?) பாருங்கள், இதோ உங்கள் பெரிய பையன் ஒரு கண்ணாடி டம்ளரை கீழே தள்ளி உடைத்துவிட்டால், டேய், உனக்கு அறிவில்லே, பார்த்து வரக்கூடாது என்று திட்டுவீர்கள், அல்லது தண்டிப்பீர்கள். அதே டம்ளரை ஒரு சிறுகுழந்தை தள்ளிவிட்டால் தண்டிப்பீர்களோ? அதே வண்ணமாய் நன்மை, தீமை அறியாத சிறுபிள்ளை மரித்தால் நரகத்தில் தேவன் அதைத் தள்ளி தேவன் தண்டிப்பாரோ?

கேள்வி 4: ஜென்ம பாவம் உண்டல்லவா? அதை ஞானஸ்நானத்தினால் நீக்கலாமே?

ஜென்ம பாவம் என்று வேதத்தில் கிடையாது. தகப்பனார் மாங்காயைத் தின்றால் பிள்ளைகள் பற்கள் கூசுமோ? பாவம் செய்கிற ஆத்துமாவே சாகும்; குமாரன் தகப்பனுடைய அக்கிரமத்தை சுமப்பதில்லை [எசே. 18:20] என்று தான் வேதத்தில் இருக்கிறது. மேலும் ஜென்ம பாவம் நீங்க ஞானஸ்நானம் பெற வேண்டும் என்பது வேதத்திலில்லாத நீதி. இது மனுஷனுடைய கட்டளை. மனுஷருடைய கற்பனைகளை உபதேசங்களாகப் போதித்து இந்த ஜனங்கள் எனக்கு வீணாய் ஆராதனை செய்கிறார்கள் என்று இயேசு சொன்னார்.

கேள்வி 5: தகப்பனையும், தாயையும் கனம் பண்ணுவாயாக என்று இருக்கிறதே. நீங்கள் ஏன் தாயை கனம் பண்ணக் கூடாது என்கிறீர்கள்?

பதில்: நாங்கள் அப்படி சொல்லவில்லையே, இதுவரைப் பேசினதில் அப்படிச் சொன்னேனா? நீங்கள் கேட்பது என்ன என்று விளங்குகிறது. ஏசுவைப் பெற்ற

தாயாகிய மரியாளைத் தானே சொல்கிறீர்கள் [ஆமாம் என்றார்கள்]. மரியாள் கிருபை பெற்றவர்கள், ஸ்திரீகளுக்குள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்; இறைவனாகிய ஏசுவைப் பெற்றவர்கள், இந்த அம்மா இல்லை என்றால் வேறே யூதப் பெண் மூலம் பிறந்திருப்பாரல்லவா? இப்படியிருக்க அவர்களைப் பற்றி தீதாக நாங்கள் சொல்வோமா? உண்மையிலேயே அந்த அம்மா கனத்திற்குரியவர்கள், ஆனால் வணக்கத்திற்குரியவர்களல்ல? வழிபாடு தெய்வத்திற்கு மாத்திரமே உரியது. மகிமை உடனே இறைவனுக்கு மாத்திரமே உரியது. [ஆதாரம் காட்டமுடியுமா என்று ஒரு அம்மா கேட்டார்கள்; ஏசா. 42:8 ல் என் மகிமையை வேறொருவனுக்கும் கொடேன் என்ற வசனத்தை காட்டிய போது ஒத்துக் கொண்டார்கள்].

கேள்வி 6: மரியாள் உயிரோடே வானத்துக்கு எடுதத்துக் கொள்ளப்பட்டார்கள் என்று சொல்லுகிறார்களே?

பதில்: பொய். அப்படி வேதத்தில் ஆதாரம் இல்லை.

கேள்வி 7: மரியாள் பல இடங்களில் காட்சி கொடுத்தாக சொல்கிறார்களே? அது பொய்யாகுமா?

பதில்: மரியம்மா மட்டுமா காட்சி கொடுத்ததாக சொல்கிறார்கள், மாரியம்மாவுந்தான் காட்சி கொடுத்ததாக சொல்கிறார்கள். காட்சி கொடுப்பது முக்கியமல்ல சத்தியத்தின்படி நடப்பதே முக்கியம். ஏனெனில் கடைசியில் இந்த வசனங்களே நம்மை நியாயந்தீர்க்கும் என்று இயேசு சொல்லியிருக்கிறார் எனது நண்பன் [இந்து] வந்து மரியம்மா சிலையை தேரில் வருவதை டி.வியில் பார்த்து வந்து என்னிடம், உங்களுக்கும், எங்களுக்கும் வித்தியாசம் இல்லை. பேர் மட்டுந்தான் வித்தியாசம். நீங்கள் மேரி என்கிறீர்கள்; நாங்கள் மாரி என்கிறோம். எல்லாம் ஒன்று தான் என்கிறான். அவனுக்கு என்ன பதில் சொல்ல?

மேலும் இன்று ரோமன் கத்தோலிக்கர்கள் மரியம்மாவுக்கு முக்கியத்துவம் கொடுப்பது போல், அந்த நாட்களில் ராயப்பரோ, சின்னப்பரோ, அருளப்பரோ, யாகப்பரோ முக்கியத்துவம் கொடுக்கவில்லையே. அவர்கள் எழுதின நிருபங்களில் கர்த்தராகிய இயேசுவுக்குத் தானே முக்கியத்துவம் கொடுத்து எழுதியிருக்கிறார்கள். எவ்வளவு போதனை எழுதியிருக்கிறார்கள்; அவைகளில் மரியாளைக் குறித்து ஒரு வார்த்தை கூட எழுதவில்லையே. பைபிளில் மரியாளுடைய பெயர் அப். 1:14 ல் தான் கடைசியாக வருகிறது, அதற்கு பின்பு அந்த அம்மாவுடைய பெயரை வேதத்தில் எங்கும் காணமுடியாது. மேலும்.

(தொடரும்)

"உங்கள் முன்னோர்களால் பாரம்பரியமாய் நீங்கள் அநுசரித்துவந்த வீணான நடத்தையினின்று அழிவுள்ள வஸ்துக்களாகிய வெள்ளியினாலும் பொன்னினாலும் மீட்கப்படாமல், குற்றமில்லாத மாசற்ற ஆட்டுக் குட்டியாகிய கிறிஸ்துவின் விலையேறப் பெற்ற இரத்தத்தினாலே மீட்கப்பட்டீர்களென்று அறிந்திருக்கிறீர்களே" 1 பேது. 1:18,19.

# வேத பாடம் [தொடர்ச்சி]

## எண்ணாகமம்

### எண். 22:1

"பின்பு இஸ்ரவேல் புத்திரர் பிரயாணம்பண்ணி, எரிகோவின் அருகே இருக்கும் யோர்தானுக்கு இக்கரையிலே மோவாபின் சமனான வெளிகளில் பாளயமிறங்கினார்கள்". ஆக இஸ்ரவேலர்கள் கானானுக்குள் பிரவேசிக்க ஆயத்தமான நிலையில் யோர்தான் அருகே இக்கரையில் இப்பொழுது வந்து சேர்ந்திருக்கிறார்கள். இந்த பிரதேசம் மோவாபியர்களுடைய எல்லையாகும்.

### எண். 22:2-4

மோவாபியருக்குப் பயமுண்டாயிற்று. மோவாபியருக்கு அப்பொழுது ராஜாவாக இருந்தவன், சிப்போரின் குமாரனாகிய பாலாக். சீகோனுக்கும் அவனுடைய ஜனங்களுக்கும் இஸ்ரவேலர்கள் செய்ததை அவன் கேள்விப்பட்டு இஸ்ரவேலர்களுக்கு மிகவும் பயந்து கலக்கமடைந்தான். மோவாப் லோத்தினுடைய சந்ததியாகும். மீதியானியரைக் குறித்து வசனம் 4ல் எழுதப்பட்டுள்ளது. மோவாபும் மீதியானியரும் ஒன்றாயிருந்தார்கள். மீதியானியர்கள் ஆபிரகாமின் சந்ததியாரே (ஆதி. 25:1,2).

### எண். 22:5-14

பாலாக் பயந்து தன்னுடைய சொந்த ஊராகிய ஏதோமுக்கு ஆளனுப்பி பிலேயாம் என்னும் தீர்க்கதரிசியை இஸ்ரவேலர்களுக்கு விரோதமாய் சாபம் கூறும்படியாய் அழைத்தனுப்புகிறான். பிலேயாமுடைய தகப்பன் பேயோரும் ஏதோமில் அரசனாயிருந்தானென்று தெரிகிறது [ஆதி. 36:31,32] பாலாக் அவன் தன்னுடைய ஸ்தானாபதிகளை அழைத்து அவர்களிடத்திலே குறி சொல்லுகிறவர்களுடைய கூலியையெல்லாம் கொடுத்து, நீங்கள் போய் பிலேயாமை அழைத்து வாருங்கள். புல்லை மேய்ந்து போடுகிற மாடுகளைப்போல் என்னைச் சுற்றிலும் ஒரு விதமான சந்ததி வந்திருக்கிறது. அவர்கள் எனக்கு விரோதமாய் யுத்தம் செய்ய வந்திருக்கிறார்கள். நீர் வந்திருந்து அவர்களை சபிக்க வேண்டும். நீர் ஆசீர்வதிக்கிறவர்கள் ஆசீர்வதிக்கப்படுவார்கள், நீர் சபிக்கிறவன் சபிக்கப்பட்டவன் என்று சொல்லி அனுப்பினான். நீர் வந்து அவர்களை சபித்தால் ஒருவேளை நாம் அவர்களை விரட்டிவிட முடியும் - என்று சொல்லியனுப்பினான். அவனுடைய அந்த ஸ்தானாபதிகள் பிலேயாமினிடத்தில் போய் பாலாக்கின் வார்த்தைகளை சொன்னார்கள். பிலேயாம் அன்று இரவு அவர்களை அங்கு தங்கவைத்தான்.

கர்த்தர் பிலேயாமுக்குத் தரிசனமாகி உன்னிடத்திலிருக்கிற இந்த மனிதர் யார் என்றார். பூமியின் விசாலத்தை மூடுகிற ஒரு ஜனக்கூட்டம் எகிப்திலிருந்து வந்திருக்கிறது என்றும் அந்த ஜனங்களை சபிக்கும்படி பாலாக் என்னை அழைத்தனுப்பினான் என்றும், இவர்கள் பாலாக்கினுடைய பிரதிநிதிகள் என்றும் தேவனிடத்தில் பிலேயாம் சொன்னான். அப்பொழுது தேவன் பிலேயாமை நோக்கி நீ அவர்களோடே போக வேண்டாம். அந்த ஜனங்களை சபிக்கவும் வேண்டாம். அவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் என்றார். பிலே

யாம் தேவனோடு பேசினன். பிசாசுகளோடு, அசுத்த ஆவிகளோடு அல்ல, பிலேயாமை ஒரு தீர்க்கதரிசி என்று வேதாகமம் குறிப்பிட்டிருக்கிறது (2 பேது. 2:15,16). பிலேயாம் அதிகாலையில் எழும்பி உங்களோடு நான் வருகிறதற்கு தேவன் எனக்கு உத்தரவு கொடுக்கமாட்டோம் என்கிறார். ஆகையால் நீங்கள் போய்விடுங்கள் என்று சொல்ல அவர்கள் எழுந்து திரும்பிப்போய் பாலாக்கினிடத்தில், பிலேயாம் எங்களோடுகூட வர மாட்டேன் என்று சொல்லுகிறன் என்றார்கள்.

பிலேயாம் ஒரு உண்மையான தீர்க்கதரிசியாகத்தான் இருந்தான் அவன் யெகோவாவையே, மெய்யான தேவனையே வணங்கி வந்தான் (எண். 22:18). என் தேவனுகிய கர்த்தர் [ அல்லது யெகோவா] கட்டளையை நான் மீறக்கூடாது என்று சொன்னதாக நாம் பார்க்கிறோம்.

## எண். 22·15-21

இரண்டாம் முறையும் பாலாக் அதிக பிரபுக்களை அனுப்பி பிலேயாமை நயப்படுத்துகிறதாகப் பார்க்கிறோம். நீர் என்னிடத்தில் வர தடைபடவேண்டாம்; உம்மை மிகவும் கனம் பண்ணுவேன், நீர் சொல்லுவதையெல்லாம் செய்வேன்; நீர் வந்து எனக்காக அந்த ஜனங்களை சபிக்க வேண்டும் என்று சொல்லச் சொன்னான். அவ்விதமாகவே அவனுடைய ஊழியர்கள் வந்து பிலேயாமுக்கு சொன்னார்கள். அப்பொழுது பிலேயாம் பாலாக்கினுடைய ஊழியக்காரரை பார்த்து பாலாக் எனக்கு தன் வீடு நிறைய வெள்ளியும், பொன்னும் தந்தாலும், சிறிய காரியமானாலும், பெரிய காரியமானாலும் செய்யும் பொருட்டு, என் தேவனுகிய கர்த்தரின் கட்டளையை நான் மீறக்கூடாது ஆகிலும் கர்த்தர் இனிமேல் எனக்கு என்ன சொல்லுவார் என்பதை நான் அறியும்படிக்கு, நீங்களும் இந்த இராத்திரி இங்கே தங்கியிருங்கள் என்றான். இதன் மூலமாய் நாம் அறிந்து கொள்கிறது என்னவென்றால், தேவன் ஒரு முறை மனிதனுக்கு தெளிவான பூரணப்படும் உபதேசத்தைக் கொடுத்தால், அவைகளே மனிதனுக்கு தேவனுடைய கட்டளையாகும். ஆனல் மனிதன் அதற்கு கீழ்ப்படியாமல், அதை கடைப்பிடிக்க மனதில்லாமல் மறுபடியும் தேவனிடத்தில் கேட்கும் பொழுது, அவனுக்கு பிரியமான ஆலோசனை கிடைக்க அவன் விரும்பி கேட்கும்பொழுது தேவனுடைய ஆலோசனைகளும் அவனுடைய பிரியத்தின்படி அவனுக்கு உண்டாகலாம். ஆனல் அது ஆபத்தானது.

இந்த நாட்களிலும் பார்க்கிறோம். தேவனுடைய உபதேசத்தை வெறுத்து மக்களுக்குப் பிரியமாய், தங்களுக்குப் பிரியமாய் மனிதர்கள் உபதேசங்களையும், கொள்கைகளையும் தங்களுக்கு உண்டுபண்ணிக் கொள்ளுகிறதை அதற்கு சாக்காக தேவனுடைய வசனம் அப்படிச் சொல்லுகிறது, இப்படிச் சொல்லுகிறது என்று சொல்லுகிறவர்களாக இருக்கிறார்கள். தேவனுடைய வசனம் இருபுறமும் கருக்குள்ள பட்டயம். அது அந்த பக்கம் வெட்டுகிறதுபோல் இந்தப் பக்கமும் வெட்டும். பிலேயாம் பொருளாசையினுல் அவர்களை அன்றைய தினம் அங்கு தங்கச் சொல்லி, கர்த்தர் இன்னும் எனக்கு என்ன சொல்லுகிறார் என்று நான் அறிந்து உங்களுக்குப் பதில் சொல்லுவேன் என்று சொன்னதாகப் பார்க்கிறோம்

எதோமியனுகிய பிலேயாம் தன்னுடைய தேசத்திலிருந்து இங்கே மோவாபுக்கு வருகிறதற்கு 15 அல்லது 20 நாட்கள் ஆகும். அக்காலத்தில் பிரயாண வசதிகள் அவ்வளவு சரியாகக் கிடையாது. வழிப்பாதைகளும் செம்மையாய் அமைக்கப்படவில்லை. ஏதோ

மூக்கும் (ஆதி. 36:31,32) இங்கே மோவாபுக்கும் இடையில் 500 அல்லது 600 மைல் தூரங்களாகும். இங்கிருந்து அங்கு போக, அங்கிருந்து இங்கே வர 20 நாட்களாவது ஆகும் முதல் தடவை பாலாக்கின் பிரபுக்கள் வந்துவிட்டு, போய்விட்டு திரும்ப வந்ததாகப் பார்க்கிறோம். அதினால் 40 அல்லது 60 நாட்களுக்குப் பின்பு மறுபடியும் அவர்கள் வந்தார்கள். இடம் தூரமாய் இருக்கிறதினாலும், தன்னை கனம்பண்ணி, பெருமையாய்ப் பேசி தன்னைக் கூப்பிட்டபடியினாலும், தூர இடத்திலிருந்து வருகிறதினாலும், தனக்கு நிறைய பணம், பொருள், செல்வம் கிடைக்குமென்றும் பிலேயாம் ஆசைப்பட்டான். அன்று இரவிலே தேவன் பிலேயாமிடத்திலே வந்து அந்த மனிதர்கள் கூப்பிட வந்திருந்தால் நீ எழுந்து அவர்களோடு கூட போ. ஆனால் நான் உனக்குச் சொல்லும் வார்த்தையின்படி மாத்திரம் நீ செய்ய வேண்டும் என்றார். இங்கே தேவன், வந்திருக்கிற மனிதர்கள் யார்? எதற்காக வந்திருக்கிறார்கள்? என்று கேட்கவில்லை. பிலேயாமுடைய மன நிலையை தேவன் அறிகிறார். வசனம் 21 ல் பிலேயாம் காலமே எழுந்து தன் கழுதையில் சேணங்கட்டி [கோவேறு கழுதை] மோவாபின் பிரபுக்களோடே கூடப் போனான். தேவன் அனுமதி அளித்தது பிலேயாமுக்கு மகிழ்ச்சியாய்ப் போய்விட்டது. அதிகாலமே எழுந்திருந்து புறப்பட்டு அவர்களோடே கூடப்பிரயாணப்பட்டான் என்று எழுதப்பட்டிருக்கிறது.

பொருளாசையுடையவர்களுடைய வழிகளெல்லாம் இப்படியே எங்கே பணமும், செல்வாக்கும், மதிப்பும், பொருளும் கிடைக்கிறதோ அங்கே சாய்ந்து விடுவார்கள். தங்களுடைய விருப்பத்திற்கு தேவனுடைய சித்தம் மாறி கிடைக்க வேண்டும் என்று விரும்புவார்கள். பிலேயாமின் வாழ்க்கையில் நாம் பார்க்கிற இந்த சம்பவத்தை அப். பரிசுத்த பேதுரு எழுதும்போது இவ்விதமாக 2 பேதுருவின் புஸ்தகத்திலே மிகவும் அழகாக குறிப்பிட்டிருக்கிறார். 2 பேது. 21:4-16 ல் "விபசாரமயக்கத்தால் நிறைந்தவைகளும், பாவத்தை விட்டோயாதவைகளுமாயிருக்கிற கண்களையுடையவர்கள்; உறுதியில்லாத ஆத்துமாக்களைத் தந்திரமாய்ப் பிடித்து, பொருளாசைகளில் பழகின இருதயத்தையுடைய சாபத்தின் பிள்ளைகள்".

"செம்மையான வழியை விட்டுத் தப்பி நடந்து, பேயோரின் குமாரனாகிய பிலேயாமின் வழியைப் பின்பற்றிப் போனவர்கள்; அவன் அநீதத்தின் கூலியை விரும்பி, தன்னுடைய அக்கிரமத்தினிமித்தம் கடிந்து கொள்ளப்பட்டான்; பேசாத மிருகம் மனுஷர் பேச்சைப் பேசித் தீர்க்கதரிசியினுடைய மதிகேட்டைத் தடுத்தது" என்று எழுதப்பட்டிருக்கிறது.

அவன் ஒரு தீர்க்கதரிசிதான்; ஆனால் பொருளாசையில் சாய்கிறான்.

[தொடரும்]

"யாக்கோபுக்கு விரோதமான மந்திரவாதம் இல்லை, இஸ்ரவேலுக்கு விரோதமான குறிசொல்லுதலும் இல்லை....." எண். 23:23.

[தொடர்ச்சி]

# பெண்கள்

பூமியானது சகல சாரச்சர பொருள்களும் அடங்கிய பண்டகசாலையாயிருக்கிறது மன்றி, பயிரிடுகிற குடியவனவன் போல நவ தானியங்களையும், இதர போஜன பதார்த்தங்களையும் நமக்கு விளைவித்துக் கொடுக்கின்றது. அப்பு ஸ்தானுதிபதிகள் போல உதவுகின்றது காற்று ஆலவட்டக் காரன் போல நமக்கு சாமரம் போடுகின்றது. நெருப்பு சமயக்காரனைப்போல நள பாகம் செய்கின்றது. ஆகாசம் தீபம் ஏந்துகிறவன்போல் சந்திர, சூரிய, நட்சத்திரங்கள் முதலிய தீபங்களை தாங்கிக் கொண்டிருக்கின்றது. மேகங்கள் ஜலமிரைக்கிற பெண்களுக்கு சமானமாயிருக்கின்றன. நதி, ஏரி, குளம் முதலியவைகள் ஜலம் வைக்கிற கடாரங்களாய் இருக்கின்றன.

விருட்ஷ ஜாதிகளும், பயிர் பூண்டு முதலியவைகளும் பலசரக்கு கடைக்காரர்கள் போல இலை, பூ, காய், கனி, கிழங்கு, தானியம் முதலிய பல சம்பாரங்களைக் கொடுக்கின்றன. மலைகளும், கடல்களும் இரத்தின வியாபாரிகளைப்போல நவரத்தினம் முதலிய பலி திரவியங்களைக் கொடுக்கின்றன. பூச்செடிகள் பூவிறைக்கிற பெண்களாய் இருக்கின்றன. பல மூலிகைகள் மருந்து கொடுக்கிற வைத்தியர்களாய் இருக்கின்றன. பூஞ்சோலைகள் நாடகச்சாலைக்குச் சமானமாய் இருக்கின்றன.

மயில், அன்னம், கோழி, கொக்கு முதலிய பட்ஷிகள் நாட்டியப் பெண்களைப் போல் நடனம் செய்கின்றன. குருவி, கிளி, கூவை, வானம்பாடி முதலிய பட்ஷிகள் பாடகரைப்போல சங்கீதம் பாடுகின்றன. காகம், பருந்து கோழி முதலிய பறவைகளும், பல்லி, அரணை முதலியவைகளும், வீடு சுத்தம் செய்கிற பெண்கள் போல பல பூச்சிகளையும், இறந்துபோன பல ஜந்துக்களையும் புசிக்கின்றன. பருத்திச் செடி பட்டுப்பூச்சி முதலியவைகள் நமக்கு வஸ்திர வியாபாரிகளாயும், நாய், ஆடு, புலி, கரடி முதலியவைகள் சால்வை, போர்வை கம்பளம் முதலியவற்றைக் கொடுக்கிற வர்த்தகர்களாயுமிருக்கின்றன. தேனீக்கள் தேன் கொடுக்கின்றன. பசு, எருமை, ஆடு முதலியவைகள் பால் காரியைப்போல் நமக்குப் பால் கொடுக்கின்றன. காளை, கழுதை, குதிரை, யானை, ஒட்டகம் முதலியவைகள் வாகனங்களாய் நம்மை சுமப்பது மன்றி இன்னும் பல வேலைகளுக்கும் உதவுகின்றன.

அந்த மிருகங்களுக்கு புல், வைக்கோல் முதலியவைகள் ஆகாரங்களாயிருக்கின்றன. எறும்பு முதலியவைகள் வீடு பெருக்குகிறவர்கள் போல பல விதமாய் சிந்திக்கிடக்கிற வஸ்துக்களைப் புசித்து வீட்டை சுத்தம் செய்கின்றன. நாய்கள் காவற்காரனைப்போல வீடு காக்கின்றன. கழுதையும் நமக்காக பல பாரங்களைச் சுமக்கின்றன. சேவல்களும், செம்போத்துகளும், காகங்களும் நமக்காக சூரிய ராஜன் வருகையைக் காட்டுகிற கட்டியக்காரர்களாய் இருக்கின்றன. சிங்கம், புலி, கரடி முதலிய துஷ்ட மிருகங்களும்; பாம்பு, தேள் முதலிய விஷ ஜந்துக்களும் தெய்வ பயத்தைப் போதிக்கிற குருவுக்குச் சமானமாய் இருக்கின்றன. நயமும், பயமும் காட்டி பிள்ளைகளை வளர்க்கும் தாய்போல காருண்ய மூர்த்தியாகிய கடவுள் அந்த துஷ்ட ஜந்துக்களையும் இடி, பெருங்காற்று, பூகம்பம், சாமம், வியாதி முதலிய துன்பங்களையும், நமக்கு தெய்வ பயமும், பக்தியும் நற்போதகமும் உண்டாவதற்காக சிருஷ்டித்திருக்கிறுரென்பது நிச்சயமே.

ஆயினும் அந்த துஷ்ட ஜந்துக்களாலும், துன்பங்களாலும் நமக்கு அடிக்கடி உபத்திரவம் உண்டாகாதபடி அவர் அவைகளை அடக்கி வைத்திருக்கிறுரென்பது நிச்

சயால்லவா எலிகள் மிஞ்சாதபடி பூனைகளையும், பாம்புகள் மிஞ்சாதபடி கீரி, மயில் முதலியவைகளும், அப்படியே இதர துஷ்ட மிருகங்களுக்கு வெவ்வேறு சத்துருக்களையும் சுவாமி உண்டு பண்ணியிருக்கிறார். மேலே நாம் விவரித்தபடி உலகத்தில் காணப்பட்ட பொருள்களில் ஒன்றுமேயினும் நமக்கு உபயோகமற்றதாயிருக்கவில்லை.

மேற்சொன்ன வஸ்துக்களுமன்றி பூமண்டலத்திலுள்ள சகல மனுஷர்களும் ஒருவருக்கொருவர் சகாயமாயிருக்கும்படி இறைவன் செய்திருக்கிற விசித்திரம் அதிசயத்தக்க விதமாய் இருக்கின்றது. ஒரு குடும்பத்திலுள்ள பல பேர்கள் பல தொழில்களைச் செய்து அந்தக் குடும்பத்தைத் தாங்குவது போல உலகமாகிய பெரிய குடும்ப சமரட்சணத்திற்காக சகல ஜனங்களும் பிரயாசப்படுகிறார்கள்.

ஒருவன் மகா ராஜாவாயிருந்தாலும் ஏழையானாலும் அவன் ஒரு நாள் ஜீவிக்கிறதற்கும் எத்தனைபேர் அன்னம் கிடைப்பதற்காக நிலத்தை வெட்டி, திருத்துகிறவர்களும், உழுகிறவர்களும், பயிரிடுகிறவர்களும், ஜலம் பாய்ச்சுகிறவர்களும், களை பிடுங்குகிறவர்களும், காவல் காக்கிறவர்களும், அறுத்த களம் சேர்க்கிறவர்களும், தானியங்களை குத்தி அரிசியாக்கி விற்க்கிறவர்களும் இவ்வகையாக அதில் சம்பந்தப்பட்டவர்கள் எத்தனைபேர் என்று கணக்கிடக் கூடுமா? அப்படியே உப்பு முதல் கற்பூரம் வரையிலுள்ள சகல சாதன கிரியைகளும் நமக்குக் கிடைப்பதற்காக எண்ணிக்கையில்லாத ஜனங்கள் பலவிடங்களில் பலவிதமாக பாடுபடுகிறார்கள்.

வஸ்திரம் நமக்குக் கிடைப்பதற்காக பருத்தி விதையெடுத்து பஞ்சாக்கி குத்தி நூலுக்கு சாயம் தீட்டி நெய்து வஸ்திரமாகும் வரையில் தேகப் பிரயாசப்பட்டவர்களுக்குக் கணக்கு உண்டா. சமையலுக்கு வேண்டிய விறகும், நீரும் கிடைப்பதற்காக அநேகர் விறகு வெட்டி விற்கிறார்கள். அநேகர் நதி, குளம் முதலியவைகளை வெட்டுகிறார்கள். அநேகர் நமக்கு நடக்க பாதை செப்பனிடுகிறார்கள். நமக்கு வீடு கட்ட அநேகர் செங்கல், ஓடு, சுண்ணும்பு முதலியவைகளைச் செய்கிறார்கள். அநேகர் மரங்கள் வெட்டி அறுத்து பலகையாக்குகிறார்கள். அரசர்கள், மந்திரிமார்கள், படைவீரர்கள், நியாயாதிபதிகள் முதலானவர்கள் நமக்கு சத்துரு பயமில்லாமல் அநியாயம் நடவாமல் சர்வ ஜாக்கிரதையாய் பாதுகாக்கிறார்கள். குருமார், உபதேசிமார் ஆகியோர் நமக்கும் நம்முடைய பிள்ளைகளுக்கும் ஞான உபதேசம் செய்கிறார்கள். வைத்தியர், கல்தச்சர், கொல்லர், தட்டார், வண்ணார், நாவிதர், சக்கார், வணிகர் முதலானவர்கள் நமக்காக பலவிதமான தொழில்களைச் செய்கிறார்கள்

(தொடரும்)

---

"சகலமும் அவர் [இயேசுகிறிஸ்து] மூலமாய் உண்டாயிற்று; உண்டானதொன்றும் அவராலேயல்லாமல் உண்டாகவில்லை" யோவா. 1:3.

---

## பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Eld Bro. யோனு | Sis.ரேவதி | வள்ளியூர் | 8.3.95 |

### சுவிசேஷகர்கள்

இவர்கள் பிலிப்பைப்போல் சுவிசேஷ பிரசங்கம் பண்ணி ஆத்துமாக்களை ஆதாயப்படுத்த வேண்டும். இவர்களுக்கு சபையின் பொறுப்பு கிடையாது. இவர்களுடைய ஊழியத்தினால் ஆத்துமாக்கள் இரட்சிக்கப்படும் போது அப்போஸ்தலன் மூலமாய் சபையைக் கட்ட வேண்டும் (அப். 8:14–18; 21:8).

### மேய்ப்பர்கள்

இவர்களுக்கு சபையின் பொறுப்பு உண்டு. சபை மக்களுடைய மனுஷனுக்கல்ல, ஆத்துமாக்களுக்காக இரத்தம் சிந்தினவராகிய இயேசுவானவருக்கே கொடுக்க வேண்டும் [எபி. 13·17] சபை மக்களுடைய கணக்கை. சபையை வேத வசனமாகிய பால்கொடுத்து போஷிப்பிக்க வேண்டும் (தீத். 1:9; 1 தீமோ. 1·2; 1 பேது. 1:1,2). கிறிஸ்துவுக்குள் சபையின் மக்களை தேர்ந்தவர்களாகவும், அது மட்டுமல்ல சபையை நன்றாக ஆளுகை செய்வதும் இவர்களுடைய வேலை. அந்நிய போதனைகள் உள் நுழையாதபடி கவனமாக சத்தியத்தில் சபையை பாதுகாப்பதும் மேய்ப்பர்களுடைய கடமையே [அப். 20:28).

### மேய்ப்பர்களுடைய தகுதிகள்:-

குற்றஞ்சாட்டப்படாதவனும், ஒரே மனைவியையுடைய புருஷனுமாயிருந்து, ஜாக்கிரதையுள்ளவனும், தெளிந்த புத்தியுள்ளவனும், யோக்கியதையுள்ளவனும், அந்நியரை உபசரிக்கிறவனும் போதக சமர்த்தனுமாயிருக்க வேண்டும் (தீமோ. 3:2). இழிவான ஆதாயத்தை இச்சிக்கிறவனுமிராமல் பொறுமையுள்ளவனும், சண்டைபண்ணாதவனும், பணஆசையில்லாதவனுமாயிருந்து, தன் பிள்ளைகளை சகல நல்லொழுக்கமுள்ளவர்களாய் கீழ்ப்படியப்பண்ணுகிறவனுமாயிருக்க வேண்டும் [1 தீமோ.

[2 - ம் பக்க தொடர்ச்சி]

3:2-4]. சபையை தேவ வசனத்தினால் பெலப்படுத்தி வளர்ச்சியில் கொண்டுவரவும் தண்டனை கொடுக்க வேண்டியவர்களுக்கு தண்டனை கொடுக்கவும், சபையை விட்டு விலக்க வேண்டியவர்களை விலக்கவும் அப்போஸ்தலனுடைய ஆலோசனையின்படி மேய்ப்பனுக்கு அதிகாரம் உண்டு.

### ஊழியர்கள்:-

தேவனுடைய உடன் ஊழியர்கள் [1 கொரி. 3:9; மத். 15:13]. கிறிஸ்துவின் ஸ்தானாபதிகள் (2 கொரி. 5:20). தேவனுடைய இரகசியங்களின் உக்கிராணக்காரர்கள் (1 கொரி. 4:1; 1 கொரி. 1:21; லூக். 12:42). தேவனால் அனுப்பப்படுகிறவர்கள் (யாத் 3:10; நியா. 6:14); குமாரன் அனுப்புகிறார் (யோ. 15:16; லூக். 10:3). பரிசுத்த ஆவியானவர் அனுப்புகிறார் (அப். 13:4,5). பிதா, குமாரன், பரிசுத்த ஆவியானவராகிய தேவன் ஊழியர்களை சபைக்கு கொடுக்கிறார்.

### எப்படி ஊழியர்களை அனுப்புகிறார்:-

தேவன் தம்முடைய ஊழியர்களை அதிகாரத்தோடே அனுப்புகிறார் (லூக். 10:3; மாற். 3:14,15; மத். 10:1,2). பிசாசுகளை துரத்தவும், வியாதியஸ்தர்களைக் குணமாக்கவும் அவர் அவர்களுக்கு அதிகாரம் கொடுத்தார். அதிகாரம் கொடுக்காமல் தேவன் ஒருவரையும் அனுப்பவில்லை. பவுலை தேவன் அனுப்பும் பொழுது அதிகாரத்துடன் அனுப்பினார் (அப் 26:18) இயேசுவானவரும் அதிகாரமுடையவராய் உலகத்திற்கு வந்தார் (லூக்.4:18). அதிகாரம் பெற்றவராய் பாவத்தின் அடிமைத்தனத்திலிருந்தும், பிசாசின் அடிமைத்தனத்திலிருந்தும் விடுதலையாக்குவதற்காக வானத்திலும், பூமியிலும் சகல அதிகாரமுடையவராய் இயேசுவானவர் காணப்படுகிறார். அவரே ஊழியர்களை அதிகாரமுடையவர்களாய் அனுப்புகின்றார்.

24 2 1995 அன்று கொம்பையில் [[illegible]] ஜெப ஆலயம் பிரதிஷ்டை சிறப்பாய் நடந்தது. தலைமை போதகர் N லாசர் அவர்கள் ஜெப ஆலயத்தைத் திறந்து வைத்து அருளுரை ஆற்றினார்கள்.

---

## FORM IV

(See Rule 8)

| | | | |
|---|---|---|---|
| 1 | Place of Publication | : | Bombay |
| 2. | Periodicity of its publication | : | Monthly |
| 3 | Printer's Name<br>(Whether citizen of India?<br>(if foreigner, state the country of origin)<br>Address | : | Chief Pastor N. LAZAR<br>YES<br><br>Church Lane, Tilak Nagar,<br>Darga Road, Bhandup, Bombay-400 078 |
| 4 | Publisher's Name<br>(Whether citizen of India?)<br>(if foreigner, state the country of origin)<br>Address | : | Chief Pastor N LAZAR<br>YES<br><br>Church Lane, Tilak Nagar,<br>Darga Road, Bhandup, Bombay-400 078 |
| 5 | Editor's Name<br>(Whether citizen of India?<br>(if foreigner state the country of origin)<br>Address | : | Chief Pastor N LAZAR<br>YES<br><br>Church Lane, Tilak Nagar,<br>Darga Road, Bhandup, Bombay-400 078 |
| 6. | Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital | : | New Jerusalem Church<br>Church Lane, Tilak Nagar,<br>Darga Road, Bhandup, Bombay-400 078. |

I, Chief Pastor N. LAZAR hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Sd.
Chief Pastor N. Lazar.
Signature of Publisher.

Dated 25-2-95

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்களை கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றும்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும் அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப் 1-1; 10:40-43).

CHIEF PASTOR N LAZAR

இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

ஒரு நாட்டிலே ஒரு இராஜா இருந்தார். அவருக்கு ஒரே ஒரு மகன் இருந்தான். சிறுவன் ஓடி சாடி விளையாடும் பருவம். திடீர் என்று அவன் நோய் வாய்ப்பட்டு மரித்துப்போனான். ஆருத்துயரடைந்த அரசன் நல்லதொரு கற்சிற்பியை அழைத்து, தன் மகனைப்போன்ற சிலை ஒன்றை வடிக்கச் செய்து, நாற்சந்தியிலே மேடை போட்டு அச்சிலையை அதில் நிறுவினான். விழாவொன்றும் ஏற்பாடு செய்து, தன் மகன் சிலைக்கு மாலையிட்டு மகிழ்ந்தான். ஜனங்களெல்லாரும் மாலையிட்டு, வணங்கினார்கள். சிலர் கோலாகலமாக கொண்டாட வேண்டுமென்று அரசனுக்கும் அவ்விதமான சிலை வடித்துப் பக்கத்தில் நிறுத்தினார்கள். பெரிய விழாக் கொண்டாடி, மேளவாத்தியம் பட்டாசு வெடித்து, சிலைகளுக்கு மாலை யிட்டு வணங்கினார்கள். ஆரத்தி எடுத்தார்கள்; பல ஆர்ப்பாட்டங்கள், செய்தார்கள்; பிரசாதம் வழங்கப்பட்டது.

இராஜாவுக்கு தற்பெருமை; தன்னைத்தானே எல்லோரும் வணங்குகிறார்கள். தன் மகனைத் தானே வணங்குகிறார்கள். எவ்வளவு செலவு செய்தால் என்ன. விசேஷமாய் விழாக்கொண்டாடுகிறவர்களுக்கு விசேஷித்த சன்மானங்களும், சலு கைகளும் வழங்கினான். இப்படித் தான் இந்து தெய்வங்களெல்லாம் வந்தன, இது அத்வைதம். நாம் ஒரு வகையில் துவைதமாயிற்றே. இந்து தெய்வங்கள்; தெய் வங்களல்ல, அவைகள் வெறும் சிலைகளே. தமிழ் நாட்டு இந்துக்களுக்கு ஜெய லலிதா தெய்வமாயிருக்கலாம். பாருங்கள், சங்கராச்சியாரே ஒப்புக் கொண்டுள் ளார், மறுத்துப்பேசவில்லை. மெய்த்தேவனை வணங்குகிறவர்கள் தானே எதிர்க் கிறார்கள். அவர்களும் சிலை வழிபாட்டை ஒழித்துவிட்டால் இந்த துன்பத்துக்காக, மன நெருக்கத்துக்குள்ளாக வேண்டியதில்லை. தேவன் ஆவியாயிருக்கிறார் [யோவா. 4:24.].

ஆவியினாலே தேவனுக்கு ஆராதனை செய்கிற நாமே உயர்ந்த ஜாதி (கொலோ. 3:1).

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

[CHIEF PASTOR N. LAZAR]

# கிறிஸ்தவ மார்க்கம்

[தொடர்ச்சி]

**ஊழியத்தின் அழைப்பும் தெரிந்து கொள்ளுதலும்:-**

தேவன் தம்முடைய ஆச்சரியமான ஒளியினிடத்திற்கு வரவழைத்தவருடைய புண்ணியங்களை அறிவிக்கும்படிக்கு எல்லா விஷயங்களிலும் தெரிந்து கொள்ளப்பட்டவர் (1 பேது. 2:9). எல்லா விசுவாசிகளும் வேதத்தில் போதிக்கப்பட்டவர்களாய் வளரவேண்டுமென்று அப். பவுல் விரும்புகின்றார் (எபி. 5:12-14). தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் தேவனுடைய சாட்சிகளாய் இருக்க வேண்டுமென்பது வேதாகமத்தின் ஒழுங்கு [லேவி. 5:1,2; மத். 10:32, 33; வெளி 12:11]. ஆனால் தேவனால் ஊழியத்திற்கு மாத்திரம் அழைத்து, பிரித்தெடுக்கப்பட்டவர்கள் உண்டு. அது விசேஷமான அழைப்பும், தெரிந்துகொள்ளுதலுமாகும். உதாரணமாய் பேதுரு, யோவான், பவுல் முதலியவர்கள் (மத். 4:18-22). இவர்களுக்கு விசேஷமான கிருபையும், வரங்களும் தேவன் கொடுப்பார். அவர்கள் போகும் பொழுது கண்டிப்பாக ஆத்துமாக்கள் இரட்சிக்கப்படுவார்கள். ஏனென்றால் ஆத்துமாக்களை ஆதாயப்படுத்துவதற்காகவே தேவன் அவர்களை அழைத்தார்.

**தேவன் எப்படி தம்முடைய ஊழியர்களை தெரிந்து கொள்கிறார்:-**

தாயின் வயிற்றில் உருவாகுமுன் தேவன் தமது ஊழியர்களைத் தெரிந்து கொள்கிறார் (எரே. 1:15). பவுல் பிறப்பதற்கு முன் தாயின் கர்ப்பத்திலே வைத்து தேவன் அவரை தெரிந்து கொண்டுவிட்டார் [கலா. 1:15]. தேவனுடைய குறிப்பிட்ட காலம் வரும்பொழுது தேவன் அவரை பிரித்தெடுக்கிறார். மோசே பிறக்குமுன் அவன் முகத்தில் தெய்வீக அழகு (Divine Beauty) இருந்தது (யாத். 2:2; அப். 7:20). ஆனால் அவனுடைய 80 - வது வயதில் வனாந்திரத்தில் வைத்து தரிசனம் கொடுத்து தேவன் அழைத்தார்.

இதுபோல் யாரெல்லாம் தேவன் தமக்கு ஊழியர்களாய் தெரிந்தெடுக்க வேண்டும் என்பது தேவனுடைய சித்தமோ அவர்களைத் தேவன் தாயின் கர்ப்பத்திலிருந்து பிரித்தெடுத்து தம்முடைய குறிப்பிட்ட நேரம் வரும்போது தேவனுடைய ஆவியானவா அவரை அழைத்து, அதிகாரத்தைக் கொடுத்து அனுப்புகிறார். சோம்பேறிகளை தேவன் அழைப்பதில்லை. காணாமல் போன கழுதைகளைத் தேடிப்போன சவுலையும் (1 சாமு. 9:1-3; 10:1); ஆடுகளின் மேய்ப்பனாய் காடுகளில் இருந்த தாவீதையும் [1 சாமு. 16:11-13]; காட்டத்தியின் பழங்களைப் பொறுக்கிக் கொண்டிருந்த ஆமோசையும் (ஆமோ. 7:14); ஏர் மாடுகளை வைத்து உழுது கொண்டிருந்த எலிசாவையும்(1 இரா,19:19-21); மீன்பிடித்துக் கொண்டிருந்த பேதுருவையும் (மத். 4:19); தகப்பனோடு கூட வேலை செய்து கொண்டிருந்தவர்களாகிய செபெதேயுவின் புத்திரரையும் (மத். 4:21,22); தான் செய்து கொண்டிருந்த வேலையில் தீவிரமாய் ஓடிக்கொண்டிருந்த பவுலையும் [அப். 9:5]; தேவன் தம்முடைய மகிமையின் ஊழியத்திற்காகத் தெரிந்து கொண்டார். பல இடங்களில் வேலை தேடிக் கஷ்டப்பட்டு வேலை கிடைக்காமல் இருக்கும்போது தேவனுடைய ஊழியத்திற்காகப் போவோம் என்பதும், ஊழியத்திற்குப் போனபின்பு வருவாய் பத்தவில்லை என்று மறுபடியும் உலக ஊழியம் தேடிப் போகிறவர்களெல்லாம் கள்ள ஊழியர்கள். அவர்கள் தேவனால் அழைக்கப்பட்டவர்கள் அல்லவென்று அவர்களுடைய நடத்தையின் மூலமாக தெளிவாய் தெரிய வரும்

## ஊழியத்திற்குள்ள அழைப்பு:-

தாயின் கர்ப்பத்தில் வைத்து தேவனால் பிரித்தெடுக்கப்பட்டவர்களை தேவன் தம் முடைய சமயம் வரும்பொழுது அழைத்து பிரித்தெடுக்கிறார். பவுலை தேவன் தாயின் கர்ப்பத்திலிருந்து பிரித்தெடுத்த பொழுது. தேவனுடைய சமயம் ஆனபோது தமஸ்கு வுக்குச் செல்லும் வழியில் அவனைப் பிரித் தெடுத்தார். தேவனால் ஊழியத்திற்கு அழைக்கப்பட்ட பிறதும் தேவனுடைய சந் நிதியில் அவருடைய சமயத்திற்காய் ஜெபித்து காத்திருக்க வேண்டும். பவுல் அப்போஸ்தலன் ஊழியத்திற்கு அழைக்கப் பட்டவுடனே போகாமல் அரேபியா நாட் டில் மூன்று வருடம் உபவாசத்திலும், ஜெபத்திலும் இருந்த பிறகு ஊழியம் செய் தார் (கலா. 1:16-18). பேதுருவும் மற்ற சீஷர் களும் மூன்றரை வருடம் இயேசுவானவ ரோடுகூட வேத சத்தியத்தைக் கற்று பரி சுத்த ஆவியின் அபிஷேகத்தைப் பெற்ற பிறகே ஊழியம் செய்தார்கள். சவுலை தேவன் இஸ்ரவேல் இராஜாவாக அழைத் தவுடனே அவனை சிங்காசனத்தில் அமர்த்த வில்லை. தேவனுடைய சமயம் ஆகும்வரை அவன் அமைதியாக காத்திருக்க வேண்டி யதாயிருந்தது. தாவீதை அபிஷேகம் பண்ணி அநேக நாட்களுக்குப் பிறகு சிங் காசனத்தில் அமர்த்தினர். இதுபோல் தேவ னுடைய ஊழியத்திற்காய் அழைக்கப் பட்டவர்கள் தேவனுடைய சமயத்திற்காய் காத்திருக்க வேண்டும். கர்த்தர் அழைக் கிறார் என்று வேலையை அல்லது குடும் பத்தை விட்டுவிட்டு ஓடிவிடாதிருங்கள். கர்த்தர் சரியாய், தக்க சமயத்தில் தம்மு டைய அழைப்பை நிறைவேற்றுவார்.

## ஊழியத்திற்கு பயிற்சி (Training) அவசியமா?

ஆம். கண்டிப்பாய் தேவனுடைய ஊழி யத்திற்கு பயிற்சி அவசியம் தான். மோசே பிறந்தவுடன் அவனிடத்தில் காணப்பட்ட தெய்விக அழகைக்கண்டு, அவன் தேவனால் தெரிந்து கொள்ளப்பட்ட வன் என்று அவனுடைய பெற்றோர் அறிந்து கொண்டனர் (அப். 7:20). ஆகையால் அவர்கள் இராஜாவுக்குப் பயப்படாமல் அவனை ஒளித்து வைத்தனர் [எபி. 11:21]. பார்வோனுடைய அரண்மனையில் மோசே 40 வருடங்கள் அரசியல் காரியங்களை நன்கு கற்றுக் கொண்டார் [அப். 7:21]. மேலும் 40 வருடங்கள் அவர் வனாந்தரத் தில் ஆடு மேய்ப்பனாக இருந்து பொறு மையை நன்றாய் கற்றுக் கொண்டார். இவ் வாறு 80 வருட பயிற்சிக்குப் பிறகு 40 வருடங்கள் தேவனுடைய ஊழியத்தைச் செய்தார். எனவே தேவ ஊழியம் என்பது லேசான காரியமல்ல.

ஐசுவரியனாகிய எலிசா ஊழியத்திற்கு அழைக்கப்பட்டபோது அவன் தன் நிலத்தை உழுவதற்கோ, அல்லது வேறு வேலைக்கோ போகாமல் தேவனுடைய தீர்க்கதரிசியாகிய எலியாவின் ஊழியக்கார னாய் அவனுடைய கைக்கு தண்ணீர் வார்த் தார் [1 இரா. 19:31; 2 இரா. 3:1]. இவ்வாறு அவனுடைய பணிவிடைக்காரனாய் நின்று தேவ வசனங்களை நன்று கற்றுக் கொண்டு அவனுக்குப் பிறகு இரட்டிப்பான வல்லமை பெற்று ஒரு பெரிய தீர்க்கதரிசியானார். அடுத்து யோசுவாவைப் பார்ப்போம். அவர் மோசேயின் ஊழியக்காரனாயிருந்து [யாத். 24:13; 32:17; யோசு. 1:1], மோசேக்கு பிறகு ஒரு பெரிய ஊழியக்காரனானார். பவுல் அப் போஸ்தலனுக்கு தீமோத்தேயு, சீலா, யோவான் என்பவர்கள் பணிவிடை செய் தார்கள் (அப் 15:36-38; 2 தீமோ. 4:11). அவர்களெல்லாரும் பிற்காலத்தில் ஊழி யக்காரரானார்கள் (தீத். 1:5; 2 தீமோ. 4:1-5).

அந்தியோகியா சபையில் சிலரை தேவன் ஊழியத்திற்காய் பிரித்தெடுத்தார். அப்போஸ்தலர் தங்கள் கைகளை அவர்கள் மேல் வைத்து ஜெபம் பண்ணி ஊழியத்திற் காக அனுப்பினார்கள் [அப். 13:5]. அப்

போது யோவான் அவர்களுக்கு உதவிக் காரனாயிருந்தான் [அப். 13:5]. ஆனால் ஒரு சிலர் இதற்கு மாறான கருத்துக் கொண்டுள்ளனர் [கலா. 1:1]. மனுஷனாலுமல்ல மனுஷன் மூலமாயுமல்ல, இயேசுகிறிஸ்துவினாலும் அவரை மரித்தோரிலிருந்து எழுப்பினவராகிய பிதாவாகிய தேவனாலும் அப்போஸ்தலனாயிருக்கிற பவுலாகிய நானும் என்று பவுல் சொல்வதை ஆதாரமாகக் கொண்டு தேவ ஊழியர்கள் மனிதர்களிடமிருந்து கற்றுக் கொள்ள வேண்டியது ஒன்றுமில்லை யென்று சொல்லுகிறார்கள். பவுல் எழுதினதின் பொருள் இன்னதென்று அறியாமல் தவறாக நினைக்கிறார்கள் பவுல் கமாலியேலின் பாதத்திலிருந்து வேதப்பிரமாணத்தை நன்றாகக் கற்றுக் கொண்டவர் [அப். 22:3]. பவுலிடமிருந்து தீமோத்தேயு கற்றுக் கொண்டார் என பவுல் சொல்லுகிறார் 2 தீமோ 3:14.

**ஊழியர்கள் வேறு ஏதேனும் வேலைகள் செய்யலாமா?**

[தொடரும்]



"தேவ வசனத்தை உங்களுக்குப் போதித்து உங்களை நடத்தினவர்களை நீங்கள் நினைத்து, அவர்களுடைய நடக்கையின் முடிவை நன்றாய் சிந்தித்து, அவர்களுடைய விசுவாசத்தைப் பின்பற்றுங்கள்" (எபி. 13:7).



# திருச்சபை (தொடர்ச்சி)

## *கிறிஸ்துவின் சரீரமான சபைக்கு இயேசுகிறிஸ்து தலையாயிருக்கிறார்*

### *திருச்சபையின் ஒற்றுமை*

1 வேதாகமத்தில் ஒரே திருச்சபை காணப்படுகிறது. அவ்வபடியால் திருச்சபையின், ஒற்றுமையின் முக்கியம்:

1. திருச்சபை "ஓர் இராஜ்யம்" என்று கூறப்பட்டுள்ளது. ஒரே இராஜ்யம். தானி 2:44; மத். 16:19.

2. அது "மார்க்கம்" என்று அழைக்கப்படுகிறது. ஒரே மார்க்கம் அப். 9:2.

3. அது தேவனுடைய "மாளிகை" என்று அழைக்கப்படுகிறது ஒரே மாளிகை 1 கொரி. 3:9.

4. அது "தேவனுடைய வீடு" என்று அழைக்கப்படுகிறது. ஒரே வீடு 1 பேது. 2:5.

5. அது "என் சபை" என்று அழைக்கப்படுகிறது. ஒரே சபை. எபே. 1:22; மத். 16:18.

11. கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தம்மை விசுவாசிக்கிற எல்லோருக்காகவும் ஜெபித்திருக்கிறார் யோ. 17:20–23. இந்த ஜெபத்திற்குப் பதில் நம்முடைய கைகளில் இருக்கிறது.

111. பிரிவினை பாவமாகும். கலா. 5:20; 1 கொரி. 1;10–17.

புதிய ஏற்பாட்டில் வெளிப்படுத்தப்பட்டுள்ள திட்டத்தின்படி இல்லாத ஒரு திருச்

சபையை ஏற்படுத்துவதோ, அதற்கு உதவி செய்வதோ பாவமாகும். இவ்வாறு தனி மனிதர் செய்தாலும் அல்லது பலர் கூட்டமாகச் சேர்ந்து செய்தாலும் பாவமாகும். இங்கே இதனால் விளையும் மற்றப்பாவங்களைக் குறிப்பிடத்தேவையில்லை.

IV. தற்கால சமய பாபிலோன் லட்சக்கணக்கான ஆத்துமாக்கள் அழிவதற்கு காரணமாயிருக்கிறது. இரட்சிக்கப்படாத உலகம் குழப்பத்தில் இருக்கிறது. இதனால் பலர் தவறான போதனையில் சிக்கித் தவிக்கின்றனர். பலர் கிறிஸ்தவம் உட்பட எல்லா சமயங்களையும் வெறுத்து ஒதுக்கி விடுகின்றனர்.

*நாம் அறிந்து, உணர்ந்து மனதில் வைக்க வேண்டிய மூன்று உயிர் நிலையான உண்மைகள்:-*

1. உலகத்திலே மிகவும் முக்கியமான காரியமாகிய இரட்சிப்பு திருச்சபையில் அங்கத்தினராகஇருப்பதுடன் சமமான பொருளுடையது. அதாவது இரட்சிப்பும், திருச்சபையில் அங்கத்தினராக இருப்பதும் ஒன்றே.

2. புதிய ஏற்பாட்டில் திருச்சபையைக் கட்டுவதற்க்கும், நடத்துவதற்குமுரிய திட்டம் முழுமையாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

3. மேலே கூறப்பட்டுள்ள இரண்டு உண்மைகளையும் நாம் விசுவாசித்து வாழ்க்கையில் பின்பற்றுவோமானால் நாம் காரண (பெயர்ப்பிரிவு) திருச்சபை அமைப்பை விலக்கி, இயேசு கிறிஸ்துவின் ஜெபத்திற்கு விடையாக அமையும் திருச்சபையின் ஒற்றுமையைப் பெறலாம் (யோ. 3:16;17:21) உண்மை என்பதை உலகிற்கு உணர்த்தலாம்.

கிறிஸ்தவர்களில் சிலர் உபதேசத்தை வற்புறுத்தி எல்லாவற்றிலும் "கர்த்தர் உரைக்கிறார்" என்றிருக்க வேண்டும் என்று சொல்லுகிறார்கள். ஆயினும் பரிசுத்தமில்லா வாழ்விலும், உலக பாவ காரியங்களிலும் மனம்போன போக்கில் தொடர்ந்து வாழ்கிறார்கள். வேறு சிலர் ஆன்மீக வாழ்வை வற்புறுத்திப் பேசுகிறார்கள். உலக சிற்றின்பங்களுக்கு விலகிப் பரிசுத்தமாக வாழ வேண்டும் என்று கட்டாயப்படுத்துகிறார்கள். இருப்பினும் இவர்கள் இரட்சிப்பின் போதனை, திருச்சபையின் அமைப்பு முதலானவற்றைப் புறக்கணித்து விடுகின்றார்கள். ஆனால் இந்த இரண்டு கோட்பாடுகளையும் இணைத்து அதிலிருந்து பெறுவதே கிறிஸ்தவ வாழ்க்கை. இன்று கிறிஸ்தவ ஒற்றுமைக்கு இது இன்றியமையாத தேவையாகும். திருச்சபையின், ஒற்றுமையின் தெய்வீக திட்டம் எபே. 4:1-16 ல் கொடுக்கப்பட்டுள்ளது.

பின் வருமாறு:- எபேசி. 4:1-16; "நீங்கள் அழைக்கப்பட்ட அழைப்புக்கு பாத்திரவான்களாய் மிகுந்த மனத்தாழ்மையும், சாந்தமும், நீடிய பொறுமையுமுடையவர்களாய், அன்பினால் ஒருவரையொருவர் தாங்கி, சமாதானக் கட்டினால் ஆவியின் ஒருமையைக் காத்துக்கொள்வதற்கு ஜாக்கிரதையாய் இருங்கள்", கிறிஸ்தவ வாழ்க்கை வாழ்ந்தால் தான் ஒற்றுமை உண்டாகும். அழைக்கப்பட்ட அழைப்புக்கு பாத்திரவான்களாய் நடந்து கொள்ள வேண்டும். கிறிஸ்தவர்கள் அழைக்கப்பட்ட அழைப்புக்குப் பாத்திரவான்களாய் நடந்து கொள்ள வேண்டும். "விண்ணுலக அழைப்புக்குப் பாத்திரவான்களாய் நடந்து கொள்வதற்கு நாம் புதிதான ஜீவனுள்ளவர்களாய்" ரோ 6:4,5 நடந்து கொள்ள வேண்டும்.

இதன் பொருள், ஒரு பாவி நடந்து கொள்வதைவிட ஒருவன் கிறிஸ்தவனாக நடந்து கொள்ளும் விதம் வேறுபட்ட பரிசுத்த தன்மையுள்ளதாக இருக்கவேண்டும் (2 கொரி. 5:17). கிறிஸ்தவர்களுக்கும், பாவிகளுக்கும் ஒற்றுமை இருக்க இயலாது [2 கொரி. 6:14,15]. கிறிஸ்தவர்கள் தகுதியுள்ளவர்களாய் நடந்து கொள்ள வேண்டு

மென்றால் விசுவாசத்தினால் நடக்கவேண்டும் 2 கொரி. 5:6. இந்த வாழ்க்கைக்குரிய காரியங்களைக் குறித்து நாம் கவலைப்படக் கூடாது [மத். 6:25-34; பிலிப். 4:19]. நாம் கடவுளை நம்பி வாழவேண்டும். பல மக்கள் இவ்வுலக வாழ்க்கையை அமைத்துக் கொள்வதிலே மிகுதியாகத் தங்களை ஈடுபடுத்துகின்றனர். இதனால் அவர்கள் தங்களுக்குக் கடவுளுடன் இருக்கும் உறவினை இழந்து விடுகின்றனர். அவர்கள் கடவுளை நம்புகின்றனர் லூக். 10:38-42. விசுவாசிகளும், அவிசுவாசிகளும் ஒன்றாயிருக்க இயலாது.

பாத்திரவான்களாய் நடந்து கொள்ள வேண்டுமென்றால் கிறிஸ்தவன் கடவுள் விரும்பும் வகையில் வாழவேண்டும் 1 தெச 4:1

தங்களைக் கிறிஸ்தவர்கள் என்று உரிமைபாராட்டும் பலர் தங்களுக்கே விருப்பமானவைகளில் நடந்து கொள்ளுகிறார்கள். கடவுள் கிறிஸ்தவனின் கடவுளாயிருக்கிறாரென்றால் அவன் எல்லாக் காரியங்களிலும் கடவுளுக்குப் பிரியமுண்டாக வாழவேண்டும், தனக்கே மகிழ்ச்சியூட்டும் வகையில் நடந்து கொள்பவர், தேவனுக்கு மகிழ்ச்சியுண்டாக்குமாறு ஒருவருடன் ஒருமித்து நடக்க முடியாது. முடிவாக, நம்மில் சிலர் தமது அழைப்பிற்கும் பாத்திரவான்களாய் நடந்து கொள்ள மறுக்கும் காலம் வரையில் நமக்கு ஒற்றுமை இருக்க முடியாது.

நாம் அனைவரும் புதிதான ஜீவனுள்ளவர்களாய் நடந்து கொண்டாலன்றி நமக்கு ஒற்றுமை இருக்க முடியாது. நமக்கு ஒற்றுமை வேண்டுமானால் நாம் இந்த உலக காரியங்களில் நம்பிக்கை வைக்காமல் கடவுளிடத்தில் நம்பிக்கை வைத்து விசுவாசத்தினால் வாழ வேண்டும். நமக்கே நாம் பிரியமாய் வாழாமல் எப்பொழுதும் கடவுளுக்குப் பிரியமாக வாழவேண்டும்.

[தொடரும்]



"...இதற்கென்றே நீங்கள் ஒரே சரீரமாக அழைக்கப்பட்டீர்கள்...."
(கொலோ 3:15).



# ரோமன் கத்தோலிக்க குடும்பத்தாருடன் உரையாடல் [தொடர்ச்சி]

பரிசுத்தாவியைப் பெற்றுக் கொள்ளும் படி 120 பேர்கள் எருசலேமில் காத்திருந்தார்கள். இயேசுவின் சீஷரோடுங் கூட, மற்ற ஸ்திரீகளோடே இந்த அம்மாவும் காத்திருந்தார்கள். [அந்தப் பகுதியை வாசித்து காட்டினேன்] அதில் பேதுருவும், யாக்கோபும், யோவானும், அந்திரேயாவும், பிலிப்பும், தோமாவும், பற்தொலொமேயு, மத்தேயும், அல்பேயுவின் குமாரனாகிய யாக்கோபும், செலோத்தே என்னப்பட்ட சீமோனும், யாக்கோபின் சகோதரனாகிய யூதாவும், தங்கியிருந்தார்கள். அங்கே இவர்களெல்லாரும் ஸ்திரீகளோடும், இயேசுவின் தாயாகிய மரியாளோடும், அவருடைய சகோதரரோடுங்கூட ஒருமனப்பட்டு, ஜெபத்திலும், வேண்டுதலிலும் தரித்திருந்தார்கள் (அப். 1: 13,14).

உங்கள் வீட்டில் அரசாங்க அதிகாரி வந்து உங்கள் வீட்டிலுள்ளவர்களின் பெயர்களைச் சொல்லுங்கள் என்றால் முதலாவது யார் பெயரைச் சொல்வீர்கள்? (எங்கள் தகப்பனார் பெயரைச் சொல்வோம் என்றார் ஒருவர்) ஏன்? [அவர் தானே பெரியவர் என்றார்]. மேலே (அப். 1:13,14). யார் பெயர் முதலாவது சொல்லப்பட்டிருக்கிறது? (ராயப்பருடைய பெயர் என்றார்). இப்போது சொல்லுங்கள்; இராயப்பர் பெரியவரா? மரியாள் பெரியவர்களா?.

ஆனபடியால் வேதம் மரியாளுக்கு முக்கியத்துவம் கொடுக்காதிருக்க நீங்கள் முக்கியத்துவம் கொடுப்பது குற்றமாகும்.

கேள்வி 8:- கானாவூர் கலியாண வீட்டில் மரியாள் சொல்லைக் கேட்டுத்தானே இயேசு தண்ணீரைத் திராட்சரசமாக மாற்றினார்?

பதில்: இல்லை, அந்த அம்மா திராட்சரசம் குறைவுபட்டது என்று சொல்ல இயேசு சொன்ன பதிலைப்பாருங்கள் அரு. 2:4. ஸ்திரீயே எனக்கும், உனக்கும் என்ன? என் வேளை இன்னும் வரவில்லை. அர்த்தம் என்னவென்றால், உன் பேச்சைக் கேட்டு நான் ஒன்றும் செய்யப் போவதில்லை; என் வேளை வரும் போது செய்வேன் என்பதாம். மேலும் கீழே வாசித்துப் பாருங்கள்; அந்த அம்மா என்ன சொன்னார்கள் என்று. அவர் [இயேசு] உங்களுக்கு என்ன சொல்லுகிறாரோ, அதின்படி செய்யுங்கள் (அரு. 2:5). ஆனபடியால் நீங்கள் மரியாளை மதித்தால், அந்த அம்மா பேச்சுக்கு மதிப்புக் கொடுங்கள். அந்த அம்மா இயேசு சொல்கிறபடி செய்யச் சொல்லுகிறார்கள். இயேசு சொன்னார்: என் நாமத்தினால் நீங்கள் எதைக் கேட்டாலும் அதை நான் செய்வேன் (அரு. 14:14). ஆகையால் மரியாள் சொல்கேட்டு இயேசு சொன்னபடி செய்து அவர் நாமத்தில் ஜெபம் பண்ணுங்கள்.

கேள்வி 9:- கிறிஸ்தவர்கள் அல்லாதவர்கள் எல்லாரும் நரகம் செல்வார்களா?

பதில்:- யார் நரகம் போவார், பரலோகம் செல்வார் என்று தீர்ப்பளிப்பது நம் காரியமல்ல. இயேசு சொன்னார்: ஜலத்தினாலும், ஸ்பிரித்து சாந்துவினாலும் மறுபடியும் பிறவாவிட்டால் சர்வேஸ்வரனுடைய இராஜ்ஜியத்தில் பிரவேசிக்கமாட்டான் என்று மெய்யாகவே, மெய்யாகவே நான் உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.

நீங்கள் பட்டணத்தில் இருக்கிறீர்கள், உங்களுக்கு படிக்க வாய்ப்பிருந்து படித்து, ஒரு நல்ல உத்தியோகம் பெற்றீர்கள். ஒரு கிராமத்தான் வந்து, எனக்கு படிக்க வாய்ப்பில்லாதிருந்தது, ஆகையால் படிக்கவில்லை. எனக்கு, படித்தவனுக்குக் கொடுத்த வேலையையே எனக்கும் கொடுங்கள் என்றால் கிடைக்குமா? அதே போல் இயேசு காட்டும் வழியே பரலோக வழி. இந்த வழிக்குட்படாதவர்கள் பரலோகம் செல்ல இயலாது என்று வேதம் சொல்லுகிறது.

கேள்வி 10:- இயேசு மனுக்குலத்தாரின் பாவங்களை எல்லாம் சிலுவையில் சுமந்து தீர்த்தார் எனில் நாம் ஏன் பாவிகள் என்று எண்ணப்படுகிறோம், எல்லாரும் இரட்சிக்கப்பட்டவர்கள் என்று தானே அர்த்தம்?

பதில்: உங்கள் தகப்பனார் தனது சொத்துக்கள் எல்லாவற்றையும் விற்று பணத்தை வங்கியில் உங்கள் பெயருக்குபோட்டுவிட்டு மரித்து விட்டார் என்று வைத்துக் கொள்ளுங்கள். உங்களுக்குப் பணம் தேவைப்படும் போதே, வங்கியில் சென்று பணம் பெற்றுக் கொள்ளலாம். எங்கப்பா என் பெயரில் பணம் போட்டிருக்கிறார், எனக்கு பணம் வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தால் பணம் கிடைக்காது, வறுமையில் சாக வேண்டியது. இதே வண்ணம் நாம் இரட்சிக்கப்பட ஏற்பாடு பண்ணி விட்டார். நாம் அதை முறைப்படி பெற்றுக் கொள்ள வேண்டும். இரட்சிப்பை அடையும் வழி முறைகளைக் கைக்கொள்ள மறுத்தால் [illegible] சிப்புக் கிடைக்காது. இரட்சிக்கப்பட முடியாது: நரகம் தான்

கேள்வி 11:- உத்தரிக்கிற ஸ்தலம் உண்டு தானே?

பதில்: வேதாகமத்தில் அப்படி இருப்பதாக சொல்லப்படவில்லை.

கேள்வி 12:- துர் மரணம் நிகழ்வது பாவத்தினுலா?

பதில்: இரத்த சாட்சியாய் மரிப்பது, பாவத்தினுலல்ல. மற்றபடி விபத்துக்கள், வியாதி இவைகளில் அகால மரணமடைவது, இறை பாதுகாவல் எடுபடும் போது, சாத்தான் அழிக்கிறுன். நீதிமான்களைக் கர்த்தர் வேலி அடைத்துக் காக்கிறுர்.

கேள்வி 13:- மதுபானம் கொஞ்சம் குடித்தால் [வெறிக்காமல்] தப்பில்லை என்கிறுர்களே. சரியா?

பதில்: லஞ்சம் வாங்குகிறவன், எல்லாருந்தானே வாங்குகிறுர்கள்; ஆகையால் தப்பில்லை என்பான். திருடுகிறவனை எனக்குத் தேவைப்பட்டது எடுத்தேன் என்பான். கொள்ளை அடிக்கிறவன், அவன் அதிகம் வைத்திருந்தான் ஆகையால் கொள்ளை அடித்தேன் என்பான். இப்படி அவனவன் செய்துகொண்டிருப்பது அவனுக்குத் தப்பாகவே தெரியாது. வேதம் என்ன சொல்லுகிறதென்றுல்: மதுபானம் இருக்கும் பக்கமே பார்க்கக் கூடாது (நீதி. 23:31) என்றுள்ளது. [இதைக் கேட்க காரணமென்ன வென்றுல் அவர் வீட்டு பையனுக்கு R.C கோவிலில் உறுதி பூசிய சாமியார் வீட்டுக்கு வந்து இவர்கள் வாங்கிவைத்திருந்த மதுவை அருந்தி விட்டு, வாழ்த்திவிட்டு போனுராம்].

கேள்வி 14:- உங்கள் சபையில் ஏன் பாவத்தை வெளிப்படையாய் அறிக்கை செய்கிறீர்கள்?

பதில்: நீங்கள் கத்தோலிக்கர்களாயிற்றே, இப்படி என கேட்கிறீர்கள். நீங்கள் எப்படி அறிக்கை செய்கிறீர்கள் (சாமியாரிடம் அறிக்கை செய்கிறேம் என்றுர்). எந்த அதிகாரத்தின் படி? (அரு. 20:23 ன் படி என்றுர்). நாங்களும் அதைத் தான் செய்கிறேம். (இல்லையே உங்கள் சபை நடுவே பாவத்தை அறிக்கை செய்வதை ஒருமுறை நான் சபைக்கு வந்தபோது பார்த்தேனே என்றுர்), ஓ அதைச் சொல்கிறீர்களா. அப். 19:18 ல் விசுவாசித்தவர்கள் அநேகர் வந்து தங்கள் செய்கைகளை வெளிப்படுத்தி அறிக்கையிட்டார்கள் அல்லவா? அதன் படி சபை நடுவே சொல்லத்தக்க செய்கைகளை சபை நடுவே சொல்வார்கள். சபை நடுவே சொல்லத் தகாதவைகளை, அதிகாரம் உள்ள ஊழியர்களிடம் அறிக்கை செய்வார்கள்.

இப்படி அவர்கள் சத்தியத்தை அறிய ஆவலாய்க் கேட்ட கேள்விகளுக்கு சாந்தமாய் வணக்கத்தோடே பதில் சொல்லி, விளக்கம் கொடுத்து விட்டு, திருச்சபைக்கு வாருங்கள் என்று அழைப்புக் கொடுத்து வந்தோம். அவர்கள் எங்களைக் கனப்படுத்தி ரோடுவரை வந்து வழியனுப்பி வைத்தார்கள்.

புதிய எருசலேம் சபை ஊழியர்கள்.

குறிப்பு - ரோமன் கத்தோலிக்க திருச்சபையில் வழங்கி வரும் வல் கர்த்தா என்னும் லத்தீன் பிரதியிலிருந்து யேசு சபை திங்கால் சுவாமியவர்களால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்ட, யேசு நாதருடைய பரிசுத்த புதிய ஏற்பாட்டிலிருந்து வசனங்கள் பல மேற்கோள் காட்டப்பட்டுள்ளன.

''மனுஷருடைய கற்பனைகளை உபதேசங்களாகப் போதித்து, வீணாய் எனக்கு ஆராதனை செய்கிறுர்கள்...'' [மாற். 7:7].

# பெண்கள்

[தொடர்ச்சி]

இப்படி உலகம் முழுவதும் ஒரே குடும்பமாய் ஒரே தேசத்தாருக்கு இன்னொரு தேசத்தாருடைய உதவி தேவை. இப்படியே தேவன் பூலோகத்திலேயும் எல்லாரும் ஒரே ஜாதி, ஜனங்கள் என்பதைக் காண்பிக்கும்படியாய் தேவன் அமைத்திருக்கிறார். எந்த ஒரு விஷயத்திலேயும் இறைவனுடைய காரியங்களை நாம் கண்டு பிடிக்கலாம். பல தேசங்களைப் பிடித்தால் ஒரு அரசனுக்கு எவ்வளவு சந்தோஷம் உண்டாகுமோ அவ்வளவு சந்தோஷம் கூலி வேலை செய்து சொற்பமாக சம்பாதிக்கிற ஏழைக்கும் உண்டாகிறது.

ஒவ்வொருவரும் செய்கிற வேலைக்கு தகுந்த கூலி கிடைக்கிறதினால் அவர்கள் சந்தோஷப்படுகிறார்கள். இவ்விதமாக சர்வ வல்லமையுள்ள தேவன் உலகம் முழுவதையும் ஒரு கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கிறார். அவ்விதமான மகத்துவமுள்ள தேவனை ஸ்திரீகளுக்குப் போதிக்கவேண்டும். தெய்வத்தை அடைவதற்குப் புண்ணியமே வழியாயிருக்கிறது. எல்லா யுகங்களும், சாஸ்திரங்களும் புண்ணியங்களைப் பற்றி போதிக்கின்றன. மனிதன் முக்தியடைவது புண்ணியத்தினாலேயே தான். மோட்சத்திற்கோ, நரகத்திற்கோ போவது அவரவர்களுடைய புண்ணிய, பாவங்களின் நிமித்தமே நிகழ்கிறது. ஆனபடியினால் உலகத்தில் நாணயமுள்ளவர்களாக மனுமக்கள் யாவரும் நடந்துகொள்ளவேண்டும்.

எவ்வளவு துஷ்ட மனிதர்களாக இருந்தாலும் நல்ல மனிதர்களைத் தேடி தங்களுக்கு வேலைக்கு வைத்துக் கொள்வார்கள். துஷ்டர்களை, துஷ்டர்களும் அரோசிப்பார்கள் சிஷ்டர்களை, சிஷ்டர்களும் சிநேகிப்பார்கள். ஆனபடியினால் சத்தியம், பொறுமை, சாந்தம், இரக்கம், உபகாரம், நீதி முதலிய நற்குணங்களை எல்லாரும் மெச்சுவார்கள்; எல்லாரும் கேட்பார்கள். அகங்காரம், சூது, வஞ்சகம், களவு, கொலை, மோகம், துரோகம், மதம், மாற்சரியம், கொடுமை, அநீதி இவைகளைப் பிறரிடத்தில் கண்டால் அவர்களை எல்லாரும் வெறுப்பார்கள். அந்த செய்கைகளை தங்களுக்கு ஒருவரும் செய்யக் கூடாது என்று விரும்புவார்கள். உபகாரியைக் கண்டால் அவனைப் பிரியமாய் உபசரிக்காதவர்கள் யாராவது உண்டா? அப்படி துஷ்டர்களைக் கண்டால் எல்லோருக்கும் பயமும், வெறுப்பும் உண்டாகும். ஆனபடியினால் மனுமக்கள் புண்ணியம் செய்ய வேண்டும். காலா, காலா சரித்திரங்களிலும் நாம் பார்த்தோம் என்றால், துஷ்டர்களைப் பற்றி படிக்கும்போது நமக்கு கோபமும், வருத்தமும், நல்லவர்களைப் பற்றி படிக்கும் போது நமக்கு சந்தோஷமும், மகிழ்ச்சியும், நாமும் அப்படி நல்லவர்களாக ஆகவேண்டும் என்று எண்ணுகிறோம்.

புண்ணியம் செய்வது பிரயாசம் என்று சிலர் நினைக்கிறார்கள். அப்படி நினைப்பது தவறு. சாண் வயிறு பிழைப்பிற்காக சமுத்திர யாத்திரை செய்து, ஆறு, மலைகளைக் கடந்தும், தேசாதி தேசங்களெல்லாம் திரிந்தும் பல தொழில்களைச் செய்கிறார்கள். யுத்த சன்னத்திரராய் பட்டாளத்தில் சேர்ந்து சண்டை செய்து பிராணனைக் கொடுக்கிறார்கள். மனுஷனுடைய செய்கையோ தேவதா நிர்மாணமோ என்று பிரமிக்கும்படியாக சிற்ப வேலைகள், சித்திர வேலைகள், இயந்திரங்கள், இந்நாட்களிலே கம்ப்யூட்டர்கள் பலவிதமான அருமையான வேலைகளை மனிதன் செய்கிறான். அதற்காக எவ்வளவோ பிரயாசப்பட்டு பல சாஸ்திரங்களையும், பல தொழில்களையும் கற்றுக் கொள்ளுகிறான்.

இப்படிப்பட்ட அதிசயமான காரியங்களை செய்கிற மனிதனுக்கு, உண்மை, சாந்தம், பொறுமை முதலிய புண்ணியங்களைச் செய்வது மகா பிரயாசமா? அவைகளைச்

செய்ய அலைய வேண்டுமா? இல்லை. பாவம் செய்வது கஷ்டமே தவிர புண்ணியம் செய்வது கஷ்டமல்ல. உள்ளதை உள்ளபடி சொல்வதுதானே உண்மை அதை கூட்டாமல், குறைக்காமல் நடந்தபடியே சொல்வது எவ்வளவோ எளிதான காரியம். நடவாத காரியத்தை நடந்தது போல பொய் சொல்லுகிறதாயிருந்தால், முன்னுக்குப் பின் விரோதம் இல்லாமல் முந்தியே ஆலோசித்து ஆகாச மாளிகை கட்டுவது போல கோட்டை கட்டுவது எவ்வளவோ வருத்தமாயிருக்கின்றது.

அஸ்திபாரமில்லாத சுவருக்கு ஆயிரம் முட்டு கொடுப்பது போல ஒரு பொய்யை ஸ்தாபிக்க அநேக பொய்களைச் சொல்லிப் பிரயோஜனம் இல்லாமல், "கெட்டிக்காரன் புழுகு எட்டு நாளைக்குள் தெரியும்" என்பது போல் எப்படியும் பொய் வெளியாகின்றது. கொலை, களவு, மோசம், வஞ்சகம், பரஸ்திரியின் மனம் முதலிய கொடிய செய்கைகளைச் செய்வதற்கு தகுந்த சமயங்களும், ஆயுதங்களும், சகாயங்களும் தேடிக் கொண்டு தீமைகளைச் செய்வது எவ்வளவு வருத்தமும், கஷ்டமும், பிராண சங்கடமுமாக இருக்கின்றன. அந்த செய்கைகளுக்கு புண்ணியங்களைச் செய்வது எவ்வளவு இலகுவாய் இருக்கிறது. சர்வ சாட்சியாகிய கடவுள் புண்ணியங்கள் தெரியும்படி மனோ சாட்சியாகிய தீபத்தை ஒவ்வொருவருடைய உள்ளத்திலேயும் ஏற்றிவைத்திருக்கிறார் என்பது சத்தியமே. விபரம் தெரியாத பாலர்களும், சித்த சுவாதீனமில்லாத பைத்தியங்களும் தவிர மற்ற யாவரும் படித்தவர்களாயிருந்தாலும், படியாதவர்களாயிருந்தாலும் நன்மை, தீமை தெரியாதவர்கள் ஒருவருமே இல்லை.

படியாத மூடர்களுக்கு தர்ம காரியங்கள், சிறிது நுட்பமான விஷயங்கள் தெரியாமலிருந்தாலும், ஸ்தூலமாய் தர்மம், இன்னது அதர்மம் என்பது யாவருக்கும் நன்றாகத் தெரியும். ஆனதுபற்றி "நெஞ்சை ஒளித்தொரு வஞ்சகமில்லை". என்றும், "தன் நெஞ்சறியாத பொய்யுமில்லை", "தாயறியாத சூலில்லை" என்றும், "தன்னையறியாத சன்னதம் இல்லை" என்றும் பெரியோர்களுடைய வாக்கியங்களாயிருக்கின்றன. மனோசாட்சியாகிய தீபம் பாவ புண்ணியங்களை நமக்குக் காட்டுகிறதும் தவிர, நாம் பாவம் செய்யும் பொழுது நம்மேல் சாடுகின்றது. புண்ணியம் செய்யும் பொழுது சந்தோஷிக்கிறது. மனோசாட்சிக்கு விரோதமில்லாமல் நடக்கிறவர்களே புண்ணியாத்துமாக்கள் என்றெண்ணப்படுகிறார்கள்.

கண்ணாடியில் தோன்றுகிற நமது பிரதி பிம்பம் நாம் செய்வதையெல்லாம் தானும் செய்து காட்டுவதுபோல் நமக்கு பிரதி பிம்பமாகிய உலகம் நாம் செய்வதை நமக்கு செய்து காட்டுகிறது. நாம் ஒருவனைப் புகழ்ந்தால் அவனும் நம்மைப் புகழுகிறான். நாம் ஒருவனை இகழ்ந்தால் அவனும் நம்மை இகழ்கிறான். நாம் ஒருவனுக்கு உபகாரம் செய்தால் அவனும் நமக்கு உபகாரம் செய்வான். ஒருவன் ஏழையாயிருந்தாலும், நாம் அவனுக்குத் தீமை செய்தால், அவனும் ஒரு சமயத்தில் நமக்கு தீமை செய்வது கூடிய காரியமே

கொசுவும் யானைமேல் சாடுகின்றது. குப்பை உயர்ந்து கோபுரத்தையும் மூடுகின்றது. பெரிய பொருட்களை சிறிய செல்லும் பட்சித்து நாசமாக்குகின்றன. நாம் எதை விதைக்கிறோமோ அதே நமக்குப் பலிக்கும். வேம்பை விதைத்தவனுக்கு வேம்பேயல்லாமல் கரும்பு கிடைக்குமா? பாம்பை வளர்த்தவனுக்கு விஷமேயல்லாமல் அமிர்தம் கிடைக்குமா? அப்படிப்போல நன்மை செய்தால் நன்மையும், தீமை செய்தால் தீமையும் நமக்கே லபிக்கிறபடியால் நன்மையைப் பிடித்துக் கொள்வது வேகமாயும் நம்முடைய சுய பிரயோஜனமுமாயிருக்கிறது.

(தொடரும்)

# வேத பாடம் [தொடர்ச்சி]

## எண்ணாகமம்

### எண். 22:22-30

பிலேயாமோடு கழுதை பேசிற்று. பிலேயாம் போகிறதினாலே தேவனுக்குக் கோபம் மூண்டது. கர்த்தருடைய தூதனானவர் வழியிலே அவனுக்கு எதிராளியாக நின்றார். அவன் தன் கழுதையின் மேல் ஏறிப்போனான். உருவின பட்டயத்தோடு கர்த்தருடைய தூதன் வழியிலே நிற்கிறதை பிலேயாமின் கழுதை கண்டு வழியை விட்டு விலகி வயலில் இறங்கிற்று. பிலேயாம் அதை அடித்தான். கர்த்தருடைய தூதனானவர் இரு புறத்திலும் சுவர் வைத்திருந்த திராட்சைத் தோட்டங்களின் பாதையிலே போய் நின்றார். கழுதை கர்த்தருடைய தூதனைக் கண்டு, சுவர் ஓரமாய் ஒதுங்கி, பிலேயாமின் காலைச் சுவரோடே நெருக்கிற்று; திரும்பவும் அதை அடித்தான். அப்பொழுது கர்த்தருடைய தூதன் அப்புறம் போய் வலது புறம், இடது புறம் விலக வழியில்லாத இடுக்கமான இடத்திலே நின்றார்.

கழுதை கர்த்தருடைய தூதனைக் கண்டு, பிலேயாமின் கீழ்ப் படுத்துக் கொண்டது; பிலேயாம் கோபம் மூண்டவனாகி கழுதையைத் தடியினால் அடித்தான். உடனே கர்த்தர் கழுதையின் வாயைத் திறந்தார்; அது பிலேயாமைப் பார்த்து: நீர் என்னை இப்பொழுது மூன்று தரம் அடிக்கும்படி நான் உமக்கு என்ன செய்தேன் என்றது. அப்பொழுது பிலேயாம் கழுதையைப் பார்த்து: நீ என்னைப் பரியாசம் பண்ணிக் கொண்டு வருகிறாய்; என் கையில் ஒரு பட்டயம் மாத்திரம் இருந்தால், இப்பொழுதே உன்னைக் கொன்றுபோடுவேன் என்றான். அப்பொழுது கழுதை பிலேயாமை நோக்கி நீர் என்னைக் கைக்கொண்ட நாள் முதல் இந்நாள் வரைக்கும் நான் எப்போதாகிலும் உமக்கு இப்படிச் செய்தது உண்டா? நீர் என்மேல் ஏறிப் பிரயாணம் செய்து வருகிறீர் அல்லவா. இப்படி எப்போதாகிலும் நான் செய்தது உண்டா என்று கேட்டது. அவன் இல்லை என்றான்.

இந்த சம்பவத்தில் பிலேயாம் போகிறது கர்த்தருக்குப் பிரியமில்லாததினால் பிலேயாமுக்கு எதிராக கர்த்தருடைய தூதனானவர் உருவின பட்டயத்தோடு நின்றதாகப் பார்க்கிறோம். கர்த்தருடைய கோபம் மூண்டதற்கு காரணம் இருக்கிறது.

1. பிலேயாம் கர்த்தருடைய வார்த்தையை மீறி கர்த்தருடைய சித்தத்துக்கு விரோதமாக புறப்பட்டுப் போனான். கர்த்தர் ஏற்கனவே நீ போக வேண்டாம், நீ அந்த ஜனங்களை சபிக்க வேண்டாம் என்று சொல்லி விட்டார் - வசனம் 12-20.

2. பிலேயாமுடைய ஒரே நோக்கம் பாலாக்கினுடைய அன்பளிப்பை எப்படியும் பெற வேண்டும் என்பதே வசனம் - 7,17,37,24:11.

3. அவன் கடவுள் தனக்கு அனுமதி கொடுக்க வேண்டுமென்று விரும்பினான் - வசனம் 19.

4. பிலேயாம் இஸ்ரவேல் ஜனங்களைச் சபிக்க வேண்டும் என்று விரும்பினான். கர்த்தர் அனுமதி கொடுக்க வில்லை என்று குறைவுபட்டுக் கொண்டான். அவன் விருப்பப் பிரகாரம் இஸ்ரவேல் ஜனங்களைச் சபிக்க தேவன் இடம் கொடுக்கவில்லை - வசனம் 14, உபா. 23:4,5; யோசு. 24:10.

5. கடவுளுடைய கட்டளைகளுக்கு விரோதமாக அவன் இஸ்ரவேல் ஜனங்களை சபிக்க வேண்டும் என்று எண்ணமுடையவனாய் திரும்பிப்போக நினைக்கவில்லை. கழுதை பேசி தனக்கு விரோதமாய் தேவதூதன் நின்ற போதிலும், நீர் சொன்னால் திரும்பிப்போய் விடுவேன் என்று சொன்னானேயொழிய அவன் திரும்பிப்போக விரும்பவில்லை. திரும்பிப் போயிருக்க வேண்டும். அவனுடைய நோக்கம் போய் சபிக்க வேண்டுமென்பதே.

6. கடவுளுடைய பூரணமான சித்தத்துக்கு விரோதமாக பிலேயாமுடைய தீர்மானம் இருந்தது.

7. பிலேயாம் கர்த்தருடைய தூதனுக்கு முன்பாகக் குனிந்து, பணிந்தான். தூதனானவர் பிலேயாமை நோக்கி நான் உனக்கு எதிரியாய்ப் புறப்பட்டு வந்தேன் என்று சொல்லுகிறார்.

8. அவன் தேவனுடைய சித்தத்தை அல்லல் தட்டிப்போட்டு அவன் அங்கே போகப் புறப்படுகிறான். அவனுடைய நோக்கமெல்லாம் எப்படியும் வெகுமானத்தைப் பெறுவதே. ஆனபடியினால் இன்றைய தினம் நீங்கள் தங்கியிருங்கள், கர்த்தர் இனிமேல் எனக்கு என்ன சொல்லுகிறார் என்று நான் கேட்டறிகிறேன் என்று சொன்னதின் மூலமாக அவனுடைய விருப்பத்திற்கு, சித்தத்துக்கு கடவுளுடைய சித்தம் மாற வேண்டுமென்று, கர்த்தர் அனுமதி கொடுக்க வேண்டுமென்று விரும்பியிருந்தான்.

9. அவனுடைய ஒவ்வொரு நோக்கமும், எப்படியும் எப்படியும் அந்த வெகுமானத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டுமென்பதே.
பொருளாசைக்குச் சாய்ந்து விடுதல் (2 பேது. 2:15,16; யூதா 11; வெளி. 2:14). இந்த பிலேயாமைப் போல் அநேக தீர்க்கதரிசிகளும், தேவனுடைய பிள்ளைகளும் பொருளாசையினாலே இழுக்கப்பட்டு, பாவத்தில் சிக்கிக் கொள்கிறார்கள். தேவனுடைய தெளிவான கற்பனைகள், போதனைகளை விட்டு, தவறான போதனைகளில் சிக்கிக் கொள்ளுகிறார்கள். இதற்குப் பிலேயாமின் போதகம் என்று பெயராகும்.

## எண். 22:31-35

கர்த்தருடைய தூதனானவர் பிலேயாமை போ என்று அனுமதி கொடுக்கிறார். ஆனாலும் இந்த நிபந்தனை மறுபடியும் சொல்லப்படுகிறது. நான் சொல்லுகிற வார்த்தையையே நான் உனக்குக் கொடுக்கும் வார்த்தையையே நீ சொல்ல வேண்டும் என்பதாகும். இதன் மூலமாய் தீர்க்கதரிசிகள் சாபமிட்டால் அந்தப்படியேயாகும். உபாகமத்தில் நாம் பார்க்கிற பிரகாரம் கடவுள் பிலேயாமுக்குச் செவிகொடுக்க விரும்பவில்லை என்பதாம் (உபா. 23:5). தீர்க்கதரிசிகள் சொல்லுகிற பிரகாரம் கர்த்தர் செய்கிறார். ஆனபடியினால் பிலேயாம் வாயிலிருந்து சாபமுண்டானாலும் அது பலிக்கவும் செய்யும். ஆனபடியினால் கடவுள் பிலேயாமின் வாயிலே வார்த்தை அருளினார் என்று வேதத்திலே குறிப்பிட்டிருக்கிறது. கடவுள் சொல்லுகிற வார்த்தையையே சொல்ல வேண்டும் என்கிற நிபந்தனையை பிலேயாமுக்குக் கட்டளையாகக் கொடுக்கப்பட்டது. அந்தப் பிரகாரம் பிலேயாம் மறுபடியும் புறப்பட்டு பிரயாணப்படுகிறான். அவனுடைய ஒரே நோக்கம் வெகுமானங்களைப் பெற்றுக் கொள்வதே. திரும்பிப் போகிற சிந்தனை அவனுக்கு இல்லை

## எண். 22:36-41

### பிலேயாமும் பாலாக்கும் சந்தித்தல்:-

பிலேயாம் வருகிறதைப் பாலாக் கேட்ட மாத்திரத்தில் கடைசி எல்லையான அர்னோன் நதியின் ஓரத்திலுள்ள மோவாபின் பட்டணமட்டும் அவனுக்கு எதிர் கொண்டு போனான் என்று பார்க்கிறோம். நான் முன்னாலே உம்மை வரும்படியாகக் கூப்பிட்டிருந்தேனே, நீர் வரவில்லையே. உம்மை வேண்டிய பிரகாரம் கனம் பண்ணுவேனே என்று பாலாக் சொன்னான். அப்பொழுது பிலேயாம் இதோ நான் உம்மிடத்தில் வந்திருக்கிறேன். ஆகிலும் நான் என் விருப்பப்பிரகாரம் ஏதாகிலும் சொல்ல முடியாது. தேவன் என் வாயில் அருளும் வார்த்தையை மாத்திரம் சொல்லுவேன். பாலாக் பிலேயாமுக்கு ஆடு, மாடுகளை அடித்து அவனுக்கும் அவனோடிருந்த பிரபுக்களுக்கும் அனுப்பினான். மறுநாள் காலமே பாலாக், பிலேயாமைக் கூட்டிக் கொண்டு அவனைப் பாகாலுடைய மேடுகளில் ஏறப்பண்ணினான்; அவ்விடத்திலிருந்து பிலேயாம் ஜனத்தின் கடைசிப் பாளயத்தைப் பார்த்தான் என்று எழுதப்பட்டிருக்கிறது. அன்றைய தினமே பாலாக் பிலேயாமை அழைத்துக்கொண்டு போய் இஸ்ரவேல் ஜனங்கள் பாளையமிறங்கியிருக்கிற பாளயத்தின் பின்பாகத்தைப் பார்க்கும்படியாகச் செய்தான் என்று பார்க்கிறோம்.

(தொடரும்)

---

"நீங்கள் துரத்திவிடும் ஜாதிகள் தங்கள் தேவர்களைச் சேவித்த உயர்ந்த மலைகளின் மேலும், மேடுகளின் மேலும், பச்சையான சகல மரங்களின் கீழுமுள்ள இடங்களையெல்லாம் முற்றிலும் அழித்து விடுங்கள்" [உபா. 12:2].

---



ஞானஸ்நானம் பெற்று திருச்சபையோடு சேர்த்து கொள்ளப் பட்டவர்கள்:-



| நாள் | கிளை | நபர்கள் |
|---|---|---|
| 24.2.95 | கொப்பியம் | 14 |
| 11.3.95 | கொடைக்கானல் | 25 |
| 20.3.95 | நாகர்கோவில் | 31 |

# மனிதனும் பாவமும்

[தொடர்ச்சி]

பாவத்தினிமித்தம் கடவுளின் சாயல் மனிதனில் சீர்குலைந்தது. மனிதன் மனிதனாயிருந்தான். ஆனால் கடவுளோடு உள்ள ஐக்கியம், அந்த ஆதி நீதியை அவன் இழக்க வேண்டியதாயிற்று. அதனால் அவன் தேவனோடுகூட சரியான முறையில் உறவு கொண்டாட முடியாமல் போய் விட்டது. கலகத்தினிமித்தம் கடவுளுடைய வெளிப்பாடு சீர்குலைந்து விட்டது. இறைவன் மனிதனுக்கு நன்மை செய்ய முடியாதபடி அவனுடைய உள்ளான நிலை சீர்குலைந்தது. ஆனாலும் இறைவன் மனிதனை நேசித்தபடியினால் அவனை மீட்க திட்டமிட்டார். மெய்யாகவே மனிதனுடைய சித்தம் சிறைபட்டுப் போயிற்று.

பாவம் செய்கிற எவனும் பாவத்துக்கு அடிமை என்று யோவான் சொன்னார் யோ. 8:34. பாவம் மனிதனை அடிமைப்படுத்துகிறது. அடிக்கடி அனுபவத்தில் கண்டறியப்பட்டதோர் உண்மையாகும். பாவம் செய்கிறவன் அந்த பாவத்துக்கு அடிமையாகிறான். ஆனபடியினால் அவன் பாவத்திலிருந்து விடுதலை பெற முடியாதவனாகிறான். இறைவன் அவனை விடுவித்தாலொழிய அவனுக்கு விடுதலை இல்லை. அவன் பாவத்துக்குக் கீழாக விற்கப்பட்டு, அவன் பாவப் பிரமாணத்திற்குச் சிறையாக்கப்படுகிறான் (ரோம. 7:14,23). ஆனபடியினால் சொந்தமாகவே அவன் பாவத்தை உற்பத்தி செய்யக் கூடியவனாய், பொய் புரட்டுகள் செய்யக் கூடியவனாய் பிறரை கெடுக்கும்படியாய் எந்த தீய கதையையும் கட்டக்கூடியவனாய் மாறிவிடுகிறான். அவனுடைய சித்தம் சிறைப்பட்டபடியினால் அது ஒரு கழுதையைப் போல் இருக்கிறது. யாராவது ஒருவர் அதின் மேல் ஏறி அதை நடத்த வேண்டியதாயிருக்கிறது. அதன் மேல் அமர்ந்து செல்லுகிறவர், அதை நடத்துகிறவர் ஒன்று இறைவனாய் இருக்க வேண்டும் அல்லது பேய் அவனை ஓட்டிப் படைக்கிறதாக இருக்கும்.

பாவத்தின் மூலமாக மனித சித்தம் தன்னையே பாவம், மரணம், பிசாசு என்பவைகளின் கீழ் அடிமையாக்கிக் கொண்டது. இதன் மூலமாக முழு மனித நிலைமையும் பாதிக்கப்படுகிறது. அவனுடைய ஆவி, மனம், உடல் ஆகியவற்றை மனுக்குலம் முழுவதையுமே தீட்டுப்படுத்திவிட்டது என்பதையே நாம் காணுகிறோம். வீழ்ச்சிக்கு முன் ஆதாம் பாவம் செய்யாமலிருக்கிறதற்கான ஆற்றல் பெற்றிருந்தார். இவ்வாற்றலைச் சரிவர பயன்படுத்தி பாவம் செய்வதற்கே முடியாமலிருக்கும் பண்பினை ஆதாம் வளர்க்க வேண்டுமென இறைவன் திருவுளம் கொண்டார். ஆனால் ஆதாம் சுயாதீனத்தை தவறாய்ப் பயன்படுத்தி வீழ்ச்சியடைந்ததால் விளைவு தலைகீழாக மாறியிருக்கிறது.

இதன் விளைவு யாதென்றால் பாவம் செய்யாமலிருக்கவே முடியாத பண்பினை ஆதாம் வளர்த்தார். இதனால் எல்லாவிதத்திலும் மனிதனுடைய சித்தம் முழுவதுமாய் தீயதாகி விட்டது. உலகப் பிரகாரமாக, சமுதாயத்திற்காக, சமுதாய நன்மைக்காக பயன் தரத்தக்கதான அநேக காரியங்களை மனிதன் செய்யக் கூடும். அப்படியானால் அந்த சித்தத்தின் நிலை என்ன? மனிதன் செய்யும் ஒவ்வொன்றிலும் பாவம் தானாகவே கலந்துள்ளது.

பாவமே சிறிதேனும் இல்லாத, கறைக்காத ஒரு காரியத்தேனும் மனிதனால் செய்ய முடியாது. இப்படி அவனுடைய நிலை ஆகி விட்டது. அவனுடைய உண்மையான நிலையை மிகப் பெரிய புனிதர்களானவர்கள் சரியாக வெளிப்படுத்தி அறிவித்திருக்கிறார்கள். பாவத்தின் கறைப்படுத்தும் [illegible]

றாலே ஆழ்ந்து உணர்ந்துள்ளவர்களாகவே அவர்களுடைய வாக்கு காணப்படுகிறது.

பவுல் தான் பாவிகளில் பிரதான பாவி என்று ஒப்புக் கொள்கிறார் (1 தீமோ. 1:15; ரோம. 7:14). கடவுள் எவ்வளவுக்கெவ்வளவு மனிதனிடம் நெருங்கி வருகின்றாரோ அவ்வளவுக்கவ்வளவு மனிதன் தெளிவாக தனது பாவத்தினைக் காண்கிறான். இரண்டாவதாக மனிதன் தன்னையே மாற்றும் ஆற்றல் இல்லாதவனாய் இருக்கிறான். அப்படியாயின் அவன் எந்த சக்தியினால் மாற்றத்தை அடையக் கூடும். தனது சித்த சக்தியினாலா? அந்தோ அந்த சித்தம் தானே மாற்றப் படவேண்டியதாயிருக்கிறது. ஒருவன் தன்னையே மாற்றிக் கொள்ள முயல்வது அவனே தன் மயிரைப் பிடித்து தன்னையே தூக்கிக் கொள்ள முயல்வதை ஒத்து இருக்கிறது. சித்தமானது ஒரு முறை கடவுளிடமிருந்து அப்பால் சென்று விடின் அது தனது சொந்த முயற்சியினால் மீண்டும் அவரிடத்தில் வர இயலாது. மனிதன் பாவியாகிவிட்டால் அவன் தனது சொந்த முயற்சியினால் அவ்வுண்மையை மாற்ற அவனால் முடியாது. அவன் தன் சுயாதீனத்தை இழந்து விட்டான். அடிமையாக மாறிவிட்டான்.

### பாவத்தின் சாபம்:-

கடவுளோடு கொண்டுள்ள உறவை தள்ளி வைத்ததின் விளைவாக மனிதன் தன்னை கடவுளுக்கும் அவரோடு ஐக்கியம் கொண்டுள்ள அனைவருக்கும் விரோதியாக்கிக் கொண்டான். அவ்வுறவினின்று தன்னை துண்டித்துக் கொண்டான். கடவுளை மனிதன் அகற்றிவிட முடியாது. அது முடிகிற காரியம் அன்று.

(தொடரும்)



"எல்லாரும் பாவஞ்செய்து, தேவ மகிமையற்றவர்களாகி...." (ரோம. 3:23).



---

## பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Bro. C. பர்னபாஸ் | Sis. M. பியூலா | சென்னை | 12-12-94 |
| Bro. K. ஏசுதாஸ் | Sis. K. பியூலா | சேலம் | 22-3-95 |
| Bro. S. அந்தோணி | Sis. ஆரோக்கியமேரி | பி-எல்-செட் | 5-4-95 |

# மரணத்தை வென்ற கர்த்தராகிய இயேசுகிறிஸ்து

**தேவனுக்கும் மனிதனுக்கும் மத்தியஸ்தர் ஒருவரே; எல்லாரையும் மீட்கும் பொருளாக தம்மை ஒப்புக் கொடுத்த மனிதனாகிய இயேசுகிறிஸ்து அவரே.**

தேவன் ஒருவர். மத்தியஸ்தரும் ஒருவரே. எல்லா மதங்களும் மனிதனை தேவனிடம் சேர்ப்பதாகச் சொல்லுகின்றன. ஆனால் அப்படி இல்லை.

பரிசுத்த வேதாகமம் ஒன்றே தேவன் ஒருவர் என்று சொல்லுகிறது. பாவத்தினால் மனிதன் தேவனண்டை சேரமுடியாதவனாயிருக்கிறான். தேவனுக்கும், மனிதனுக்கும் மத்தியில் தடையிருக்கிறது. பிரிவினை இருக்கிறது [ஏசா. 59:1,2; கொலோ. 1:21]. பலியின்றி பாவம் நிவர்த்தியாவதில்லை. உலகத்தின் மையப் பொருள் மனிதனே. ஆனபடியினால் அவனிலும் கீழ் நிலையிலுள்ள மிருகங்கள், பறவைகள் பிராணிகளின் பலி மனித ஆத்துமாவை மீட்க போதுமானதல்ல; ஆனபடியினால் ஸ்தோத்தரிக்கிறோம்.

திரித்துவ தேவனில் இரண்டாமவர் இப்பூமியில் மனித அவதாரமாய் வந்து, மனிதனுக்காய் மனிதனோடு மனிதனாய் பரிசுத்தமான வாழ்வு வாழ்ந்து, தம்மையே மனிதனுடைய பாவத்துக்குப் பலியாய் கல்வாரி சிலுவையிலே பலியாக ஒப்புக்கொடுத்தார். அவருடைய பலி பூரணமான பலி; பாவமற்ற மனிதனைக் காட்டிலும் உயர்ந்த பலி; தேவன் மனிதனுக்காய்ப் பலியானார். நமக்காக ஒருவர் தன்னைத் தியாகம் பண்ணும்போது அவர்மேல் நமக்கு அன்புண்டாவதில்லையா. இயேசுவானவர் உனக்காகவும், எனக்காகவும் மரித்தார். அடக்கம் பண்ணப்பட்டார் மூன்றும் நாள் உயிரோடெழுந்தார். அவருடைய மரணம் மனிதனை பாவத்திலிருந்தும், பாவத்தின் சாபத்திலிருந்தும், அதின் ஆக்கினையின்றும் மனிதனைப்

---

## அவர்கள் தங்கள் பிரயாசங்களை விட்டு ஓய்ந்திருப்பார்கள்

*கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்*

பாஸ்டர் D. ஜோசப், பங்களா தோட்டம், கொடைரோடு திண்டுக்கல் அண்ணா- Dist. தமிழ் நாடு.

அம்மையநாயக்கனூரில் ஊழியராயிருந்த பாஸ்டர் D. ஜோசப் அவர்கள் 1-J-1995 அன்று கர்த்தருக்குள் நித்திரையடைந்தார் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். அது திடீர் மரணமாயிருந்தது. அவரது மரணத்தினால் துக்கத்திலிருக்கிற குடும்பத்தாருக்கும் உறவினர்களுக்கும், சபையாருக்கும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினால் ஆறுதல் சொல்லுகிறோம்.

தேவ கிருபை அவருடைய குடும்பத்தைத் தாங்குவதாக

மீட்கிறது. அது மாத்திரமல்ல பரிசுத்த தேவனுக்கும், மனுஷனுக்கும் நடுவில் தடையாயிருந்த பாவத்தை நீக்கி, பிதாவிடம் பிள்ளை மன்னிப்புக் கேட்டு ஒப்புரவாகிறது போல் இயேசுகிறிஸ்துவை விசுவாசிக்கிற எந்த மனிதனையும், மனுஷியையும் தேவனோடு ஒப்புரவாகுகிறார். அதனால் மனிதன் தேவனிடம் ச மா தா ன ம் பெறுகிறான் [ரோ.5:1].

உலகத்தில் எத்தனையோ பேர்கள் தங்களைத் தெய்வமென்று சொல்லிக் கொண்டு வந்தாலும், அவர்கள் தெய்வமல்லாததால் அவர்கள் மனிதனுக்காய் ஒன்றும் செய்ததில்லை. அவர்கள் இவ்வுலகில் வந்து நல்லதோ, பொல்லதோ செய்து மனைவி பிள்ளைகளுடன் வாழ்ந்து, தங்கள் மனோபீஸ்டங்களை நிறைவேற்றி, பிறரைக் கொன்று, அடிபிடிசண்டை போட்டு, கொலை செய்து, கொலை செய்யப்பட்டு அல்லது தற் கொலை செய்து கொண்டு இறந்து ஒழிந்துபோன மனிதர்களே. பின்பு அவர்கள் இல்லை: அவர்களுடைய சரீரம் அழிந்து போயிற்று.

குழந்தை ஒன்று கிணற்றில் தவறி விழுந்து விட்டான் என்றால், மற்றவர்களெல்லாம் ஓடிவந்து வெளியே நின்று குய்யோ முறையோ என்று சத்தமிடுவார்கள். சொந்த தகப்பனே உள்ளே குதித்து தன் குழந்தையைக் காப்பாற்றுவானல்லவா. அப்படிப் போல இயேசுவானவர் நம்மை சிருஷ்டித்த கர்த்தாவும், இரட்சகனும், தகப்பனுமாயிருக்கிறதினால் த ம் மு யி ரை க் கொடுத்து நம்மைக் காப்பாற்றுகிறார் மூன்றும் நாள் உயிரோடெழுந்தார். இன்றும் உடலுடன், உயிருடன் இருக்கிறார். ஆனபடியினால் நமக்குப் பயமே இல்லை.

ஒரு மனிதன் வனாந்திர வ ழி யா ய் ஒற்றையடிப் பாதையில் பிரயாணம் புறப்பட்டுப் போனார், தண்ணீர்த் தாகமுண்டாயிற்று பாதையோரத்தில் கிணறு ஒன்றைக் கண்டு தண்ணீர் குடிக்க கிணற்றுக்குள் இறங்கினார். வெளியே இருந்து சர்ப்பம் ஒன்று அவரைத் தீண்ட இறங்குகிறதைக் கண்டு பாம்பு, பாம்பு என்று அலறினார் இந்த சத்தம் கேட்டு தற்செயலாய் அந்த வழி வந்து கொண்டிருந்த ஒருவர் கோல் ஒன்றைக் கொண்டு பாம்பை அடித்தார். அது திரும்பிக் கொண்டு அவர்மேல் பாய்ந்து கொத்தினது. அவர் பாம்பை அடித்துக் கொன்று போட்டார், ஆனால் அவரும் விஷம் தலைக்கேறி இறந்து போனார்.

வழிப்போக்கன் செய்வதறியாது அவருக்காய் அழுது கதறி சோகப்பட்டு, என்னைக் காப்பாற்றினீரே என்று அழுது அவரை ஒருஇடத்தில் கிடத்திவிட்டு, வேகமாய்ப் போய்ஆள்கூட் டிவரப்போகும் வழியில் புலியொன்று எதிர்ப்பட்டு அந்த மனிதனைத் தாக்கிற்று. இப்போ பிரயாணியைக் காப்பாற்ற யாருமில்லை: கர்த்தராகிய இயேசுகிஸ்துவோ நம்மை மீட்கும்படி மரித்தது மாத்திரமல்ல மூன்றும் நாள் உயிரோடெழுந்து ஜீவிக்கும் இரட்சகராயிருக்கிறார். தம்மை விசுவாசிப்பவர்களை பாவத்திலிருந்து மாத்திரமல்ல, ஏற்படும் எல்லா சத்துருக்கள், நோய், துன்பம், துக்கம், ஆபத்திலிருந்தும், பாவத்திலிருந்தும் கடைசிமட்டும் காக்க இதோ இயேசு கிறிஸ்து உயிரோடிருக்கிறார், இதுதான் உயிர்த்தெழுந்த [Easter] பண்டிகை எபி. 7:25. நீ இயேசுவை விசுவாசி; அவர் இரட்சகராவார்; புதிய எருசலேமுக்குள் வா.



"....அவர் தாமே தமது சரீரத்திலே நம்முடைய பாவங்களைச் சிலுவையின் மேல் சுமந்தார்; அவருடைய தழும்புகளால் குணமானீர்கள்" 1 பேதுரு 2:24.





# புதிய எருசலேம் சபையின் ஊழியர் மாநாடு.

கர்த்தருக்கு ஸ்தோத்திரம். 10-5 1995 முதல் 19-5-1995 முடிய புதிய எருசலேம் சபையின் ஊழியர் மாநாடு கொடைக்கானல் B. L. SHED ஆலயத்தில் நடைபெற இருக்கிறது. இதற்காக யாவரும் ஜெபிக்கவும், உதவி செய்யவும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் கேட்டுக் கொள்ளுகிறோம்.

கிறிஸ்துவுக்குள்.

Chif Pastor **N. LAZAR**

## அறிவிப்புகள்

1 முழு இரவு விழிப்பு ஜெபம்
16 [வியாழன்] மார்ச் 1995
17 [திங்கள்] ஏப்ரல் 1995
15 [திங்கள்] மே 1995

2 புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
ஆண்டு சந்தா Rs 15-00
வெளிநாடு Rs 100-00

அனுப்ப வேண்டிய முகவரி :
CHIEF PASTOR N. LAZAR
"NEW JERUSALEM CHURCH"
CHURCH LANE, TILAK NAGAR,
DARGA ROAD, BHANDUP.
BOMBAY-400 078 INDIA.

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.

4 பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.

5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter]. எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 131 - MAY/JUNE 95



## "புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்களே விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்."

- மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

பாவம் பெருகிப்போன உலகத்தில் இருக்கிறோம். கொஞ்சம் குறைய சத்துருவானவன் பரிசுத்த ஸ்தலத்தை குலேச்சலாக்கிப் போட்டான், தீட்டுப்படுத்திப் போட்டான் என்று எழுதியிருக்கிறபடி இன்றைக்கு சத்துருவினுடைய வேலைகள் காணப்படுகிறது. இதன் மத்தியில் தேவ ஜனங்கள் தைரியமாயிருந்து கிறிஸ்து இயேசுவிலுள்ள விசுவாசத்தினால் பூரணப்படவேண்டும். எல்லாவற்றையும் எல்லாவற்றாலும் நிரப்புகிறவருடைய சரீரமான சபையை இறைவனாகிய இயேசு தம்முடைய பரிபூரணத்தினால் நிரப்ப எப்பொழுதும் ஆயத்தமாயிருக்கிறார்.

அவர் இந்த பூலோகத்தில் இருந்தபொழுது தேவத்துவத்தின் பரிபூரணமெல்லாம் சரீரபிரகாரமாய் அவருக்குள் வாசமாயிருந்தது. அதாவது தேவன் பரிபூரணமாய் அவரில் இறங்கி தங்கியிருந்தார். அவ்விதமாக கர்த்தராகிய இயேசுகிறிஸ்து திருச்சபையை தம்முடைய பரிபூரணத்தினால் நிறப்புகிறார். ஒவ்வொரு மனிதனும் பரிபூரணமடைய வேண்டுமென்றல்ல, திருச்சபை பரிபூரணமடைந்து கிறிஸ்துவின் நிறைவான வளர்ச்சியை பெற்றுக் கொள்ளும். இந்த விசுவாசத்தினால் நாம் பூரணப்படுவோம். ஆகையால் தேவ ஜனங்கள் திருச்சபையின் ஐக்கியத்தை எப்பொழுதும் காத்துக்கொள்ள வேண்டும். எல்லாவற்றையும் எல்லாவற்றாலும் நிரப்புகிறவருடைய நிறைவான சரீரமான சபை என்று எழுதியிருக்கிறபடியால் எல்லாவற்றையும் எல்லாவற்றாலும் நிரப்புகிறவர் சபையையும் நிரப்புவார்! இயேசுவின் நாமத்தில் ஆமென்.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

[CHIEF PASTOR N. LAZAR]

# திருச்சபை (தொடர்ச்சி)

கிறிஸ்தவர்கள் மனத்தாழ்மையோடும், சாந்தத்தோடும் வாழ ஒப்புக் கொள்ள வேண்டும் (எபே. 4:2; 3:12). மனத்தாழ்மை யோடு நடந்து கொள்ள வேண்டுமென்றால் நம்மைத் தாழ்மையாகவும் மற்றவர்களை நம்மைவிட உயர்வாகவும் கொள்ள வேண்டும் (பிலி. 2:2-8). நாம் இவ்வாறு நடந்து கொள்ளுங்கால் பிரிவினையை உண்டாக்கி அதனை நீடிக்க வைக்கும் இரண்டு காரியங்கள் நம்மை விட்டு நீங்க வேண்டியதாகும்.

1. தற்பெருமை பேசுதல், பெருமிதங் கொள்ளுதல், தன்னைத்தான் மேன்மைப் படுத்தல்.

2. கடவுளின் திருவசனத்திற்கு மேலே மனிதனுடைய கருத்துக்களை வைத்தல் போன்றவை.

நாம் சாந்தத்தோடு நடந்து கொள்ள வேண்டுமென்றால் பெருமையுள்ளவர்கள் தாழ்மையாக நடந்து கொள்ளவியலாது. கோபாவேசமான பண்புள்ளவர்களால் சாந்தமாக நடந்து கொள்ள இயலாது. நாம் சாந்தத்தோடு நடந்து கொள்ளவேண்டுமென்றால் கனிவுடையவர்களாக இருக்க வேண்டும். உணர்ச்சிவசப்படுகிறவர்களாக அல்லது கோபாவேசமான பண்புள்ளவர்களாக இருக்கக் கூடாது (மத் 5:5; கலா. 5:22,23).

கிறிஸ்தவர்கள் நீடிய பொறுமையுடன் வாழ்வதற்கு ஒருமனப்பட்டு ஒப்புக் கொள்ள வேண்டும் (எபே. 4:2).

நாம் நீடிய பொறுமையுடன் நடந்து கொண்டால் அமைதியாக இருப்போம்; உணர்ச்சியைப் புண்படுத்தமாட்டோம் அல்லது நமது உணர்ச்சிகள் புண்படுவதற்கு இடம் கொடுக்க மாட்டோம். எளிதில் கோபப்பட மாட்டோம் அல்லது எரிச்சலடைய மாட்டோம். நாம் பொறுமையிழக்க மாட்டோம். மற்றவர்கள் உணர்ச்சிகள், கருத்துக்கள் குறித்து ஆதரவுடன் எண்ணிப் பார்ப்போம். கிறிஸ்தவ ஒற்றுமைக்கு நீடிய பொறுமை இன்றியமையாதது.

கிறிஸ்தவர்கள் அன்பினால் ஒருவரையொருவர் தாங்க வேண்டும். அல்லது பொறுத்துக் கொள்ள வேண்டும் (எபே. 4:2).

பொறுத்துக் கொள்ளுதல் என்பதற்கு செயல்படாமல் இருத்தல் என்று என்றர்த்தமாம். நாம் அன்பினாலே ஒருவரையொருவர் தாங்கிப் பொறுத்துக் கொள்ளுகிறோம்.

அன்பு சீஷத்துவத்திற்கு அடையாளச் சின்னமாகும் [யோவா. 13:34,35; 1 யோவா 4:7-12]. நாம் சகோதரர்களில் அன்பு கூர்ந்தால் வெறுப்பு, பொறாமை, வீண் பேச்சு, பயனற்றவைகளில் குறை கூறுதல் ஆகியவற்றிலிருந்து நாம் நம்மை விலக்கிக் கொள்வோம். இவற்றின் விளைவான செயல்கள் பிரிவினையை உண்டாக்கி நீடிக்க வைக்கும்.

நாம் ஒருவரையொருவர் தாங்குதல் [பொறுத்துக் கொள்ளுதல்] உண்டு என்றால் சிறிது சகித்துக் கொள்ள வேண்டும். கடவுளுடைய வசனத்துக்கு கீழ்ப்படியாமையை சகித்துக் கொள்ள இயலாது. நமது சொந்தக் கருத்துக்களை, அபிப்பிராயங்களை விட்டுக்கொடுத்து சமரசமாக்கிக் கொள்ளலாம். அபிப்பிராய பேதங்களில் சிலர் தங்கள் சொந்தவழியைக் கட்டாயப்படுத்துவார்கள் அல்லது அவர்கள் விலகிச் செல்வார்கள். ஒருவரையொருவர் அன்பிலே தாங்கிப் பொறுத்துக் கொள்ளுதல் கிறிஸ்தவ ஒற்றுமைக்கு இன்னொரு இன்றியமையாத பண்பாகும்.

கிறிஸ்தவர்கள் சமாதானக் கட்டினால் ஆவியின் ஒருமையைக் காத்துக் கொள்வதற்கு உடன்பட வேண்டும் [எபே. 4·2].

நாம் சமாதானத்தை நோக்கி, இடைவிடா முயற்சியுடன் செயல்பட வேண்டும். சமாதானம் அடைவதற்கு ஏதுவாக நாம் தொடர்ந்து உறுதி தளராமல் நாம் நம்மைப் பயன்படுத்த வேண்டும். ஒரே ஆவியை, பரிசுத்த ஆவியைப் பெற்றிருக்கிறவர்கள் இடையிலே கட்டாயம் ஒற்றுமை இருக்க வேண்டும். அவிசுவாசிகளுடன் ஒற்றுமையாக இருக்கவியலாது. உண்மையான ஒற்றுமை சமாதானத்தைத் தரும்.

சமாதானம் இல்லை என்றால் அந்த ஒற்றுமை வெளிப்புறமானதேயல்லாமல் ஆவியின் ஒற்றுமையாக இருக்க இயலாது. சமாதானக் கட்டினாலே ஆவியின் ஒருமையைக் காத்துக் கொள்ளாதவர்களுடன் கிறிஸ்தவர்கள் ஒற்றுமைப்பட இயலாது.

திருச்சபையின் போதனையில் ஒற்றுமை ஏற்படுவதற்கு முன்னால் அதனுடைய வாழ்க்கையில் ஒற்றுமை இருக்கவேண்டும்.

நமக்கு உடனொத்த மனிதர்களுடன் நாம் கடவுளின் திருமுன்னிலையில் சீர்ப்படுத்திக்கொண்டு, அதன் பின்வர் கிறிஸ்தவ வழியிலே கிறிஸ்தவ ஒற்றுமைக்காக நாம் வேண்டுகோள் விடுக்க வேண்டும்.

போதனையின் ஒற்றுமைக்கு வாழ்க்கையின் ஒற்றுமை இன்றியமையாதது. நாம் எல்லோரும் ஆவியின் வாழ்வு வாழ்ந்து ஒருவரில் ஒருவர் அன்பு கூர்ந்து நடப்போமானால் நாம் ஒற்றுமையாக இருக்க விரும்புவோம். விசுவாசிகள் ஒன்றுசேர்ந்து வாழ்வதற்கு விரும்பி, கடவுள் அருளிச் செய்துள்ள நிபந்தனைகளை ஏற்றுக்கொண்டு அதன்படி வாழும் அளவுக்கு கடவுளில் அன்பு கூர்ந்தால் கிறிஸ்தவ ஒற்றுமை உண்டாகும்.

ஆவியின் ஒற்றுமையாக இருப்போமானால் அது போதனையில் ஒற்றுமையையும், சமாதானத்தையும் உண்டாக்கும். ஆவியின் வாழ்விற்காகவும், அன்பிற்காகவும் நாம் பணிபுரிய வேண்டும்.

போதனைப் பற்றிய காரியங்களில் திருச்சபை ஒற்றுமைப்பட வேண்டும்

[தொடரும்]

...''இதற்கென்றே நீங்கள் ஒரே சரீரமாக அழைக்கப்பட்டீர்கள்...'' [கொலோ. 3:15].

---

## மனிதனும் பாவமும்

[தொடர்ச்சி]

ஏனெனில் கடவுளுக்குள் நாம் அனைவரும் பிழைக்கிறோம், அசைகிறோம், இருக்கிறோம் (அப். 17:28). ஆனால் பாவத்தின் விளைவாக மனிதனுக்கு கடவுளோடுள்ள சம்பந்தம் ஐக்கிய நிலையிலிருந்து பகை நிலை எய்துமாறு சீர்குலைக்கப்பட்டுள்ளது. அருட்தீர்ப்பான நிலை ஆக்கினைத் தீர்ப்பின நிலையாக மாற்றப்பட்டுள்ளது. அன்பு கோபத்தின் உருவெடுக்கின்றது. மனிதனுக்கும், கடவுளுக்கும் உள்ள உறவு சம்பந்தப்பட்ட ஒவ்வொன்றும் சீர்குலைந்து நேர்மாறாக மாறுகின்றது. கடவுள் ஒருவரே பரிசுத்தர். அவர் பாவத்துக்கும், தீமைக்கும் முற்றிலும் எதிராக உள்ளவர். கடவுளைப் பற்றி திருமறை படம், இது மிகவும் தெளிவாக தீட்டப்பட்டுள்ள அம்சங்களில் ஒன்றாகும்.

கர்த்தர் என்னும் உங்கள் கடவுளாகிய நான் பரிசுத்தர், ஆகையால் நீங்களும் பரிசுத்தராயிருக்க வேண்டும் (லேவி. 19:2). சேனைகளின் கர்த்தர் நியாயத்தீர்ப்பினால் உயர்ந்திருப்பார். பரிசுத்த கடவுள் நீதியினால் பரிசுத்தராய் விளங்குவார் [ஏசா. 5:16]. புதிய ஏற்பாடும் கடவுளுடைய பரிசுத்தத்தை நீதியாக வலியுறுத்துகிறது. வேதபாரகர், பரிசேயர் என்பவர்களின் நீதியிலும் உங்கள் நீதி அதிகமாயிராவிட்டால் நீங்கள் பரலோக இராஜ்ஜியத்தில் பிரவேசிப்பதேயில்லை என்று உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆகையால் பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதா பூரண சற்குணராயிருக்கிறதுபோல நீங்களும் பூரண சற்குணராயிருங்கள் என்றார் இயேசு மத். 5:20,48. அப்போஸ்தலர்களின் எழுத்துக்களிலும் இவைகளைக் காணுகிறோம்.

மனிதனுடைய இயல்பே கடவுளுடைய தூய்மையை மறந்துவிட தயாராக இருக்கின்றது. கடவுளது தூய்மைக்கு தகுந்த முக்கியத்துவம் கொடுக்காது போனதே இஸ்ரவேலர்களுக்கு கேடாய் முடிந்தது. நம்மில் ஒவ்வொருவரும் அவர் அதைப் போன்ற அவ்வளவு பயங்கரமானவர் அல்ல என எண்ணத் துணிகின்றோம். இதனால் நம்மையே ஏமாற்றிக் கொள்ளுகின்றோம். கடவுள் ஒருவரே பரிசுத்தர். அவர் பாவத்திற்கும், தீமைக்கும் முற்றிலும் எதிரானவர் கடவுளோடு உள்ள நமது உறவு சீர்குலையுமாயின் அது தவிர்க்கமுடியாதவாறு அவரது ஆக்கினையை நம்மீது கொண்டுவரும். நாம் விளங்கிக் கொள்வதற்கோ, அல்லது பொருத்தமான சமயத்தில் விளக்குவதற்கோ முடியாத பயங்கரமானதொரு உண்மையாகும் இது

ஜீவனுள்ள கடவுளின் கைகளில் விழுவது பயங்கரமாகும் (எபி. 10:31). சில வேளைகளில் கடவுள் பாவத்தை வெறுக்கிறார், ஆனால் பாவியை நேசிக்கிறார் என்று சொல்லுவது உண்டு. சிலர் அவ்விதம் சொல்லுகிறார்கள். கடவுள் தமது அன்பினால் எப்பொழுதும் பாவியைத் தேடிக் கொண்டிருக்கிறார். அவனை சரிப்படுத்தி தம்மோடு செம்மையான உறவில் மீண்டும் கொண்டு வந்து சேர்க்கும் பொருட்டு அவனை அறைகூவி அழைக்கிறார் என்கிற உண்மையை அறிவிக்கும் அளவுக்கு மட்டும் அந்த கூற்றில் உண்மை உள்ளது. ஆனால் மறுபுறத்தில் இக்கூற்று பாவிக்கும், பாவத்துக்கும் இடையே வேறுபாட்டினை காண்கிறது. அது செல்லுபடியாவது அன்று.

பாவியில்லாமல் பாவம் இல்லை. பாவம் ஒரு பொருளன்று. மனிதன் ஒருவனே பாவம் செய்கிறான். அவன் தனது இயல்பையும், தீமையும், அவமானமுமான செயல்களின் மூலமாக வெளிப்படுத்துகிறான். கண்டிப்பாக சொல்ல வேண்டுமாயின் பாவமான பொருட்களோ, செயல்களோ கிடையாது. பாவமான சிந்தனைகள் தான் உள்ளது. இறுதியாக பாவம் சிந்தையின் கொடுமையிலும் பாவத் தன்மையிலும் உள்ளது. எனவே இதனால் பாவி அவனது பாவத்தோடு சேர்த்துத்தான் கூறப்படவேண்டுமென்பது தெரியவருகிறது. நான் நானே தான் [மனிதன்] பாவியாக கடவுளது உக்கிர கோபத்திற்கும், சினத்திற்கும் ஆக்கினைக்கும் ஆளாகின்றேன். இந்த நிலைமாற்றப்பட்டு கடவுளோடு உறவு சரிபடுத்தப்படாவிடின் அது நிச்சயமாகவே முடிவு நித்திய ஆக்கினைக்கும் கொண்டு சேர்க்கும்.

பாவமும் பாடும்:-

கடவுளுக்கு விரோதமாக தீர்மானித்ததின் மூலமாக மனிதன் கடவுளின் திருவுளச் சித்தத்தையும், நோக்கத்தையும் முறியடிப்பதுமன்றி அந்நோக்கத்தை நிறைவேற்றுமாறு உழைக்கவும் அண்டத்தின் ஆந்தல்களையெல்லாம் தனக்கு விரோதமாக்கிக் கொள்கிறான். இது பாடுகள் விளைவிப்பதைத் தவிர்க்க முடியாது. கடவுள் தாது முழு பயை ப்பிளையும் பாவம் பாடு

களை விளைவிக்கக் கூடிய நிலையில்தான் அமைத்துள்ளார். ஆகவே பாவத்துக்கும் பாடுகளுக்கும் தொடர்பு உள்ளது. சில வேளைகளில் தொடர்பு நேரடியாகவும் தெளிவாய்ப் பார்க்கக் கூடியதாயிருக்கின்றன. எடுத்துக்காட்டாக:

ஒழுக்கக் கேடான வாழ்க்கை உடலில் நோயை ஒடுபடுத்துகின்றது; அல்லது சொகுசும், களங்கமுமான வாழ்வை ஒரு மனிதனுக்கும் அவனுடைய குடும்பத்துக்கும் வறுமையை வருவிக்கின்றது. ஆனால் இத்தொடர்பு எப்பொழுதுமே மேற்கூறியதைப் போன்று நேரிடையாகவும், தெளிவாகவும் தெரிவதில்லை. நல்லார்களும், நேர்மையானவர்களும் பாடு அநுபவித்துக் கொண்டிருக்க, கடவுளற்ற கயவர்கள் நன்றாயிருப்பதை நாம் காண்கிறோம். இது ஒரு பெரும் பிரச்சனையாக எழும்புகிறது. இதற்கு மறைவான மேம்பாடுகளையும் காரணங்களாக காட்டித் தப்பித்துக் கொள்ள முடியாது. சரியான அறிவுடையவன் எவனோ அவனே ஒப்புக்கொள்ளான். இதுவே யோபுவின் பிரச்சனையாயிருந்தது.

ஓர் இந்துவுக்கு கருமக்கோட்பாட்டில், இதைப் பற்றித் தெளிவான ஒரு விடையைக் கண்டுபிடித்துக் கொள்ளுகிறான். அது ஆச்சரியமல்ல. கருமத்தினால் மனிதனுக்கு பாடுகள் உண்டாகிறது என்று கருமக் கோட்பாடு சொல்லுகிறது. ஆனபடியினால் ஒரு மனிதன் மேல் கருமம் ஆதிக்கம் செலுத்துகிறது. அவன் தன்னை விட மிஞ்சியும் வறுமை கொண்ட ஒரு சக்தியின் பிடியில் இருக்கிறான். அச்சக்தி அவனை சொந்த விருப்பங்களைக் கவனியாது நினைவுக் கெட்டாத பழங்காலத்தின் பாரத்தை நீக்கும் வேலை செய்து கொண்டிருக்கிறது என்று கருமக் கொட்பாடு போதிக்கிறது. கருமக் கோட்பாட்டின் மற்றொரு விரும்பத்தகாத விளைவு யாதெனில், அது குறுகியதும், தன்னயமுள்ளதுமான தற்பெருமைக் கொள்கையை வளர்த்துவிட ஏதுவாகின்றது என்பதே.

[தொடரும்]



"பாவத்தின் சம்பளம் மரணம்..." [ரோமர் 6:23].



# பெண்கள்

[தொடர்சசி]

புண்ணியம் நமக்கு புகழாயிருப்பது போல பாவமும் நமக்குப் பகையாயிருக்கிறது. பாவம் பாம்பினும் கொடியது. பாவம் செய்கிறவர்கள் மனநிலையிலும், சரீரநிலையிலும் பாதிக்கப்படுகிறார்கள். தேவ பயமில்லாமல் துணிகரமாக பாவ கிரியைகளைச் செய்கிற அநேகர் உலகத்தில் காணப்படுகிறார்கள். தேவனுக்குப் பயந்திருக்க வேண்டும். மனிதனுக்கு ஆசை உண்டாவது இயற்கையே. ஆசையை மனிதன் அடக்க வேண்டும். அதினால் அவன் இறைவனுக்குப் பிரீதியானவனாக மாறலாம். இறைவன் எங்குமிருந்து நம்முடைய சகல கிரியைகளையும் கவனித்துக்கொண்டிருக்கிறார். ஒரு அற்ப மனிதன் நம்முடனே கூட இருந்தால் அவன் முன்பாக துன்மார்க்கம் செய்யாமல் சர்வ சாக்கிரதையாயிருக்கிறோம். தேவாதி தேவனும், அரசருக்கரசரும், அகண்ட பரிபூரணமாய் எங்கும் நிறைந்திருப்பதாகிய கடவுள் எப்பொழு

தார் நம்மோடு கூட இருப்பதை அறியாமல் நாம் பிரபஞ்சமாகிய மாயாசமுத்திரத்தில் மதி மயங்கி பல பாவங்களைச் செய்வதா? கூடாது.

சிலர் கடவுள் இல்லை என்று சொல்லுகிறார்கள். ஒரு கனவான் ஒரு பழத்தை கையில் எடுத்துக் கொண்டு ஒரு சிறு பாலகனைக் கூப்பிட்டு கடவுளிருக்கிற இடத்தை சொன்னால் உனக்கு ஒரு பழத்தைத் தருவேன் என்று சொல்ல, அந்த பையன் கடவுள் இல்லாத இடத்தை நீர் சொன்னீரானால் உமக்கு இரண்டு பழங்களைத் தருவேன் என்று பிரதியுத்தரம் சொன்னனாம். அது போல கடவுள் இல்லாத இடமில்லை. கடவுளுக்கு மறைவான சிருஷ்டியுமில்லை.

ஸ்திரீகளுக்கு பதிவிரதா தர்மத்தைப் படிப்பிக்க வேண்டும். இந்த விஷயத்தைக் குறித்து நீதிநூல்களிலேயும், பெண்மதிநூலையிலும், இன்னும் பல நூல்களிலேயும் எழுதப்பட்டிருக்கிறது. ஆதி மனுஷர் பாவம் செய்யாமல் பரிசுத்தராயிருக்கும் பொழுதே கடவுள் அவர்களுக்கு கலியாணத்தை நியமித்தார். உலகத்தில் நடக்கிற சகல காரியத்திலேயும் கலியாணம் சர்வ சிரேஷ்டமாயிருக்கிறது. இதனால் தான் உலகத்தில் ஜனசங்கம் விருத்தியாகும் பொருட்டு ஒருவருக்கொருவர் உதவியாயிருக்கும் பொருட்டு, ஆதியில் இறைவன் ஆணையும், பெண்ணையும் உண்டுபண்ணி தம்முடைய திருகையால் அவர்களுக்கு விவாகம் முடித்து வைத்தார்.

ஸ்திரீயும், புருஷனும் ஒரே தேகமானதால் அவர்கள் ஒருவரை ஒருவர் அதிக பிரியமாய் நேசிக்க வேண்டுமென்றும் வேதம் கட்டளையிடுகின்றது. வேதவாக்கியத்தின்படி புருஷனுடைய பூரண பட்சத்திற்கு பத்தினியும், பத்தினியினுடைய பூரண பட்சத்திற்குப் பர்த்தாவும் பாத்தியஸ்தராயிருக்கிறார்கள். பர்த்தாவை மனப்பூர்வமாக நேசிப்பதோடுகூட அவனுடைய சொற்படி கீழ்ப்படிந்து நடக்கவும் ஸ்திரீ விசேஷமாய் பாத்தியப்பட்டிருக்கிறாள். ஆயினும் புருஷனை தெய்வமாய்ப் பாவிக்க வேண்டுமென்கிற இந்த, இந்து தேசத்தாருடைய கொள்கை கேவலம் அசந்தர்ப்பமாய் இருக்கிறது. கடவுள் நம்முடைய ஆண்டவர். நாம் அடிமை, அவர் இறைவனவர்; நாம் ஊழியக்காரர்கள்; அவர் சிருஷ்டிக் கர்த்தா; நாம் சிருஷ்டி. அவர் சிருஷ்டி ஸ்திதி, சம்காரம் யாவற்றையும் நடத்துகிறவராக இருக்கிறார். நாம் அவரால் நடத்தப்படுகிறவர்களாயிருக்கிறோம்.

நாம் அவரால் ஆட்டப்படுகிற சூத்திர பொம்மைகள். இப்படிப்பட்ட கடவுளுக்கு சமானமாக புருஷனைப் பாவிக்கவேண்டுமென்கிற விதியானது பொல்லாத தேவதூஷணையாயிருக்கிறது. பின்னும் இந்த கொள்கையானது சகல பொருள்களுக்கும் மேலாக இருதயப்பூர்வமாகக் கடவுளை நேசிக்க வேண்டுமென்கிற வேதவாக்கியத்திற்கும் விரோதமாகும். தெய்வ பக்திக்குப் பின்பு புருஷ பக்தி விசேஷமென்பதும், ஸ்திரீகளுக்கு சகல பாந்தியங்களிலும் புருஷ பாந்தியம் அதிஉத்தம சிரேஷ்டம் என்பதும் சரியே. இதற்கு திருஷ்டாந்தரமாக கலியாணமான உடனே ஸ்திரீயானவள் தன் தாய், தந்தை, சகோதர, சகோதரி முதலானவர்களையும், பிற ஆதாரங்களையும் விட்டு விட்டு புருஷனுக்கும் அவனுடைய திரவியங்களுக்கும் உரியவளாவதே போதுமான சாட்சியாயிருக்கிறது. ஆகையால் பர்த்தாவினிடத்தில் பரிபூரண நேசம் வைக்கவேண்டியது பத்தினியினுடைய மாறுத கடமையாயிருக்கிறது. பர்த்தாவுக்கு கீழ்ப்படிந்து அவனுடைய இஷ்டப்படி நடக்கிற பத்தினிக்கு சர்வ ஆசீர்வாதமும் சித்திக்கும் என்பது சத்தியமே.

உலகம் ஒன்றைக் கொடுத்து மற்றொன்றை வாங்குகிற வர்த்தகர்களுக்குச் சமானமாயிருப்பதால், நமக்கு மரியாதை

வேண்டுமானல், நாம் மரியாதை கொடுத்து மரியாதை வாங்க வேண்டும். நமக்கு ஒரு வரிடத்தில் பிரியம் வேண்டுமானல் நாம் பிரியத்தைக் கொடுத்து பிரியத்தை வாங்க வேண்டும். ஒரு ஸ்திரீ புருஷனிடத்தில் எவ்வளவு விசுவாசம் வைக்கிறர்களோ அவ்வளவு விசுவாசம் புருஷனிடத்திலிருந்து அவளுக்குக் கிடைக்கும்.

கிரமமான சகல விஷயங்களிலும் புருஷனுடைய இஷ்டபிரகாரம் பெண்சாதி நடந்தால் அவளுடைய இஷ்டபிரகாரம் புருஷனும் நடப்பான். ஆகையால் குடும்பத்துக்கு புருஷனே எஜமானனயிருந்தால் அவனுக்குப் பிரியமாய் நடக்கிற பெண்சாதியின் சொற்படி புருஷன் கேட்பானனால், அப்படிப்பட்ட பெண்சாதி ஒரு பட்சத்தில் புருஷனுக்கு எஜமானியாகிறள்.

(தொடரும்)

"தெய்வப் பயத்தோடே ஒருவருக்கொருவர் கீழ்ப்படிந்திருங்கள்" [எபே. 5:21].

# தேவனைத் தேடுங்கள்

தேவனைத் தேடுகிற உணர்வுள்ளவர்கள் உண்டோ? என்று கர்த்தர் நம்மை நோக்கிப் பார்க்கிறர். ஆனல், அவர் கண்டது என்ன? ஆ! எல்லாரும் வழிவிலகி ஏகமாய்க் கெட்டுப் போனர்கள் என்பதே (சங் 14:2,3). ஆதியில், முதலாம் மனிதன் ஆதாம் தேவ கட்டளையை மீறினர். பாவம் செய்தார்; தேவன் வந்து உலாவும் ஏதேன் தோட்டத்தை விட்டுத் துரத்தப்பட்டார். அன்று முதல், மனிதர்கள் தேவ சத்தத்தை விட்டு விலகி, தங்களுக்கு செம்மையாய்த் தோன்றும் வழிகளில் நடந்து வந்தார்கள். அதன் முடிவு மரணவழிகள் என்று வேதம் சொல்லுகிறது (நீதி. 16:25). தேவன் வேளாவேளைகளில் தம்முடைய மனிதர்கள் (தீர்க்கதரிசிகள்) மூலம் தம்முடைய திருவுளம் இன்னதென்று வெளிப்படுத்தி வந்தார். ஆனலும், ஜனங்களோ தேவவார்த்தையைக் கேட்கமாட்டோம் என்று தங்களுடைய இருதயங்களைக் கடினப்படுத்திக் கொண்டார்கள்.

இன்றைய நாட்களிலும், மக்களுக்கு தேவனைத் தேடுகிறதில் வாஞ்சை இல்லை. பள்ளிப்படிப்பு முடிந்த மாணவர்கள் மேற்படிப்பைத் தேடுகிறர்கள். அது முடிந்த பின்னர், நல்ல வேலையைத் தேடுகிறர்கள். தொடர்ந்து பொருளைத் தேடுகிறர்கள். புகழைத் தேடுகிறர்கள். பின்பு வசதி படைத்த இடத்தில் தங்களுக்கு வாழ்க்கைத் துணையைத் தேடுகிறர்கள். தங்கள் பிள்ளைகளுக்குச் சேர்த்துவைக்கும்படி மென்மேலும் பொருளைத் தேடுகிறர்கள். மனிதன் படும் பிரயாசம் எல்லாம் அவன் வாய்க்காகத்தானே, அவன் மனதுக்கோ திருப்தியில்லை பிரச. 6:7 என்று காண்கிறேம். "திரைகடல் ஓடியும் திரவியம் தேடு", என்றேர் பழமொழி உண்டு.

அதன்படி மனிதர்கள் இந்நாட்களில் தாங்கள் செய்கிற வேலை நல்லதோ, கெட்டதோ, குறைந்த காலத்தில் அதிக சொத்துக்களைச் சம்பாதிக்க பிரயாசப்படுகிறர்கள்.

"ஒருவனுக்கு எவ்வளவு திரளான ஆஸ்தி இருந்தாலும் அது அவனுக்கு ஜீவனல்ல." அவன் தேவனைத் தேட வேண்டும். இல்லையென்றால், தேவன் இன்றைக்கு அவனுடைய ஆத்துமாவை எடுத்துக் கொண்டால், அவன் சேகரித்து வைத்த பொருளினால் அவனுக்கு என்ன லாபம்? லூக். 12:15,20. அவன் மரிக்கும்போது ஒன்றும் கொண்டு போவதில்லை. அவன் மகிமை அவனைப் பின்பற்றி செல்வதில்லை. அவன் மிருகத்தைப் போல் செத்து பாதாளத்தில் போய் சேருவான் (சங். 49:17,14). பின்பு நித்திய அழிவில் பங்கடைவான்.

அப்படியானால் நாம் எதைத் தேட வேண்டும்? யாரைத் தேட வேண்டும்? என்று அறிந்து கொள்வது மிகவும் அவசியம். ஆம். நாம் ஜீவனைத் தேடவேண்டும்; அதை நமக்கு அருளக்கூடியவரான தேவனைத் தேட வேண்டும். இயேசுகிறிஸ்துவே மெய்யான தேவனும், நித்திய ஜீவனுமாயிருக்கிறார் (1 யோவா. 5:20). என்னைத் தேடுங்கள். அப்பொழுது கண்டடைவீர்கள் என்று இயேசுநாதர் சொல்லுகிறார் [மத். 7:7].

ஒரு பட்டணத்தில் திருவிழா ஒன்று கோலாகலமாக நடந்து கொண்டிருந்தது. அக்கம்பக்கத்திலுள்ள கிராமங்களிலிருந்து மக்கள் திரள்திரளாய் அங்கு வந்து குழுமியிருந்தார்கள். அந்தக் கூட்டத்தில், ராஜன் என்பவர் தனது ஆறுவயது மகனுடன் சென்றுகொண்டிருந்தார். அச்சிறுவன் அங்காங்கே காணப்படுகிற காட்சிகளை வேடிக்கை பார்த்துக் கொண்டே சென்றான். திருவிழா கூட்டத்தில் திடீரென்று வெடிச்சத்தம் கேட்டதும் மக்கள் வெள்ளம் சிதறியது. தன்னுடைய தந்தையின் கையை விட்டுப் பிரிந்தான். நேரம் சென்று கொண்டிருந்தது. பிள்ளையைக் காணாத தந்தையுள்ளம் துடிதுடித்தது. சிறுவனும் தந்தையைக் காணமுடியாமல் அழுதான். அழுதுகொண்டே தனது தந்தையைத் தேடினான். இருவரும் ஒருவரையொருவர் தேடினார்கள். இறுதியில் சிறுவன், கூட்டத்தை விட்டுச்சற்று தொலைவில் தனது தந்தையைக் கண்டுபிடித்தான். அந்தச் சிறுவனுடைய இருதயம் அப்பொழுது எவ்வளவு சந்தோஷப்பட்டிருக்கும் என்று நினைத்துப் பாருங்கள். நாம் தேவனை எவ்வளவாய் தேடுகிறோம்? நாம் தேடி தம்மைக் கண்டுபிடிக்கக் கூடும் என்று அவர் [தேவன்] தம்மை மறைத்துக் கொள்பவரல்ல. நாம் அவரைக் தேடுவதைக் காட்டிலும், அவர் நம்மைத் தேடுகிறார்.

தேவனைக் குறித்து நாம் வேதத்தில் வாசிப்பது என்னவென்றால்: அவர் பரிசுத்தர், பாவம் செய்யாதவர், தீமையை நோக்கிப் பார்க்காதவர், பாவத்தை வெறுப்பவர், ஆனால் பாவியைத் தேடுகிறார். நம்முடைய அக்கிரமங்களே நாம் தேவனைத் காணக் கூடாதபடிக்கு அவருடைய முகத்தை நமக்கு மறைக்கிறது (ஏசா. 59:2). எனவே நாம் நம்முடைய பொல்லாத கிரியைகளை [வழிகளை] விட்டுவிட்டு தேவனிடம் மனந்திரும்ப வேண்டும். அப்பொழுது நாம் நம்முடைய முழு இருதயத்தோடும் தேவனைத் தேடினால் தேவனைத் கண்டடைவோம். (எரே. 29:13).

கர்த்தரைத் தேடுகிறவர்களின் இருதயம் வாழும், அது மகிழும் என்று வேதத்தில் எழுதப்பட்டிருக்கிறது (சங். 69:32; 105:3). ஆபிரகாம் போன்ற பரிசுத்தவான்கள் அதிகாலையில் தேவனைத் தேடினார்கள், கண்டு களிகூர்ந்தார்கள். வெள்ளியைப் போல் நாடி, புதையல்களைத் தேடுகிறதுபோல் தேடுவோமாகில் அப்பொழுது நாம் மெய் தேவனைக் கண்டடைவோம் [நீதி. 2:4,5].

"உம்மைத் தேடுகிற அனைவரும் உமக்குள் மகிழ்ந்து சந்தோஷப்படுவார்களாக....." [சங். 40:16].

# கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்

பெரியவர் S. அருளாநந்து [வயது 81] அவர்கள் 22.3.1995 புதன் காலை 9 மணிக்கு கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்கள் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். அவர்களுடைய பிரிவால் துக்கத்திலிருக்கிற குடும்பத்தாருக்கு இயேசுவின் நாமத்தில் ஆறுதல் சொல்லுகிறோம். இயேசுவின் வருகையில் அவரை சந்திப்போம். தேவசமாதானம் உங்கள் இருதயங்களை ஆளக்கடவது.

# கிறிஸ்தவ மார்க்கம் [தொடர்ச்சி]

தாவீது ஒரு தீர்க்கதரிசி; அதே சமயம் இஸ்ரவேலில் இராஜாவாக இருந்தார். [அப். 2:30; 13:36]. தானியேலும் ஒரு தீர்க்கதரிசி; அதே சமயம் பிரதம மந்திரியாகவும் இருந்தார் (தானி. 2:16-48). சபையில் ஊழியம் செய்கிறவர்கள், ஜெபம் பண்ணுவதிலும், வேதத்தைப் போதிப்பதிலும் உறுதியாய்த் தரித்திருக்க வேண்டும் (அப். 6:4). தேவனுடைய ஊழியக்காரனை தீமோத்தேயுக்கு பவுல் அப்போஸ்தலன் நிருபம் எழுதும் போது இவ்வாறு சொன்னார். "நீயும் இயேசுகிறிஸ்துவுக்கு நல்ல போர்ச் சேவகனாய் தீங்கநுபவி. தண்டில் சேவகம் பண்ணுகிற எவனும் தன்னை சேவகம் பண்ணிக்கொண்டவனுக்கு ஏற்றவனாய் இருக்கும்படி பிழைப்புக்கடுத்த அலுவல்களில் சிக்கிக் கொள்ளமாட்டான்" (2 தீமோ 2:3,4).

ஆகவே ஊழியர் முழு நேரமும் தேவனுடைய ஊழியத்தில் தரித்திருக்க வேண்டும். சமயம் வாய்த்தாலும், சமயம் வாய்க்காவிட்டாலும் அவன் வேதாகமத்தைப் போதிப்பதில் உறுதியாய் தரித்திருக்க வேண்டும் [2 தீமோ. 4:2]. இயேசுகிறிஸ்து இடைவிடாது உபதேசத்திலும், வியாதியஸ்தரை குணப்படுத்துவதிலும், பிசாசுகளை துரத்துவதிலும், ஜெபம்பண்ணுவதிலும் தரித்திருந்தார். இதே ஊழியத்தை தமது ஊழியர்களுக்கும் கொடுத்திருக்கிறார். ஆனால் அப்போஸ்தலனாகிய பவுல் புறஜாதிகளின் மத்தியில் ஊழியம் செய்யும்போது அவருடைய கைத் தொழிலைச் செய்தார் [அப். 18:1-3]. மற்ற அப்போஸ்தலர்கள் அவ்வாறு செய்யவில்லை.

அப். பேதுரு தன் படகையும் வலையையும் விட்டு அவர் பின்னால் சென்றது போல செபெதேயுவின் புத்திரரும் செய்தார்கள். ஆயக்காரனான லேவி ஊழியத்திற்கு இறங்கியபின் [மத்தேயு] வரிவசூலிக்கிற வேலை செய்ததாக வேதத்தில் இல்லை [லூக். 5:27, 28]. வைத்திய வேலை செய்து கொண்டிருந்த லூக்கா ஊழியத்துக்கு இறங்கியபின் அப்போஸ்தலனாகிய பவுலுக்கு உதவியாக ஊழியத்தில் இருந்தார். அவசியப்படுகிற மருத்துவ உதவியும் செய்து வந்தார் என்று அறியலாம் கொலோ. 4:17.

ஆனபடியினால் ஊழியர்கள் முழு நேரமாய் இருப்பது நல்லது. கர்த்தருடைய கட்டளையில்லாமல் முழு நேர ஊழியத்துக்கு இறங்குவது சரியில்லை. ஊழியம் செய்ய விரும்புகிறவர்கள் ஊழியத்திலும் தரித்திருக்கக்கடவன் என்பதுபோல அவர்கள் ஊழியத்திற்கு இறங்கும் பொழுதே ஊழியம் செய்ய தீர்மானித்து ஊழியம் செய்ய இறங்கவேண்டும். பகுதி நேர ஊழியர் என்றால் பகுதி நேர ஊழியக்காரராக தங்களுடைய வாழ்நாளைக் கழிக்க திட்டமிட்டுள்ளார்களா என்ன என்பதை தெளிவாக முடிவு செய்ய வேண்டும். அவர்கள் விசுவாசிகளாகவேயிருந்து தங்களாயான ஊழியம் செய்யலாம். ஊழியத்தில் உதவி செய்யலாம். இந்தக் காரியமாய் இறை சித்தம் அறிந்து செயல்படவும்.

பழைய ஏற்பாட்டின் ஒரு கோத்திரத்தை ஊழியத்திற்காகப்பிரித்தெடுத்துஊழியத்தில் பிரதிஷ்டை செய்தார்கள். அவர்கள் முழு நேரமும் ஊழியம் செய்ய வேண்டும். ஊழியம் ஆசரிப்பு கூடாரத்தின் உள்ளேயும் வெளியே (காவலும்) யும் இருந்தது. முழு நேரமாக ஊழியம் செய்வதே ஒழுங்கு பகுதி நேர ஊழியர்களாக சிலர் அழைக்கப்படலாம். ஆனால் ஏற்றக் காலத்தில் அவர்கள் முழுநேர ஊழியத்தில் இறங்கிவிடுவதே [illegible]ர்.

### *ஊழியர்களுக்கு ஆஸ்தியிருக்கலாமா?*

முதலாம் நூற்றாண்டில் எருசலேமில் உள்ளவர்கள் தங்கள் ஆஸ்திகளை எல்லாம் விற்று ஊழியத்துக்கு கொடுத்தார்கள். ஊழியக்காரர்கள் மாத்திரமல்ல விசுவாசிகளும் அப்படியே செய்தார்கள் [அப். 2:44,45]. இதற்கு ஓர் இரகசியம் உண்டு. என்னவென்றால், இவை யாவும் அழிந்து போகும் என்று இயேசு சொல்லியிருந்தார். எனவே அவர்கள் இவ்வாறு செய்தார்கள். விசுவாசிகள் எல்லாரும் ஆஸ்திகளை விற்றார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறதேயன்றி ஊழியக்காரர்கள் மாத்திரம் விற்றார்கள் என்று இல்லை. அது மாத்திரம் அல்ல, எருசலேமிலுள்ள விசுவாசிகள் மாத்திரமே அப்படிச் செய்தார்கள். வேறு எந்த இடத்திலும் இவ்வாறு ஆஸ்திகளை விற்றதாக காணப்படவில்லை. யோவானுக்குச் சொந்தமான வீடு இருந்ததாகவும், அந்த வீட்டில் இயேசுவின் தாயை சேர்த்துக் கொண்டார் என்றும் அறிகிறோம் [யோ. 19:27]. ஐசுவரியனாகிய பிலேமோன் ஒரு ஊழியக்காரனாக இருந்தார். ஏனென்றால் அவனுடைய வேலைக்காரனை ஒநேசிமுவைக் குறித்து பவுல் எழுதியிருக்கிறார் [பிலே 1,2,14.15].

உலகத்தில் ஒன்றும் இல்லாமல் தேவனுக்கு ஊழியம் செய்ய வேண்டும் என்று ஒருவனைக் குறித்து தேவனுக்கு நோக்கம் இருக்குமானால் அவன் அவ்வாறு செய்ய வேண்டும். தேவ சித்தம் இல்லாமல் ஏதாவது செய்வோமானால் தொடர்ந்து துக்கப்பட வேண்டியதாகும்.

### *ஊழியர்கள் பணம் சம்பாதிக்கலாமா? விவாகம் பண்ணலாமா?*

ஊழியர்கள் ஒருக்காலும் பணம் சம்பாதிக்க கூடாது. பவுல் அநேக வருஷம் ஊழியம் செய்த பிறகும் அவருக்கு சில புஸ்தகங்களும், போர்வைகளும் அல்லாமல் வேறொன்றும் இல்லை (2 தீமோ. 4:13): அது மாத்திரமல்ல, அவர் சிறையிலிருந்து வெளியே வரும்போது தங்குவதற்கு ஓர் இடம் ஆயத்தப்படுத்த வேண்டுமென்று பிலேமோனுக்கு எழுதியிருக்கிறபடியால் அவருக்கு சொந்தவீடு இல்லையென்று விளங்குகிறது. உண்மையான தேவ அழைப்பு கிடைத்தவர்கள் எல்லாவற்றையும் விட்டுவிட்டு தேவனுடைய ஊழியத்தை செய்தால் அதுவே சரி.

தேவனுடைய ஊழியத்தில் இறங்கிய பிறகு ஊழியத்தின் மூலம் கிடைக்கும் பணத்தை சேர்த்து வைப்பது மிகவும் தவறு. பழைய ஏற்பாடு ஊழியனான கேயாசி காணிக்கையைக் கொண்டு சம்பாத்தியம் பண்ணியதால் அவனுக்கு குஷ்டரோகம் பிடித்தது உண்மையானால் (2 இரா. 5:26,27), திருடன் திருடவும், பூச்சியும், துருவும் கெடுக்கக் கூடியதுமான பொக்கிஷத்தை சேர்த்து வைப்பது கூடாது எனக்கட்டளையிட்டவரும், தலைசாய்க்க இடம் இல்லாதவருமாகிய இயேசுகிறிஸ்துவின் ஊழியர்கள் அதாவது புதிய ஏற்பாட்டின் ஊழியர்கள், தேவனுடைய பிள்ளைகள் கொடுக்கும் காணிக்கையைக் கொண்டு ஆஸ்திகளை சேர்ப்பது எவ்வளவு பெரிய பாவம்.

அப்போஸ்தலரின் உடன் ஊழியக்காரனான தேமா என்பவன் பொருளாசை பிடித்தவனாய் ஊழியத்தை விட்டு போய் விட்டான் என்று பவுல் சொல்லுகிறார் [2 தீமோ 4:10]. பண ஆசை எல்லா

### பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| M. பெஞ்சமின் | J. எலிசபெத் | வள்ளியூர் | 24-5-95 |

சிமைக்கும் வேரய் இருக்கிறது (1தீமோ. 6:10). தன் தகப்பனையும், தாயையும், மனைவியையும், பிள்ளைகளையும், சகோதரனையும், சகோதரியையும் தன் ஜீவனையும் வெறுக்காவிட்டால் எனக்கு சீஷனாய் இருக்கமாட்டான் (லூக். 14:26) என்று இயேசுவானவர் சொன்னார்.

இந்த வசனத்தின் மேல் சிலர் ஊழியக்காரர்கள் விவாகம் பண்ணக் கூடாது என்றும், விவாகம் பண்ணினாலோ அவர்களை விட்டு பிரிந்திருக்க வேண்டுமென்றும் சொல்லுகிறார்கள். முதலாவது இயேசுநாதர் இந்த உபதேசத்தை ஊழியர்களுக்கு மாத்திரம் கொடுத்தாரா அல்லது வேறு பொதுவான உபதேசமா என்று கவனிப்போம்.

அநேக ஜனங்கள் அவரோடே பிரயாணமாய்ப் போகையில் அவர்களிடமாய் திரும்பிப் பார்த்து சொன்னார் லூக். 14:24,25 என்று காண்கிறபடியால் இது ஊழியர்களுக்கு மாத்திரம் கொடுக்கப்பட்ட உபதேசம் அல்லவென்று விளங்குகின்றது. இந்த உபதேசத்தின், எழுத்தின்படி நடப்போமானால் தாயையும், தகப்பனையும், மனைவியையும், பிள்ளைகளையும் விட வேண்டும். இயேசுவானவர் சொந்த தாயை கைவிடவில்லை. சிலுவையில் வைத்து யோவான் கையில் தன் தாயை ஒப்புக் கொடுத்தார் [யோவா. 19:27]. பேதுரு தன் மனைவியை கைவிட வில்லை, தன் ஊழியத்துக்கு சென்ற எல்லா இடங்களிலேயும் தன் மனைவியை கூட்டிக் கொண்டு போனார். எல்லா அப்போஸ்தலர்களும் அவரவருடைய மனைவியை விடவில்லை என்று பவுல் சொல்லுகிறார் (1 கொரி. 9:4,5).

பவுல் அப்போஸ்தலன் பேதுருவின் மனைவியை சகோதரி என்று சொல்லுகிறபடியால் பேதுருவுக்கு மனைவியாய் இருக்கவில்லை சகோதரியாய் இருந்தாள் என்று சிலர் சொல்லுகிறார்கள். அது சரியல்ல பவுலுக்கு அவள் சகோதரி, பேதுருவுக்கோ அவள் மனைவி. விவாகம் எல்லாருக்கும் கனமான தென்றும் வேதம் சொல்லுகிறது போல் அது ஊழியர்களுக்கும் கனமானதே [எபி. 13:4]. பிலிப்புடைய நான்கு பெண் பிள்ளைகளும் பிலிப்போடு கூட தங்கினார்கள். பிலிப்பு தன் பிள்ளைகளைவிட வில்லை [அப். 21:8,9]. அப்படியானால் இயேசுவானவர் சொன்னதினுடைய அர்த்தம் என்ன? இயேசுவை பார்க்கிலும் ஒன்றையும் அதிகமாக நேசிக்கக் கூடாது என்பதே [மத். 10:37].

பரிசுத்தராகிய தேவன் பாவம் அறியாத காலத்தில் ஆதாம், ஏவாளுக்கு விவாகம் நடத்திக் கொடுத்தார். கானாவூர் கலியாண வீட்டில் இயேசுகிறிஸ்து போய் குறைவாய் இருந்ததை நிறைவாக்கி கொடுத்தார். அந்த விவாகத்தை தேவன் ஆசீர்வதித்தார். ஆகையால் விவாகம் அசுத்தமானது அல்ல. பரிசுத்தவானாகிய ஏனோக்கு என்ற தீர்க்கதரிசி தேவனோடு சஞ்சரித்து குமாரர்களையும், குமாரத்திகளையும் பெற்றான் [ஆதி. 5:21,22]. தேவனோடு சஞ்சரித்த ஏனோக்குக்கு பிள்ளைகள் உண்டானது பரிசுத்தத்துக்கும், தேவனுடைய ஐக்கியத்துக்கும் தடையில்லாமல் இருந்தது.

விவாகம் எல்லாருக்கும் கனமானது என்று பவுல் சொல்லுகிறார் (எபே. 13:4) மேலும் மகாபரிசுத்த ஸ்தலத்துக்குள் பிரவேசித்து தேவனோடு நேரடியாய் பேசினவர்களாகிய பிரதான ஆசாரியர்கள் விவாகம் பண்ணினவர்களாய் இருந்தார்கள். தேவனோடு நேரடியாய் பேசிய மோசே, சாமுவேல் முதலிய பக்தர்கள் விவாகம்பண்ணியவர்களே. சபையின் பாஸ்டருடைய தகுதிகளை குறித்து சொல்லுகிறபோது அவன் ஒரே மனைவியுடைய புருஷனும் சொந்த குடும்பத்தை நன்றாய் நடத்துகிறவனாய் இருக்க வேண்டுமென்றும், சொந்த குடும்பத்தை நடத்த முடியாதவன் சபையை நடத்த முடியாது என்றும் பவுல் அப்போஸ்

(3 ம் பக்க தொடர்ச்சி)

பீஹாரில் 1994 ஆம் ஆண்டில் நிகழ்ந்த பூமியதிர்ச்சியைப் பற்றி முக்கியமானதொரு சம்பவத்தைப் பண்டிதர் ஏ. ஜி. அப்பாசாமி கூறுகின்றார். அப்பொழுது ஆயிரக்கணக்கான மக்கள் விடிமுந்தோரும், உதவியற்றோர்களுமானார்கள். கல்கத்தாவிலுள்ள கிறிஸ்தவக் கண்காணியார் கல்லூரியிலிருந்து சில மாணவர்கள் அம்மக்களுக்கு உதவியளிக்கும்படி சென்றிருந்தார்கள். இவர்களைப் பார்த்த சில வைதீக இந்துக்கள் அவர்கள் தங்கள் கருமத்தின் பயனாக பாடு அநுபவிக்கின்றனர்.

நாம் என் இவர்களுக்கு உதவி செய்ய வேண்டுமென்று கேட்டார்கள். ஆம். இந்து மத கருமகோட்பாடு இவ்விதமாக இருக்கிறது. ஒவ்வொரு மனிதனும் மற்றவர்களது கருமத்துக்கும், தனது சொந்த கருமத்துக்கும் ஒரு பிரதிநிதியாக இருக்கிறான். ஒவ்வொரு மனிதனும் மற்றவர்களது கருமத்துக்கும், தனது சொந்த கருமத்துக்கும் ஒரு பிரதிநிதியாக இருக்கிறோம். நாம் ஒருவனுக்கு உதவி செய்ய கூடுமாயின் அவன் அவதியுறுவதற்குக் காரணமாயுள்ள கருமம் தீர்ந்து விட்டது என்பதற்கும் நாம் அவனுக்கு உதவியளிப்பதற்கு அவனது கருமத்தின் பிரதிநிதி என்பதும் சான்றாகிறது. நாம் கருமத்தைப் போக்குவதற்காக உதவி செய்ய மறுத்தால், நாம் நமது தீய கருமத்தைத் தேடிக் கொண்டு வருங்காலத்தில் நமக்குக் கிடைக்க வேண்டிய உதவியைத் தடுத்துக் கொள்ளுகிறோம்.

அந்த உதவி செய்வதால் நற்கருமத்தைச் செய்து, அதனால் தனக்கு வருங்காலத்தில் நேரும் இன்னலுக்கு உதவி கிடைக்கும் உறுதியை உண்டாக்கிக் கொள்ளுகிறான் என்று இந்து தர்மம் போதிக்கிறது. தற்காலத்தில் இவ்விளக்கத்திலுள்ள குறைகள் உடனே தெளிவாகின்றன. அயலானுக்கு உதவியளிக்கிறவன் தன் சொந்தக் கருமத்தைப் பற்றித் தான் அக்கறைப்படுகிறான். அவன் அவதியுறுவதற்குத் துணை புரிந்தால் தனக்குத் தானே நல்ல கருமத்தை சம்பாதிக்கிறான். அவ்வாறு செய்யாவிடில் தனக்குக் தீய கருமத்தைக் கட்டுகிறான். இவ்வண்ணமாய்க் கருமப்பயன் நம்பிக்கை, ப்ரோபகாரம் வேரிலிருந்தே தன்னயமாக வளர்ச்சி அடைகிறது.

இப்பொது நலப் பண்பே இப்படியிருக்குமாயின் மற்றவர்களைப் பற்றி நாம் வேறு என்ன சொல்ல முடியும். சமுதாய ஊக்கத்தினின்று இத்தகையதொரு கருத்து சமூக உணர்ச்சி ஒழுக்கத்தையும் ஒழித்து விடுகின்றது. மேலும் மற்றவர்களுக்குத் துணைபுரிவதால் நாம் அவர்களது கருமத்தை எவ்விதத்திலும் போக்க முடியாதே. நாம் ஏற்கனவே தீர்மானிக்கப்பட்ட ஊழ்வினையின் பிரதிநிதிகளே. இவ்வாறு கருமப் பயன், நம்பிக்கை தன்னயமற்ற செயலாற்றலுள்ள அன்பின் நரம்பினையே அறுத்து விடுகிறது. ஏனெனில் அப்பேர்ப்பட்ட அன்பின் தன்மையாதெனில் மற்றவர்களின் விதியை மாற்றுவதற்கு தன்னிலுள்ள ஆள்தத்துவம் முழுவதையும் அதில் சிறிதேனும் ஒதுக்கி வைக்காமல் காணப்படுகிறது.
கருமக் கோட்பாட்டின் பிரகாரம் பார்த்தால், பிறருக்கு நன்மை செய்கிறதினால் தனக்கு நன்மை உண்டாக்கிக் கொள்ளுகிற நோக்கத்தோடே செய்கிறார்கள். கிறிஸ்தவத்திலுடைய அடிப்படையே மேலாகும். கிறிஸ்தவத்திலுடைய அடிப்படை கருமப் பலனை சார்ந்தது அல்ல, இறைவன் மக்களைப் பாவத்தினின்று விடுவித்து அவர்கள் நற்கிரியை செய்ய பக்தி வைராக்கியமுடையவர்களாய் நல்லெண்ணத்தை உண்டாக்குகிறார். [தீத். 2:14].

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து லூக். 10 ஆம் அதிகாரத்தில் நல்ல சமாரியன் கதை சொன்னார். சொல்லி

முடிவிலே கேட்டால் கள்ளனிடத்தில் அகப்பட்டவனுக்கு யார் உறவினன் என்று கேட்டார். பதில் சொன்னவன், அவனுக்கு உதவி செய்தவனே என்றான். உதவி செய்தவன் அந்நிய ஜாதியானாயிருந்தான். கள்ளர் கையில் அகப்பட்டவன் ஒருயூதனாக இருந்தான். ஆனபடியினால் உதவி யாருக்குத் தேவைப்படுகிறதோ அவர்களுக்கு உதவி செய். உதவி தேவைப்படுகிறவர்களெல்லாம் உன்னுடைய சகோதரர்கள் தான் என்று இயேசுகிறிஸ்து போதித்தார். அதின் மூலமாய் கிறிஸ்தவ நற்கிரியை ஆரம்பமாயிற்று. உதவி தேவைப்படுகிறவர்களுக் கெல்லாம் உதவி செய்து நற்கிரியை செய்கிறார்கள்.

கருமப் பயன் விரும்புவோர் தேவனுகிய நீதியைப் பாதுகாக்க முடியாது அவர்களுடைய செயல் தங்களுக்குப் பரிசு கிடைக்குமென்று நம்புகிறார்கள். இந்த சம்பலத்தில் நாம் பின்பற்றி முடிகிற பாவத்திற்கும், துன்பத்திற்குமிடையே மிக நெருங்கிய தொடர்புள்ளது என்பதில் ஐயமில்லை. பாவம் சீக்கிரத்திலோ, சில காலம் சென்றோ துன்பத்தை விளைவிக்கும். ஐக்கியத்திற்கு என படைக்கப்பட்ட போதிலும், தன்னலம், பெருமை, பகை ஆகியவற்றில் தவறாய்ப் பயன்படுத்தப்படும் உலகில் அது வேறுவிதமாய் இருக்க முடியாது.

பாவம் என்பது பாவிக்கு கடவுளோடு உள்ள நல்லுறவை சீர்குலைக்கின்ற நிலையாதலால் அது அவன் மீதே அதின் விளைவுகளைக் கொண்டு வரும். உங்கள் பாவங்கள் உங்களைத் தொடர்ந்து பிடிக்கும் [எண். 32:33]. கடவுள் தம்மைப் பரியாசம் பண்ண வொட்டார். மனிதன் எதை விதைக்கிறானோ அதையே அறுப்பான். இது திருமறை போதனை.

---

## "தேவனுக்கு மகிமை"
## அறிவித்தபடி

புதிய எருசலேம் சபையின் ஊழியர் மாநாடு 10-5-1995 புதன் முதல் 20-5-1995 காலை 3 மணிவரை மிக வெற்றியாகவும், ஆசீர்வாதமாகவும் நடந்தேறி முடிந்தது. திருச்சபை தெளிவு பெற்றது. தேவ இரகசியங்கள் வெளியாயின. தேவனுடைய கிருபை அதிகமாயிருந்தது. தேவனே முன்னின்று ஊழியர் மாநாட்டை நிறைவு படுத்தித் தந்தார். ஜெபித்த, உதவிய எல்லோருக்கும் நன்றி.

**Chief Pastor N. LAZAR**

**BOMBAY 78.**

# வேத பாடம்

[தொடர்ச்சி]

## எண்ணாகமம்

### எண். 23:1-5

பிலேயாம் பாலாக்கை நோக்கி, நீர் இங்கே எனக்கு ஏழு பலிபீடங்களைக் கட்டி ஏழு காளைகளையும், ஏழு ஆட்டுக்கடாக்களையும் இங்கே எனக்கு ஆயத்தப்படுத்தும் என்றான். இது உயர்ந்த மேடாக இருந்தது. பிலேயாமின் கட்டளைப்படியே பாலாக் ஏழு பீடங்களையும் கட்டி, அதற்குரிய பலி மிருகங்களையும் ஆயத்தப்படுத்தினான். ஒவ்வொரு பலிபீடத்தின் மேலும் ஒவ்வொரு காளையையும், ஒவ்வொரு ஆட்டுக்கடாவையும், பிலேயாமும், மோவாபின் அரசனான பாலாக்கும், அவனுடைய பிரபுக்களும் பலியிட்டார்கள். பிலேயாம் பாலாக்கை நோக்கி, நீர் இங்கே உம்முடைய சர்வாங்க தகன பலியண்டையில் நில்லும்; நான் போய் வருகிறேன்; கர்த்தர் வந்து என்னைச் சந்திக்கிறதாயிருக்கும்; அவர் எனக்கு வெளிப்படுத்துவதை உமக்கு அறிவிப்பேன் என்றான்.

இதன் மூலமாய் நாம் அறிகிறது என்னவென்றால், இறைவனுக்கு பலியிடுகிற முறை, இறைவனோடு தொடர்பு எடுக்கவும் பிலேயாம் அறிந்திருந்தான் என்று நாம் அறிகிறோம். பலியினாலன்றி இறைவனண்டை சேரமுடியாது. மனிதன் இறைவனோடுள்ள ஐக்கியத்தை இழந்த பின்பு பலியின் மூலமாய் மாத்திரம் இறைவனண்டை சேரும் வழியை தேவன் திறந்திருந்தார். இந்தப் பிரகாரம் பலிமுறைகளை பிலேயாம் நன்றாய் அறிந்திருந்தான். தேவனோடு தொடர்பு எடுக்கும் முறையை பிலேயாம் நன்றாய் அறிந்திருந்தான். பிலேயாம் ஈசாக்கின் குமாரனாகிய ஏசாவின் சந்ததியான் என்று அறிகிறோம் [ஆதி. 36:31,32]. ஏசாவுக்கு ஏதோம் என்ற ஒரு பெயரும் உண்டு (ஆதி. 25:30). பிலேயாம் நல்ல தீர்க்கதரிசியாய்த்தான் இருந்தான். பின்னால் பொருளாசையில் சாய்ந்து பணத்திற்காக அவன் குறி சொல்ல ஆரம்பித்து விட்டான். அதினிமித்தம் குறி சொல்லுகிறவனாகிய பிலேயாம் என்று வேதத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது [யோசு. 13:22; 2 பேது. 2:15,16; யூதா 11; வெளி. 2:14].

அநேக நல்ல ஊழியர்கள், நல்ல ஆரம்பத்தை உடையவர்களாயிருந்து, பின்பு பொருளாசையில் சாய்ந்து, அசுத்த ஆவியினால் ஆட்கொள்ளப்பட்டு, தேவனுடைய திட்டம், தீர்மானத்திற்கு விரோதமாய் ஊழியம் செய்து, குறி சொல்லி விழுந்து போகிறார்கள். பிலேயாமின் சரித்திரம் நமக்கு ஒரு நல்ல எச்சரிப்பாக எழுதப்பட்டுள்ளது.

### எண். 23:6-10

### இஸ்ரவேலைப் பற்றி பிலேயாமின் முதலாவது தீர்க்கதரிசனம்:

பாலாக்குக்கு அறிவித்ததாவது:- தேவன் பிலேயாமைச் சந்தித்து அவன் வாயிலே வாக்கருளினார் [எண். 23:5]. தேவன் தன்னைச் சந்தித்த இடத்திலிருந்து பிலேயாம் திரும்பி வந்து, பாலாக்கைச் சந்தித்துச் சொன்னதாவது, கிழக்கு மலைகளாகிய

ஆராமிலிருந்து மோவாபின் ராஜா, பாலாக் என்னை வரவழைத்து, நீ வந்து எனக்காக யாக்கோபைச் சபிக்க வேண்டும், இஸ்ரவேலை வெறுத்துவிட வேண்டும் என்று சொன்னான். தேவன் சபிக்காதவனை நான் சபிப்பதெப்படி; கர்த்தர் வெறுக்காதவனை நான் வெறுப்பது எப்படி?

கர்த்தருடைய ஆசீர்வாதம் நம் தலையின் மேல் இருக்கும்போது நம்மை யாரும் சபிக்கவோ, வெறுத்து ஒதுக்கவோ முடியாது நாம் திருச்சபையில் ஐக்கியமுடையவர்களாய் இறைவனுடைய ஐக்கியத்தில் நாம் சரியாக இருக்கும்போது, தேவனுடைய திருக்கரங்கள் நம் தலையின் மேல் வைக்கப்பட்டு ஆசீர்வதிக்கப்பட்டிருக்கிறோம். கர்த்தர் சீயோனிலிருந்து, திருச்சபையிலிருந்து உன்னை ஆசீர்வதிக்கிறார் (சங். 128:5; 134:3). எருசலேமிலிருந்து கர்த்தர் உன்னை ஆசீர்வதிக்கிறார். வழியிலே வருகிற, போகிற பிரசங்கிகளோ, பின் மாற்றக்காரனோ, விழுந்து போன ஊழியக்காரனோ உன்னை ஆசீர்வதிக்க முடியாது. நீ திருச்சபை ஐக்கியத்திலிருந்தால் திருச்சபையின் ஊழியர்கள் தான் உன்னை ஆசீர்வதிக்க முடியும்; அது ஆசீர்வாதமாயும் இருக்கும். கர்த்தருடைய ஆசீர்வாத உங்களுக்கு உண்டாவதாக. கர்த்தரின் நாமத்தினால் உங்களை ஆசீர்வதிக்கிறோம் என்று வழிப்போக்கர் சொல்வதுமில்லை [சங். 129:8]. உடைமையை உடையவனே ஆசீர்வதிப்பான் (ரூத் 2:4).

மனிதனுக்கு தேவ ஆசீர்வாதம் பிரசங்கபீடத்திலிருந்து பிரசங்கியார் பிரசங்கிக்கும் போது, தேவ அருள் மக்கள் மேல் இறங்கி வருகிறது. கர்த்தர் ஆசீர்வதிக்கிறார். சிலர் ரேடியோவில் ஆராதனை செய்துவிட்டால் போதுமென்று வீட்டில் இருக்கிறவர்கள் உண்டு. சிலர் பிரசங்க பத்திரிக்கைகளைப் படித்துவிட்டால் போதுமென்று நினைக்கிறவர்களும், எழுதுகிறவர்களும் உண்டு. தவறான வழிகாட்டிகளால், மக்கள் தவறான வழி திருப்பப்படுகிறார்கள். உண்மையான திருச்சபையில் போய் தேவனை ஆராதித்து தேவ அருள் பெறுகிறதும் ஐக்கியத்தை அநுபவிக்கிறதும், தேவனை ஆராதித்து மகிமைப்படுத்துகிறதுமான சிலாக்கியத்தை ரேடியோப் பிரசங்கங்களோ, பிரசங்க பத்திரிக்கைகளோ கொடுக்காது என்பதை தேவ ஜனங்கள் மறந்து விடக்கூடாது. தேவன் சபிக்காதவனை சபிப்பது எப்படி? கர்த்தர் வெறுக்காதவனை நான் வெறுப்பது எப்படி [எண். 23:8] என்றான் பிலேயாம்.

[தொடரும்]

"கர்த்தர் உன்னை ஆசீர்வதித்து, உன்னைக் காக்கக்கடவர்" (எண். 6:24).

"தேவனைத் தேடு"
**"SEEK GOD"**

**Regd. No. 040089/84**
**Postal Regd. No MH BY NE-84/84**
**Tamil Monthly Magazine**

# சோதனை
# (Temptation) பரீட்சை

**1. கடவுள் மனிதரைச் சோதிக்கிறாரென்பது**

அவர்களுடைய விசுவாசம், அன்பு, வணக்க முதலியவைகள் மற்றவர்கள் முன்பாக வெளிப்படும்படி அவர் மனிதர்களைப் பரீட்சை பார்க்கிறாரென்பதே [ஆதி. 22:1]. தேவன் பரிசுத்தமுள்ளவராகையால் மனிதர்கள் பாவம் செய்யும்படி அவர்களை சோதிக்கமாட்டார் (யாக். 1:13).

2. **சாத்தான்:-** நம்மை சோதிக்கிறானென்பது சாத்தானின் வழியில் நாம் கெட்ட சிந்தனையடைந்து வேதப்பிரமாணங்களைப் பகைத்து சுயேச்சையாய் நடந்து பாவத்தைச் செய்கிறதே சாத்தானின் சோதனையாம் [லூக் 8:13; யாக். 1:2 12; மத். 6:13].

---

## அறிவிப்புகள்

1. **முழு இரவு விழிப்பு ஜெபம்**
   12 [திங்கள்] ஜூன் 1995
   12 [புதன்] ஜூலை 1995
   10 [வியாழன்] ஆகஸ்ட் 1995
2. **புதிய எருசலேம் செய்தி பத்திரிகை**
   **ஆண்டு சந்தா Rs 15-00**
   **வெளிநாடு Rs. 100-00**

   அனுப்ப வேண்டிய முகவரி :
   **CHIEF PASTOR N. LAZAR**
   **"NEW JERUSALEM CHURCH"**
   **CHURCH LANE, TILAK NAGAR,**
   **DARGA ROAD, BHANDUP,**
   **BOMBAY-400 078 INDIA.**
3. **மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்**
4. **பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்**
5. **'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.**

**Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078 Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078**

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காள சத்தம் 132 - JULY 95



"புதிய எருசலேம் சபை"

[illegible]

[illegible]

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிகையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே . . .

# ஆசிரியர் உரை

இந்திய தேச மக்களுக்கு மெய் தேவனைப் பற்றிய அறிவே அதிகமாய்த் தேவை. அதில்லாததால் பொய்யும், புரட்டும், மிரட்டும், லஞ்சமும், கொலையும், வஞ்சம்தீர்த்தலும், கற்பழிப்புகளும், காமவிகார நடவடிக்கைகளும் மலிந்து கிடக்கின்றன. படிப்போ, நாகரீகமோ அல்ல பொய்மதாச்சாரமே மக்களை ஆளுகின்றது. தங்கள் குற்றத்தை மறைக்க எவ்வநியாயமும் செய்ய மக்கள் தயங்குவதில்லை. தங்களுக்கு எதிராய், இடையூறாய் இருப்பவர்களை ஒழித்துக்கட்டிவிட ஆள்பலத்தையும், அதிகாரப்பலத்தையும், பணப்பலத்தையும் உபயோகிக்கிறார்கள். காரணம் தேவபயமில்லை. தாங்கள் வணங்குகிறது தெய்வங்கள் அல்லவென்று இழிவான இச்சைரோகங்களும், வஞ்சம்தீர்க்கும் குணமுடைய சில்லறை தெய்வங்கள் அவை என்று அவர்கள் அறிந்தேயிருக்கிறார்கள். நித்தியத்தைப் பற்றியோ, நியாயத்தீர்ப்பு ஒன்றுண்டு என்றே அறியாதிருக்கிறார்கள். தேவன் தப்பவிடார். மனிதன் அந்தரங்கமாய் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் நன்மையானாலும் தீமையானாலும் தேவன் நியாயத்திலே கொண்டுவருவார் [பிரச. 12:14]. சரீரத்தில் அவனவன் செய்த நன்மைக்கானாலும், தீமைக்கானாலும் தக்க பலனை அடையும்படி நாமெல்லாரும் கிறிஸ்துவின் நியாயாசனத்தின் முன் வரவேண்டும் (2 கொரி. 5:10).

மெய் தேவனையுடையவர்களே மனச்சாட்சியின்படி ஜீவிப்பார்கள். தேவனுக்குப் பயந்திருப்பார்கள். சாஸ்திரத்தின்படி ஜீவிப்பார்கள். மெய்தேவனைப் பற்றிய அறிவே மனிதனை மனிதனாக்கும். அவனை சமாதானத்தின் வழியாய் நடத்தும் முக்தியருளும் (பிறவிக்கடலைக் கடத்தலல்ல) ஒரே பிறவிதான். இப்பிறவியில் முழுமை அடைந்து முக்தி சேர்வதே மெய்மார்க்கம். அதுதான் இறைவனாம் இயேசுவின் மார்க்கம். இந்துக்கள் ஆளுகிறார்களா அவர்கள் இப்படித்தான் இருப்பார்கள். வேறு விதத்தில் இருக்க முடியாதே.

கிறிஸ்துவுக்குள,

[CHIEF PASTOR N. LAZAR]

[தொடர்ச்சி]

# கிறிஸ்தவ மார்க்கம்

## ஊழியர்களுக்குள்ள பெயர்

### அப்போஸ்தலன்:-

அப்போஸ்தலன் என்றால் அனுப்பப் பட்டவன் என்று அர்த்தம். தேவனால் திட்டமாய் அப்போஸ்தலனாய் அனுப்பப்படுகிறவர்களுண்டு. அவர்கள் அப்போஸ்தலர்கள். அவர்கள் பாஸ்டர்களாகவும், தீர்க்கதரிசிகளாகவும் காணப்படலாம். போதகர், கண்காணி, மூப்பன் [Elder, Overseer] அப். 20:28; பாஸ்டர் எபே. 4:11, அத்தியட்ஷர், பிஷப் என்று சொல்லப்படுகிறது பாஸ்டர் இவைகளெல்லாம் வெவ்வேறு ஊழியங்கள் என்று நினைக்கலாம். ஆனால் அவைகளெல்லாம் அவரவர்களுடைய ஊழியத்திற்குத்தக்கபடி அவர்களுடைய பெயர்கள் சொல்லப்படுகிறது. மற்றபடி எல்லாரும் மூப்பன் என்றாலும், பாஸ்டர் என்றாலும், அத்தியட்ஷர் என்றாலும் ஒன்றுபோல காணப்படும். மூப்பன் என்றால் கண்காணி என்றும் சொல்லப்பட்டுள்ளது. உதவிக்காரர்கள் என்று சொல்லப்படுகிறவர்கள் உதவி ஊழியர்களாக அழைத்து ஆயத்தப்படுகிறவர்கள் தீத். 1:5 முதல் வாசித்தோமென்றால் பாஸ்டர், மூப்பன் என்று சொல்லி 7வது வசனத்தில் கண்காணியானவன் என்று எழுதப்பட்டுள்ளது. ஆனால் இந்த இரண்டு உத்தியோகங்களும் ஒன்றே.

### சுவிசேஷ ஊழியம்:-

அப். 8:1-4; 11:18.19 எல்லோரும் சுவிசேஷ ஊழியம் செய்தார்கள். சுவிசேஷ ஊழியம் என்றோ, தீர்க்கதரிசி என்றோ தனி ஊழியம் கிடையாது. போதகர்களாயிருக்கிறவர்கள் தீர்க்கதரிசிகளாகவும், சுவிசேஷகர்களாகவும் காணப்படுகிறார்கள்.

### ஊழியத்திற்கு நியமனம் செய்தல்:-

ஊழியத்திற்கு சரியான அழைப்பு கிடைத்தவர்களுக்கே தேவனுடைய நடத்துதலின் பிரகாரம் அப்போஸ்தலர் கைவைத்து ஜெபித்து ஆசீர்வதிக்க வேண்டும். அப்போஸ்தலர் கை வைக்கிறதினால் ஒருவன் ஊழியக்காரனாவதில்லை. தேவனால் பிரித்தெடுக்கப்பட்டு பரிசுத்த ஆவியின் நடத்துதலின் பிரகாரம் அவன் ஊழியத்திற்காக அழைக்கப்பட்டவனென்று தெரிந்தால் உபவாசித்து ஜெபித்து தலையில் கை வைத்து ஜெபித்து அதிகாரமுள்ள ஊழியர்கள் நியமிக்க வேண்டும் [அப். 6:3-6; 13: 1-3; 1 தீமோ. 5:22].

### பிரித்தெடுத்த அனுபவம்:-

தேவனுடைய பரிசுத்தவான்கள் பிரித்தெடுத்த அனுபவத்தில் ஜீவிக்க வேண்டுமென்று தேவன் விரும்புகின்றார். ஆதியாகமம் முதல் வெளிப்படுத்தல் முடிய வாசிப்போமானால் பிரித்தெடுத்த அனுபவத்தில் ஜீவிக்கவேண்டும் என்பதே தேவ சித்தம் என்று அறியலாம்.

### பிரித்தெடுத்த ஜீவியத்தை 5 பாகங்களாக பிரிக்கலாம்:-

### 1. உலகத்திலிருந்து பிரித்தெடுக்கப்பட்ட ஜீவியம்.

உலக மக்களிலிருந்து நாம் பிரித்தெடுக்கப்பட்டவர்களாக நாம் ஜீவிக்கவேண்டும். உலக மக்கள் எப்படியும் பேசலாம், எதையும் செய்யலாம், எதையும் பார்க்கலாம். ஆனால் தேவனுடைய பிள்ளைகள் அப்படியல்ல. ஊழியர்கள் அதைவிட ஒருபடி அதிகமாக முன்னேறியிருக்க வேண்டும்.

அவர்களுக்கு ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பட்டமுண்டு. உலக மக்கள் பேசுகிறதுபோல பேசக்கூடாது. அவர்கள் செய்கிறபடி செய்யக்கூடாது, அவர்களைப் போல எல்லாவற்றையும் பார்க்கக்கூடாது (யோவா. 17:14-16; 2:15-17).

## 2. பாவத்திலிருந்து பிரிந்த ஜீவியம்.

நாம் பாவத்தை விட்டாலும் பாவம் நம்மை விடாது. ஆனால் நாம் ஒவ்வொரு நாளும் பாவத்திலிருந்து பிரிந்த ஜீவியத்தில் நடக்க வேண்டும். பாவத்திலிருந்து பிரித்தெடுத்த ஜீவியம் என்றால் நாம் எல்லா அசுத்தத்தையும் விட்டு ஜீவிக்க வேண்டும் என்பதே. இதைப்பற்றி நான்கு விதமாக அப்போஸ்தலர்கள் சொல்லுகிறார்கள். நாம் நான்கு விதமான பாவங்களை விட்டுவிட வேண்டும்.

a) பொருளாசை 1 தீமோ. 6:10,11.

b) விபச்சாரம் 1 கொரி. 6:18.

c) வாலிப பாவங்கள் 2 தீமோ. 2:22.

d) விக்கிரக ஆராதனை 1 கொரி. 10:14.

நம்மை சுற்றி நெருங்கி நிற்கிற எல்லா பாவங்களையும் விட்டு விலகி நாம் ஜீவிக்க வேண்டும் (எபி. 12:1). சின்ன பாவங்கள் என்று நினைத்து நாம் நம்முடைய பாவங்களை விடாமலிருக்கக் கூடாது (எபே. 5: 3-9; 4:25-31; கொலோ. 3:5,9).

இரட்சிப்பின் அனுபவத்திற்குள் வருமுன்பு நாம் பலவிதமான பாவங்களில் இருந்தோம். நாம் இரட்சிப்பின் அனுபவத்தைப் பெற்றவுடன் அவைகளை தேவன் மன்னித்தார். ஆனால் நம்முடைய சரீரம் மகிமையடையாமலிருக்கிறபடியால் நாம் பாவங்களிலிருந்து பிரித்தெடுத்த ஜீவியத்தைச் செய்யவேண்டும். பரிசுத்த ஆவியானவருடைய வல்லமையினாலும், கிறிஸ்துவோடு கூட ஐக்கியப்பட்ட ஜீவியத்தாலும் நாம் மாம்சத்தின் கிரியைகளை தினமும் ஜெயிக்கிறதினாலும் [மாம்சத்தின் கிரியைகளை நாம் அழிக்க முடியும்], தினமும் ஜெயிக்கிறதினாலும், தேவனை அறிகிற அறிவுக்கு விரோதமாய் எழும்பும் எல்லா மேட்டிமையும் நிர்மூலமாக்கிக்கியும் எந்த எண்ணத்தையும் கிறிஸ்துவுக்கு கீழ்ப்படிய சிறைபடுத்த வேண்டும் [கலா. 5:16,17; ரோம. 6:11; 1 கொரி. 9:27; 1 கொரி. 2:14,10,15,5; ரோம. 6:16,17].

## 3. அவிசுவாசிகளிலிருந்து பிரிந்த ஜீவியம் (2 கொரி. 6:16-18).

அவிசுவாசிகளிடமிருந்து நாம் பிரிந்து ஜீவிக்க வேண்டுமென்று தேவன் விரும்புகிறார். அவிசுவாசிகளிடமிருந்து பிரிந்து ஜீவிப்பதை மூன்றாய் பிரிக்கலாம்.

1. விசுவாசி அவிசுவாசியை விவாகம் பண்ணக்கூடாது. (உபா. 7:3; 1 கொரி. 7:39).

a) நம்முடைய பிதாக்கள் அப்படிச் செய்தார்கள் (ஆதி. 24:1-3; 26:34,38; 27:46; 28:1-9).

b) இஸ்ரவேல் தேவனை விட்டு பின்வாங்கினபோது தேவனுடைய தீர்க்கதரிசிகள் சபையை பரிசுத்தப் படுத்தின நாட்களில் முதலாவது அந்நிய ஜாதிகளிலிருந்து விவாகம் பண்ணினவர்களை அதிலிருந்து பிரித்தார்கள் (எஸ்றா.10:10,11; நெகே. 13:23-33). அப்படி அந்நிய ஜாதிகளில் தேவ ஜனங்கள் விவாகம் பண்ணினதால் தேவ தண்டனை வந்ததென்று வேதாகமம் நமக்கு கூறுகின்றது. லோத்து என்கிற நீதிமான் பிரித்தெடுத்த அனுபவம் இல்லாமல் சோதோமுக்குப் போன காரணத்தினால் அவனுக்கு குடும்ப வாழ்க்கை நஷ்டமாய் போய்விட்டது [ஆதி. 19:1-6].

சாலமோன் ராஜா போன்ற ஞானி இந்த உலகத்தில் பிறக்கவேயில்லை என்று கர்த்தர் சொன்னார். அவன் அந்நிய ஜாதி பெண்களை விவாகம் செய்தபடியால் சத்திய தேவனை விட்டு விலகி விக்கிரக ஆராதனை செய்கிறவனாய், அந்நிய தெய்வங்களை வணங்குகிறவனாய் மாறினான் (1 இரா. 11:1).

யோசபாத் என்கிற ராஜா ஆகாப்போடு சம்பந்தம் செய்ததினால் அவனுடைய குடும்பம் விக்கிரக ஆராதனை செய்தது (2 நாளா. 18:1; 2 இரா. 8:16-18). இஸ்ரவேல் புத்திரர் பிரித்தெடுத்த ஜீவியத்தில் ஜீவிக்காமல் போனதினால் ஒரே நாளில் 23,000 பேர் மரித்தார்கள் (1 கொரி. 10:23; எண். 25:1-9; வெளி. 2:14).

சிம்சோன் பிரித்தெடுத்த அனுபவத்தை விட்டு அவிசுவாசியை விவாகம் பண்ணினதினால், வேசியோடு தொடர்பாயிருந்தால் பரிசுத்த ஆவியானவர் அவனை விட்டு விட்டு போய்விட்டார். கண்பார்வையையும் இழந்தான் (நியாதி. 16:4,27).

[தொடரும்]

"பொல்லாங்காய்த் தோன்றுகிற எல்லாவற்றையும் விட்டு விலகுங்கள்" [1 தெச. 5:22].

# திருச்சபை (தொடர்ச்சி)

## திருச்சபையின் ஒழுங்கு

விசுவாசிகளுக்குள் ஒற்றுமை ஏற்படுவதற்கு முன்னால் ஒரு பொதுவான ஒழுங்கு முறை சட்டத்தை எல்லாரும் ஒப்புக் கொள்ள வேண்டும்.

மனித பாரம்பரியம் கற்பனைகளை ஒழுங்குமுறை சட்டமாக ஒப்புக் கொள்ளக் கூடாது. அது ஆவியின் ஏவுதலைப் பெறுதவையாகும். அவை தவறுதலுக்கும், திருத்தத்துக்கும் ஏதுவானவை. மனிதன் தவறக் கூடியவன். அவன் அதிகமாகப் பேசுகிறான். ஆகையால் மனித சட்டத்தைப் பயன்படுத்துவது பாவமாகும் [மத். 15:1-9; 1 கொரி. 4:6; கலா. 1:8,9; எபி. 8:5; வெளி. 22:18,19]. புதிய ஏற்பாட்டிலே எல்லோரும் ஒன்றுபட்டு வருவதற்கான விசுவாச சட்டமும், நடைமுறையும் கொடுக்கப்பட்டுள்ளன.

1. திருமுழுக்கு பெற்ற மனந்திரும்பிய விசுவாசிகள், இயேசுகிறிஸ்துவின் அவருடைய அப்போஸ்தலர், சீஷர்களின் எழுதப்பட்ட திருவாக்கின்படி இயேசுகிறிஸ்துவால் மட்டுமே ஆளப்படுவதற்கு தங்களை வெளிப்படையாய் ஒப்புக் கொடுத்திருக்கிறார்கள்.

இப்படியாக கிறிஸ்துவுடனும் ஒருவருக்கொருவர் சகோதரர் என்னும் நிலையிலும் ஐக்கியத்துக்குள்ளாகின்றனர். மனந்திரும்புதலுடனும், விசுவாசத்துடனும் திருமுழுக்கு ஒருவர் பெறும்போது செய்யும் விசுவாச அறிக்கையானது அந்நபர் உலகத்தில் உயிர்வாழும்வரை புதிய ஏற்பாட்டின்படி எல்லாக் காரியங்களிலும் கிறிஸ்துவுக்கு கட்டுப்பட்டு உண்மையாகக் கீழ்ப்படிந்து வாழ்வதற்குச் செய்யும் ஓர் உறுதிமொழியாகும்.

2. இந்த ஐக்கியத்தில் இருக்கும் ஒவ்வொரு சகோதரரும், வேத ஆராய்ச்சி, ஜெபம், மாம்சத்தின் இச்சைக்குரிய காரியங்களை அப்புறப்படுத்தல், ஆவிக்குரிய காரியங்களை அணிந்து கொள்ளுதல் ஆகியவற்றில் வளரவேண்டியது அவர்களுடைய கடமை, பொறுப்பாகும் (எபேசி. 4:11-15; எபி. 5:11-6:2; 1 கொரி. 3:1-3; எபே. 4:31; கொலோ. 3:12).

3. சகோதரர்களின் ஐக்கியத்தினுடைய பண்புநலன்களும், தரமும், ஒவ்வொரு சகோதரரும் ஐக்கியத்திலே தொடர்ந்து இருப்பதற்கு, விரும்புவதற்கு ஏதுவாகவும், பாவிகள் சபையில் சேருவதற்கு விருப்பத்தைத் தரத்தக்கதாகவும் ஏராளமான ஆசீர்வாதத்திற்கு உரியதாகவும் இருக்க வேண்டும்.

ஒரு தடவை மக்கள் கிறிஸ்துவுக்குள்ளும், அவருடைய திருச்சபைக்குள்ளும் வந்த பின்னர் பிரிவுக் கூட்டங்களுக்கும் உலகத்திற்கும் ஏன் திரும்பிச் சென்று விடுகின்றனர்? ஒரு காரணம் என்னவென்றால், அவர்கள் பார்க்கும் ஒழுங்கீனத்தால் சோர்ந்து ஏமாற்றம் அடைகின்றனர்; கலகங்கள், வீண்பேச்சுகள், நாகரிகமற்ற வாய்ச் சண்டைகள் முதலியவற்றால் சலிப்படைந்து விடுகின்றனர். திருச்சபையின் ஒவ்வொரு முறையும் கூட்டங்கள் நடக்கும் பொழுது இரட்சிப்படையாதவர்கள் ஏன் அதிகமாக வருவதில்லை? ஒரு காரணம் என்னவென்றால் அவர்களுக்கு ஏற்கனவே சொந்தமாக உபத்திரவங்கள் உண்டு. அவர்கள் சிறிதளவு அறிந்துள்ள வேதாகம கிறிஸ்தவத்திற்கு முரண்பட்ட நிலையில் காணப்படும் தொல்லைகளைக் கூடுதலாகச் சேர்த்துக் கொள்ள விரும்பவில்லை என்பதாகும். சிலர் சபையில் ஒழுங்குதவறி நடந்து பாவம் செய்ய விரும்பி அதற்குச் சாதகமான பிரிவுக் கூட்டங்களுக்கு ஓடி விடுவார்கள். அப்படிப்பட்டவர்களை எச்சரித்தும் திருந்தாதவர்களை விரட்டிவிடுவதே நன்று (1 கொரி. 5:11-13; மத். 18:17).

4. இந்த ஐக்கியத்திற்குள் பிரவேசித்த ஒவ்வொரு சகோதரரும், மற்றவர்களும் இந்த ஐக்கியத்திற்குள் பிரவேசிக்க வேண்டும் என்னும் வாஞ்சையும், அன்பும், தவமும் இருக்க வேண்டும், மற்றவர்களும் இதனுள்ளே வர உதவி செய்ய வேண்டும் [அப். 8:1-4; 11:19; 1 தெச 1:7,8].

5. ஒவ்வொரு சகோதரரும் மற்ற சகோதரரும் ஐக்கியத்திலே நிலைத்திருப்பதற்கு ஏதுவாகவும், அனுகூலமாகவும் இருக்க வேண்டும். முதலில் ஒரு சகோதரனை கிறிஸ்துவுக்குள் கொண்டுவருவதற்கு எவ்வளவு ஆர்வமும், அன்பும் காட்டினோமோ அவ்வளவாக ஐக்கியத்திலே நிலைத்திருக்கவும் காட்ட வேண்டும். இதை அழுத்தமாக கூற வேண்டும். ஆத்துமாக்களை இரட்சிப்பிற்குள் கொண்டு வருவதற்குப் "பேரார்வம்" இருக்கிறது என்று கூறியும், ஒரு சிறிய எரிச்சலான நிகழ்ச்சிக்கும் ஒவ்வொரு சகோதரராக விலக்கி விடுதல் எவ்வளவு முரண்பட்ட செயலாக இருக்கின்றது.

ஒரு மனிதனை இரட்சிப்புக்குள் கொண்டுவருதல் இன்றியமையாதது என்றால், அவ்வாறு கொண்டு வந்த ஓர் ஆத்துமாவை இரட்சிப்பில் நிலைத்திருக்கச் செய்வதும் சமமான இன்றியமையாத காரியமல்லவா? திருச்சபைகள் என்று சொல்லப்படுகிறவைகளின் ஆவிக்குரிய குழந்தைகளின் வளர்பகத்துறை, ஆவிக்குரிய தக்க கல்வி சாதனம் துன்பம் தரத்தக்க நிலையில் குறைந்துள்ளது. சரியான போதனையும், பராமரிப்பும், ஒழுங்கு முறையும் இல்லாமல் கெடுக்கப்பட்ட குழந்தைகள் தான் திகைத்த நிலையில் பெருங்கூட்டமாக வெளியே இருக்கின்றனர். மெய்யான சபையில் தெய்வீக நியமத்தின்படியான வளர்ப்பு முறை இருக்கிறது. இதுவே மெய்

யான திருச்சபையின் பெரிய மேன்மை யாகும்.

6. விசுவாச வாழ்க்கையிலும் பக்தியிலும் முதிர்ச்சி பெற்ற சகோதரர் வேதவாக்கிய ஆதாரத்துடன் சொல்லும் ஆலோசனைகள், நியாயத்தீர்ப்புகளை அபிப்பிராயங்களா கவோ அல்லது அவை நன்ருகவும் நன்மைத் தரத்தக்கதாகவும் செய்யப்பட்டிருக் குமானுல் மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளலாம். ஆனுல் அபிப்பிரயக் கருத்துக்களை "ஐக்கியத்தின்" அளவு கோலாகப் பயன்படுத்தக் கூடாது [உ-ம்] ரோம. 14:1-5. "எந்தப் பதார்த்தையும் சாப்பிட லாம்" என்பதனைக் காண இயலாதவன், எல்லாப்பொருட்களையும் சாப்பிடும் ஒருவனை "குற்றமாகத்" தீர்க்கக் கூடாது. பெலவீனமான சகோதரனுடைய மனச்சாட்சிக்கு இணங்க நாம் நடந்து கொள்ளுவோம் என்ருல் என்ன நடக்கும் என்று சிந்தித்து பார்க்கலாம். பரிசுத்த ஆவியானவரின் ஏவுதலால் எழுதப்படாத புத்தகங்களால் பயன் ஏதுமில்லை என்று ஒரு சகோதரன் சொல்லுகிருன். எனவே நாம் அதனை விலக்கி விடுகிரேம். இன்னெரு சகோதரன் வருகிருர்; அவருக்கு ஆலயகட்டடங்களே பிடிக்காது. அவர் அதனை ஐக்கியத்திற்கு ஓர் அடிப்படைக் காரியமாக வைக்கிருர். அவருக்கும் இணங் குகிரேம். எனவே நாம் வெளியே அல்லது வீடுகளில் கூடுகின்ரேம். இன்னெரு பெல வீனமான சகோதரன் வருகின்ருர்; பெஞ்சுகளும், பாட்டுப் புத்தங்களும் வேதாகமத்தில் கூறப்படவில்லை என்கிருர். ஆகையால் நாம் தரையில் உட்கார்ந்து கொள்ளுகி ரேம்.

இவ்வாறே இன்னும் ஒவ்வொரு சகோதரராக வருகின்ருர். அவர்களுக்கு சவரம் செய்தல் பிடிக்கவில்லை, முடிவெட்டிக் கொள்ளுதல் பிடிக்கவில்லை இவ்வாறு பல காரியங்கள் பிடிக்கவில்லை... மறுபடியும் நாம் அவர்களுடைய மனச்சான்றுகளுக்கு இணங்கி நடந்து கொள்ளுகிரேம். நாம் இப்பொழுது எங்கே இருக்கிரேம்? இன்னும் பெலவீனமான ஒரு சகோதரனை நாம் கற்பனைப் பண்ணிப் பார்க்கிரேம். இந்தச் சகோதரனுக்கு ஒரு வாரத்திற்கு 50 (பைசா) வைவிட அதிகமாக ஆண்டவருக்குக் கொடுக்க வேண்டும் என்னும் அவசியத்தைக் காண இயலாது. அவனை நாம் "புறக்கணிக்கப்படுவதை" நாம் விரும்பவில்லை. எனவே திருச்சபையிலுள்ள அனைவரும் 50 காசு அல்லது அதற்கும் குறைவாக கொடுக்கும் நிலைக்குக் குறைந்து விடுகின்றது. என்னே பரிதாபம்.

[தொடரும்]

"நீ குறைவாயிருக்கிறவைகளை ஒழுங்கு படுத்தும்படிக்கும், நான் உனக்கு கட்டளையிட்டபடியே...." [தீத்து 1:5].

---

# மனிதனும் பாவமும் [தொடர்ச்சி]

ஆனல் அப்படிப்பட்ட துன்பம், ஆக்கம்பெற்ற நீதியைப் பாதுகாப்பதற்காக சரிசமானமாக பிரதிபலன் உள்ளது. நீதி நெறி முறைக்கு இசைய அளந்து அளிக்கப்படுவதில்லை. அது பரிசுத்த அன்புடன் ஐக்கியமாய் வாழ்வதற்கென உருவாக்கப்பட்ட உலகில் தன்னயமாய் வாழ்வதால் உண்டாகும் விளைவே. மேலும் பாவம்

செய்கிற ஒருவன் தன் பாவத்தால் பாதிக்கப்பட்டு அவதியுறுகிறான் என்று சொல்லுவதிற்கு இல்லை.

ஏனெனில் இவ்வுலகம் ஒரு குடும்பத்திற்கு என கட்டப்பட்டதோர் இல்லம் போன்றது. அது நாமனைவரும், சகோதரர்களும், சகோதரிகளுமான அங்கத்தினர்களாய் இருக்கிறோம். எனவே அவனது பாவத்தால் மற்றவர்களும் அவனோடு, அவன் தான் துன்பப்படவேண்டியது தவிர்க்கப்பட முடியாது. ஆகையால் கூட்டுத் தன்மை வாய்ந்த ஒருவகையில் மற்ற விதமான துன்பம் ஏற்படக்கூடும். இவ்வண்ணமாக ஒரு மனிதன் ஒருவன் செய்யும் ஒரு பாவம் எவ்விதத்திலும் அவன் சொந்த காரியம் அன்று. அவன் பாவத்தின் விளைவுகளை அவன் தானே தன் தோள்மீது சுமப்பது கூடாத காரியம்.

ஏனெனில் பாவங்கள் அவன் கட்டுப்பாட்டிற்கு எட்டாதவாறு வெகுதூரம்சென்று வருகிறது. அநேகரை, பிறரை அது பாதிக்கும். அவைகள் மனித ஐக்கியத்திற்கும், ஏன் நிலையற்ற இவ்வுலகத்திற்கும் அப்பால் சென்று விடுகிறது. நித்திய உலக மண்டலத்தை அடைந்து விடுகிறது என்பதை அறிய வேண்டும். ஏனெனில் அவனது பாவத்திற்காக அவனவன் சக மனிதர் மட்டுமல்ல அதற்காக படைத்தவரும் வீட்டின் தந்தையுமானவரும்கூட துன்பப்பட வேண்டியதாயிருக்கிறது [ஏசா. 43:24].

மனிதனின் பாவத்திற்காக நித்தியமான கடவுள் துன்புறுகிறார். இவ்வுண்மையை நாம் சிந்திக்கும் போது பாவி ஒருவன் தன் பாவத்தின் விளைவுகளை தானே தனியாக காப்பது முடியாத காரியமென்பதை அறிந்து கொள்ளலாம். உண்மையாக சிலுவையிலேதான் பாவத்தின் மாபெரும் தீமை வெளிப்படுத்தப்படுகின்றது. பாவத்தைப் போக்கி அதன் விளைவுகளை நிவர்த்திப்பதற்கு அது கடவுளுக்குத்தான் எவ்வளவு வேதனையைக் கொடுத்துள்ளது. நாம் படைப்பின் வேலையை மீட்பின் வேலையோடு ஒப்பிட்டுப்பார்க்கும் போதுதான் பாவத்தின் அகோர வேதனையை, தோற்றத்தைக் காண்கிறோம்.

அண்டமெல்லாம் வலி மிகுந்ததொரு சொல்லால் எளிதாகப் படைக்கப்பட்டது. மீட்பின் செயலுக்காய் கடவுள் தனது பிரியமான ஒரே மைந்தனை தியாகப்பலியாக ஒப்புக்கொடுக்க வேண்டியதாயிற்று. கடவுளின் மைந்தன், முற்றிலுமாக மனித குறைபாடுகளோடு சிலுவையில் ஈனமானதொரு மரணத்தை ஏற்குமாறு அனுப்பப்பட்டார். நித்தியமான ஒரு அத்தகையதொரு தியாகம் அவசியமாய், பாவத்தின் பயங்கரம்தான் எவ்வளவு என்று பாருங்கள்.

ஆகையால் மனிதன் பாவத்திலிருந்து விடுதலை பெற, இறை மைந்தனாகிய இயேசுவை விசுவாசித்து, மனந்திரும்பி அவரை விசுவாசித்து, அவரை நோக்கிக் கூப்பிட்டு பாவத்திலிருந்து அவன் விடுதலை பெற முடியும். பாவத்தின் சாபத்திலிருந்து விடுதலை பெற முடியும்; பாடுகளிலிருந்து தப்பித்துக் கொள்ள முடியும். பாவத்தின் ஆக்கினையிலிருந்து விடுதலை அடைய முடியும். அவன் பரிசுத்தமடைய முடியும். பாவத்திலிருந்து தப்பித்துக் கொள்ள முடியும் என்பதே.

சிலுவையே முடிவு. சிலுவையைப் பற்றிக் கொள்ளாவிட்டால் அழிவதே முடிவு.

[முற்றும்]

"பாவத்தின் சம்பளம் மரணம்; தேவனுடைய கிருபைவரமோ நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினால் உண்டான நித்திய ஜீவன்" (ரோம. 6:23).

[தொடர்ச்சி]

# பெண்கள்

இது ஸ்திரீயினுடைய வணக்கத்தினு லும், இணக்கத்தினுலும் வருகிற மேன்மை யல்லவா. சில சமயங்களில் காரணமில் லாமல் பெண்சாதியை புருஷன் கோபித் துக் கொண்டாலும், அதற்குப் பிரதியாக புருஷனை பெண்சாதி கோபிக்க எவ்வள வேனும் அதிகாரமில்லை. பெண்சாதி எப் பொழுதும் வீட்டுக்குள் இருப்பவளாதலால் அவளுக்குப் புருஷனைத்தவிர வேறே எஜ மான் இல்லாதபடியாலும், அவள் அந்த ஒரு எஜமானுக்கு திருப்தியாயிருப்பது மிக வும் எளியதாயிருக்கிறது. புருஷன் எப்ப டிப்பட்ட அந்தஸ்து உடையவனுயிருந் தாலும் அவன் பல எஜமான்களும், பல பேர்களுடைய விரோதங்களும், பல கஷ் டமான தொழில்களும் உடையவனுகை யால் தன்னையறியாமல் அவனுக்கு கோபம் வர காரணமிருக்கிறது.

அந்த சமயம் அறிந்து பத்தினி ஒதுங்க வேண்டியது கிரமம். கண்டமாருதம் ஓங்கி வீசும்பொழுது, அதிகவேகமாய் ஜலப்பிர வாகம் வரும்பொழுதும் வளையாமல் எதிர்த்து நிற்கிற விருட்சங்கள் வேரோடு சாய்ந்து விழுகின்றன. இந்த சமயத்தில் வளைந்து கொடுக்கிற நேரான சிறிய செடி களுக்கு ஒரு அபாயமும் இல்லை. அப்ப டியே ஸ்திரீகளும் புருஷர்களுக்கு கோபம் வரும்பொழுதும் எதிர்த்து பிரதியுத்தரம் சொல்லாமல் சமயா நாதனமாக ஒதுங்கு வதே விவேகம்.

ஸ்திரீகள் எவ்வளவு நன்மையாக நடந் தாலும் அதற்கு தானும் அனுசாரமாக நட வாமல் ஸ்திரீகளைக் கொடுமை செய்கிற சில புருஷர்களும் உண்டு. இப்படிப்பட்ட நிர்பாக்கியமான ஸ்திரீகளுக்கு தெய்வம் சகாயம் செய்ய வேண்டுமேயல்லாமல் வேறே சகாயம் இல்லை. கை விரலாலே கண்ணைக் குத்தினுல் கைக்கு என்ன செய் யலாம். நம்முடைய நாவை பல் கடித் தால் பல்லை உடைக்கலாமா. கப்பல் ஏறிய பின் கடல் யாத்திரைக்குப பயந்து காரியம் என்ன.

ஸ்திரீக்கும் புருஷனைத் தவிர வேறு கதியில்லாதபடியினுல் தன்னுல் கூடிய வரைக்கும் புருஷனுக்கு பிரியமாய் நடந்து கொள்வது ஸ்திரீயினுடைய கடமையாயி ருக்கிறது. புருஷன் எப்படிப்பட்டவனுயி ருந்தாலும் தெய்வ பக்தியும், சாந்தமும், உண்மையும், அடக்கமும், வணக்கமும் கற்பு நெறியுமுள்ள ஸ்திரீகளுக்கு ஒரு நாளும் குறையேயில்லை.

என் சாண் உடம்பிற்கு சிரசே பிரதா னமாயிருப்பது போல் ஸ்திரீகளுக்கு சகல குணங்களிலும் கற்பு நிலையே முக்கிய ஆபரணமாயிருக்கிறது. கற்பு நிலை தவருத வளுக்கு முக அழகு குறைவாயிருந்தாலும் கலியாண வீட்டு பூ மாலை போல் அவள் யாவராலும் கனப்படுத்தப்படுவாள். கற்பு நிலை கெட்டவள் அதிசுந்தரியாயிருந்தா லும் அவள் சுடுகாட்டு மாலையைப்போல் யாவராலும் இகழப்படுவாள்.

உலகத்தில் ஒருவனுக்குத் தீங்கு செய் கிறவன் அவனுக்கு மட்டும் துரோகியாகி ருன். அந்நிய புருஷனை சேருகிற ஸ்திரீ யோவென்றுல் பலபேர்களுக்குத் துரோகம் செய்கின்றுள். அவள் தன்னையும் கெடுத்து, அந்த அந்நிய புருஷனையும் கெடுத்து, தன் னுடைய சொந்த புருஷனுக்குத் துரோகி யாகிறுள். அவளுடைய துன்மார்க்கத் தில் அவளுடைய புருஷனுக்கும் அந்நிய புருஷனுடைய பத்தினிக்கும் உண்டாகிற சஞ்சலமும், பொருமையும், கஸ்தியும், துக் கமும் அதிகமல்லவா.

அன்றியும் கோடாரி காம்பு குலத்துக் கீனம் என்பது போல கற்பு நிலை கெட்ட வள் தன்னுடைய புருஷன் வழி சுற்றத்தா

ருக்கும் மாறாத அவமானத்தையும், இழிவையும், நிந்தனையையும் உண்டு பண்ணுகிறாள். இந்த அநியாயமானது, உலகமானது அவள் செய்த குற்றத்துக்காக புருஷனையும், பிள்ளைகளையும் அவமானப்படுத்தி நிரபராதிகளான அவர்களைத் தண்டிக்கின்றது. மற்ற குற்றங்களெல்லாம் சில காலத்தில் மறைந்து போகும். விபச்சாரதோஷமோவென்றால் உலகம் உள்ளமட்டும் மறையாது. அந்த விபசாரி இறந்தாலும் அவளுடைய அபகீர்த்தி இறவாமல் என்றும் சிரஞ்சீவி பட்டம் பெற்றுக் கொண்டிருக்கும். மற்ற குற்றங்களுக்கெல்லாம் ஓர் பிராயசித்தம் உண்டு. ஒருவன் ஒரு பொருளை திருடினால் அதற்கு சரியான வேறொரு பொருளைக் கொடுத்து திருப்தி செய்யலாம். அப்படியே நமக்கு உண்டாகிற நஷ்டங்களும், நாம் பிறருக்குச் செய்கிற தீங்குகளுக்கும் தகுந்த பரிகாரங்களைச் செய்யலாம்.

பதிவிரதா பங்கத்திற்கு ஒரு பிராயச்சித்தமுமில்லையே. கெட்டுப்போன கற்பு எட்டு நாள் அழுதாலும் வருமா? அரை காசுக்கு அழிந்த கற்பு ஆயிரம் பொன் கொடுத்தாலும் வருமா? என்று பழமொழியும் இருக்கின்றது.

ஸ்திரீக்கு காவலாகிய நாணத்தையும், மானத்தையும் விட்டு ஒரு ஸ்திரீ பரபுருஷ சம்போகத்திற்கு எப்போதும் உடன்பட்டாளோ அப்போதே அவள் எப்படிப்பட்ட அக்கிரமங்களுக்கும் பின் வாங்கமாட்டாள், பரபுருஷ விருத்திய லோகம் பல பாவங்களை விளைவிக்கிற வித்தாயிருக்கிறது. எப்படியெனில் அந்நிய பரபுருஷனைச் சேர்ந்த ஸ்திரீ அந்த குற்றத்தை மறைத்துவைக்க பல தந்திரங்களையும், பொய்களையும், கபட மார்க்கங்களையும் உபயோகிப்பாள். அந்நிய புருஷனால் உண்டாகிற கர்ப்பத்தை அழிக்கிறதற்காக அவள் பல மருந்துகளை உண்டு கொலை பாதகத்தைக் கட்டிக் கொள்வாள். அவள் சில சமயங்களில் தன் புருஷனைக் கொல்லவும் வழி தேடுவாள்.

காம விகாரத்தைத் தாண்டி விடுவதற்காக மது முதலிய லாகிரி வஸ்துக்களையும் அருந்துவாள். அந்த வஸ்துக்களை விலைக்கு வாங்கவும் பரபுருஷர்களை கவர்ச்சிக்க தன்னை அலங்கரித்துக் கொள்ளவும் கையில் பொருளில்லா விட்டால் திருடவும் ஆரம்பிப்பாள். ஒரு பரபுருஷன் போல பல புருஷர்களைச் சேர்ந்து பொருள் சம்பாதிக்கவும் துணிவாள். கருடன் காலில் கச்சைக் கட்டினதுபோல் கள்ள தோஷம் எப்படியும் பகிரங்கமாயிருக்கும். அந்த குற்றத்தை மறைக்க எத்தனிப்பதும், ஆகாசத்தைதட்டி கொண்டு மூடுவதற்கும், பூனை தன் கண்ணை மூடிக்கொண்டு பாலைக்குடிப்பதற்கும் சமமாயிருக்கின்றது. புருஷனும் பெண்ஜாதியும் ஜீவிய காலம் வரையில் அந்நியர் முகம் பார்ப்பதில்லை என்று தெய்வ சந்நிதியில் பிரமாண பூர்வமாக சங்கர்ப்பம் செய்து கொள்ளுகிறார்களோ அந்த பிரமாணத்தை உள்ளத்தில் உறுதி செய்தபின் அந்நிய சம்போகம் பண்ணுவது அந்த பிரமாணத்தை உள்ளத்தில் துர்சித்து, அன்னிய சம்யோகம் பண்ணுவது மகா கொடிய பாவமாகையால் அப்படிப்பட்ட பாவிகள் மோட்ஷத்தை இழந்து அவியாத அக்கினியில் பூத பிசாசகணங்களால் உபாதிக்கப் படுவார்கள் என்று வேத சாஸ்திரத்தில் பல இடங்களில் சொல்லப்பட்டுள்ளது [வெளி. 21:8].

இந்த உலகத்தில் விபசாரிகள் அனைவராலும் கைவிடப்பட்டு, சோர நாயகனாலும் கைவிடப்பட்டு தரித்திரமும், வியாதியும், பல துன்பங்களும் கொண்டு, சந்தி சிரிக்கிறதை நாம் கண்ணால் பார்க்கிறோம். பின்னும் இந்த உலகத்தில் நடக்கிற சண்டைகளுக்கும், கொலைகளுக்கும், கலகங்களுக்கும் இந்த விபச்சார பாவமே பிரதான காரணமாயிருக்கிறது. இந்த பாவங்களால் சோதோம் கொமாரா பட்டணங்களை கடவுள் நிர்மூலம் செய்ததும் யாவருக்கும் தெரிந்த விஷயம்தானே.

(தொடரும்)

[தொடர்ச்சி]

# வேத பாடம்

## எண்ணாகமம்

### எண். 23:9,10

"கன்மலையுச்சியிலிருந்து நான் அவனைக் கண்டு, குன்றுகளிலிருந்து அவனைப் பார்க்கிறேன்; அந்த ஜனங்கள் ஜாதிகளோடே கலவாமல் தனியே வாசமாயிருப்பார் கள்". தேவனுடைய ஜனங்கள் இவர்கள் பிரத்தியேகப்பட்ட கூட்டமாகும். இவர்கள் பாவிகளோடு கலவாமல், தவறான ஜனங்களோடு கலவாமல், உலகத்தாரைப்போல் ஜீவிக்காமல், பெயர் கிறிஸ்தவர்களைப் போல் ஜீவிக்காமல், மற்ற ஜாதிகளோடே கல வாமல் தனித்தே வாசமாயிருப்பார்கள்.

இன்றைக்கு கிறிஸ்தவ உலகத்தில் அநேகர் தங்களை மணவாட்டிகளென்றும், அப்படி இப்படி என்றும் சொல்லிக் கொள்வார்கள். தங்களுடைய மகளுக்கு கலியா ணம் வருகிறதென்றால் பழைய ஜாதிகளிலே மாப்பிள்ளை பார்ப்பார்கள். அதுவும் சத்தி யத்திலே மாப்பிள்ளை கிடைக்கவில்லையென்றால் சத்தியத்தை விட்டுவிட்ட ஜனங்க ளோடே கலந்து கொள்வார்கள், அவசியப்பட்டால் இந்துக்களுக்குக்கூட கட்டிக் கொடுப்பார்கள். இவ்விதமாக கலப்பு இனமாக கிறிஸ்தவர்களில் பெரும் பகுதியான வர்கள் இருக்கிறார்கள். இவ்விதமான ஒரு மாய்மாலமான வேஷதாரிகளாக பக்தியுள்ள வர்கள் அநேகர் காணப்படுகிறார்கள்.

கிறிஸ்தவ வாழ்க்கை பிரத்தியேகப்பட்ட வார்த்தையாகும். "இஸ்ரவேல் சுகமாய் தனித்து வாசம்பண்ணுவான். யாக்கோபின் ஊற்றானது தானியமும் திராட்சரசமுமுள்ள தேசத்திலே இருக்கும்; அவருடைய வானமும் பனியைப் பெய்யும்". "இஸ்ரவேலே நீ பாக்கியவான்; கர்த்தரால் இரட்சிக்கப்பட்ட ஜனமே உனக்கு ஒப்பானவன் யார்? உனக்குச் சகாயஞ்செய்யும் கேடகமும் உனக்கு மகிமை பொருந்திய பட்டயமும் அவரே; உன் சத்துருக்கள் உனக்கு இச்சகம் பேசி அடங்குவார்கள்; அவர்கள் மேடு களை மிதிப்பாய் என்று சொன்னார்" (உபா. 33:28,29).

மலையுச்சியின் குன்றுகளிலிருந்து நான் அதை பார்க்கிறேன். அந்த ஜனங்கள் ஜாதிகளோடே கலவாமல் தனியே வாசமாயிருப்பார்கள். அவர்களுடைய ஆராதனை உண்மையான ஆராதனை, பிரத்தியேகப்பட்டதாயிருக்கும். இந்நாட்களிலே அநேகர் தேவனுக்கு செய்கிற ஆராதனை, தேவனுக்கு உண்மையான, பிரியமான ஆராதனை யல்ல அவர்களுக்குப் பிரியமான ஆராதனையையே அவர்கள் செய்து கொள்ளுகிறார் கள்.

ஏன், யாக்கோபுக்கு தரிசனத்திலே முந்தி நீ எனக்கு செய்த பொருத்தனையை நிறைவேற்று என்று கர்த்தர் சொன்னார் [ஆதி. 35:1]. அங்கே நீ போய் நான் உனக்கு தரிசனமான பெத்தேலுக்குப் போய் நான் பலிபீடம் கட்டி எனக்கு ஆராதனை செய் என்று கர்த்தர் சொன்னார். அப்பொழுது யாக்கோபு தன்னுடைய வீட்டார் யாவரையும் சுத்திகரித்து அந்நிய தேவர்களையெல்லாம் விலக்கிப்போட்டு சுத்தம்பண்ணிக் கொண்டு

வஸ்திரங்களை மாற்றுங்கள் நாம் எழுந்து பெத்தேலுக்குப் போவோம் வாருங்கள். எனக்கு ஆபத்து நேரிட்ட நாளிலே என் விண்ணப்பத்துக்கு உத்தரவு அருளிச்செய்து நான் வழியிலே நடந்தபொழுது என்னோடுகூட இருந்த தேவனுக்கு அங்கே ஒரு பலி பீடத்தை உண்டாக்குவேன் என்றான், அப்பொழுது அவர்கள் தங்கள் கைகளிலிருந்த அந்நிய தெய்வங்களையெல்லாம், தங்கள் காதணிகளையும், யாக்கோபினிடத்தில் கொடுத்தார்கள். யாக்கோபு அவைகளை சீகேம் ஊர் அருகே இருந்த ஒரு கர்வாலி மரத்தின் கீழ் அவைகளைப் புதைத்துப் போட்டுபோய் கர்த்தருக்கு பலிபீடம் கட்டி ஆராதனை செய்தார்.

ஆம் அவர்கள் அந்நிய தேவர்களையும் ஆபரணங்களையும் கழற்றி யாக்கோபி னிடத்திலே கொடுத்தார்கள். இவ்விதமாக அந்த ஜனங்கள் சுத்திகரிக்கப்பட்டார்கள், பரிசுத்தமாக்கப்பட்டார்கள். அவ்விதமாய் அவர்கள் பரிசுத்தமாய் கடந்து சென்று தேவனுக்கு ஆராதனை செய்தபோது தேவனுடைய வல்லமை உண்டாயிற்று. ஆனபடி யினாலே கர்த்தருடைய வல்லமை உண்டானபடியினால் தேவனுடைய ஜனங்களைக் கண்டு மற்ற ஜனங்கள் பயப்பட்டார்கள், அவர்களை பின்தொடரவில்லை – என்று சொல்லி வேதாகமத்திலே தேவாவியானவர் மிகவும் அழகாக குறிப்பிட்டிருக்கிறார்.

பின்பு பிரயாணம் புறப்பட்டார்கள். அவர்களைச் சுற்றிலும் இருந்த பட்டணத்தா ருக்கு தேவனாலே பயங்கரம் உண்டானதினால் அவர்கள் யாக்கோபின் குமாரரை பின் தொடராதிருந்தார்கள். உண்மையான ஆராதனை செய்கிறவர்களை சத்துரு பின் தொடர முடியாது. எதிரிகள் பின் தொடர்ந்து அவர்களை மேற்கொள்ள முடியாது. தேவ வல் லமை அங்கு உண்டு. அங்கே தேவன் வாசமாயிருக்கிறார். எப்படியும் ஆராதனை செய் யலாம் என்று தங்களுக்கு பிரியமாய் ஆராதனை செய்கிறவர்களுண்டு. இப்படித்தான் ஆராதனை செய்ய வேண்டும் என்று வேதாகமத்திலே குறிப்பிட்டிருக்கிற பிரகாரம் தேவனுக்கு ஆராதனை செய்யும் முறை மிகவும் தெளிவாக எழுதப்பட்டுள்ளது. இது முற்பிதாக்களின் வழியாகும். ஆபரணங்கள் தான் விக்கிரக ஆராதனை செய்ய காரண மாயிருந்தது (யாத். 32:2,3). அவைகளை கழற்றி ஆபரணங்களைக் கொடுத்து விக்கிரகத்தை உண்டுபண்ணினார்கள் என்று நாம் பார்க்கிறோம். ஆம் இவ்விதமாகவே தவறான ஆரா தனைகள் உலகத்திலே தோன்றி உள்ளன. விக்கிரக ஆராதனைகளில் இவ்விதமான சம் பவங்கள் நடக்கும். அவர்கள் பலி செலுத்தி பின்பு ஜனங்கள் புசிக்கவும், குடிக்கவும் உட்கார்ந்திருந்து விளையாட எழுந்திருந்தார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது (யாத். 32:6)

ஆம் மலையுச்சியிலிருந்து கீழே இறங்கிவந்தபொழுது அங்கே பாடலின் சத்தம் கேட்கிறது என்றார் [யாத். 32:18]. எப்பொழுதுமே விக்கிர ஆராதனை மிகவும் தவ றான ஆராதனை, கூச்சலும், குழப்பமும், உட்கார்ந்து விளையாடுகிறதும், பாடலின் சத் தமும் கேலியும், கிண்டலும் ஆரவார கிரியைகளும் கேட்கும். இவைகள் இவர்களு டைய ஆராதனைக்கு ஆதாரமாயிருக்கின்றன. உண்மையான ஆராதனை தேவனுடைய வல்லமையினால் நிரம்பியிருக்கும். அங்கே யாரும் வேடிக்கை பார்க்க முடியாது. வேடிக்கை பார்க்க யாரும் வரமுடியாது, வரவும்மாட்டார்கள். அங்கே ஆராதனை ஸ்த லத்திற்குள் தேவவல்லமை கிரியை செய்யும். தேவ ஆவியானவரால் அனுப்பி விடப் பட்டு அவர்களும் ஆவிக்குள்ளாகி தேவனுக்கு ஆராதனை செய்வார்கள். அங்கே தீய வர்களோ கேலி, கிண்டல் பேசுகிறவர்களோ, பராக்குபார்க்கிறவர்களோ நிலைக்க முடி யாது. அவர்கள் வெளியேற்றப்படுவார்கள் அந்த ஜனம் ஜாதிகளோடே கலவாமல்

தனித்தே வாசமாயிருக்கும்.

ஆம். உண்மையான தேவ ஜனங்கள் ஜாதிகளோடே கலக்கக்கூடாது. ஜாதிகளோடே கலவாமல் அவர்கள் தனியே வாசம் பண்ணுவார்கள். புதிய எருசலேமியர்கள் அவ்விதமாக காணப்படுவார்கள். எருசலேமில் வாசமாயிருக்க தங்களை வாக்குக் கொடுத்தவர்களை ஜனங்கள் வாழ்த்தினார்கள் (நெகே. 11:1,2). என்று வேதாகமத்தில் வாசிக்கிறோம். ஆம் தேவ ஜனங்கள் எருசலேமில் வாசம்பண்ணும்படியாக தங்களை பதிவு செய்து கொண்டவர்களை வாழ்த்தினார்கள். எருசலேமில் குடியிருக்க மனப்பூர்வமாய் சம்மதித்த மனுஷர்களையெல்லாம் ஜனங்கள் வாழ்த்தினார்கள் [நெகே. 11:2]. அல்லேலூயா! அந்த ஜனங்கள் ஜாதிகளோடே கலவாமல் தனித்தே வாசமாயிருப்பார்கள்.

ஆம். தேவ ஜனங்களாகிய நாம் பிறருக்கு இடறலற்றவர்களாய் இருக்க வேண்டும். மற்றவர்கள் இரட்சிக்கப்படுவதற்கு நாம் மாதிரிகளாயிருக்க வேண்டும். மற்றவர்களைப் போல வாழ்ந்து, ஜீவித்து உடுத்தினால் அவர்கள் இரட்சிக்கப்படாமல் இடறல் அடைவார்கள். ஆனபடியினால் நாம் இவ்விதமாய் சத்தியத்திலே வாசிக்கிறோம். "நீங்களும் கிரேக்கருக்கும், யூதருக்கும், தேவனுடைய சபைக்கும் இடறலற்றவர்களாயிருங்கள் (1 கொரி. 10:33)". "ஆகையால் நீங்கள் புசித்தாலும், குடித்தாலும் எதைச் செய்தாலும் எல்லாவற்றையும் தேவனுடைய மகிமைக்கென்றே செய்யுங்கள் [1 கொரி. 10:31]". நீ செய்வதில் தேவன் மகிமைப்படுவாராக. நீ உடுத்துகிறது, நீ நகை அணிந்திருக்கிறது, நீ அலங்காரம் பண்ணுவது உன்னுடைய வாழ்க்கை முறையில் தேவன் மகிமைப்படுவாரா? அது தேவ மகிமைக்கு ஏதுவாக இருக்கிறதா அப்படி இல்லையென்றால் நீ உண்மையான தேவ ஜனம் அல்ல. அந்த ஜனங்கள் ஜாதிகளோடே கலவாமல் தனியே வாசமாயிருப்பார்கள்.

யாக்கோபின் தூளை எண்ணத்தக்கவன் யார்? இஸ்ரவேலின் காற்பங்கை எண்ணுகிறவன் யார்? [எண். 23:10]. தேவ ஜனங்கள் லட்சாதி லட்சம், கோடான கோடியாய் பெருகுவார்கள். மேகம் போன்ற இத்தனை திரளான சாட்சிகள் என்று சொல்லப்பட்டிருக்கின்றன. ஆம் ஆபிரகாமின் சந்ததியார் அதிகமாகப் பெருகிக் கொண்டிருக்கிறார்கள். இஸ்ரவேலின் காற்பங்கை எண்ணுகிறவன் யார்? ஆம் ஆபிரகாமின் சந்ததியை எண்ணிமுடியாது. நீதிமான் மரிப்பதுபோல் நான் மரிப்பேனாக. இந்த பிலேயாம் அநேக நீதிமான்களை அறிந்திருந்தார். அநேக நீதிமான்களின் மரணம் அவருக்குத் தெரியும். ஆபிரகாமுடைய மரணம், ஈசாக்கினுடைய மரணம், யாக்கோபுடைய மரணம், யோசேப்புடைய மரணம் இன்னும் அநேக பரிசுத்தவான்களுடைய மரணம் இவன் அறிந்தவை. அவர்கள் விசுவாசத்தில் மரித்தார்கள். அவர்கள் தூரத்திலே தங்களுக்கு ஆயத்தம்பண்ணப்பட்ட தங்க பட்டணத்தை கண்டு தரிசித்து, விசுவாசத்தோடே மரித்தார்கள். ஆம். கர்த்தர் அவர்களுக்காக ஒரு நகரத்தை ஆயத்தம் பண்ணியிருக்கிறாரே [எபி. 10:10-16]. அப்படி அந்த நீதிமான்களைப்போல் நான் மரிப்பேனாக என்று சொன்னான். ஆனால் இவன் அநீதியான, நீதியற்ற கூலியை விரும்பினான். அல்லது அவன் பரிதானத்தை விரும்பி எப்படியும் தேவ ஜனங்களை சபிக்கவேண்டும் என்று எண்ணினான். ஆனபடியினால் இவன் அநீதியின் கூலியை சம்பாதித்து வெட்டப்பட்டு மரித்தான், துன்மார்க்கனைப்போல் [எண். 31:8].

அநீதி செய்து தவறாக கள்ளத் தீர்க்கதரிசனம் சொல்லி, கள்ளத்தனமாக ஊழியம் செய்து மரணம் நீதிமான்களோடு மரிக்க வேண்டும், நீதிமான்கள் உயிர்த்தெழும்போது உயிர்த்தெழ வேண்டும் என்று எண்ணுகிறவர்கள் காரியம் மிகவும் வேடிக்கை

யான காரியமாகும். அது நடக்கப் போகிறது கிடையாது நீ நீதிமான்களோடுகூட மரிக்க வேண்டுமென்றால் நீ நீதிமானாக ஜீவிக்கவேண்டும். நீதிமானாக நடந்துகொள்ள வேண்டும். செம்மையான வழியை விட்டு தப்பி நடந்து பேயோரின் குமாரனாகிய பிலேயாமின் வழியை பின்பற்றிப்போனவர்கள். அவன் அநீதத்தின் கூலியை விரும்பி தன் அக்கிரமத்தினால் கடிந்து கொள்ளப்பட்டான். பேசாத மிருகம் மனுஷர் பேச்சை பேசி தீர்க்கதரிசியினுடைய மதிகேட்டைத் தடுத்தது. இவர்கள் சாபத்தின் பிள்ளைகள், பொருளாசையுடையவர்கள், விபச்சார மயக்கத்தினால் நிறைந்தவர்கள், பாவத்தை விட்டு ஓயாத கண்களையுடையவர்களாயிருக்கிறவர்கள், ஒழுங்கில்லாத தெளிவில்லாத ஆத்துமாவை தந்திரமாய் பிடித்து வஞ்சிக்கிற கள்ள ஊழியர்கள் என்று 2 பேது. 2:14-16 முடிய பரிசுத்த ஆவியானவர் எழுதியிருக்கிறார். இவ்விதமான விபச்சார சந்ததிகள் ஊழியத்திலிருந்து விரட்டப்படவேண்டும். கிறிஸ்தவ மார்க்கம் சுத்திகரிக்கப்பட வேண்டும்.

இறைவனுடைய ஊழியத்தை இறைவனுடைய சித்தத்தின்படியே செய்வோம். நீதிமான் மரிக்கிறதுபோல மரிக்க விரும்பி அதையே தேடுகிற உண்மையான ஊழியர்களை தேவன் தம்முடைய திருப்பணிக்கு அருளுவாராக.

[தொடரும்]



"....நாங்கள் தேவனுக்கு கிறிஸ்துவின் நற்கந்தமாயிருக்கிறோம்" [2 கொரி. 2:15].



# இரு மார்க்கங்கள் [வழிகள்]

(சுவிசேஷம்)

மனிதனுடைய வாழ்க்கை ஒரே ஒரு வாழ்க்கை. ஒரே ஒரு வாய்ப்பு. பள்ளித் தேர்வு ஒரே தரம் மாத்திரம் எழுதலாம். தோல்வியடைந்தால் மறு முறை எழுதக் கூடாது என்றால் அது நமக்கு பயத்தை உண்டுபண்ணுமல்லவா? நமது வாழ்க்கை ஒரே ஒரு வாழ்க்கை. பல பிறப்புகள் அல்ல. ஒரே வாழ்க்கை அது நான்கு விரற்கடையளவு தான். இதை நாம் சிந்தித்துப் பார்த்ததுண்டா? ஒரே வாய்ப்பு. வீணாக்கி விட்ட நேரத்தை திரும்பப் பெறவே முடியாது. இந்த உண்மை நமக்கு அச்சத்தை கொடுக்கக் கூடியது.

நமது வாழ்க்கை எவ்வளவு விலையேறப் பெற்றது என்று நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். என் ஆன்மாவிற்கு ஈடாக நான் எதைப் பெற்றுக் கொள்ள விரும்புவேன்? என் ஆன்மா விலையேறப் பெற்றதாயிற்றே இப்புனிதவாழ்க்கையில் அருமையை "டார்த்தம்" பின்வரும் சம்பவத்தால் விளக்குகிறார். ஒரு சிறுமி தன் தாயுடன் கடைத்தெருவுக்குச் சென்றாள். மிட்டாய் வாங்கிக் கொள்ள தாய் அவளுக்கு ஒரு பணம் கொடுத்தாள். கண்ணாடி சீசாக்களிலுள்ள பல வண்ணமும் உருவகம் உள்ள மிட்டாய்களைப் பார்த்துவிட்டு

ஏதோ ஒன்றைக் கேட்டாள்; கடைக்காரன் அதை எடுக்கும்பொழுது அடுத்த சீசாவைக் காண்பித்தாள். இவ்வாருகப் பல முறை அவள் மனம் ஊசலாடிக் கொண்டிருந்தது. கடைக்காரனுக்குத் தொல்லை கொடுக்கிறதாக தாயார் அவளைக் கடிந்து கொண்டபொழுது குழந்தை சாமர்த்தியமாக என்னிடம் ஒரு காசு தானே இருக்கிறது. ஆகவே அதிகம் யோசிக்க வேண்டியதாயிருக்கிறது என்ருள். அக்குழந்தையிடம் ஒரே காசு! உன்னிடம் ஒரே வாழ்க்கை. நண்பனே நீ அதை எப்படி பயன் படுத்த விரும்புகிருய்.

வனந்தர பாதையாய்ப் போகும்போது காட்டில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் பாதை பிரிந்து இரு வழி காணப்படுகிறது. நீ நின்று நிதானமாய் ஊருக்குப் போகும் வழியை சரியாய் தெரிந்தெடுத்து தொடருவாயல்லவா? ஆம். இருமார்க்கங்கள் உன் முன் தோன்றுகிறது. ஒன்று இடுக்கமான வழி மற்றொன்று விசாலமான வழி (மத். 7:13). விசாலமான வழி பெருங்கூட்டமான மக்கள்போம் வழி, பொய்யான வழி. மனிதனுக்கு செம்மையாய்த் தோன்றும் வழியுண்டு; எல்லாப்பாவமும் செய்யலாம். எல்லாம் ஒன்றிலிருந்து தோன்றிற்று, எல்லாம் ஒன்றிலே ஐக்கியமாகிவிடும். எல்லாப் பாவம் செய்கிறவனும், புண்ணியம் செய்கிறவனும் இறைவனின் பிம்பமே. நானல்ல இறைவனே செய்கிறுனென்று சொல்லிக் கொண்டு கொலை, விபச்சாரம், மதுபான வெறி, பொய் புரட்டு, பிறர்மனைவிழைதல், அநியாயம் செய்தல், தனக்கு எதிரியாய் எழும்புகிறவனை ஒழித்துவிட வேண்டும் எனசெயல்பட்டுக் கொண்டே சாமியையும் கும்பிட்டுமாய்மாலம் பண்ணும் விசாலமான வாழ்க்கை ஒருவழி. இன்னொருவழி, பொய், களவு, விபச்சாரம், பொருளாசை, குடிவெறி பிறர் மனை விழைதல், கொலை, அநியாயம் இவைகளை விட்டு, இன்ன செய்தாருக்கு அவர் நாண நன்னயம் செய்து விடல், பிறர் நன்மை நாடல் மெய்தேவ வணக்கம் செய்து தேவ பக்தியாய் ஜீவிக்கும் இடுக்கமான வாசல் ஆகும். நண்பனே நீ எந்த வழியைத் தெரிந்தெடுக்கிருய்.

1. மனம் போல வாழ்ந்து அதற்கு அநுசரணையாய் இருக்கும் கள்ள மதமாகிய கேட்டுக்குப் போகிற வழியாய் போகத் தீர்மானிக்கிருயா? அல்லது

2. உனக்காகத் தன் ஜீவனை சிலுவையில் கொடுத்த இயேசுவை விசுவாசித்து, அவர் வாக்கின்படி வாழ்ந்து, அவரைத் தொழுது கொண்டு, அவர் காட்டும் மார்க்கத்தில் செல்லும் மெய் மார்க்கத்தில் செல்லுகிருயா?

வில்லியம் கெல்லி என்பவர் சென்ற நூற்றுண்டின் பிற்பகுதியிலிருந்த கிறிஸ்துவின் பேரடியான். அவர் சிறந்த வேதாகம வல்லுனரும்கூட. மக்கள் அவரிடம் கடவுளின் சக்தியைக்கண்டார்கள். டப்ளின் நகரிலுள்ள திரித்துவக் கல்லூரி நிர்வாகிகள் அவரைப்பற்றி அறிந்திருந்தார்கள். அவர் அக்கல்வியில் பேராசிரியராக இருந்து பெருமையடைய வேண்டுமென்று அவர்கள் விரும்பினர்கள். ஆனல் அவர் அதில் சற்றேனும் ஊக்கம் காட்டவில்லை. அப்பொழுது அவர்கள் திகைத்துப்போய் "ஐயா உலகில் பேரும், புகழும் அடைய உங்களுக்கு விருப்பமில்லையா? என்று கேட்டார்கள். அவர் மறுமொழியாக பெரியோர்களே எந்த உலகில்?" என்று சரியான கேள்வியைக் கேட்டார். இதுதான் முக்கியம். நமது வாழ்க்கையின் மேலான விருப்பங்கள் எந்த உலகில் செழித்து இருக்க வேண்டும்.

ஒரே ஒரு வாழ்க்கை என்னும் எச்சரிக்கை என்றும் நம் செவிகளில் தொனிக்கட்டும். அது நம் வாழ்க்கையைச் சீர் திருத்தட்டும். நாம் மேற்கொண்டுள்ள

# கனியுள்ள வாழ்க்கை

"சிறுவர் பகுதி"

பசுஞ்சோலைகளும், நீரோடைகளும் அந்த பிரதேசத்தைச் சுற்றிலும் இருந்தன. அது மலைகளும், பள்ளத்தாக்குகளும் நிறைந்த பகுதி. இயற்கை எழில் நிறைந்த அந்த பிரதேசத்தின் மத்தியில் ஓர் ஊர் அமைந்திருந்தது. அது நம்முடைய தேவனாகிய கர்த்தர் விசாரிக்கிற ஊர். வருஷத்தின் துவக்கமுதல் முடிவு மட்டும் எப்பொழுதும் நம் தேவனாகிய கர்த்தரின் கண்கள் அதின் மேல் வைக்கப்பட்டிருக்கும். அங்கே கர்த்தருக்கு பயந்த பெரியோர்களும், சிறியோர்களுமாகிய நல்லோர்கள் வாழுகின்றபடியால் அந்த ஊருக்கு நல்லூர் என்ற பெயர் வழங்கலாயிற்று.

அந்த நல்லூரில் தேவபக்தி நிறைந்த ஒரு பெற்றோருக்கு 'யோசுவா' என்ற மகன் இருந்தான். அவன் சிறுவயது முதல் கர்த்தருக்கேற்ற ஞானத்திலும், அறிவிலும், பக்தியிலும் வளர்க்கப்பட்டான். அக்குடும்பத்தில் காலையிலும், மாலையிலும் தவறாமல் குடும்ப ஜெபம் ஏறெடுக்கப்பட்டு வந்தது. யோசுவாவும் அந்த ஜெபங்களில் தவறாமல் கலந்துகொள்ளுவான். ஜெபம் முடிந்ததும் அவனுடைய அப்பா அன்று வாசித்த வேத பகுதியை விளக்கிச் சொல்லிக் கொடுப்பார். மேலும் சில குறிப்பிட்ட வேத வசனங்களை மனப்பாடம் செய்து ஒப்பிக்குமாறு கற்றுக் கொடுப்பார். யோசுவா அவற்றைக் கவனமாகப் படிப்பான். ஞாயிறு பள்ளிக்கும் தவறாமல் சென்றுவருவான். அங்கே ஞாயிறு பள்ளி ஆசிரியர் கொடுக்கும் வேதபாடங்களையும் சரியாக படித்துவந்தான். தான் படித்துவந்த பள்ளிக்கூடத்திலும் நல்ல கெட்டிக்கார மாணவனாக விளங்கினான். ஆண்டுகள் கடந்தன. இவ்விதமாக வளர்ந்து வந்த யோசுவா பள்ளியிறுதி வகுப்பை (10 ஆம் வகுப்பை) எட்டிவிட்டான். இப்பொழுது அவனுக்கு வேதவசனங்களைக் குறித்து தியானிக்கும் பழக்கமும் இருந்தது.

ஒரு நாள் ஞாயிறுபள்ளியில் மத். 21:19; லூக். 13:6-9 என்ற வேதபகுதிகள் விளக்கிக் காண்பிக்கப்பட்டன. இயேசுகிறிஸ்து பசியாயிருந்தபோது அத்திமரத்திற்குஅருகே வந்து புசிப்பதற்கு அதில் கனிகள் ஏதாவது இருக்கிறதா என்று பார்த்தார். அந்த மரத்தில் இலைகளே அன்றி கனிகள் காணப்படவில்லை. அவர் அந்த மரத்தைப் பார்த்து இனி ஒருக்காலும் உன்னிடத்தில் கனி உண்டாகாதிருக்கக்கடவது என்றார். உடனே அத்திமரம் பட்டுப்போயிற்று.

ஒருவன் தன் திராட்சைத் தோட்டத்தில் ஓர் அத்திமரத்தை நட்டிருந்தான். அவன் வந்து அதிலே கனியைத் தேடினபோது ஒன்றும் காணவில்லை. அப்பொழுது அவன் தோட்டக்காரனை நோக்கி: இதோ மூன்று வருஷமாய் இந்த அத்திமரத்திலே கனியைத் தேடி வருகிறேன்; ஒன்றையும் காணவில்லை. இதை வெட்டிப்போடு. இது நிலத்தையும் ஏன் கெடுக்கிறது என்றான். அதற்கு அவன்: ஐயா, இது இந்த வருஷமும் இருக்கட்டும்; நான் இதைச் சுற்றிலும் கொத்தி, எருப்போடுவேன். கனி கொடுத்தால் சரி, கொடாவிட்டால், இனிமேல் இதை வெட்டிப்போடலாம் என்று சொன்னான். இந்த வேத பகுதிகள் இளைஞனை யோசுவாவின் மனதில் ஆழமாக பதிந்துவிட்டன. அவன் தேவனுக்குப் பயந்து நற்குணமுள்ளவனாய் வாழ்ந்தான்.

மழைக்காலம் வந்தது. மாலையில் பள்ளியிலிருந்து திரும்பும் நேரத்தில் பலத்த மழை பெய்தது. அவனது பள்ளிக்கூடத்திற்கு செல்ல ஒரு சிறிய ஆற்றைக் கடந்து தான் செல்லவேண்டும். மழை வெள்ளத்தால் ஆறு பெருக்கெடுத்து ஓடியது. மழைக்கோட்டை போட்டுக்கொண்டு யோசுவாவும் தனது நண்பர்களோடு பள்ளியிலிருந்து திரும்பிவந்து கொண்டிருந்தான். ஆற்றின் தண்ணீர் வேகமாக சென்று கொண்டிருந்தது. அதைக் கடப்பதற்குரிய ஒடுபாலத்தின் மேலாகவும் அதிக உயரத்தில் வெள்ளம் ஓடிக்கொண்டிருந்தது. அவனுடன் வந்த மற்ற நண்பர்களும் ஒரு நிமிடம் திகைத்து நின்றார்கள்.

யோசுவா சிலவினாடிகள் கண்களை மூடி ஜெபித்தான். தேவ உத்தரவு உண்டானது. கர்த்தர் யோசுவாவை நோக்கி: பொறு, கொஞ்ச நேரத்தில் தண்ணீர் குறையும் என்றார். தேவன் தன்னுடனே சொல்லியவற்றை தன் நண்பர்களுக்கு எடுத்துரைத்தான். காரியம் அப்படியே ஆயிற்று. கர்த்தர் அற்புதம் செய்தார். கொஞ்ச நேரத்தில் தண்ணீர் குறைந்தது. யோசுவாவைத் தொடர்ந்து அவனது நண்பர்களும் ஆற்றை பாலத்தின் வழியாக கடந்து போனார்கள். அவர்களும் விசுவாசித்து தேவனைப் பற்றிக் கொண்டார்கள்.

யோசுவாவின் வாழ்க்கையைப் பாருங்கள். கர்த்தர் அவனோடிருந்து தமது கிரியைகளை நடப்பித்து வருகிறார். நமது வாழ்க்கை எவ்வாறு உள்ளது? நாம் நற்குணங்களால் நிரம்பியிருக்க வேண்டும் என்பதோடு தேவனோடு தினமும் ஐக்கியமாக இருக்கவேண்டும். அவரோடு பேசவும், அவர் சத்தம் கேட்கவும் பழகவேண்டும். தேவனைக் கண்டு தரிசிக்க வேண்டும்.

நாம் ஞாயிறு ஆராதனைகளில் வெறும் வார்த்தைகளால் மட்டும் சாட்சிகொடுத்தால் போதாது. நமது வாழ்க்கையே சாட்சியாக இருக்கவேண்டும். நம்மைக்காண்கிற அயலகத்தாரும் தேவன் இவர்களோடு இருக்கிறார் என்று நம்மைப் பார்த்து சொல்லத்தக்கதாக தேவனுடைய வெளியரங்கமான கிரியைகள் நம்மில் காணப்பட வேண்டும். பொதுவாக சொல்லப்போனால் தேவன் நம்மை நடத்த வேண்டும். அப்பொழுது நமது வாழ்க்கை கனியுள்ள வாழ்க்கையாகக் காணப்படும். அப்படியில்லாத வாழ்க்கை அந்த அத்திமரத்தைப் போல பட்டுப்போய்விடும்; கர்த்தர் நம்மில் கனிகளைத் தேடுகிறார். நாம் அதிக கனிகளைத் தந்து நம்முடைய தேவனாகிய கர்த்தரை மகிழ்விப்போமாக.

"நானே திராட்சைச் செடி, நீங்கள் கொடிகள், ஒருவன் என்னிலும், நான் அவனிலும் நிலைத்திருந்தால், அவன் மிகுந்த கனிகளைக் கொடுப்பான்; என்னையல்லாமல் உங்களால் ஒன்றும் செய்யக்கூடாது" [யோவா. 15:5].

# சாட்சி

## மெய்யான இறைவன் யார்?

என்னுடைய தாய் தகப்பன்மார் இந்து மத வைராக்கியமானவர்களாதலால் என்னையும் பிறப்பிலிருந்தே இந்து வைதீக முறையில் வளர்த்து, பழனி முருகன் கோவிலுக்கு நேர்ந்து, மொட்டை போட்டு எனக்கு முருகேசன் என்று பெயர் வைத்தனர். இதற்கேற்ப நானும் தினம் சமயம் வாய்க்கும் போதெல்லாம் முருகனது படத்தை பெட்டியில் வைத்து பூஜை செய்வது வழக்கமாயிருந்தது. மற்றும் எல்லா இந்து கோவில்களுக்கும் சென்று விக்கிரகங்களை வணங்கி வந்தேன்.

1959 ஆம் ஆண்டு நான் நிலக்கோட்டை அரசு உயர் நிலைப்பள்ளியில் 8 ஆம் வகுப்பு படித்துக் கொண்டிருக்கும்போது திடீரென என் ஆத்துமாவில் ஒரு சமாதானக் குறைவு உண்டாயிற்று. ஏன் என்று எனக்கு அப்பொழுது புரியவில்லை. ஆனால் நான செய்த பாவங்கள் நினைப்பூட்டப்பட்டு, நான் ஒரு பாவி என்று உணர்ந்து மனஸ்தாபப்பட்டேன். ஆன்மீக துக்கம் உண்டாகி, என்னுடைய பாவப்பாரம் என்னை அமிழ்த்தினபடியால் இரவெல்லாம் முருகனையும், மற்ற தெய்வங்களையும் நான் கூப்பிட்டு கெஞ்சி மன்றாடினேன். எந்த இந்து தெய்வமும் பதில் கொடுக்கவில்லை. அப்போது உலகத்திலே "மெய்யான இறைவன் யார்?" என்ற கேள்வி எழும்பலாயிற்று.

இது வரை வழிபட்டு வந்த முருகனோ, மற்ற தெய்வங்களோ விடுதலையளிக்காததால், இன்னும் மூன்று நாட்களுக்குள் மெய்யான இறைவன் இருப்பாரானால் தம்மை வெளிப்படுத்தி, என்னுடைய பாவ பாரத்தை நீக்கி எனக்கு விடுதலையளிக்க வேண்டும் என தனியாக ஒரு அறையில் உட்கார்ந்து தியானம் செய்தேன். இப்படி தியானம்பண்ணின நாட்களில் ஒரு சம்பவம் நடந்தது.

நன்றாக சுகமாயிருந்து வீட்டில் வேலைகளை செய்து கொண்டிருந்த எனது தாயாரின் காலில் திடீரென்று நரம்பு பிடிப்பு ஏற்பட்டு வேதனையால் துடித்தார்கள். இதை என்னால் சகிக்கமுடியவில்லை, என்னுடைய அம்மா என்னைக் கூப்பிட்டு, பக்கத்து வீட்டில் குடியிருக்கும் நசரேத்தைச் சேர்ந்த பொடியமணி அம்மாளை கூட்டிக்கொண்டு வந்து தனக்கு ஜெபம்பண்ண வேண்டுமெ சொன்னார்கள். கிறிஸ்தவர்கள் எனக்கு பிடிக்காதவர்களாததால், அந்த கிறிஸ்தவ அம்மாவை அழைத்து வர தயங்கினேன். ஆயினும் பெற்ற தாயின் வேதனை தாங்கக் கூடாதிருந்ததால், வேறுவழியின்றி அந்த அம்மாவை விரைந்சொல்லி கூப்பிட்டு வந்தேன். அவர்கள் தனக்காக வீட்டில் வைத்திருந்த ஜெப எண்ணெயைக் கொண்டுவந்து என் தாயாரின் காலில் பூசி ஜெபம் பண்ணினார்கள். உடனே அற்புதமாய் பரிபூரண விடுதலையை தேவன் கொடுத்தார். அச்சமயத்தில் எனக்கு இயேசு இறைவனாகத்தான் இருக்கவேண்டும்; இல்லையெனில் இப்பேர்ப்பட்ட அற்புதம் உடனே நிகழ்ந்திருக்காது என எண்ணி அந்த அம்மாவிடம் இயேசுவைப்பற்றி கேட்க என்வரினேன்.

[தொடரும்]

# புதிய எருசலேம் சபையின் 27வது ஆண்டு விழா [8.8.1968-8.8.1995]

"அற்பமான ஆரம்பத்தின் நாளை யார் அசட்டை பண்ணலாம்? பூமியெங்கும் சுற்றிப்பார்க்கிறவைகளாகிய கர்த்தருடைய ஏழு கண்களும் செருபாபேலின் கையில் இருக்கிற தூக்கு நூலைச் சந்தோஷமாய்ப் பார்க்கிறது என்றார்" (சகரி. 4:10).

27 ஆண்டுகளாக ஒரே [illegible] (சபையாக) நிற்கும் சபையின் ஆண்டு விழாவை சந்தோஷமாகக் கொண்டாடுங்கள்.

**CHIEF PASTOR N. LAZAR.**

### அறிவிப்புகள்

1 முழு இரவு விழிப்பு ஜெபம்
10 [வியாழன்] ஆகஸ்ட் 1995
8 [வெள்ளி] செப்டம்பர் 1995
9 [திங்கள்] அக்டோபர் 1995

2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
ஆண்டு சந்தா Rs 15-00
வெளிநாடு Rs. 100-00

அனுப்ப வேண்டிய முகவரி :
CHIEF PASTOR N. LAZAR
"NEW JERUSALEM CHURCH"
CHURCH LANE, TILAK NAGAR,
DARGA ROAD, BHANDUP,
BOMBAY-400 078 INDIA.

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்

4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்

5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக பெரிய எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078 Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் *133* - AUG 95

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவார்(ர்) என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்."

-மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

பற்றும்
தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் கிறிஸ்துவுக்கொப்பான
விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவைப்
பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கட்டப்படவும்
பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் பூரண
சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் வெளியிடப்படுகிறது.
வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

"தெயோப்பிலுவே, இயேசுவானவர்
இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி அப்போஸ்தலருக்கு
(தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் எனக் காண்பித்து
கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)"
எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர்
நான் ஆண்டவரே, அதெப்படி? என்றேன்.
வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே,

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு
ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளை
களும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார்
(அப். 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N LAZAR

## இதழின் உள்ளே . . .

# ஆசிரியர் உரை

உலகில் இடறல் உண்டாகும். ஆனால் எவனால் வருகிறதோ அவனுக்கு ஐயோ! என்றார் இறைவனும் இயேசு மத். 18:6-9. இந்நாட்களில் சிலர் தாங்கள் செய்கிறது இன்னதென்று அறியாமல் பேசுகிறார்கள், செயல்படுகிறார்கள். அதி லும் விசேஷமாய் அந்த வலுசர்ப்பத்தின் வாலினால் கீழே விழத்தள்ளப்பட்ட சில நட்சத்திரங்கள் (ஊழியர்கள்) வெளி. 12:4 விழும்போது நடக்கிற, கிறிஸ்தவ ஜீவியத்தில் நடக்கிற விசுவாசிகள் மேல் விழுந்து அவர்களையும் கீழே விழத்தள் ளிப்போடுகிறார்கள் என்று கர்த்தர் காண்பித்துள்ளார். இவர்களுக்கு ஐயோ!

எப்படியும் யோவான் 17-ம் அதிகாரத்தில் இயேசு ஜெபித்ததும் அவரு டைய திருவுளச் சித்தமுமான "அவர்கள் ஒன்றாயிருக்க வேண்டும்" என்ற ஜெபத்தை, நோக்கத்தை முறியடிக்க வேண்டும் என்று சாத்தானும் அவனுடைய சைன்யங்களும் கங்கணம் கட்டிக்கொண்டு செயல்படுகின்றனர். அவனுடைய ஏஜெண்டுகளாய் அவன் செய்யும் வேலையை வெளி. 12:10 அவன் கையாட்க ளாய் சிலர் செய்கிறார்கள். இவர்கள் வேதாகமத்தையும் தூக்கி நடக்கிறார்கள்; வேதத்தை போதிக்கிறவர்கள் போலும் நடிக்கிறார்கள்; திருடனோடும், விபச்சாரக் காரனோடும் இவர்களுக்கு பங்குண்டு [சங். 50:17-22]. இவர்கள் நிமித்தம் சத் திய மார்க்கம் தூஷிக்கப்படும் இவர்களுடைய வாய் சாலகத்தினால் அநேகர் இடறிவிழுவார்கள். இவர்களுக்கு வரும் ஆக்கினை அமர்ந்திருக்காது 2 பேது. 3:3 நிச்சயமாகவே முடிவு வரும்.

ஆகையால் தேவ ஜனங்கள் எந்தக்காரியமானாலும் பேசி முடிவு செய்து இயேசுவின் ஜெபத்தை யோவா. 17-அதி நிறைவேற்றவும். அதற்கு உட்படாத வர்கள் சாத்தானுடைய கையாட்களே. இவர்களை விட்டு விலகுங்கள் ரோம. 16: 17,18; 2 தெச. 3:6,14.

இதோ கர்த்தர் வருகிறார்.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

[CHIEF PASTOR N. LAZAR]

[தொடர்ச்சி]

# கிறிஸ்தவ மார்க்கம்

## 2 ஆராதனை:-

ஒரு விசுவாசி அவிசுவாசியுடன் ஆராதனை செய்யக்கூடாது. பழைய ஏற்பாட்டிலும், புதிய ஏற்பாட்டிலும் அதிக முக்கியமாய் காணப்படுவது ஒரு விசுவாசி தேவனை விட்டு பின்வாங்கியவுடன் அவனை சபையை விட்டு தள்ளிவிட்டார் 1 கொரி. 5:11-13. அவிசுவாசிகளோடு உள்ள ஆராதனையை பரிசுத்தவான்கள் எதிர்க்கிறார்கள் [சங். 84:10; 120:5-7; 4:3]. இஸ்ரவேல் புத்திரர் தேவனுக்கு ஆராதனை செய்வதற்காக எகிப்தைவிட்டு புறப்பட்டார்கள் யாத். 6:25-27). ஆபிரகாம் தேவனுக்கு ஆராதனை செய்வதற்காக தன் தேசத்தை. இனத்தை எபி. 11:8; சகோதரனை ஆதி. 13:8,9 சொந்த மகனையும் விட்டார் ஆதி. 21:10-14. தேவனை அவருடைய வசனத்தின் பிரகாரம் ஆராதனை செய்யயாரும் தனையாயிருப்பாராகில் அவர்களை விட்டு பிரித்தெடுத்த அனுபவத்தில் நாம் ஜீவிக்க வேண்டும்.

### பிரித்தெடுத்த ஜீவியம் செய்கிறவர்களுக்குள்ள ஆசீர்வாதங்கள்:-

ராகாப் என்கிற ஸ்திரீ தேவனுடைய பரிசுத்தவான்களை ஏற்றுக்கொண்டு அவிசுவாசிகளிடமிருந்து பிரித்தெடுக்கப்பட்ட ஜீவியம் செய்ய முன்வந்தபடியால் கர்த்தர் அவளையும், அவள் குடும்பத்தையும் ஆசீர்வதித்தார். அவள் மற்ற பொல்லாதவர்களோடு அழிக்கப்படவில்லை [யோசு. 2:17-20; 6;22,23; எபி. 11:31]. பிரித்தெடுத்த அனுபவத்தில் ஜீவிக்கிறவர்கள் தன் காலத்தில் தன் கனியைத் தந்து ஆசீர்வதிக்கப்படுவார்கள் (சங். 1:2,3). தேவனுடைய பிள்ளைகள் பரிசுத்தவான்களோடு சேர்ந்து தேவனை ஆராதிக்க வேண்டும்.

4. பின்வாங்கிப் போனவர்களிடமிருந்து நாம் பிரிந்து ஜீவிக்க வேண்டும். இரட்சிக்கப்பட்டு ஞானஸ்நானம் பெற்றவர்கள் மாத்திரம் கட்டப்பட்டிருக்கும் சபையில் ஒருவன் சத்தியத்தைவிட்டு விலகிப்போனால் அவனை சபையை விட்டு தள்ளினதாய் காண்கிறோம் கொரிந்து சபையில் அவனை சபையை விட்டு தள்ளினார்கள் [1 கொரி. 5:11-13]. ஒரு விசுவாசி குற்றம் செய்தால் அவனை சபையை விட்டு தள்ளுவதற்கு சட்டமுண்டு. ஒருவன் ஏதாகிலும் தப்பு செய்ததை வேறொருவன் அறிந்தால் அவனை சபைக்கு அழைத்துவந்து அவனுக்கு தப்பை குறித்து உணர்த்த வேண்டும்.

ஒருவன் கீழ்ப்படியாமல் போனால் தேவ ஞானம் பெற்ற இரண்டு பேர்கள் அவனிடம் போய் பேச வேண்டும். அவன் அதற்கும் கீழ்ப்படியாமல் போனால் அதை சபைக்கு அறிவித்து அவனை விசாரித்து அவனை கேட்கவேண்டும். அவன் அதற்கும் கீழ்ப்படியாமல் போனால் அவனை சபையைவிட்டு தள்ளவேண்டும் (மத். 18: 6,7). இப்படி அவனுக்கு உபதேசிக்கிறவர்கள் தேவ பயத்தோடும். ஜெபத்தோடும் அவனை அணுகவேண்டும் (யூதா 22,23). ஒரு விசுவாசி தேவ ஊழியக்காரன் எல்லாவற்றிலிருமிருந்து பிரித்தெடுக்கப்பட்டவனாய் பரிசுத்த ஜீவியம் செய்ய வேண்டும்.

பிரித்தெடுத்த ஜீவியத்தின் அனுபவம் இல்லாமல் பெத்தேலில் ஜீவியம் செய்த வாலிப தீர்க்கதரிசி கள்ளத்தீர்க்கதரிசியினுடைய சாப்பாட்டை சாப்பிட்டு மரித்துப் போனான் (1 இரா. 13) ஒழுங்கில்லாத எல்லாரையும் விட்டு விலகவேண்டுமென்று அப். பரிசுத்த பவுல் சொல்லுகிறார் [தீத். 3:6]. அதுமாத்திரமல்ல. வேத புரட்டனாயிருக்கிறவனுக்கு ஒன்று இரண்டு தடவை புத்தி சொன்னபிறகு அவனை விட்டு நாம் விலக வேண்டும் [தீத். 3:10].

## 5 துர் உபதேசம் செய்கிறவர்களின்று வேறுபட்ட ஜீவியம்:-

துர் உபதேசத்தை நாம் சர்வ வல்லமையோடு எதிர்த்து அப்படிப்பட்டவர்களை விட்டு நாம் விலகி ஜீவிக்க வேண்டும். ஜீவியத்தில் தப்பிப்போனவர்கள் மனந்திரும்பி வந்தார்கள் என்று எழுதப்பட்டுள்ளது. ஆனால் துர் உபதேசம் செய்தவர்கள் திரும்பி வந்ததாய் எழுதப்படவில்லை. [உ-ம்] தாவீது போன்ற பக்தர்களில் தப்பு வந்ததாய் காண்கிறோம். அவர்கள் தாங்கள் செய்த தப்புக்களுக்காய் மனந்திரும்பி கண்ணீரோடு திரும்பி வந்தார்கள். இமெனேயும், பிலேத்தும் சத்தியத்தைவிட்டு விலகி உயிர்த்தெழுதல் நடந்தாயிற்று என்று சொல்லி சிலருடைய விசுவாசத்தைக் கவிழ்த்துப்போட்டார்கள் (2 தீமோ. 2:18).

இவர்களுடைய ஜீவியத்தில் அசுத்தமில்லை; ஆனால் உபதேசத்தில் அசுத்தம். ஆகையால் சபை அவர்களைத் தள்ளிவிட்டது (1 தீமோ. 1:20). இப்படிப்பட்டவர்களை விட்டு விலகவேண்டுமென்று அப். பவுல் சொல்லுகிறார் (ரோம. 16:17). பிலேயாம் ஒரு தீர்க்கதரிசி. அந்த பக்தன் நன்றாய் ஜெபிக்கக் கூடியவன்; பாலாக் ராஜாவுக்காக நன்றாய் தீர்க்கதரிசனம் உரைத்தவன். அவன் தீர்க்கதரிசனம் அப்படியே நிறைவேறிற்று. நீதிமான் மரிக்கிறதுபோல நான் மரிப்பேனாக. என் முடிவு அவன் முடிவுகள்போல் இருப்பதாக எண். 23:10 என்று ஜெபித்தான். ஆனால் அவன் பொருளாசையில் விழுந்து, தேவ ஜனங்களை பாவம் செய்ய சதி செய்தான். அவனுடைய மரணம் எப்படி இருந்ததென்றால் சத்துருவைப்போல் பட்டயத்தால் வெட்டி கொல்லப்பட்டான் (எண். 31:8). எவ்வளவு ஜெபித்தாலும், தீர்க்கதரிசனம் பேசினாலும் அவனால் சொல்லப்பட்டவைகள் நிறைவேறினாலும் தேவனால் சொல்லப்பட்டபிரகாரம் பிரித்தெடுக்கப்பட்ட ஜீவியத்தில் ஜீவிக்காமல் போனால் கண்டிப்பாய் தண்டனை கிடைக்கும். இதில் சந்தேகமே இல்லை. பிரியமானவர்களே பிலேயாமின் பிரித்தெடுக்கப்படாத ஜீவியத்தின் பலன் என்ன? இஸ்ரவேலிலே 23,000 பேர் ஒரே நாளில் மரித்தார்கள்.

இயேசுவானவர் இவ்வுலகில் தம்முடைய சீஷர்களுக்கு உபதேசிக்கையில் பரிசேயர், சதுசேயர் என்பவர்களின் புளித்த மாவைக்குறித்து எச்சரிக்கையாயிருங்கள் என்றார். புளித்த மா என்பது துர் உபதேசம். இந்நாட்களிலே அநேகர் தேவனுடைய பரிபூரண உபதேசத்திலிருந்து வீழ்ச்சியடைந்து துர் உபதேசங்களையும், தங்களுக்கு இலகுவாய்த் தோன்றுகிற உபதேசங்களிலும் வீழ்ச்சியடைகிறார்கள். இவர்களைக் குறித்து எச்சரிக்கையாயிருக்க வேண்டும். இவர்களோடு ஐக்கியம் வைக்கக் கூடாது. இவைகளிலிருந்து பிரிந்த ஜீவியம் நமக்கு வேண்டும். பரிசேயர் நல்ல பக்தர்கள், நன்றாய் ஜெபிக்கிறவர்கள், ஜீவியத்தில் பரிசுத்தமுள்ளவர்கள்; ஆனால் உபதேசத்தில் தப்பாயுள்ளவர்கள். நன்றாய் ஜெபிக்கிறவர்களும் ஜீவியத்தில் பரிசுத்தமுள்ளவர்களானதால் உபதேசத்தில் எப்படியும் இருக்கட்டும் என்று இயேசுவானவர் நினைக்கவில்லை. அவர்களுடைய உபதேசத்தை இயேசுவானவர் எதிர்த்தார். துர் உபதேசம் செய்கிறவர்கள் சபையில் எழும்புவார்கள். அவர்களைக் குறித்து எச்சரிக்கையாயிருக்க வேண்டும் என்று அப்போஸ்தலர்கள் எழுதி வைத்தார்கள் [அப். 20:30; 1 பேது. 2:12].

தேவனுடைய பிள்ளைகள் துர் உபதேசத்தை எதிர்த்து அவர்களை விட்டு விலக வேண்டுமென்று வேதாகமத்தில் சர்வ வல்லமையோடு சொல்லப்பட்டுள்ளது. இதை வாசிக்கிற பிரியமானவர்களே நீங்கள் ஐக்கியப்பட்டிருக்கிறது எப்படிப்பட்டது

உபதேசத்தில் பரிசுத்தமுள்ளவர்களோடு ஐக்கியப்பட்டிருக்கிறீர்களா? உபதேசத்தில் ஜீவியத்தில் பரிசுத்தமுள்ளவர்களாய் கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தப்படுவதற்கு கர்த்தர் உங்களுக்கு அனுக்கிரகம் பண்ணுவாராக.

(தொடரும்)

"...கொஞ்சமாவ்னது பிசைந்த மாவையெல்லாம் உப்பப்பண்ணும்"
[கலா. 5:9].

## திருச்சபை

(தொடர்ச்சி)

7. மனந்திரும்பி திருமுழுக்கு பெற்ற ஒவ்வொருவரும் தான் எல்லாக்காரியங்களிலேயும் வேதவாக்கியங்களின்படி கிறிஸ்துவால் மட்டும் ஆளப்படவேண்டும் என்ற வெளிப்படையான நோக்கமே ஐக்கியத்திற்கு அடிப்படையாக இருக்க வேண்டும். காரணம் காட்டி வேதவாக்கியங்களை ஒதுக்கி விடல், புறக்கணித்தல் அல்லது திரித்துக் கூறுதல் முதலிய குணங்கள் ஒரு சகோதரரில் இருக்குமானல் ஐக்கியத்திலிருந்து விலக்கக் கூடாது. அந்த சகோதரர் இன்னும் ஐக்கியத்தில் இருக்கிறார்.

8. ஒருவர் தன் உண்மையுடைமையைக் கிறிஸ்துவிடமிருந்து சாத்தானுக்கு மாற்றிக் கொள்ளுதல் இதயத்தில் நடக்கும் ஒரு செயல். ஒருவருடைய வாழ்க்கையில் இநத மாற்றம் எப்பொழுது நடந்தது என்பதை வெளிப்புற சூழ்நிலைகளை ஆதாரமாகக் கொண்டு கூற இயலாது. தேவன் மட்டுமே இதனை அறிவார். வேதவாக்கியங்களின்படி கிறிஸ்துவால் வழி நடத்தப்பட ஒரு சகோதரன் ஒப்புக் கொடுக்கவில்லை என்பது வெளிப்படையாய் தெரியுமானல் அப்பொழுது இந்த தவறிலிருந்து அவன் தன்னை திருத்திக் கொள்ளமாட்டான். அத்தகையவன் ஐக்கியத்திலிருந்து நீக்கப்பட வேண்டும். இது ஒரு கடைசிக் கடுமையான நடவடிக்கையாகும் (1 கொரி. 5:1-12; 2 தெச. 3: 6-16; தீத்து 3:10).

9. ஐக்கியத்திலிருந்து ஒரு சகோதரனை இவ்வாறு விலக்குவதன் ஒரு காரணம், அவர் புத்தி தெளிந்து தன் தவறுகளுக்காக மனம் வருந்தி, மனந்திரும்பி ஜெபம் செய்து திரும்பவும் கர்த்தரிடம் சேர்க்கப்பட வேண்டுமென்பதே.

கடவுள் விரும்புகிறதுபோல் சகோதரர்களின் ஐக்கியம் இருக்குமானல், ஐக்கியத்திலிருந்து ஒருவரை விலக்குதல் ஓர் இழப்பை உண்டாக்கும். விலக்கப்பட்டவருக்குத் தனிமை உணர்வும், துக்கமும் உண்டாகும்.

10. ஊர் பேச்சைக் கேட்டு, மற்றவர் துர் ஆலோசனைக்கு உட்பட்டு, ஐக்கியத்திலிருந்து விலகிய ஒருவர் கடவுளின் திருவாக்கின்படி ஆளப்படுவதுதான் தன் வாழ்க்கையின் நோக்கம் என்பதை தக்க சான்றுகளுடன் நிரூபிக்கவேண்டும் அல்லது தவறுதலுக்குக் காரணமான சகோதரருடன் ஒப்புரவாகுதலுக்கு முதலில் முயற்சிக்க வேண்டும். இவ்வாறு செய்யாமல் இருப்பவன் தன்னுடைய நடத்தைக்காக வருத்தப்படாதவன் மாமிச ஆவிக்குரியவன்;

இத்தகையவனையும் ஐக்கியத்திலிருந்து நீக்கிவிட வேண்டும் (ரோமர் 16:17,18). சபையில் பிரிவினை உண்டாக்குகிறவர்களைப் பற்றி பார்க்கிறோம். இப்படிபட்டவர்களைக் குறித்தும் எச்சரிக்கையாயிருக்க வேண்டும். அநேகமாக கள்ளப்போதகர்கள், பொய் போதகம் செய்கிறவன் ஒரு பொய்யன். அத்தகையவனைக் குறித்துக் கொள்ள வேண்டும். ஆண்டவருடைய திருச்சபை சரீரத்தின் ஒற்றுமைக்கு பங்கம் விளைவிக்கும்படி முயற்சிக்கிறவனைக் குறித்து எச்சரிக்கையாயிருக்க வேண்டும்.

---

புதிய ஏற்பாட்டின் ஒழுங்கு, ஒழுக்கம், தன்னடக்கம் (1 கொரி. 14:40; 2 தீமோ.1:7).

**ஆகானுடைய பாவம்:-**

1. ஊழியர்களுக்குத் தெரியாமல் பாவம் இருக்கலாம். ஆகானுடைய மீறுதல் யோசுவாவுக்குத் தெரியாது.

2. திருச்சபையில் இருக்கும் பாவம் செய்கிறவர்களைவிட, மற்றவர்களை அதிகம் பாதிக்கும். குற்றமில்லாதவர்கள் இடறுதலுக்கும், விழுவதற்கும் காரணமாக அமையும்.

3. திருச்சபையில் பாவம் இருக்கிறது என்று தெரிந்தவுடன் அதைக்குறித்து உடனே செயல்படவேண்டும்.

4. திருச்சபை கூறும் பரிசுத்தத்தின் அளவுக்கு வாழ்ந்தால் தான் அதனுடைய விரோதிகளுக்கு முன்னால் நின்று வாழ இயலும்.

5. திருச்சபையை தூய்மைப்படுத்துவதற்கும்,மாசுகளை நீக்குவதற்கும் அவசியமான நடவடிக்கைகளை மேற்கொள்ள திருச்சபை மக்கள் ஒத்திப்போடக் கூடாது.

6. பாவம் செய்வதற்குரிய படிகள் ஆகானுடைய அறிக்கையில் காணப்படுகிறது. நான் கண்டு, இச்சித்து, எடுத்துக் கொண்டேன்: அதை பூமிக்குள் புதைத்து வைத்திருக்கிறேன்.

7. சபையில் நடவடிக்கை மேற்கொள்ளுவதற்குமுன் குற்றத்திற்குரிய சான்றுகள் நிருபிக்கப்பட வேண்டும்.

8. முழு திருச்சபையும் தண்டனை கொடுப்பதிலே செயல்பட வேண்டும்.

9. கடவுளுடைய மக்கள் மத்தியில் பாவம் இருக்கும்பொழுது அதனை அறிந்தும் அவர்கள் பொறுத்துக் கொண்டு இருப்பார்களானால் கடவுளின் கோபம் அவர்களுடைய மக்களுக்கு விரோதமாய் எழும்பும்.

**தனி ஒருவருடைய குற்றத்தை திருத்துதல்:-**

தனிப்பட்ட ஒருவருடைய தவறுகள் வெளிப்படையாய் மற்றவர்களுடைய அறிவுக்கு எட்டுவதற்குமுன் திருத்தப்பட வேண்டும் என்பதற்கான காரணங்கள்.

1. ஏற்பட்ட சிக்கலை லேசாகத் தீர்த்துவிட ஏதுவுண்டாகியும் ஒரு பிரச்சினையில் அதிக மக்கள் உள்ளானார்கள் என்றால் பிரச்சனையும் எளிதில் தீர்ப்பதற்குப் பதிலாக இன்னும் சிக்கலாகும்.

2. நடந்துவிட்ட மீறுதல் பெலவீன சகோதரர்களைப் பாதிக்காமல் தடுப்பதற்கு.

3. இழந்து போனவர்களை இரட்சிக்கும் பெரும் பணியிலிருந்து திருச்சபையின் கவனத்தை திருப்பாமல் இருப்பதற்கு.

4. கிறிஸ்துவின் நற்செய்தியை உலகம் நிந்தனை செய்யாமல் இருப்பதற்கு. தனி ஒருவனுடைய குற்றத்தினால் பாதிக்கப்பட்ட ஓர் சகோதரர் தனித்திருக்கும்போது உணர்த்து; அதற்கு செவி கொடாவிட்

டாம் இரண்டொருவரை உடன் அழைத்து செல். அதற்கும் செவி கொடாவிட்டால் சபைக்கு தெரியப்படுத்து, அதற்கும் செவி கொடாவிட்டால் சபையை விட்டு தள்ளுங்கள் மத். 18:16-17. நடவடிக்கைகளின் நோக்கம் சகோதரனை ஆதாயப்படுத்திக் கொள்ளுதல்.

## வெளிப்படையாக திருத்தும் ஒழுங்கு.

உங்கள் சகோதரர்களில் ஒருவனுக்கு வேறொருவனோடு வழக்குண்டானால் விவேகிகளைத் தெரிந்து கொண்டு தீருங்கள்; இல்லாவிட்டால் நஷ்டத்தை சகித்துக் கொள்ளுங்கள் [1 கொரி. 6:1-8].

1. கிறிஸ்தவர்கள் புறசமயத்தார் நீதிமன்றங்களில் சகோதரர்களுக்கு விரோதமாய் வழக்குத் தொடர்வது கிறிஸ்தவ திருச்சபையின் சாட்சிக்கு தகுதியானது அல்ல.

2. சகோதரர்களுக்குள்ளே ஏற்படும் தகராறுகள் திருச்சபைக்குள்ளே தீர்த்துக் கொள்ளப்படவேண்டும்.

3. சிக்கல் ஏற்படுவதே திருச்சபைக்கு இகழ்ச்சியை உண்டாக்கும் காரியமாகும்.

[தொடரும்]

"சகோதரனுக்கும், சகோதரனுக்கும் உண்டான வழக்கைக் தீர்க்கத்தக்க விவேகி ஒருவனாகிலும் உங்களுக்குள் இல்லையா?" [1 கொரி. 6:5].

---

# விசுவாச வீழ்ச்சி

ஆதாமின் மீறுதலினால் மனுக்குலம் பாவத்திற்கு கீழாக விற்கப்பட்டது. எல்லாரும் பாவம் செய்து கெட்டுப்போனார்கள். மனிதர்கள் தேவ பகைஞராய் இருந்தார்கள். ஆனாலும் அன்பிலே பூரணரான தெய்வம், தம்முடைய ஒரேபேறான குமாரனை (இயேசுவை) விசுவாசிக்கிறவன் கெட்டுப் போகாமல் நித்திய ஜீவனை அடையும்படிக்கு அவரைத் தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்பு கூர்ந்தார் (யோ. 3:16). இந்த இயேசுவை சுவிசேஷமாக பிரசங்கிக்கும்படி தாம தெரிந்து கொண்ட அப்போஸ்தலரிடம் ஒப்புவித்தார் [தீத். 1:3,4].

தேவனால் அனுப்பப்பட்டவர்கள், சுவிசேஷத்தை எங்கும் சென்று பிரசங்கித்தார்கள் வசனத்தை எல்லாரும் கேட்டார்கள், ஆனாலும் நித்திய ஜீவனுக்கு நியமிக்கப்பட்டவர்கள் விசுவாசித்தார்கள் [அப். 13:48]. விசுவாசித்தவர்கள் தங்கள் பாவங்களை [தீயச் செயல்களை] வெளிப்படுத்தி அறிக்கையிட்டார்கள் [அப். 19:18]. அப்போஸ்தலனை பற்றிக் கொண்டார்கள் (அப். 17:34) ஞானஸ்நானம் பெற்றார்கள் அப். 16:33, பரிசுத்தாவியின் அபிஷேகம் பெற்றார்கள் அப். 8:17. திருச்சபையோடே சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள் அப். 2:41.

அப்போஸ்தலரோடே சேர்ந்து, அவர்கள் உபதேசத்திலும், அந்நியோந்நியத்திலும், அப்பம் பிட்குதலும், ஜெபம் பண்ணுதலிலும் உறுதியாய்த் தரித்திருந்தார்கள்.

அப். 2:42. இவர்கள் விசுவாசிகள் என்று பரிசுத்த ஆவியானவர் குறிப்பிட்டிருக்கிறார் அப். 2:44 நாமும் விசுவாசிகள். காண்கிறதை விசுவாசிப்பது விசுவாசமல்ல. காணாதவைகளை விசுவாசிக்கிறது தான் விசுவாசம். இதை உடையவர்களே விசுவாசிகள். தேவன் உண்டென்று விசுவாசிக்கிறோம், ஆகையால் ஜெபம்பண்ணுகிறோம்.

இயேசு பாவம் போக்கும் பலி என்று விசுவாசிக்கிறோம், ஆகையால் பாவங்களை அறிக்கை செய்கிறோம். இயேசு உயிர்த்தெழுந்தார் என்று விசுவாசிக்கிறோம், ஆகையால் சபையாக காத்திருக்கிறோம்; ஆகையால் அவர் நாமத்தை தொழுகிறோம். அவர் வருவாரென்று விசுவாசிக்கிறோம்; ஆயத்தப்படுகிறோம். நித்திய ஜீவன் [மகிழ்ச்சி] உண்டென்று விசுவாசிக்கிறோம், ஆகையால் பாடுகளை சகிக்கிறோம்.

நம்முடைய அஸ்திபாரம் விசுவாசமே யூதா 20. இந்த விசுவாசம் மகாபரிசுத்தமுள்ளது யூதா 20 இந்த விசுவாசம் பொன்னை காட்டிலும் விலையேறப் பெற்றது 1 பேது. 1:7. இந்த விசுவாசம் அருமையானது [2 பேதுரு 1:1]. எதிராளியாகிய பிசாசும் அவன் சகாக்களும் மதிப்பிற்குரிய இந்த விசுவாசத்தை நம்மிலிருந்து எடுத்துவிட முழுமுச்சோடு போராடுகிறார்கள். அந்த போராட்டத்தின் விளைவாக, விசுவாசத்திற்குண்டாகும் பாதிப்புகள்.

## விசுவாசத்தை விட்டு விலகுதல்:-

வஞ்சிக்கிற ஆவிகளுக்கும், பிசாசுகளின் உபதேசங்களுக்கும் செவி கொடுக்கிறவர்கள், இப்படி விசுவாசத்தை விட்டு விலகிப் போவார்கள் [1 தீமோ. 4:1]. சத்தியத்தின் மேல் உள்ள அன்பை அங்கீகரியாதவர்களும், பாவம் செய்ய ஆசை உள்ளவர்களும், பொய்யை நம்பி வஞ்சகத்திற்குள்ளாவார்கள் [2 தெச. 2:10,11,12].

## விசுவாசத்தை விட்டு வழுவிப் போகுதல்:-

சிலருக்கு திடீரென பண ஆசை உருவாகி, அது பெரிதாகி, பணத்தை இச்சித்து, கொஞ்ச கொஞ்சமாய் விசுவாசத்தை விட்டு வழுவிப் போவதுண்டு 1 தீமோ. 6:10. சிலர் ஞானமென்று பொய்யாய் பெயர் பெற்றிருக்கிற கொள்கையின் விபரீதங்களுக்கு உட்படுவதால் விசுவாசத்தை விட்டு வழுவிப்போவதுண்டு. கேட்பதற்கு இனிமையாக இருக்கும், ஆனால் ஒரு பிரயோஜனமிருக்காது (1 தீமோ. 6:20,21). திருச்சபையின் பிள்ளைகள் பிரயோஜனமற்ற பிரசங்கங்களை கேட்கக்கூடாது, இரட்சிக்காமாட்டாத உபதேசங்களை கைக்கொள்ளவும் கூடாது.

## விசுவாசத்தினின்று திருப்பப்படுதல்:-

துஷ்ட மனிதர்கள், தங்கள் சுய ஆதாயத்திற்காக விசுவாசிகளை விசுவாச மார்க்கத்தினின்று திருப்பி, பாதையை விட்டு வேறு வழியில் அலையவிடுவதுண்டு அப். 13:8. இதற்காக மந்திரவாதத்தை பயன்படுத்துவோருமுண்டு.

## விசுவாசமாகிய கப்பல் சேதப்படுதல்.

விசுவாசம் ஒரு கப்பல் போன்றது. கப்பல் தண்ணீரில் சென்றாலும் தண்ணீர் அதற்குள் வராது. ஒரு சின்ன துவாரம் விழுந்தாலும் தண்ணீர் உள்ளே வரும்; கவனியாது விட்டால், கப்பலை தண்ணீர் நிரப்ப அமிழ்ந்து போக நேரிடும். தூஷணக்காரர்களுடைய வார்த்தைகளை கவனிப்போர், தங்கள் விசுவாசக் கப்பலை சேதப்படுத்த இடங்கொடுப்பர். ஓ அந்த பரிசுத்தவான் முன்போல் இப்போது பரிசுத்தமாக இல்லை, ஜெபம் பண்ணுவதில்லை, கெட்ட வார்த்தை பேசுகிறார், இப்படிப்பட்ட வார்த்தைகளை கேட்டு இடறலடைவோர் தங்களது விசுவாசமாகிய கப்பலை

சேதத்திற்குள்ளாக்கி, தெளிவடையாமல் புத்தி கெட்டு போகையில் விசுவாசத்தை இழந்து போவார்கள்.

### விசுவாசம் கவிழ்க்கப்படுதல்:-

கள்ளப் போதகர்கள் பேய் சொப்பனங்களை கண்டு, பொய்யை தரிசித்து, அல்லது தப்பு கணக்குப் போட்டு, இயேசு வந்து விட்டார், அல்லது இந்த வருஷம், இந்த மாதம், இந்த தேதி, இந்த மணிவேளையில் வரப்போகிறார் என்று சொல்லி ஏமாந்து, ஏமாற்றுவதும், அல்லது ஆயிரவருட அரசாட்சி நடக்கிறது என்று உளறுவதும், அல்லது இயேசு வரவே மாட்டார் என்பதும், அல்லது மோட்சம், நரகம் கிடையாது என்று சாதிப்பதும் போன்றதான வார்த்தைகளால் ஜனங்களை அவபக்திக்குள்ளாக்கி விசுவாசத்தைக் கவிழ்த்துப் போடுவதுண்டு [2 தீமோ. 2:16-18].

### விசுவாசத்திற்கு துரோகம் செய்தல்:-

ஒரு புருஷன் தன் மனைவியை நேசித்து, போஷித்து, காப்பாற்றி வருகையில், அவன் மனைவி அவன் போதும் என்று அவனிடம் மட்டும் இன்பங்கண்டு வருகையில்; அவள் கள்ளக் காதல் கொண்டு தன் புருஷனுக்கு துரோகம் பண்ணி அந்நியரோடே இன்பங்கண்டால் அவள் ஒரு துரோகி, விபச்சாரி. அதே வண்ணம் இயேசு போதும், என்ன வந்தாலும் இயேசு போதும், இருந்தாலும் இல்லாவிட்டாலும் இயேசு போதும் என்று பாட்டுப்பாடி, துதித்தலே இன்பம் என்று துதி செய்து விட்டு சபையை விட்டு வெளியே வந்ததும் அசுத்தத்தை ஆவலோடே நடப்பித்து, உலகை சிநேகித்து, தேவ பகைஞராகிறவர்கள், ஆதியில் தாங்கள் கொண்டிருந்த விசுவாசத்திற்கு துரோகம் செய்து பாவத்தில் பூரண நிலை அடைந்த தேவ அன்பை இழக்கையில் அவர்கள் சிநேகித்த உலகத்தின் அதிபதி பாவ மனுஷன் அவர்களை சந்திக்க வெளிப்படுவான் (2 தெச. 2:3).

### விசுவாசம் ஒழிந்து போதல்:-

கர்த்தர் என் சகாயர் நான் பயப்படேன், மனுஷன் எனக்கு என்ன செய்வான என்று தைரியமாயிருக்கையில், வாழ்வில் புயல் வீசுகையில், சிக்கல்கள், பிரச்சனைகள் உண்டாகும் போது அதிலே கண் வைப்போருடைய விசுவாசம் குன்றிப் போகும் (மத். 14:29-31). இப்படி விசுவாசம் அற்பமாய்ப் போவதால் சிலர் ஜெபிப்பதில்லை; குடும்ப ஜெபம் செய்வதில்லை; ஆராதனைக்கு வருவதில்லை. இப்படியே விட்டால் முடிவில் விசுவாசம் இருக்காது. கோதுமையோடே சேர்ந்திருக்கும் ஆகாததை அகற்ற சுளகிலே புடைப்பதுபோல, தேவ ஜனங்களோடே ஒட்டியிருக்கிற சாத்தானுக்கு ஆகாததான விசுவாசத்தை பிரித்தெடுக்க, சாத்தான் அவர்களை பலவித சோதனைக்குட்படுத்தி விசுவாசத்தை ஒழித்து விட போராடுவதுண்டு (லூக். 22:31.32). கஷ்ட, நஷ்டம், வியாதி, வறுமை, எதிர்ப்புகள் அதிகமாகும் போது சிலருடைய விசுவாசம் ஒழிந்து போவதுண்டு.

### திருச்சபையின் கடமைகள்:-

விசுவாசிகளின் விசுவாசத்தைக் காக்க சபை கடமைப்பட்டிருக்கிறது. பிரயோஜனமான சத்தியத்தை ஜனங்கள் அறிந்து அதில் நிலைக்கும்படி கட்டளையிட்டு உபதேசிக்க வேண்டும் (1 தீமோ. 4:11). திரும்பத் திரும்ப நினைப்பூட்ட வேண்டும் (2 பேதுரு 1:12). மறுபடியும் தெரியப்படுத்த வேண்டும் (1 கொரி. 15:1). விசுவாசம் ஆரோக்கியமாயிருக்க தவறுகிறவர்களை கண்டிப்பாக கடிந்து கொள்ள வேண்டும் (தீத். 1:14).

ஊழியர்கள் விசுவாசிகளின் வீடுகளை சந்தித்து; ஜெபித்து அங்குள்ள தேடுகளை

அகற்றி, அவர்களது மனஐயங்களை தீர்த்து, விசுவாசத்தில் நிலைத்திருக்க புத்தி சொல்லுவதும் அவசியம் (அப். 20:20; 1 தெச. 3: 5,6; 2:11,12). அப்போஸ்தலன் அவ்வப்போது சபையை சந்தித்து ஆவிக்குரிய வரங்களை பகிர்ந்தளிக்க வேண்டும் (ரோம. 1:10,11). தலைமையிலிருந்து கொடுக்கப்படுகிற சட்டங்களை, கிளைகளிலுள்ளவர் சபைக்கு ஒப்புவிக்க வேண்டும் [அப். 16: 4,5] விசுவாசத்திற்கு இடையூறு உண்டு பண்ணுகிற துன்மார்களுக்கு விரோதமாக ஜெபித்து, சபித்து ஜனத்தை காக்கவேண்டும் (அப். 13:6-12). கள்ளப் போதகர்களை காட்டிக் கொடுத்து, ஜனம் அவர்கள் பக்கம் சாயாதபடி எச்சரிக்க வேண்டும் [2 தீமோ. 2:16,17,18].

விசுவாசத்திற்கு பங்கம் விளைவிக்கும் துஷனைக்காரர்களை, (அப்போஸ்தலன் தனது அதிகாரத்தை உபயோகித்து) சாத்தானிடம் ஒப்படைத்து சிட்சிக்கபடச் செய்ய வேண்டும் (1 தீமோ. 1:19,20). இருக்கிறவர்களை கெடுக்காதபடி அசுத்தர்களை சபை நீக்கம் செய்ய வேண்டும் [1 கொரி. 5:13]. விசுவாசிகள் பலவித சோதனைகளில் சிக்கி விசுவாசத்தை இழந்து போகாதிருக்க, இயேசுவின் நாமத்தில் 'சபை' ஜெபித்து, காப்பாற்ற வேண்டும் [லூக். 22:31,32].

விசுவாசிகளே, புத்திமதிகளைக் கேட்டு மெய்யான சபையோடே ஐக்கியமாயிருப்பதின் மூலமே உங்கள் விசுவாசம் காக்கப்படுமென்பதை உணர்ந்து, ஐக்கியத்தை காத்து, நித்திய ஜீவனை அடையக் காத்திருங்கள். இயேசுகிறிஸ்துவின் இரண்டாம் வருகைக்கு ஆயத்தமாயிருங்கள்.



"விசுவாசமில்லாமல் தேவனுக்குப் பிரியமாயிருப்பது கூடாத காரியம்; ஏனென்றால், தேவனிடத்தில் சேருகிறவன் அவர் உண்டென்றும், அவர் தம்மைத் தேடுகிறவர்களுக்குப் பலனளிக்கிறவரென்றும் விசுவாசிக்க வேண்டும்" [எபி. 11:6].





# பெண்கள்

[தொடர்ச்சி]

கள்ளப் புணர்ச்சியினால் உண்டாகிற இன்பம் அதிக அற்பமாயிருக்கின்றது. அந்த கிஞ்சத்துப் போகத்தினால் உண்டாகிற ஆபத்துக்களும், பாவங்களும், பலிகளும் அபாரமாயிருக்கின்றன. ஒருவனை மதங்கொண்டயானை முன்னே துரத்த, பின்னே புலி வந்து பாய, அவன் அந்த அபத்துக்குப் பயந்து ஆற்றிலே குதிக்க ஆற்றிலே பல முதலைகள் அவனைப் பிடித்து விழுங்க நெருங்கும் பொழுது, இப்படிப்பட்ட ஸ்திதியில் இருக்கிற மனுஷன் தாகத்துக்கு ஜலத்தை அள்ளி குடித்து சந்தோஷித்தால் எப்படியோ அப்படியே கள்ளப் புணர்ச்சி செய்கிறவர்களுடைய இன்பமும் அவர்கள் நெஞ்சில் ஓயாத பயமும், நடுக்கமும், துன்பமும் குடிகொண்டிருக்கும். இவ்வளவு அச்சத்தோடு அவர்கள் அடையும் இன்பம், துன்பமேயல்லாமல் வேறல்ல. இந்த அற்பசுகத்தை விரும்பி மலைபோலே பாவங்களையும், பொய்களையும், துன்பங்

களையும் சம்பாதித்துக் கொள்ளுகிற ஸ்திரீ எவ்வளவு மதிகெட்டவளாயிருக்கிறாள்.

பரபுருஷனுக்குப் பெறும் பிள்ளைகளை அவள் தன் சொந்த புருஷனுடைய ஆஸ்திகளுக்கு பாத்தியஸ்தர்களாக்குவது எவ்வளவு பெரிய அநியாயம். ஸ்திரீ, புருஷர் ஒருவருக்கொருவர் உதவியாயிருக்கும் பொருட்டு கடவுள் கலியாணத்தை நியமித்தருளினார். அந்த விதிக்கு விரோதமாய் உலகத்தில் விபச்சார தோஷம் அதிகரிக்குமானால் புருஷனை பெண்சாதி மதியாமலும், பெண்சாதி புருஷனை மதியாமலும், விரும்பாமலும்; பிள்ளைகளை தாய் தகப்பன்மார் பராமரிக்காமலும், தாய் தகப்பன்மார்களை பிள்ளைகள் பேணாமலும் கிரக சாஸ்திர தர்மங்கள் சரியாக நடவாமலும் உலகத்தில் பெரிய விபரீதம் உண்டாகுமே. ஆகையால் ஸ்திரீகள் கற்பு நிலையை கைவிடாது காக்கவேண்டும். இதர யுத்தங்களில் சத்துருக்களிடம் பின்வாங்காமல் எதிர்த்துநிற்பவர்களே ஜெயமடைவார்கள். காம யுத்தத்திலோவென்றால் எதிர்த்து நில்லாமல் ஓடுகிறவர்களே ஜெயங்கொள்வார்கள். ஆகையால் பெண்கள் அந்நிய புருஷர்களுடன் பேசாமலும், அவர்களை சொப்பனத்தில் நினையாமலும், காமநூல்களை, கெட்ட கதைகளை படியாமலும், கேளாமலும் நிர்மலமாயிருக்க வேண்டும்.

உலகத்தில் அந்நிய ஸ்திரீகளைக் கெடுக்கிற புருஷர்களும் இருக்கிறார்களாகையால் ஸ்திரீகள் தகுந்த துணையில்லாமல், ஒருபோதுந்தனிமையாயிருக்கத் தக்கவர்களல்ல. புருஷன் வீட்டிலில்லாதபோது அவர்கள் நற்குணமுள்ள பெண்களைத் துணைத்தேடி வைத்துக் கொள்ள வேண்டும். அவர்கள் பிராணன் போனாலும் கற்பு நிலை தவறுகிறதில்லை என்கிற வைராக்கிய சித்தமுடையவர்களாயிருக்க வேண்டும்.

ஒரு அரசனுடைய கெட்ட எண்ணத்துக்கு ஒரு உத்தமி இணங்காமல் நிராகரித்தபோது அவன் வாளை உருவிக் கொண்டு "என்னை நீ சேராதிருப்பாயானால் உன்னை வெட்டிக் கொல்வேன்" என்று கோபத்தோடு மொழிய, அதைக் கேட்ட பதிவிரதை அந்த அரசனை நோக்கி, நரபதி நீயானாலும் நண்பரின் பாதத்துக்குள் சிரமகுட நிகாமோவெனக் கரவாளை உருவி நின்றாய். கற்பினுக்கோர் குறைவின்றித்தரமா, நீயெனைச் சொல்லிற்றந்தை தாய் குரு நீயே. ஓ துஷ்டா! நீ அரசனானாலும் எனது பர்த்தாவினுடைய திருப்பாதத்திலே ஒட்டிய தூசிக்கு உன்னுடைய தலையிலிருக்கிற கிரீடமும் சமமாகுமா? உன்னை சேராவிட்டால் கொல்வேனென்று கைவாளை உருவி நின்றாய், என்னுடைய கற்புக்கு மட்டும் பங்கமின்றி என்னை நீ கொன்று விடுவாயானால் எனக்குத் தாயுந் தந்தையும் குருவும் நீயேயென்று பிரதியுத்தரங் கூறினாள் [நீதி நூல் புருடபாரியியல்பு செய்யுள் 30].

மரணத்துக்கு முன் பிராணனைத் திரணமாகயெண்ணிக் கற்பைக் காப்பாற்றின அந்த உத்தமியை மற்ற ஸ்திரீகள் குரு பீடமாகக் கொள்ளவேண்டும். அந்நிய புருஷனைச் சேருகிற ஸ்திரீக்கும், அந்நிய புருஷனுக்கும் தோஷம் துல்லியமாயிருந்தாலும் ஸ்திரீக்கு அந்நிய புருஷனால் கர்ப்பந்தரிப்பது முதலான தர்மசங்கடங்கள் சம்பவிக்க இடமிருப்பதால் அவளுடைய குற்றத்தை உலகத்தார் பெரிதாக எண்ணுகிறார்கள். சில தருணங்களில் நிர்தோஷமான ஸ்திரீகளுக்கும் தோஷங்கற்பித்து அவர்கள் விபச்சாரிகளென்று அபாண்டமான பொய்யைக் கட்டிவிடுகிற உலகமானது வாஸ்தவத்தில் கெட்டுப்போனவளுடைய செய்கையை வெளிப்படுத்தாமலிருக்குமா?

மாசுகலவாத ஸ்திரீகளையும் கலந்தது போல பெருமையாய்ப் பொய் பேசுகிற

புருஷர்களும் உலகத்திலிருக்கிறார்கள். இப்படிப்பட்ட புருஷர்கள் தாங்கள் வாஸ்தவமாக சேர்ந்த பெண்களுடைய பழியை ஊரெங்கும் பறைசாற்றாமல் விடுவார்களா? ஆகையால் அந்நிய புருஷர்களுடைய காற்றும் தங்கள் மேல் வீசாமல் ஸ்திரீகள் சுத்தமான நிர்மலமாய் இருக்க வேண்டும்.

(தொடரும்)

---

"குணசாலியான ஸ்திரீயைக் கண்டு பிடிப்பவன் யார்? அவளுடைய விலை முத்துக்களைப் பார்க்கிலும் உயர்ந்தது" [நீதி. 31:10].

---

# வேத பாடம் [தொடர்ச்சி]

## எண்ணாகமம்

### எண் 23:11,12

"அப்பொழுது பாலாக் பிலேயாமை நோக்கி: நீர் எனக்கு என்ன செய்தீர்; என் சத்துருக்களை சபிக்கும்படி உம்மை அழைப்பித்தேன்; நீர் அவர்களை ஆசீர்வதிக்கவே ஆசீர்வதித்தீர் என்றான்". அதற்கு பிலேயாம் யேகோவா என் வாயில் அருளும் வார்த்தையையே சொல்லுவது என்னுடைய கடமையல்லவா என்றான்.

ஒரு மெய்யான தீர்க்கதரிசியினுடைய நிலை இவ்விதமாய் இருக்கும். கடவுள் அருளும் வார்த்தையையல்லாமல் மற்றதைச் சொல்லமாட்டான்.

### எண். 23:13-17

பாலாக் பிலேயாமை இன்னொரு இடத்திற்கு வாரும்; அங்கிருந்து அந்த ஜனங்களின் ஒரு சிறுபகுதியை மாத்திரம் பார்ப்பீர். அங்கிருந்து நீர் அவர்களை சபியும். அங்கிருந்து நீர் அவர்களை பார்க்க நான் அழைத்துச் செல்லுவேன் என்று அழைத்தான். பிலேயாமும் ஒப்புக்கொண்டான். இதன் மூலமாய் பிலேயாம் பாலாக் அரசனின் வெகுமதியை வாங்க வேண்டுமென்ற நோக்கம் உடையவனாயிருந்தானென்று விளங்குகிறது. இவ்விதமாய் அங்கே அழைத்துச் சென்றபோது அங்கே ஏழு பலிபீடங்களை கட்டி 14 காளைகளை பலியிட்டான். பிலேயாம் பாலாக்கை பலியினண்டை விட்டு கடவுள் என்னை சந்திப்பதால் நான் அங்கே போய் வருகிறேன் என்று சொல்லி மறுபடி கடவுள் என்ன சொல்லுகிறார் என்று கேட்டு வந்து அறிவிக்கிறேன் என்று சொல்லி போனான்.

கடவுள் பிலேயாமை சந்தித்து அவன் வாயில் வார்த்தையருளி பாலாக்கிடம் போய் இவ்விதமாய் சொல் என்று கூறி அனுப்பினார். பிலேயாம் தன் பலிபீடத்தண்டையில் பாலாக்கும் அவனுடைய பிரப்புக்களும் நிற்கும் இடத்திற்கு திரும்பி வந்தான்.

பாலாக் பிலேயாமை நோக்கி; கர்த்தர் என்ன சொன்னார் என்றான். கர்த்தர் என்ன சொன்னார் கர்த்தருடைய வார்த்தை உண்டா? என்று கேட்கிற பலர் இருக்கிறார்கள். கர்த்தருடைய சித்தம் செய்ய அவர்களுக்கு விருப்பமில்லை. இவர்களுக்கு ஆசீர்வாதமாக கர்த்தர் இவர்களுடைய விருப்பத்தின்படி பதில் கொடுக்கிறாரா என்று பார்ப்பார்கள். கர்த்தருடைய சித்தம் செய்ய மனதுள்ளவன் எவனோ அவனே கர்த்தருடைய சித்தம் இன்னதென்று அறிந்து கொள்ளுவான்.

*எண். 23:18-24*

பிலேயாமுடைய இரண்டாவது தீர்க்கதரிசனம்.

கடவுளுடைய வாக்கு வேதாகமத்தில் காணப்படுகிற மிகப்பெரிய சத்தியங்களில் சில இந்த வேதப்பாகத்திலே காணப்படுகின்றன. தேவன் மனிதனை ஆட்கொண்டு தம்முடைய ஆவியினால் வேதாகமத்தை எழுதியுள்ளார். வேதம் பரிசுத்த ஆவியினுடைய வெளிப்படுத்தலாக இருக்கிறது. வேதாகமத்தை [Bible] குறித்து நாம் மிகவும்

---

## வருந்துகிறோம்

## திருத்தம்

1. எக்காளசத்தம் 127 JAN. 95 2-ம் பக்கம். பாரகிராப் 2லும்

2. இராப்போஜனத்தில் பங்கு பெறுகிறவர்களின் தகுதி 1லும் இரட்சிக்கப் பட்டு [ஞானஸ்நானம் பெற்றவர்கள்] என்று வாசிக்கவும்.

3. 17-ம் பக்கம். 5 வது பாரகிராப் 4வது வரியில் இறை புகழில் கபடநாடக சூத்திரர் என்று வருவதை தவிர்க்கவும்.

A] குற்றம் கண்டு பிடிக்கவேண்டும் என்ற நோக்கத்தோடு அலைகிறவர்கள் 2-ம் பக்கம் பாரகிராப் 4 ல் ஆனபடியால், புதிய ஏற்பாட்டின் விசுவாசி எனறால் ஜலத்தினாலும், ஆவியினாலும் ஸ்நானம் பெற்றவனே [யோ. 3:3,5] என்று எழுதியிருப்பதை வாசித்தால் மூளை தெளிவுண்டாகும்.

B] 17-ம் பக்கத்தில் "கபடநாடக சூத்திரர்" என வருவது வேத நாயகம் பிள்ளையின் கூற்றுகளில் ஒன்றாகும்.

சந்தோஷப்படுகிறோம். ஏனெனில் வேதாகமத்தில் சில பாகங்கள் தேவனால் எழுதப்பட்டது. சில பாகம் நேரடியாக தேவன் பேசி சொன்னதாகும். இன்னும் சில பாகம் பரிசுத்த ஆவியானவர் பரிசுத்த மனிதர்களை அட்கொண்டு அவர்கள் மூலமாக பேசினதும், எழுதப்பட்டதுமான சம்பவங்கள், செய்திகள், வாக்குகள் இன்னும் சில வேத பாகங்கள் மனிதர்கள் இறைவனோடு உள்ள தொடர்பினால் தாங்கள் ஆராய்ந்த அனுபவ உண்மைகள். சிலவை ஆராய்ச்சிகள் மூலமாக தொகுத்து எழுதினவைகள்.

வேதாகமத்திலுள்ள ஒவ்வொரு வார்த்தையும் தேவனால் சொல்லப்பட்டது என்று அர்த்தமல்ல. மனிதனுக்கு வழிகாண்பிக்க தேவனுடைய ஆவியினால் எழுதப்பட்டது என்று அர்த்தம். ஏனென்றால் இதில் சில பொல்லாத மனிதர்களுடைய வார்த்தைகளும் பிசாசு சொன்ன வார்த்தைகளும் இருக்கின்றன. அவைகளைக் கண்டு எச்சரிப்பு அடைய சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

வசனம் 18: பிலேயாம் பாலாக்கை நோக்கி எழுந்திருந்து கேளும் என்று சொல்லுகிறான்.

வசனம் 19: பொய் சொல்ல தேவன் ஒரு மனுஷன் அல்ல. இங்கே ஒரு பெரிய சத்தியம் காணப்படுகின்றது.

மனிதன் பொய் சொல்லுவான், மனம் மாறுவான் என்று இதன் மூலமாக அறிகிறோம். பொய் சொல்ல, மனம் மாற தேவன் மனிதர் அல்ல. அவர் சூரியனும் அல்ல சந்திரனும் அல்ல நட்சத்திரமுமல்ல, மலையுமல்ல, மடுவுமல்ல, கடலும் அல்ல, நதியுமல்ல, பூமியும் அல்ல, அவர் மீனுமல்ல, பட்சிபறவையுமல்ல, மிருகமுமல்ல, மரமல்ல, கல்லல்ல, தங்கம், வெள்ளி அல்லது மற்ற உலோகம் அல்ல, காற்றுமல்ல. தேவன் ஆவியாயிருக்கிறார். அவருக்கு ஆவிக்குரிய சரீரம், ஆத்துமா, ஆவி உண்டு. அவர் ஆவிக்குறிய சரீரமுடையவராயிருக்கிறார். தூதர்கள், மனிதர்கள் போல தேவனைப்பற்றியும் நாம் இந்த வேதபாகங்களிலே வாசிக்கிறோம். இறைவனுக்கு கண் உண்டு அவர் பார்க்கிறார், காது உண்டு அவர் கேட்கிறார். அவருக்கு கைகள் உண்டு கிரியை செய்கிறார். கால்கள் உண்டு நடக்கிறார். அவருடைய பின் பாகம் என்றும், அவருடைய புயம் என்றும் பல வேத வாக்கியங்களில் வாசிக்கிறோம்.

[தொடரும்]

**பரிசுத்த விவாகம்**

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| வில்லியம்ஸ் | ஆனந்தி | பள்ளப்பட்டி | 26-7-95 |
| தியாவன் ஜோசப் | மரியாள் | சேலம் | 3-8-95 |

## சாட்சி

(தொடர்ச்சி)

நான் தனியே அந்த பக்கத்து வீட்டு கிறிஸ்தவ தாயிடம் இயேசுவைக் குறித்து இன்னும் தெளிவாகக் கூறுமாறு கேட்டேன். அவர்கள் விவரமாக கர்த்தராகிய இயேசுவே மெய்யான இறைவன்; அவரே நம்முடைய பாவங்களுக்காக சிலுவையில் இரத்தம் சிந்தி மரித்து, உயிர்த்தெழுந்தார்; அவர் மூலமே மானிட சமுதாயத்திற்கு மீட்பு உண்டுஎனக் கூறினர்கள். எனக்குஒரு புதிய ஏற்பாடு கொடுத்து, எவ்வாறு முழங்காற்படியிட்டு இயேசுவை நோக்கி ஜெபம் பண்ண வேண்டுமென்று கற்றுக் கொடுத்தார்கள். அவ்வாறே நான் என் அறைவீட்டினை மூடி ஒருவரும் பார்க்கா வண்ணம் தனித்த நிலையில் "இயேசுவே, நீர் மெய்யான இறைவனாக இருப்பின் உம்மை காண்பியும்: எனக்கு சமாதானமும் தாரும், பாவப்பிடியிலிருந்து விடுபட உதவி செய்யும் என கெஞ்சி, ஸ்தோத்திரம்" என்று உச்சரித்தேன். தொடர்ந்து ஒருமனதோடு அந்த மெய் இறை வணக்கம் உண்டாக, திடீரென்று பேரொளி அறையில் பிரவேசித்தது. அந்த ஒளி, சூரிய ஒளியிலும் பன்மடங்கு மிகப்பிரகாசமாக இருந்தது.

கண்ணை நான் திறந்தாலும் பிரகாசித்துக் கொண்டேயிருந்தது. இப்படியிருந்த கொஞ்ச நேரத்தில் கர்த்தராகிய இயேசுவின் கரங்கள் ஆணிகளால் கடாவப்பட்ட நிலையில் அவர் தம்மை எனக்கு காண்பித்தார். அந்த வேளையே என் பாவங்கள் எனக்கு சினிமாத்திரையில் படங்கள் ஒன்றன் பின் ஒன்றாக வருவதுபோல் காட்டப்பட்டன. என் பாவ பார சுமை அகல இரங்கும் என் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை நோக்கி மன்றாடினேன். உடனே பாவப்பார சுமை நீங்கிற்று. அப்பொழுது மெல்லிய சத்தத்தோடு இறைவனும் இயேசுவின் சத்தம் கேட்டு, மகிழ்ந்தேன். தேடிய சமாதானம் பெற்றுக் கொண்டேன். எனவே நான் சமாதானமின்றி ஆத்தும துக்கம் மேலிட்டதினால் மரிக்க இருந்த நான் மீள உயிர் பெற்று வாழ மெய் இறைவனின் திருவருள் கிட்டிற்று. அவருக்கே மகிமை உண்டாவதாக! அல்லேலூயா!!

இறைவனும் இயேசு என்னில் கிரியை நடப்பித்து, என் சுபாவங்களை மாறப்பண்ணினர். பெருமை நீங்கி தாழ்மை உண்டாயிற்று; மற்றவர்களை நேசிக்கவும், பெரியோரை கனப்படுத்தவும், பெற்றோரை மதித்து கீழ்ப்படிந்து நடக்கவும், அந்நியரை உபசரிக்கவும் கர்த்தரால் போதிக்கப்பட்டேன். முரடனாயிருந்த நான் சிறுபிள்ளையின் சுபாவத்தை பெற்றேன். சினிமா பைத்தியம் நீங்கிற்று. யாருக்கும் அடங்காது இருந்த "நான்" என்ற சுபாவம் போய் விட்டது. எல்லோரும் தேவனுடைய ஒரே விதமான சிருஷ்டிப்பே, வேறுபாடில்லை; யாவரும் ஒரினம் என்ற பண்பாட்டை உருவாக்கினார்.

பக்கத்திலுள்ள கடையில் திருடியதற்காக அவர்களிடம் பாவத்தை வெளிப்படையாய் சொல்லி மன்னிக்குமாறு கேட்டுக் கொண்டேன். அம்மாவை திட்டுவது, முரண்டு செய்வது, அடிப்பது உண்டு. இதற்காக அம்மாவிடம் மன்னிப்புக் கேட்டேன், அப்பாவையும் திட்டியதுண்டு. அப்பாவிடம் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டேன். எதற்கெடுத்தாலும் பொய்பேசி காரியங்களை செய்து வந்த செயல்கள் மாற்றப்பட்டன.

"புதிய ஏற்பாடு" மூலம் அநேக காரியங்களைக் கர்த்தர் வேதத்திலிருந்து எடுத்து உணர்த்தி, போதித்து என்னை ஆண்டு நடத்தினர். நானோ பகிரங்கமாய் வெளியே கிறிஸ்தவ ஆலயத்திற்குச்சென்று இறைவனை தொழுதுகொள்ள முடியாது. என் போக்கு என் தகப்பனுக்கு நாளடைவில் பிடிக்காது போகவே பக்கத்து வீட்டு கிறிஸ்தவ அம்

மாவிடம் சென்று ஆவிக்குரிய ஆலோசனை கேட்பதை தடுக்க ஆரம்பித்தார். எனவே நான் மறைமுகமாக என் அப்பா விட்டில் இல்லாத சமயத்தில் முழங்காற்படியிட்டு இயேசுவை வழிபட்டேன். இரவு நேரங்களில் எல்லாரும் படுத்து தூங்கிய பின்னர் ஜெபம் பண்ணினேன். கர்த்தர் தனிமையிலும் போதுமானவராய் இருந்தார். கர்த்தரை நோக்கி விண்ணப்பிக்கும் ஒவ்வொரு வேளையிலும் அவர் ஒரு மனிதன் பேசுவது போல் பேசவும், வழி நடத்தவும் செய்தார். வேத வியாக்கியானம் தந்தார்.

ஒரு நாள் இரவு 10 மணிக்கு மேல் நான் யாரும் நம்மைப் பார்க்காது நன்றாக ஜெபம் பண்ண வசதியாயிருக்கிறது என்று எண்ணி உள்ளத்தில் அமைதியாக ஸ்தோத்திரம் பண்ணிக் கொண்டிருந்தபோது எதிர்பாராதவிதமாய் என் அப்பா வந்து பக்கத்திலிருந்த புதிய எற்பாடை எடுத்து தூக்கி தெருவிலே எறிந்து தூஷணமான வார்த்தைகளால் திட்டினார். முழங்காலில் இருந்த என்னைத் தெருமக்களைக் கூப்பிட்டு வந்து பார்க்கச் செய்து, இவன் கெட்டுப்போய் விட்டான், கிறிஸ்தவனாகி விட்டான் என்று பலவாறு பேசி என்னை வெளியேற்றிவிட்டு, பக்கத்து வீட்டு அம்மாவையும் அவளே, இவளே என திட்ட ஆரம்பித்தார். அந்த அம்மா, தான் திட்டத்தை அறிந்து வருந்தவேயில்லை. வெளியே சிலுக்குவார்பட்டி ஊர் மக்கள் கேசவன் [முருகேசன்] கெட்டுப் போனான்; இனி திருத்த முடியாது; இவன் ஊருக்கே கேவலம் தான் என்று கூடி, கூடிப் பேச ஆரம்பித்தனர்.

என் தாய் ஒன்றும் பதில் பேசாது இருந்தார்கள். கோபத்துடன் தன் கணவன் வெளியேறிச் சென்றபோதும் வருந்தாது கிறிஸ்தவ அன்பால் நிறைந்திருந்த என் தாய் வாசற்படியில் பலமணி நேரம் நின்ற என்னை மீண்டும் விட்டிற்குள் வரவழைத்து என்னை ஆற்றினார்கள். அம்மா விட்டிற்குள் என்னை ஏற்றியது என் தந்தைக்கு கோபத்தை உண்டாக்கியது; அவர்களையும் ஏசினார் போராட்டத்தின் மத்தியிலும் கர்த்தரை விடாது சமயம் கிடைக்கும்போது பகலில் வெளியே தோட்டம், காடுகளில் செடிகளுக்குள் யாருக்கும் தெரியாது மறைந்து இயேசுவை வழிப்படுவேன்.

அப்பொழுது கர்த்தர் விசேஷித்த கிருபை கட்டளையிடுவார்; கர்த்தரின் ஒளி என்னை சுற்றிலும் பிரகாசிப்பதை பார்ப்பேன். ஆவியில் பலம் பெற்று தகப்பனாரின் சீற்றத்திற்கும் உறவினர், ஊரார் எளனத்திற்கும் அஞ்சாது அருமை இரட்சகரை மட்டுமே வழிபட்டேன். அம்மாவும், என் அப்பா விக்கிரகங்களுக்குப் படைத்த உணவை விலக்கி, தனியே எடுத்து வைத்திருந்ததை எனக்குக் கொடுத்து, ஆதரவளித்தார்கள்.

நிலக்கோட்டை உயர் நிலைப்பள்ளியில் 9 ஆம் வகுப்புப் படிக்கும் போது எனக்கு நண்பராகிய J. தாகூர் முத்தையா தனது வீட்டிற்கு அழைத்துச் சென்று அவருடைய பெற்றோருக்கு அறிமுகம் செய்து வைத்தார். அவரது அப்பா திரு. ஜான் ஆசீர்வாதம் அன்பாய் ஏற்றுக் கொண்டு கிறிஸ்துவுக்குள் வளர ஒத்தாசையாயிருந்தார். அவரது அம்மா திருமதி. ஜோதி ஆசீர்வாதம் அவ்வாறே பக்தியுள்ளவர்களாதலால் வேதத்திலிருந்து அநேக இரகசியங்களை விளக்குவார்கள்.

இவ்வாறே நான் ஆலயத்திற்குச் செல்ல இயலாமல் பல இடங்களில் இறைவனாம் இயேசுவை வழிபட்டபோது, கல்லூரி படிப்புக்காக சிலுக்குவார்பட்டியை விட்டு மதுரை சென்ற போது சுயாதீனனாய் அநேக ஆவிக்குரிய கூட்டங்களில் கலந்து கொள்ளவும், சாட்சி கொடுக்கவும் கர்த்தர் கிருபை செய்தார் தூரத்திலிருந்து கேள்விப்பட்ட என் தகப்பனாருக்கு ஒன்றும் செய்ய முடியவில்லை. ஆனால் மீண்டும் என்னை இந்துவாக மாற்ற முயற்சி செய்து ஏவல்கள்

பில்லி சூனியங்கள், மந்திரங்கள் செய்தார் அது ஒன்றும் பலிக்கவில்லை.

கல்லூரிப்படிப்பு முடிந்த சிலமாதங்களில் மேலூர் மேல் நிலைப்பள்ளியில் வேலை கிடைக்கச் செய்தார். அங்கிருந்து ஒரு வருடத்திற்குள் எனது ஊர் சிலுக்குவார்பட்டியிலிருந்து 3 மைல் தொலைவிலுள்ள பள்ளப்பட்டி அரசினர் உயர் நிலைப்பள்ளியில் மாறுதல் கிடைத்து வேலை பார்த்து வந்தேன். அப்பொதுதான் பள்ளப்பட்டி புதிய எருசலேம் சபையில் இப்போது இருக்கும் பாஸ்டர் ஐசக் ஞானையா அவர்கள் மூலம் திருச்சபையாகிய புதிய எருசலேமின் மேலான உபதேசம் அறிய முடிந்தது.

1974 ஆம் ஆண்டு வள்ளியூர் புதிய எருசலேம் சபை கிளையிலிருந்து வந்த பாஸ்டர் சுந்தர் ராஜ், பாஸ்டர் ஏசுதாசன் ஆகிய இருவரும் இன்னும் புதிய எருசலேமின் தலைமையைக் குறித்தும், சபையின் ஆழமான சத்தியத்தையும் வெளிப்படுத்தி அறிவித்தார்கள். சுத்திகரிக்கப்பட்டு வளர பாவ மனனிப்பின் உபதேசம் எங்களுக்கு விளக்கப்பட்டது. கர்த்தர் என்னோடு பேசினார். இதுவே இறைவனால் இந்தக் கடைசிக் காலத்தில் ஏற்படுத்தப்பட்ட திருச்சபை என்று கர்த்தர் வேதவாக்கியத்தினாலும், காட்சி, தரிசனங்களினாலும் இடைபட்டார். வள்ளியூரிலிருந்து அவர்கள் அடிக்கடி வந்து பள்ளப்பட்டியில் தங்கி அதிக நாட்கள் ஆலோசனை கொடுத்தார்கள். எனக்கு பல வருடங்களாக இருந்த வயிற்றுவலி நீங்க அவர்கள் ஜெபம்பண்ணி எண்ணெய் கொடுத்து விண்ணப்பித்தார்கள். கர்த்தர் அற்புதமாக உடனே சுகமளித்தார். அப்பொழுது தலைமை ஐயா அவர்களுடன் கடிதத்தின் மூலமாக தொடர்பு எடுத்து வந்தோம். தேவன் தலைமை ஐயாவுக்கு வெளிப்படுத்தி 1975 ஆம் ஆண்டு பள்ளப்பட்டியில் கன்வென்ஷன் வைத்தார்கள்.

அநேகர் கூட்டமாய் கர்த்தரை ஏற்று ஞானஸ்நானம் பெற்று இரட்சிக்கப்பட்டவர்களாய் பள்ளப்பட்டியில் ஆராதிக்க கர்த்தர் அநுக்கிரகம் பண்ணினார். பின் 1975 ஆம் ஆண்டு புதிய எருசலேம் சபையாய் பள்ளப்பட்டி ஞாயிறு பரிசுத்த ஆராதனை ஆராதிக்கும் வேளையில் எனக்கு ஒரு காட்சி காண்பிக்கப்பட்டது. அக்காட்சியில் நான் ஊழியக்காரனாக ஆடை அணிவிக்கப்பட்டு கர்த்தருடைய சமுகத்தில் இருப்பதாக பார்த்தேன். இது 1988-ல் நிறைவேறியது. இந்த அடியேனையும் தேவன் தெரிந்து கொண்டு அவரது பணிவிடை செய்ய அழைத்து, வேலையை இராஜினுமா செய்து விட்டு புதிய எருசலேம் தலைமை சபை, பம்பாயில் அவருக்காக உழைக்க மெய்யான இறைவனும் இயேசு எனக்கும் இரக்கம் பாராட்டி தயவு செய்தார்.

இப்படிக்கு,

இறை இயேசுவின் பணியில்,

S. லாசரஸ் இம்மானுவேல்.

"ஜீவனுள்ள மெய்யான தேவனுக்கு ஊழியஞ்செய்வதற்கு நீங்கள் விக்கிரகங்களை விட்டுத் தேவனிடத்திற்கு மனந்திரும்பினீர்கள்..." [1 தெச. 1:9].

10-7-1995 அன்று பம்பாய் தலைமை சபையில் 7 பேர்கள் ஞானஸ்நானம் பெற்று திருச்சபையின் அங்கமானார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# கடமை

ஒரு வேலை ஸ்தலத்தில் பலர் வேலை செய்கிறார்கள் அவர்களை மூன்று ரகமாக பிரிக்கலாம்.

1. சிலர் குறித்த வேளையில் வேலைக்கு வருவார்கள். வேலை நேரம் முடிந்த உடன் வெளியேறி விடுவார்கள். அனுமதிக்கப்பட்ட விடுமுறைகளுக்கு மேல் லீவு எடுப்பது கிடையாது இவர்கள் தங்கள் கடமையில் சரியாக இருக்கிறார்கள் நியமிக்கப்பட்ட கூலியை பெற்றுக் கொள்ளுகிறார்கள்.

2. சிலர் லேட்டாக வேலைக்கு வருவார்கள். யாருக்கும் சொல்லாமல் சீக்கிரம் வெளியேறி விடுவார்கள். நினைத்தால் வருவார்கள் அவ்வப்போது காணாமல் போய் விடுவார்கள். பொறுப்பற்றவர்கள், இவர்களுக்கு தண்டனை கிடைக்கும் குறைந்த கூலியும் பெறுவர்.

3. சிலர் குறிபிட்ட நேரத்திறகு முன் வந்து விடுவார்கள், எவ்வளவு நேரமானாலும், தரித்திருந்து அன்றாடக வேலையை முடித்த பின்னரே செல்வர் லீவு எடுப்பதே கிடையாது. தேவையானால் லீவு நாட்களிலும் வந்து பணிபுரிவர். இப்படிப்பட்டவர்கள் தங்கள் கடமைக்கு மேல் பிரயாசப்படுகிற படியால். அதிகாரிகளால் கவரப்பட்டு, வெகுமதிகளையும், அதிகமான சம்பள உயர்வையும், பதவி உயர்வையும் சீக்கிரம் பெற்றுக் கொள்ளுவர்.

இதேவிதமாக தேவ காரியங்களில் தேவ ஜனங்கள், கர்த்தரிடம் அங்கிகாரம் பெறுவர். இறைவனுக்கு பயந்து அவருடைய கட்டளைகளை கைக்கொள்ளுவது எல்லா மனுஷர் மேலும் விழுந்த கடமையாகும். சிலர் கட்டளைகள், ஆலோசனைகள், பிரமாணங்கள், நியமங்கள் முதலான காரியங்களை கைக்கொள்ளுகிறார்கள் கட்டாயத்தினால், அல்லது பயத்தினால். தும் நிலைகளிளிரித்தம் இதைக் காட்டிலும் இறைவனிடம் மெய்யன்பு கொண்டு [எபே. 4: 15], முழு இருதயத்தோடும் அவரில் அன்பு கூர்ந்து, ஜீவன் தந்த தேவனுக்கு ஜீவன் தருவேன் என்று அன்புடன் சந்தோஷம் சத்தியத்தை கைக்கொண்டு வந்தால், நித்தியத்தில் நீங்கள் பிரவேசிக்கும்போது இயேசுவும் அவசரமாய் எழுந்து வந்து, சத்தியத்தைக் கைக்கொண்டு நடக்கிற உத்தம ஜாதியே உட்பிரவேசி என்று வரவேற்று எஜமானுடைய சந்தோஷத்திற்குள் பிரவேசிக்கச் ! செய்வார். 'சத்திய வசனங்களை தள்ளிப் போடுகிறவர்களை நியாயந்தீர்த்து, நித்திய அக்கினிக்குள் அனுப்புவார்.

ஊழியத்தைப் பெற்றவர்கள் அதை ஒழுங்காய் நிறைவேற்றி முடிப்பது அவர்களது கடமை. அதை உற்சாக மனதோடு மனப்பூர்வமாய் செய்வது அதிக பிரயோஜனமாக இருக்கும் [1 கொரி. 9:16.17]. பெற்ற ஊழியத்தை நிறைவேற்றாமல் பிரயோஜன மற்றுப்போனால் காரிருளில் தள்ளுண்டுபோக நேரிடும் [மத். 25:10].

இயேசு வழக்கமாய் தேவாலயத்தில் ஒய்வு நாளில் பிரவேசித்து தேவனுக்கு ஆராதனை செய்தார் [லூக். 4:16]. பரிசுத்த ஆராதனையில் பங்கு பெற்று இறைவனை தொழுது, சேவித்து, காணிக்கை செலுத்தி களிப்படுத்துவது ஒவ்வொரு கிறிஸ்தவனது கடமையாகும். தேவ ஆராதனைக்கு வராதவர்களுக்கு ஆசீர்வாதம் கிடையாது. ஆபத்து வரும், விபத்து உண்டாகும், நஷ்டம் வரும் சிலரைப் பாருங்கள் ஞாயிறு காலை ஆராதனை மட்டுமல்ல, மாலை ஆராதனை, சனி கிழமை உபவாச ஆராதனை இடை நாள் ஆராதனை, முழு இரவு ஜெபம், வீட்டு ஜெபக்கூட்டம் இன்னும் சபையில் ஆராதனை உண்டோ அதிலெல்லாம் இவர்களும் இருப்பர். இப்படிப்பட்டவர்கள் சீக்கிரம் ஆவியில் வளர்ந்து, தேவனுடைய பலத்தக் கருவிகளாயிருப்பார்.

"தேவனைத் தேடு"
"SEEK GOD"

Regd. No. 840830/84
Postal Regd. No. MH BY NE-84/84
Tamil Monthly Magazine

# மனச்சாட்சி

மனச்சாட்சி Conscience உணர்வு, நன்மை தீமையைப் பகுத்தறியும் குணம் (ரோமர் 2:15,16) மனுஷனுடைய ஆவி கர்த்தர் தந்த தீபமாயிருக்கிறது. அது உள்ளத்தில் உள்ளவைகளையெல்லாம் ஆராய்ந்து பார்க்கும் (நீதி. 20:27)

இதை அகப்பிரமாணமென்றாவது, அகத்துறைப் போதனையென்றாவது சொல்லலாம். நியாயத்தையுரைப்பது நல் மனச்சாட்சி யென்னப்படும் (1 தீமோ. 1:5, அப். 24:16; ரோம 9:2) கிறிஸ்துவின் புண்ணிய பலன்களை ஏற்றுக் கொண்டது சுத்த மனச்சாட்சி எனப்படும் [எபி. 9:14; 10:2; 1 தீமோ. 3:9]. பாவத்தினால் தேவ நீதியைச் சத்தியத்தை மறைத்து பாவத்தைச் சார்வது துர் மனச்சாட்சியென்றும் [எபி. 10:22], சீர்கெட்ட மனச்சாட்சியென்றும் (1 தீமோ 4:1), அசுத்த மனச்சாட்சியென்றும் [தீத். 1:15] சொல்லப்படுகிறது.

மனச்சாட்சி வேதத்திற்கிணங்கி நடக்க வேண்டும். அப்படி நடக்கும் போது நாம் மனச்சாட்சியைப் பின்பற்ற வேண்டும் [1 கொரி. 10:27; ரோம 13:5].

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   10 [வியாழன்] ஆகஸ்ட் 1995
   8 [வெள்ளி] செப்டம்பர் 1995
   9 [திங்கள்] அக்டோபர் 1995
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி:
   CHIEF PASTOR N. LAZAR
   "NEW JERUSALEM CHURCH"
   CHURCH LANE, TILAK NAGAR,
   DARGA ROAD, BHANDUP,
   BOMBAY-400 078 INDIA.
3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்
5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரு. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்

Edited, Printed and Published by: Chief Pastor N LAZAR New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road Bhandup Bombay-400 078 Printed at: New Jerusalem Press, Tilak Nagar Bhandup Bombay-400 078

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 134 - SEP 93



"புதிய எருசலேம் சபை"

வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ரோ)ன் என்று நீங்கள் அறியீர்கள். விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன் விழித்திருங்கள்"

- மாற்கு 13 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11–16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1–3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் –மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்–மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்–மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்–யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்–யோவா. 21:15–17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5–8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்–1 கொரி. 11:23–26,

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1–6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40–43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

மனிதன் தேவனோடுகூட ஐக்கியமாயிருக்க வேண்டும். தேவன் பரிசுத்தரா யிருக்கிறார், நல்லவராயிருக்கிறார்; அவர் நன்மை செய்கிறார். அவர் மனிதனை நேசிக்கிறார். மனிதனுக்காக வானத்தையும், பூமியையும், சகல சிருஷ்டிகளையும் சிருஷ்டித்து அவனுக்கு உதவி செய்யும்படியாக, பிரயோஜனமாயிருக்கும்படியாக, ஆசீர்வாதமாயிருக்கும்படியாக (1 கொரி. 8:6) செய்தார்.

மனிதன் பொய் தெய்வங்களை விட்டு, தன்னையே பூஜிக்கிறதை விட்டு, தன்னுடைய அபிப்பிராயங்கள், கருத்துக்களை, பொல்லாத மனுஷர்களுடைய சுலோகங்களை விட்டு மனந்திரும்பி மெய்தேவனை அறிந்து அவரோடு ஐக்கியப்படுவதே மனித வாழ்க்கையின் முதல் அஸ்திபாரமாயிருக்கிறது.

உலகத்தில் இறைவன் ஒருவரே. அவர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து. அதை எல்லாரும் அறிந்து கொள்ள வேண்டும். அதை அறியாதவரை மனித ஆத்துமாவுக்கு விமோசனம் இல்லை, சமாதானமில்லை. மனந்திரும்பி இறைவனாகிய இயேசுவை அறிந்து கொள்ள, ஏற்றுக் கொள்ள இறைவன் தம்முடைய வேத வாக்கியங்கள் மூலமாய் வழி காண்பித்திருக்கிறார். அவர்கள் துர்க்குணங்களை நீக்கி நற்குணங்களால் நிரம்பி வல்லமையுள்ளவர்களாய் மாற வேண்டும். இறைவனுடைய கருவிகளாய், இறைவன் தமக்கு சித்தமான நன்மைகளை இந்த உலகத்தில் நடப்பிக்க இறைவனுடைய கரத்திலே ஆயத்தப்பட வேண்டும். இறைவன் கரத்திலே தங்களை சமர்ப்பிக்க வேண்டும். அப்பொழுது இறைவனால் அவர்கள் எடுத்து உபயோகிக்கப்படுவார்கள். தூய ஆவியானவர் அவர்களை ஆட்கொண்டு வல்லமையான கிரியைகளைச் செய்வார். மனிதன் வல்லமையுள்ள வாழ்க்கை, இந்த உலகத்தில் வாழவேண்டும். அது இறைவனுடைய அருளினால் ஆகும். அல்லேலூயா! தேவ ஜனங்கள் எல்லாரும் இச் செய்தியைப் பெற்று சுகிப்பீர்களாக. ஆமென்!

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

[CHIEF PASTOR N. LAZAR]

# கிறிஸ்தவ மார்க்கம்

[தொடர்ச்சி]

## கிறிஸ்தவ மார்க்கத்தினுடைய முடிவும், எதிர்பார்ப்பும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகை:-

ஒவ்வொரு மதத்திற்கும் ஒரு முடிவு இருக்க வேண்டும். அநேக மதங்கள் இந்த உலகத்திலே மனிதன் மன அமைதியாய் வாழ்வதற்கு முயற்சிக்கிறவைகளாயிருக்கின்றன. சில மதங்கள் முக்தி அல்லது சொர்க்கம் என்று சொல்லுவது, மனிதன் பாவத்தினால் மறுபடியும், மறுபடியும் பிறக்கிறான். அப்படி பிறக்காதபடி பிறவிக்கடல் நீந்தி இறைவனோடு ஒன்றாகிவிடுகிறது அல்லது பரபிரம்மத்தோடுகூட லேகித்துவிடுகிறது; முக்தி என்று எண்ணுகிறார்கள். இவைகள் தவறு. மனிதன் இறைவனுக்காய் சிருஷ்டிக்கப்பட்டவன். அவன் இறைவனோடுகூட இங்கிருக்கும் பொழுதே ஐக்கியமாகி இறைவனோடுகூட வாழவேண்டும். இறைவனுடைய கட்டளையின்படி ஜீவித்து இறை ஆசீர்வாதத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டும். பரிசுத்தமடைய வேண்டும். முடிவில் பரலோகத்துக்கு எடுத்துக் கொள்ளப்படுவான்.

கர்த்தராகிய இயேசுகிறிஸ்து மனிதனுக்காய் இந்த உலகத்தில் கடந்து வந்து அவனுடைய பாவத்திற்காய் கல்வாரி சிலுவையில் இரத்தம் சிந்தி மரித்து அடக்கம்பண்ணப்பட்டு மூன்றாம் நாளில் உயிரோடெழுந்து 40 நாட்கள் கழித்து பரலோகத்திற்கு செல்லும்போது சீஷர்களைக் கூட்டி ஒலிவமலையின் மேல் வைத்து, இதோ வானத்திலும் பூமியிலும் சகல அதிகாரங்களும் எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. நீங்கள் புறப்பட்டு போய் சகல ஜாதிகளையும் சீஷராக்கி; பிதா குமாரன் பரிசுத்த ஆவியினாலே அவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்து, நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள். இதோ உலகத்தின் முடிவுபரியந்தம் அல்லது இந்த யுகத்தின் முடிவுபரியந்தம் நான் உங்களோடுகூட இருப்பேன் என்று சொன்னார் (மத். 28:18-20).

மேலும் அவர் மேல்வீட்டு அறையிலே சீஷரோடு சம்பாஷித்துக் கொண்டு; நான் போகிறேன். நான் என் பிதாவினிடத்திற்கு பரலோகத்துக்குப் போகிறேன். போய்; உங்களுக்காக ஒரு ஸ்தலத்தை ஆயத்தம்பண்ணவும், நான் இருக்கிற இடத்தில் உங்களை அழைத்துக் கொள்ளவும் திரும்ப வருவேன் என்று சொல்லிச் சென்றார். அவர் வருகைக்குரிய அடையாளங்கள் காணப்படுகின்றன. நடைபெறும் என்று சத்திய வேதாகமத்தில் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்த சம்பவம் எழுத்தின் பிரகாரம் இப்பொழுது நிகழுகின்றன.

கிறிஸ்தவ மார்க்கத்தின் நோக்கமும், எதிர்பார்ப்பும் இயேசுவினுடைய இரண்டாம் வருகை, அநேக பரிசுத்தவான்கள் இந்த பூலோக வாழ்க்கையிலிருந்து கடந்து நித்திரைக்குள்ளாயிருக்கிறார்கள். மரித்து விட்ட அவர்களைக் குறித்து சத்திய வேதாகமத்தில் அவர்கள் நித்திரையிலிருப்பதாக குறிப்பிடப்படுகிறது. அவர்களுடைய ஆத்துமா பரதீசில் (இளைப்பாறுதல் இடம்) இருக்கின்றன.

இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து மனந்திரும்பி பாவமன்னிப்பு பெற்று, பாவத்திலிருந்து விடுதலையான மக்கள், பரிசுத்தாவி பெற்ற மக்கள் அவர்கள் மரித்தாலும் சத்திய வேதாகமம் அதை மரணம் என்று சொல்லவில்லை; அவர்கள் நித்திரையிலிருக்கிறார்கள் என்றே வேதம் சொல்லுகின்றது. ஏனென்றால் ஒரு மெய்கிறிஸ்தவனுக்கு

மரணமில்லை, நித்திரைதான் உண்டு. அவர்கள் மரிக்கும்போது அவர்கள் சரீரம் இந்த பூமியில் அடக்கம்பண்ணப்படுகிறது அல்லது அழிந்துபோகிறது. ஆவி [இளைப்பாறும் இடம்] பரதீசுக்குச் சென்று இறை உலகில் பரிசுத்தவான்களோடு இளைப்பாற செல்லுகிறது.

இயேசு கிறிஸ்துவின் வருகையின்போது முதலாவது கிறிஸ்துவுக்குள் மரித்துப்போன பரிசுத்தவான்கள் முதலாவது எழும்புவார்கள், மறுரூபமடைந்து ஆகாயத்தில் எடுத்துக் கொள்ளப்படுவார்கள். கர்த்தராகிய இயேசு கிறிஸ்து பரலோகத்திலிருந்து ஆகாயத்தில் வருவார். அப்பொழுது பூமியிலே காணப்படுகிற தேவனுடைய பிள்ளைகள், ஆயத்தமாயிருகிறவர்கள் மறுரூபமடைந்து ஆகாயத்திலே அவரைச் சந்திப்பார்கள். கிறிஸ்துவுடன் பரலோகத்துக்குக் கடந்து சென்று, நான் எங்கே இருப்பேனோ அங்கே நீங்களும் இருக்கும்படி உங்களை அழைத்துக் கொள்ள நான் மறுபடியும் வருவேன் என்று சொன்ன இயேசுவானவரின் திருவாக்கின் பிரகாரம் அவர்கள் பரலோகத்தில் தேவனுடைய சந்நிதானத்தில் போய் இருப்பார்கள்.

இயேசு கிறிஸ்து திரும்ப வருவார் என்று புதிய ஏற்பாட்டிலுள்ள 220 அதிகாரங்களில் 318 தடவை கூறப்பட்டுள்ளது. இயேசு கிறிஸ்து திரும்ப வருவார் என்று,

1. தீர்க்கதரிசிகள் சொல்லியிருக்கிறார்கள் [சங். 102:15-17; சகரி. 14:3-5].

2. தேவ தூதர்கள் சாட்சி சொன்னார்கள் [அப். 1:11].

3. அப்போஸ்தலர்கள் தங்கள் எல்லா நிருபங்களிலும் எழுதியிருக்கிறார்கள்.

4. இயேசுவானவரே தான் திரும்ப வருவேன் என்று நேரடியாய் சொல்லியிருக்கிறார் [யோவா. 14:1-3; மத். 16:27].

கிறிஸ்து மார்க்கத்தின் பெரிய அடையாளமாகிய திருவிருந்து ஆசரிக்கப்படும் போதெல்லாம் இயேசு கிறிஸ்துவினுடைய வருகைக்கு அது அடையாளமாயிருக்கிறது நான் வருகிறவரையிலும் என்னை நினைவு கூரும்படி இதைச் செய்யுங்கள் என்று சொன்னபடியினால் அவர் வரும் மட்டும் இந்த சாக்கிரமந்து ஆசரிக்கப்படும் என்றே தெரிகிறது (1 கொரி. 11:26,27).

இயேசு கிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகை, அது இரண்டு பிரிவாயிருக்கிறது.

1. அவர் ஆகாயத்தில் வருவது.

2. அவர் நேரடியாக பூமிக்கு தம்முடைய திருச்சபையோடுகூட இறங்கி வந்து தம்முடைய அரசாட்சியை இந்த பூலோகத்தில் ஸ்தாபிக்கப்போகிறார்.

இயேசுவானவர் பூமியில் '1000' வருட அரசாட்சியை ஸ்தாபிக்கப போகிறார். அந்த ஆயிரம் வருஷ அரசாட்சியில் மனுமக்கள் வாஞ்சித்ததும், எதிர்பார்த்ததும் சகலமும் நிறைவுடையதாக இருக்கும். 6000 ஆண்டுகளாக மனித ஆளுகையிலே உலகம் இருக்கிறது. மனிதன் சுபிட்சத்தையும், சமத்துவத்தையும், நீதியையும், ஒழுக்கத்தையும் கொண்டுவர முயற்சிக்கிறான். மனிதனே உன் கையில் அரசாட்சியை ஒப்படைத்திருக்கிறேன், நீ இவைகளைக் கொண்டு வந்து பார் என்கிறார். தேவன் இந்நாட்களில் நாம் பார்க்கிறது என்ன வென்றால் சூரியனுக்குக் கீழே நியாயஸ்தலத்தைக் கண்டேன். அங்கேயெல்லாம் அநியாயமும் உலகில் விபச்சாரமும், வேசித்தனமும், லஞ்சலாவண்யங்களும், கொள்ளையும், கொலையும், திருட்டும், ஒருவரை ஒருவர் வஞ்சிக்கிறதுமான நிலைதான் காணப்படுகிறது. அதிகார பெலத்தினாலும் ஆள் பெலத்தினாலும், பண பெலத்தினாலும், படை பெலத்தினாலும் தங்கள் அக்கிரமத்தை ஸ்தாபிக்கிறார்கள். நியாயம் கேட்

கிறவர்களை எதிர்க்கிறார்கள். முடிந்தால் ஒழித்துவிட நினைக்கிறார்கள்.

மனிதனை மனிதன் கடித்துப் பட்சிக்கிறான். ஆனபடியினால் மனிதன் எதிர்பார்க்கிற அந்த பொற்காலம் இனி வரப்போகிறது என்று சத்திய வேதாகமம் திட்டமாகக் காண்பிக்கிறது.

இயேசுவானவர் உலகத்தில் பிறந்த பொழுது அவர் ராஜா என்று சொல்லி ஞானிகளுக்கு வெளிப்படுத்தல் உண்டாகி அவர்கள் போய் அவரை தரிசித்து, அவரை வணங்கி, அவருக்குக் காணிக்கைப் படைத்தார்கள் (மத். 2:1-11). வருங்காலத்தின் ராஜா இறைவனாகிய இயேசு கிறிஸ்து, அவருடைய பரிசுத்தவான்கள் அவரோடுகூட சேர்ந்து 1000 வருஷம் உலகத்தை அரசாட்சி செய்யப்போகிறார்கள் [வெளி. 20:4-6]. அந்த 1000 வருஷ அரசாட்சியிலே பூமியில் சாபம் நீங்கி எங்கும் சுபிட்சமும், சமத்துவமும், நீதியும், நியாயமும், அன்பும், ஒழுக்கமும், கட்டுப்பாடும் காணப்படும்.

கிறிஸ்தவர்கள் ஒழுக்கமுடையவர்களாக இந்நாட்களில் ஜீவிக்கிறத, நம்பிக்கையோடு வாழ்வதையே காட்டுகிறது.

மற்ற மதங்கள் மனிதன் எப்படியிருந்தாலும் சரி தன்னுடைய மதச்சடங்குகளை செய்து, பூஜைகளை செய்தால் போதுமென்று சொல்லுகின்றன. சன்மார்க்க ஜீவியத்தை அவ்வளவாய் முக்கியப்படுத்துகிறதில்லை. கிறிஸ்தவமோ குடிகாரர்களையும், வெறியர்களையும், விபச்சாரக்காரரையும், கோபக்காரர்களையும், தவறான தொழில் உடையவர்களையும், கொலைகாரர்களையும் ஜாதிவெறியர்களையும் மனிதர்களாய் மாற்றி இங்கேயே நல்ல குடிமகனாக, தேவ பக்தியுள்ளவனாக மாற்றுகிறது. அவர்களை மனிதர்களாய் மாற்றுகிறது, பின்பு அவர்களை தெய்வ நிலைக்கு உயர்த்துகிறது.

ஆனபடியினால் கிறிஸ்தவர்களுக்குத் தேவன் பெரிய நம்பிக்கை கொடுத்திருக்கிறார்; அந்த நம்பிக்கை அவர்கள் இரட்சிக்கப்பட்டதும், பரிசுத்த ஆவியானால் அபிஷேகம் பெற்றதும் பரிசுத்த ஆவியானவர் அவர்களில் இறங்கி வந்ததின் மூலமாய் அவர்கள் பரலோக வாசிகள் என்று அடையாளமாகிறது. இயேசு கிறிஸ்து [இரண்டாவது] மறுபடியும் வரப்போகிறார்.

[தொடரும்]

"இதோ சீக்கிரமாய் வருகிறேன்" [வெளி. 22:12].

## திருச்சபை (தொடர்ச்சி)

4. கொரிந்தியர் கிறிஸ்தவர்களானவுடனே அத்தகைய நடத்தைகள் அவர்களை விட்டு மறைந்திருக்க வேண்டும்.

5. தீங்கு செய்யப்படும்போது ஏன் அநியாயத்தை சகித்துக் கொள்ளுகிறதில்லை என்னும் மனப்பக்குவம் வரவேண்டும். ஞான

முள்ளவர்கள் சிக்கலைத் தீர்த்து வைக்க வேண்டும்.

குற்றங்கள் வ ர ல ா ம்; முடியுமானால் அதை குணப்படுத்தி விடவேண்டும். ஒரு குற்றவாளியை விலக்கிவிடுவது நல்லது. அவனைத் திருத்துவது இன்னும் நல்லது. அவனைத் தவறி விழாமல் தடுத்துக்காப்பது மிக மிக நல்லது. அநேகர் தவறி விழுகிற தற்கு காரணம் எசேக்கியேலில் காணப் படுகிறது (எசேக். 34:4,9-11). ஆனபடியால் சாந்தமுள்ள பார்வையோடு அப்படிப்பட் டவனை சீர்திருத்தப்பார். நீயும் சோதிக்கப் படாதபடிக்கு உன்னைக் குறித்து எச்சரிக் கையாயிரு [கலா. 6:1].

நடவடிக்கை, சீர்திருத்தப்பண்ணுங்கள் என்னும் சொல்லில் அறிவிக்கப்பட்டுள் ளது. இந்த நோக்கத்தை அல்லது வினை வினை கருத்தில் கொண்டவர்களாக இந்த வேலையை அணுக வேண்டும்

*ஒழுங்கீனமாக நடந்து கொள்பவர்களை திருத்தும் ஒழுங்கு நடவடிக்கை:-*

மேலும் சகோதரரே எங்களிடத்தில் ஏற்றுக்கொண்ட முறைமையின்படி நடவா மல் ஒழுங்கற்று நடக்கிற எந்த சகோதர னையும் நீங்கள் விட்டு விலக வேண்டு மென்று நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினாலே உங்களுக்கு கட்டளை கொடுக்கிறோம்.

1. இது ஒரு கட்டளை. வேண்டுகோள் அல்லது விருப்பத்தை தெரிவிப்பதன்று.

2. எல்லா வல்லமையுள்ளவரும் திருச்சபை யின தலைவருமாகிய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் திரு நாமத்திலே இந்த கட் டளை கொடுக்கப்பட்டுள்ளது.

3. ''விட்டு விலகவேண்டும், கட்டாயம் கடைப்பிடிக்க வேண்டும்,'' க ட் ட ா ய ம் கடைப்பிடிக்க வே ண் டி ய நடவடிக்கை இது. இந்த நடவடிக்கை திருச்சபையின் மீது வி ழு ந் த கடமையாக இருக்கிறது. [2 தெச. 3:6].

4. ''எந்த சகோதரனையும்'' இது யார் மீது நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பதின் எல்லையை விரிவாக்குகிறது. ஒழுங்கில்லாமல் நடக்கும் எவரையும் என்பது தெளிவாயி ருக்கின்றது. எந்தசகோதரனையும் என்பதால் கடவுளின் சட்டத்தை நடைமுறைப்படுத்து வதிலே பாரபட்சத்தை நீக்கிவிடுகின்றது.

5. ''நடக்கிற'' நடக்கையின். ஒழுங்கினை அல்லது வாழ்க்கை முறை. இது தற்செய லாக அல்லது தனிமையாக நடக்கும் நடத் தையைக் குறிக்கவில்லை. ஆனால் ஒரு குறிப் பிட்ட திசையில் உறுதியாகத் தொடர்ந்து அல்லது திரும்ப திரும்ப ந ட க் கு ம் வாழ்க்கை முறையினைச் சுட்டிக் காட்டுகின் றது. நடக்கும் ஒருவர் ஒன்றுக்கு மேற்பட்ட அடிகளை எடுத்து வைக்க வேண்டும்.

6. ''ஒழுங்கற்று'' இது ஒரு முக்கியமான சொல். நாம் ஒழுங்குடன் நடப்பது இந்தச் சொல்லை எவ்வளவாய் விளங்கிக் கொள் ளுகிறோம் என்பதைப் பொருத்திருக்கிறது.

கிரேக்க பாஷையிலே இந்தச் சொல் லின் கருத்தை கவனித்தால் போர்வீரர்கள் வரிசையாக நடைபயின்று செல்லும் போது வரிசையை மீறி அடிதப்பி நடத்தலை அறிவிக்கின்றது. நாம் இதனை வளங்கும் பொருளில் கட்டளைப்படி நடக்காமல் என்று அர்த்தமாகின்றது. நம்முடைய இரட்சிப்பின் படைத்தலைவரால் கொடுக்கப்பட்டுள்ள கட்டளைகள் உண்டு. அந்தக் கட்டளைகளை ஏற்றுக்கொண்டு அவைகளுக்குக் கீழ்ப் படிந்து நடப்பவர்கள் ஒழுங்குடன் நடப் பவர்களாவர். ''எனவே ஒழுங்கற்று'' நடத் தல் என்னும் சொல் கிறிஸ்துவின் சட்டங் களுக்கு முரணாக நடத்தலைத் தெளிவாக விவரித்துக் காட்டுகின்றது.

உங்களுக்குள் விபச்சாரம் உண்டென்று பிரசித்தமாய் சொல்லப்படுகிறதே. கொஞ்சம் புளித்த மா பிசைந்த மா முழுவதையும் புளிப்பாக்கும். ஆனபடியால் கர்த்தராகிய இயேசுவின் நாமத்தினல் அவனை சாத்தானுக்கு ஒப்புக்கொடுக்க வேண்டுமென்று தீர்ப்பு செய்கிறேன். பழைய புளித்தமாவை புறம்பே கழித்துப் போடுங்கள். ஏனெனில் நம்முடைய கிறிஸ்துவாகிய பஸ்கா நமக்காகப் பலியிடப்பட்டிருக்கிறாரே (1 கொரி. 5:1-7; 5:8-11).

இந்த திருவசனங்கள் மூலமாக நாம் அறிவது என்னவென்றால், ஒழுங்கற்று நடக்கிற அல்லது சபைக்கு கீழ்ப்படியாத எவர் மேலும் தண்டனை நடப்பிக்கப்படும் பொழுது சபை முழுவதும் சேர்ந்து நடத்த வேண்டும். இதிலும் சிலர் கள்ளத்தொடர்பாக [குற்றவாளிகளுடன்] அவர்களுடன் கூட்டுவைத்திருப்பார்கள். இவர்களும் குற்றவாளிகளே. அவர்கள் அதற்கான தண்டனையை அடைவார்கள். இறைவன் அவர்களை சபையை விட்டுத் தள்ளிப்போடுகிறார் அல்லது நீக்கிவைக்கிறார். பாதிப்புண்டாக்கும் எந்த நபரும் தேவ நாமத்தை தூஷிக்கிறான். தேவ நோக்கத்தை எதிர்க்கிறான்.

இந்த அதிகாரத்தில் இவ்விதமாக எழுதப்பட்டுள்ளது. நீங்கள் அவனை உங்களை விட்டு நீக்காமலும், இருக்கிறது என்ன? அவனைசாத்தானுக்கு ஒப்புக் கொடுக்கிறேன் [1 கொரி. 5:2-5]. பழைய புளித்த மாவை உங்களை விட்டு தள்ளிப் போடுங்கள். அவனோடுகலந்திருக்கக் கூடாது. அப்படிப்பட்டவர்களோடு புசிக்கவும் கூடாது. அந்த பொல்லாதவனை உங்களை விட்டுத் தள்ளிப்போடுங்கள்(வச. 13).

ஒழுங்கு நடவடிக்கைகள் மூலமாக நாம் பிதாவுக்குக் கீழ்ப்படிய வேண்டுமென்று காண்பிக்கப்படுகிறது எபி.12:9. அது நமக்கு நன்மை உண்டாக்குகிறது. தேவனுடைய பரிசுத்தத்திலே நமக்குப் பங்கு உண்டாக்குகிறது (எபி. 12:10). அதிலே பழகி வந்தவர்களுக்கு அது நீதியாகிய சமாதான பலனைத் தரும் (எபி. 12:11), சத்தியத்தில் வாழ்கின்றவனை அது உறுதிப்படுத்துகிறது. அது விசுவாசிக்கிறவர்களை ஆரோக்கியமடையச் செய்கிறது, வேறு வழியிலே பெற இயலாத பாடத்தை அது பெறச்செய்கிறது.

கடவுளை நிந்திக்கும் செய்கையை 1 தீமோ1:20. மாம்சத்தின் இச்சையை அழிக்கின்றது. கிறிஸ்துவின் நாளில் அவனுடைய ஆவி இரட்சிக்க வழி செய்கிறது (1 கொரி 5:5). சாத்தானின் கண்ணிகளிலிருந்து தப்புகிறதற்கு வழியை உண்டாக்குகின்றது [2 தெச. 2:25,26]. ஒருவனுக்கு தாழ்மை உண்டாவதற்கு வெட்க உணர்ச்சியை தோற்றுவிக்கிறது. அதனால் அவனை ஐக்கியத்திற்குள் திரும்பி வருமாறு செய்கின்றது [2 தெச. 3:16] [உண்மை கிறிஸ்தவர்கள் திரும்பி வருவார்கள்].

(தொடரும்)



"சகோதரரே, ஒருவன் யாதொரு குற்றத்தில் அகப்பட்டால், ஆவிக்குரியவர்களாகிய நீங்கள் சாந்தமுள்ள ஆவியோடே அப்படிப்பட்டவனைச் சீர்பொருந்தப்பண்ணுங்கள்: நீயும் சோதிக்கப்படாதபடிக்கு உன்னைக் குறித்து எச்சரிக்கையாயிரு. (கலா. 6:1).





# பரியாசம் பண்ணாதே

"சிறுவர் பகுதி"

கோடை விடுமுறை முடிந்து, ஞாயிறு பள்ளி திரும்பவும் ஆரம்பமாயிற்று. பிள்ளைகள் மிகவும் உற்சாகத்துடன் அங்கு கடந்து வந்திருந்தார்கள். அன்று ஞாயிறு பள்ளி ஆசிரியர்: கிறிஸ்துவுக்குள் அன்பான பிள்ளைகளே! நாம் அநேக நாட்களுக்குப் பின்பு மீண்டும் ஞாயிறு பள்ளியில் சந்திக்கிறோம். கர்த்தருக்கு ஸ்தோத்திரம் செலுத்துவோமாக.

உங்களில் அநேகர் கடந்த நாட்களில் [விடுமுறையில்] வேதத்தை நன்றாக படித்திருப்பீர்கள் என்று நம்புகிறேன். தீர்க்கதரிசியாகிய எலிசா செய்த அற்புதங்களைப் பற்றி 2 இராஜாக்களின் புஸ்தகத்தில் விவரமாக கூறப்பட்டுள்ளது. தேவ மனிதராகிய அவர் "எரிகோவிலிருந்து பெத்தேல்" என்ற இடத்திற்கு நடந்து போகையில் அந்த பகுதியில் உள்ள சிறுபிள்ளைகள், "மொட்டைத்தலையா ஏறிப்போ, மொட்டைதலையா ஏறிப்போ" என்று சொல்லி பரியாசம் பண்ணினார்கள். உடனே அவர் கர்த்தரின் நாமத்திலே அவர்களைச் சபித்தார். அப்பொழுது காட்டிலிருந்து இரண்டு கரடிகள் புறப்பட்டு வந்து அவர்களில் நாற்பத்திரண்டு சிறுபிள்ளைகளைப் பீறிப்போட்டன. எனவே நாம் தேவ மனிதர்களைப் பரியாசம் பண்ணக் கூடாது என்று கூறினார்.

இந்நாட்களில் மக்களிடையே தேவ பயம் குறைந்து காணப்படுவதால் அவர்கள் மற்றவர்களைப் பரியாசம் பண்ணுகிறார்கள். வம்பும், பரியாசமும் தகாதவைகள், ஸ்தோத்திரம் செய்தலே தகும் என்று [எபே. 5:4] வேதம் சொல்லுகிறது. பரியாசக்காரர்களைப் பற்றியும் அவர்களுக்கு உண்டாகும் தண்டனைகளைப் பற்றியும் நீதிமொழி நூலில் தெளிவாகக் காண்பிக்கப்பட்டுள்ளது. உலக மனிதர்களிடம் மாத்திரமல்ல, இன்று கிறிஸ்தவ மக்களிடையேயும் இந்நோய் [பரியாசம்] பரவலாகக் காணப்படுகிறது. மனிதனுக்கு நாவானது தேவனைத் துதிக்கும்படியாக அருளப்பட்டுள்ளது. ஆனால் தேவனுடைய சாயலாகப் படைக்கப்பட்ட மனிதர்கள் ஒருவரையொருவர் பரியாசம் செய்வதற்காக அதைப் பயன்படுத்துவது, தேவனுடையபார்வையில் கொடிய குற்றமாகும். ஏழையைப் பரியாசம் பண்ணுகிறவன் அவனை உண்டாக்கினவரை (தேவனை) நிந்திக்கிறான் [நீதி. 17:5].

நாம் மற்றவர்களைப் பரியாசம் செய்யும் போது சுயம், பெருமை, ஆணவம், அன்புத்தாழ்ச்சி போன்ற குணங்கள் நம்முடைய உள்ளத்தில் உரமிட்டு வளரத் தொடங்குகின்றன. பரியாசத்தின் விளைநிலம் பண்படாத மனித இதயமே. சத்துருவான சாத்தான் மனிதனுடைய உள்ளத்தில் பரியாச விதையை விதைக்கிறான். பொல்லாத மனிதன் அதைப் பேணி, பாதுகாத்து வளர்க்கிறான். அதற்குக் காரணம் மனித உள்ளத்தில் தேவ அன்பு இல்லாமையே. நாம் தேவனை நேசித்தோமானால் அவரது பிள்ளைகளையும், அதாவது நமது சகோதரர்களையும் நேசிப்போமே.

நாம் எல்லோரையும் மீட்பதற்காக சிலுவையில் பாடுபட்ட கிறிஸ்து நாதரை அக்காலத்தில் எருசலேமில் இருந்த இஸ்ரவேல் ஜனங்களும், யூதர்களும், ரோம போர்ச் சேவகர்களும், அதிகாரிகளும் பரியாசம் செய்தார்கள் (மத். 27:27-29; லூக். 16:14; 18:32; 23:11). தங்கள் பரிதாப நிலையை நினைத்து கதறி அழுது கண்ணீர் விட வேண்டியவர்கள் கல்வாரி நாதரை

பார்த்து கைகொட்டி பரிகசித்தார்கள். அதன் விளைவாக கி. பி. 70ல் ரோம சேனாதிபதி டைட்டஸ் என்பவரால் எருசலேம் நகரம் கைப்பற்றப்பட்டு அழிக்கப்பட்டது. ஆயிரக்கணக்கான ஸ்திரீகளும், குழந்தைகளும், முதியோர்களும் கொலை செய்யப்பட்டார்கள் என்று சரித்திரம் கூறுகிறது.

இரட்சிக்கப்பட்ட தேவ ஜனமே! எச்சரிக்கையாயிரு. கர்த்தருடைய பரிசுத்தவான்களோ, தேவனுடைய பிள்ளைகளோ தோற்றத்தில் எளிமையாகவோ, குள்ளமாகவோ, மெலிவாகவோ அல்லது உயரமாகவோ காணப்படலாம்; அல்லது விரும்பாத ரூபம் அவர்களுக்கு இருந்திருக்கலாம். நீ அவர்களைப் பரியாசம் பண்ணாதே. "எல்லோரையும் கனம் பண்ணுங்கள்; சகோதரரிடத்தில் அன்பு கூருங்கள்; தேவனுக்குப் பயந்திருங்கள்; ராஜாவைக்கனம் பண்ணுங்கள்" என்று (1 பேதுரு 2:17) வேதம் விளம்புகிறது. எனவே அவர்களது நடையுடை பாவனைகளைக் கண்டு நீ அவர்களை அற்பமாக எண்ணாதே: தேவ ஆவியானவர் அவர்களில் தங்கியிருக்கிறார் என்பதை நன்றாக உணர்ந்து கொள். நீ அவர்களை பரியாசம் பண்ணும்போது, தேவனையும் பரியாசம் செய்கிறாய் என்பதை மறந்து விடாதே. தேவன் தம்மை பரியாசம் பண்ணவொட்டார் (கலாத். 6:7). பரியாசம் பண்ணினால் தேவன் உன்னை நியாயந்தீர்ப்பார் என்று அறிந்து கொள் [யூதா 15].

பரியாசம் கடைசிக்கால அந்திகிறிஸ்து ஆவியினுடைய கனியாகும் (2 பேது. 3:3). ஆதலால் பிள்ளைகளே மற்றவர்களுடைய ஆத்துமா துக்கமடையுமளவு யாரையும் பரியாசம், கேலி, கிண்டல் செய்யாதீர்கள். ஒருவரை ஒருவர் உங்களிலும் மேன்மையானவர்களாக எண்ணுங்கள்.

"அப்படியே வம்பும், புத்தியீனமான பேச்சும் தகாதவைகள்; ஸ்தோத்திரம் செய்தலே தகும்" [எபே. 5:4].

# இரண்டிரண்டு பேர்

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இந்த உலகத்தில் இருந்தபோது எழுபது சீஷர்களை தெரிந்து கொண்டு இரண்டிரண்டு பேராக ஊழியத்திற்கு அனுப்பினார் (லூக் 10:1). தனித்தனியே அனுப்பாமல் ஏன் இரண்டிரண்டு பேராக அனுப்பினார் என்று சிந்திக்கும்போது அதில் அநேக ஆவிக்குரிய சரீரப்பிரகாரமான, சமுதாயம் மற்றும் உலக சம்பந்தமான ஆலோசனைகள் அடங்கி இருக்கிறது. சர்வ ஞானமுள்ள இறைவன் ஒரு ஆலோசனை கொடுக்கிறார் என்றால், அதை அப்படியே கைக்கொள்ள வேண்டியது நம்முடைய கடமையாகும். அதற்குமாறாக நடக்கிறவர்கள் வெற்றி பெறுகிறதில்லை. அநேகர் சாத்தானால் வீழ்த்தப்படுகிறார்கள்.

இந்நாட்களில் அநேகர் சுய ஆவியினால் அல்லது சாத்தானால் தூண்டப்பட்டு தனியே ஊழியத்திற்கு போகிறேன் என்று கையில் ஒரு வேதாகமத்தை எடுத்துக் கொண்டு வீடுவீடாக போகலாம் என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். அநேகர் தேவபக்தியை ஆதாயத் தொழிலாக, வயிற்றுப்பிழைப்பாக செய்கிறார்கள். இது வேதாகம மாதிரியல்ல (பிலி. 3:18,19;

1 தீமோத். 6:5; வேதாகம முறையின்படி அவர்கள் தேவனால் அழைக்கப்பட்டு திருச் சபையின் அப்போஸ்தலர்கள் மூப்பர்களால் அதிகாரப்படுத்தப்பட்டு அனுப்பப்பட வேண்டும் (எபி. 5:4; மத். 28:18,19; லூக். 10:1; அப். 13:2,3). இரண்டிரண்டு பேராக ஏன் அனுப்பினார் என்பதைப்பற்றி சில காரியங்களை நாம் அறியலாம்.

1. ஒருவருக்கொருவர் உதவியாக இருக்கும்படியாக அனுப்பினார். தனியே செல்வதைவிட ஒருவர் துணைக்காக கூடச்செல்வது மிகவும் நல்ல காரியமாகும். தேவனுடைய காரியங்களை பகிர்ந்து கொள்ளவும், ஜெபிக்கவும், சம்பாசிக்கவும், வேதம் வாசிக்கவும், பாடவும் மிகவும் உதவியாக இருக்கும். சகோதரர் ஒருமித்து வாசம் செய்வது எவ்வளவு இன்பமும், நன்மையுமானது? "இரண்டு மூன்று பேர் என் நாமத்தினாலே எங்கே கூடி வருகிறீர்களோ அங்கே நான் இருப்பேன்" என்று இயேசு சொன்னார். சோர்ந்து போகும்போது பெலப்படுத்தும்படியாக, உற்சாகபடுத்தும்படியாக இருவராய் செல்வது அவசியம். இருவர் ஒருமனப்பட்டு செய்யும் ஊழியம் மிகவும் வல்லமையுள்ளதாக இருக்கும். ஒண்டியாயிருப்பதிலும் இருவர் கூடியிருப்பது நலம். அவர்களுடைய பிரயாசத்தினால் அவர்களுக்கு நல்ல பலனுண்டாகும் (பிர. 4:9,10).

2. ஒருவருக்கொருவர் பாதுகாப்பிற்காக அனுப்பினார். துன்மார்க்கரின் பிடியிலிருந்து, ஆபத்திலிருந்து தப்பித்துக் கொள்ளும்படியாக அனுப்பினார். உலகம் பொல்லாங்கனுக்குள் கிடக்கிறது. எங்கு பார்த்தாலும் அநியாயம், அக்கிரமம், கொலை, கொள்ளை நடக்கிறது. ஆட்டுக்குட்டிகளை ஓநாய்களுக்குள்ளே அனுப்புகிறது போல உங்களை அனுப்புகிறேன் என்றார். தேவனுடைய ஊழியத்திற்கு எதிராக அநேக எதிரிகள் கிரியை செய்கிறார்கள். ஒருவனை யாதாமொருவன் மேற்கொள்ள வந்தால் இருவரும் அவனுக்கு எதிர்த்து நிற்கலாம். முப்புரிநூல் சீக்கிரம் அறாது (பிர. 4:12). ஒருவன் விழுந்தால் அவன் உடனாளி அவனைத் தூக்கிவிடுவான். ஒண்டியாயிருந்து விழுகிறவனுக்கு ஐயோ! அவனைத் தூக்கிவிட துணையில்லையே! அப். பேதுரு, பவுல் போன்றவர்கள் சகோதரர்களை, ஊழியர்களை வழித்துணைக்காக அழைத்துச் சென்றார்கள். தனியே சென்றதாக எழுதப்படவில்லை [அப். 10:23; 15:12,25,27,40; 19:29; 20:4]. இரண்டுபேர் என்று சொல்லும் போது ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் ஒரு சிலராக சென்றார்கள் என்று அர்த்தமாகும்.

3. ஆண்களையே தெரிந்து கொண்டு அனுப்பினார். அதில் பெண்களை தெரிந்து கொண்டு அனுப்பவில்லை (பிர. 7:28). இந்நாட்களில் ஒரு சில கூட்டத்தார் வாலிப பெண்களை கூட்டிக் கொண்டு ஊழியத்திற்கு போகிறார்கள். இது வேதாகமத்தின்படி தவறாகும். விரோதியானவன் நிந்திக்கிறதற்கு ஏதுவாக இருக்கிறது [1 தீமோ. 5: 13,14]. வீடுகளை சந்திக்கிறோம் என்று சொல்லி, ஸ்திரீகள் பெண்களுக்கு ஆலோசனை கொடுக்கிறார்கள். ஸ்திரீகள் அவர்களை ஆளுகிறார்கள் என்று எழுதியிருக்கிறபடி கணவர்களுக்கு கீழ்ப்படியாமல் இருக்கும்படி போதித்து குடும்பத்தில் பிரிவினையை உண்டாக்கி விடுகிறார்கள்.

திருமணமாகாத விரத்தரும் வாலிப ஸ்திரீகளும் குடும்பஸ்தர்க்கு ஆலோசனை கூற முடியுமா? இரவு நேரமாகிவிட்டால் எங்கே தங்க முடியும்? ஸ்திரீகளுக்கு பாதுகாப்பு எங்கே? சரீரபிரகாரமாக உறவினரல்லாத ஸ்திரீகளை கூட்டிச் செல்வது அவலட்சணமான காரியமாய்த் தோன்றவில்லையா? அப். பேதுருவும், கர்த்தருடைய சகோதரரும் மனைவியைத்தான் அழைத்து சென்றார்கள் (1 கொரி. 9:5). புறமதஸ்தரும் புறஜாதிகளும் சமுதாயத்தின்படி தூஷிக்க தக்கதாய் நாம் நடக்கலாமா? தேவ ஆலோசனையை அசட்டை பண்ணுகிறவர்களே சிந்தியுங்கள்.

4. பாவ சோதனை ஏற்படாதபடி தப்பித் கொள்ளும்படியாக அனுப்பினர். சாத்தான் பெண்கள் மூலமாக அநேக ஊழியக்காரர் களை பாவ வலையில் சிக்கச்செய்து விழ்த்தி விடுகிறன். பெண்கள் வீடுகளில் தனியே இருக்கும்போது ஆண்கள் தனியே செல் வது நல்ல தல்ல; பாவ சோதனை ஏற்படலாம். ஆனல் இருவராக சென்றல் பாவ சோதனைக்கு இட மேயில்லை. மற்றவர்களும் சந்தேகப்பட வோ, தூஷிக்கவோ இடமேயில்லை. அநே கர் இந்த ஆலோசனையை அல்லத்தட்டி விழுந்து போனர்கள். மேலும் அநேக கள்ள ஊழியர்களும் ஊழியம் செய்கிறேம் என்று வீடுகளை சந்திக்க வருகிறர்கள். முன் பின் தெரியாதவர்கள் பெண்கள் தனியே இருக்கும்போது வந்தால் வீடுகளில் ஏற் றுக் கொள்ளக் கூடாது. கணவர் வீட்டில் இருக்கும்போது வாருங்கள் என்று அனுப்பி விடவேண்டும். சாத்தானும் ஒளியின் தூத னுடைய வேஷத்தை தரித்துக் கொள்ளு வானே(2 தீமோ. 3:1-7). இயேசுகிறிஸ்துவை மறுதலிக்கிற அந்திகிறிஸ்துவின் கூட்டத் தார் வீடுகளுக்கு வந்தால் ஏற்றுக் கொள் ளவே கூடாது (2 யோவா. 10,11).

5. சுகக்கேடு வந்து விட்டால் உதவியாக இருக்கும்படி அனுப்பினர். அப். பவுலுக்கு உதவியாக வைத்தியராகிய லூக்கா கூடவே சென்றர் [2 தீமோ. 4:11]. யோவான் அப். பர்னபா, பவுல் ஆகியோ ருக்கு உதவிக்காரனயிருந்தார் (அப். 13:5).

ஆகவே தேவனுடைய ஆலோசனைகள் சிறியதாக தோன்றினலும் அதை அப்ப டியே கைக் கொள்ள வேண்டும். எதிரியா னவன் நம்மை குறித்து பொல்லாங்கு சொல்லுகிறதற்கு ஒன்றுமில்லாமல் மாதிரி யாக இருக்க வேண்டும் [தீத்து. 2:7,8]. அப்பொழுது நாமும் பாதுகாக்கப்படுவோம்' ஊழியமும் வெற்றி பெறும். கர்த்தரும் நம் ஊழியத்தை ஆசீர்வதிப்பார்.

"அன்றையத்தினமே அவர்களில் இரண்டுபேர் எருசலேமுக்கு ஏழு அல்லது எட்டு மைல் தூரமான எம்மாவூர் என்னும் கிராமத்துக்குப் போனர்கள்" (லூக். 24:13).

# வேத பாடம் [தொடர்ச்சி]

## எண்ணகமம்

### எண் 23:11,12

ஆவிக்குரிய சரீரத்தில் அவர் வெளிப்படும்போது அவரை காணமுடியும் என்று அறிகிறேம். மோசே போன்ற பரிசுத்தவான்கள் முகமுகமாய் அவரைக் கண்டார்கள்; அவருடைய பின்புறத்தைப் பார்த்தார்கள். காணப்படவிதமாய் சில வேளைகளில் இறைவன் வருகிறதும், போகிறதும், அவர் பேசுகிறரென்றும், மனிதன் விளங்கிக் கொள் ளும் அளவுக்கு இறைவன் தன்னை காண்பிக்கிறர், இயேசு கிறிஸ்துவும் சொல்லியிருக் கிறர்' "தேவன் ஆவியாயிருக்கிறர்" என்று (யோவா. 4:24). பொய் சொல்ல தேவன்

ஒரு மனிதனல்ல. மனம்மாற அவர் ஒரு மனுபுத்திரனும் அல்ல. அவர் சொல்லியும் செய்யாதிருப்பாரோ, அவர் வசனித்தும் நிறைவேற்றுதிருப்பாரா? அவர் வாக்குரைத்தார். அவர் பண்ணின உடன்படிக்கை அவர் வெளிப்படுத்தியது, அவர் எழுதியது. அவர் ஆசீர்வதித்ததை நிறைவேற்றியே முடிப்பார். இறைவன் சொன்னதை செய்கிறார். (இறைவன் என்ன செய்கிறார் என்று கேட்கப்படும் பொழுதெல்லாம் இறைவன் தாம் சொன்னதை நிறைவேற்றிக் கொண்டிருக்கிறார். வாக்கருளினதை நிறைவேற்றிக் கொண்டிருக்கிறார் என்று பதில் கொடுக்கப்படுவதுண்டு.) பொய் சொல்லவோ, மனம் மாறவோ தேவன் மனிதனல்ல.

வச. 20:- இதோ ஆசீர்வதிக்கக் கட்டளை பெற்றேன். அவர் ஆசீர்வதிக்கிறார், ஏற்கனவே எண். 22:12-ம் வசனத்தில் இறைவன் பிலேயாமுக்குச் சொன்னார்; நீ அந்த மோவாபிய பிரபுக்களோடு போக வேண்டாம்; அந்த ஜனங்களை சபிக்கவும் வேண்டாம்; அவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். இறைவன் ஆசீர்வதிக்கிறவர்கள், ஆசீர்வதிக்கப்பட்டவர்களே,

ஆசீர்வதிக்க அவர் கட்டளையிட்டுள்ளார் என்று பிலேயாம் சொல்லுகிறான். அதை அவன் திருப்பக்கூடாது. இறைவன் ஒரு மனிதனையோ, ஒரு குடும்பத்தையோ, ஒரு ஜனத்தையோ ஆசீர்வதித்து உயர்த்தும்போது யாரும் அதை மாற்றவோ, தடுக்கவோ, அதை இல்லாமல் ஆக்கவோ முடியாது.

வச. 21:- அவர் யாக்கோபிலே அக்கிரமத்தைக் காண்கிறதும் இல்லை, இஸ்ரவேலிலே குற்றம் பார்க்கிறதும் இல்லை. தேவனுடைய ஜனங்கள் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய புண்ணியத்தினால் சம்பாதித்த பொக்கிஷங்களை, சொத்துக்களை சுதந்தரித்துக் கொள்ளுகிறார்கள். எவர்களுடைய பாவங்களை தேவன் மன்னிக்கிறாரோ' எவர்களுடைய அக்கிரமங்களை தேவன் எண்ணாதிருக்கிறாரோ, எவருடைய பாவங்களை மூடிப் போடுகிறாரோ அவர்கள் பாக்கியவான்கள். இறைவன் யாருக்கு மன்னிக்க சித்தமுள்ளவராயிருக்கிறாரோ அவர்களுக்கு அவர் மன்னிக்கிறார்.

புதிய ஏற்பாட்டிலே கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து ஏற்றுக் கொண்டு அவருடைய கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து அவருடைய மந்தையின் ஆடுகளாயிருக்கிறவர்கள் இந்த ஆசீர்வாதத்துக்குரியவர்களாயிருக்கிறார்கள் (யோ. 10:28,29). உண்மையாய் மறுபடியும் (மனந்திரும்பி) பிறந்தவர்கள், அவர்கள் பிறந்தவர்கள்தான். அவர்கள் பின்னால் போகிறதோ, விழுந்து போகிறதோ, அழிந்து போகிறதோ இல்லை, அவர் யாக்கோபிலே அக்கிரமத்தை காண்கிறதும் இல்லை, அவர் இஸ்ரவேலிலே குற்றம்

---

25-8-95 அன்று பள்ளப்பட்டி - கிளை சபையில் 41 பேர்கள் ஞானஸ்நானம் பெற்று திருச்சபையின் அங்கமானார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

---

பார்க்கிறதும் இல்லை. கடவுள் அந்த ஜனத்தை எகிப்திலிருந்து வரவழைத்தார். அவர்களுடைய தேவனாகிய கர்த்தர் அவர்களோடே இருக்கிறார் [யாத். 29:45,46].

தேவன் சபையில் இருக்கிறார், தம்முடைய ஜனங்களோடுகூட இருக்கிறார். அவர்கள் மத்தியிலே வாசம்பண்ணும்படியாகவே அவர் விடுதலையாக்கி இரட்சிப்பில் அழைத்துச் செல்லுகிறார். ராஜாவின் ஜெயக்கெம்பீரம் அவர்களுக்குள்ளே இருக்கிறது. இஸ்ரவேலருக்கு காணத்தக்கதான உலகப்பிரகாரமான ராஜா இல்லை. ஆனால் தேவன் அவர்கள் மத்தியிலே இருந்தார். ராஜாவின் ஜெயக்கெம்பீரம் அவர்களுக்குள்ளே இருந்தது. ஓக், சீகோன் போன்ற ராட்சஷ அரசர்களை வென்று அவர்களுடைய ராஜ்யங்களை கைப்பற்றினார்கள்.

கடவுள் தேவ ஜனங்களோடு இருக்கிறதே அவர்களுக்கு ஜெயம். அவர்களுடைய சத்துருக்களுக்குத் தோல்வி. கடவுள் தேவ ஜனங்களோடுகூட இருக்கிறது அவர்களுக்கு வெற்றியைக் கொண்டுவருகிறது.

சங்கீதக்காரர் சங். 18-ல் தேவனால்தான் ஜெயமடைந்ததாக, வெற்றியடைந்ததாக பெலனடைந்ததாக பாடியிருக்கிறார். தேவ ஜனங்கள் தேவனால் பலன் கொள்ள முடியும். நீதிமான்களின் கூடாரங்களில் இரட்சிப்பின் கெம்பீர சத்தமுண்டு. கர்த்தரின் வலதுகரம் பராக்கிரமம் செய்யும். எல்லாக் காரியங்களிலேயும் தேவ ஜனங்களுக்கு ஜெயம் உண்டாகும். ராஜாவின் ஜெய கெம்பீரம் அவர்கள் மத்தியிலே உண்டு. அவர்கள் மத்தியிலே எல்லாவற்றிலும் ஜெயம் உண்டாகும். 2 சாமு. 22:1ல் கர்த்தர் தாவீதை அவனுடைய எல்லாச் சத்துருக்களின் கைக்கும் நீங்கலாக்கி விடுவித்தபோது அவர் பாடின பாட்டு என்று எழுதப்பட்டுள்ளது. நீதிமானுக்கு வரும் துன்பம் அநேகமாயிருக்கும். இருந்தாலும் அவைகளெல்லாவற்றிலிருந்தும் கடவுள் அவர்களை இரட்சிப்பார் (சங். 34:19), விடுவித்து இரட்சித்தபோது பாடின பாட்டு.

தேவனுடைய ஜனங்கள் பலர் துன்பங்கள், துக்கங்கள், கஷ்டங்கள், நெருக்கங்கள், வியாதிகள், வறுமைகள், எதிர்ப்புகள் உண்டானாலும் அவைகள் எல்லாவற்றிலிருந்தும் தேவன் அவர்களை விடுவிப்பார், ஜெயங்கொள்ளச் செய்வார், ராஜாவின் ஜெயக்கெம்பீரம் அவர்களிடத்தில் உண்டு.

வச. 22:- தேவன் அவர்களை எகிப்திலிருந்து புறப்படப் பண்ணினார். இது சரித்திர சம்பவமாகும்.

தேவன் தம்முடைய ஜனங்களை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினார். சிவந்த சமுத்திரத்தைத் தாண்டி வனாந்தர வழியாய் அழைத்து செல்லுகிறார். காண்டாமிருகத்துக்கொத்த பலன் அவர்களுக்கு உண்டு என்று எண். 24:8 ல் உள்ளது. யுத்தத்தில் ஜெயம் கொள்ளும்படியாய் தேவன் அவர்கள் மத்தியிலே இருந்து அவர்களைப் பலப்படுத்தினார், இயக்கினார். முன் சென்றார், எதிரிகளைக் கீழ்ப்படுத்தினார்.

தேவன் தமக்கென்று ஒரு ஜனத்தை ஆயத்தப்படுத்துகிறார். அவர்கள் மத்தியிலே தேவனுடைய வல்லமை உண்டு. காண்டாமிருகம் ஒரு பலமுள்ள மிருகம் என்று வேதாகமத்தில் பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது [யோபு 39:10,11; உபா. 33:17].

வச. 23:- யாக்கோபுக்கு விரோதமான மந்திரவாதம் இல்லை, இஸ்ரவேலுக்கு விரோதமான குறிசொல்லுதலும் இல்லை. தேவ ஜனங்களுக்கு விரோதமான ஆலோசனைகள் இல்லை. இறைவன் இஸ்ரவேல் ஜனங்கள் மேல் அன்பு கூர்ந்ததினால் பிலேயாமுக்குச் செவி கொடுக்கவில்லை. அவன் சபிக்கும்படியாய் விரும்பினான். அந்த சாபத்தை தேவன் ஆசீர்வாதமாக மாற்றினார். கடவுள் தம்முடைய ஜனங்களை ஆசீர்வதித்திருக்கிறார். கடவுளுடைய வல்லமை அவர்கள் மத்தியிலே உண்டு. தேவனுடைய ஜனங்களுக்கு விரோதமாக மந்திரவாதமும், பில்லிசூனியமும் ஒன்றும் பலிப்பதில்லை. ஏனென்றால் அவர்கள் தேவனுடைய பிள்ளைகள்.

சில மதங்களிலே மந்திரவாதங்கள், பில்லிசூனியங்களாகிய பிசாசின் கிரியைகள் காணப்படுகின்றன. மனிதனுடைய மனோசக்தி சொற்களின் வார்த்தைகளின் வல்லமையும் பிசாசின் கிரியைகளினாலும் மனிதர்கள் ஒருவருக்கொருவர் பில்லிசூனியங்களையும் மந்திரவாதங்களையும் செய்கிறார்கள். அந்த மதங்களிலே இறைவன் கிடையாது. விழுந்துபோன தேவதூதர்கள் பேய்களுடைய கிரியைகள் காணப்படுகின்றன.

ஒரு தெய்வத்தை ஒரு மனிதன் கும்பிடுகிறான். அவனுடைய விரோதி ஒருவன் ஒரு மந்திரவாதியை சந்தித்து அந்த தெய்வத்தையே இந்த மனிதனுக்கு விரோதமாக தூண்டிவிட்டு தீமை செய்ய முடியும். அவன் நம் தொண்டன்தானே அவனுக்கு தீமை செய்யக் கூடாது என்று அவைகளுக்குத் தெரியாது. ஏனென்றால் அவைகள் பேய்கள். அவைகள் மந்திரவாதத்துக்கு, மந்திரவாதிகளுக்கு கட்டுப்பட்டவைகளாயிருக்கின்றன. ஆனபடியால் அவர்களுடைய சாஸ்திரத்தில் எழுதியிருக்கிறது. "தெய்வங்களெல்லாம் மந்திரத்துக்குள் அடக்கம், மந்திரம் பிராமணனுக்குள் அடக்கம். ஆனபடியால் பிராமணனே நமக்கு கண்கண்ட தெய்வம் என்று எழுதி வைத்திருக்கிறார்கள். அந்த தெய்வங்களெல்லாம் மந்திரங்களுக்குள், மந்திரவாதிக்குள் அடக்கம்; ஆனபடியால் மந்திரவாதிகளே பெரிய தெய்வமாக காணப்படுகிறார்கள்.

மெய்மார்க்கமோ மிகவும் தெளிவாய் இறைவனாகிய இயேசு கிறிஸ்துவின் பெயரைச் சொன்னாலே மந்திரவாதமும், தந்திரவாதமும் பலிப்பதில்லை. மந்திரவாதம் நொறுங்கிவிடும். அப்படியே மெய்யான தேவ ஜனங்களுக்கு விரோதமாக மந்திரவாதமோ பில்லிசூனியமோ, குறிசொல்லுதலோ, கூடிப் பேசி ஆலோசனை செய்து அவர்கள் தீமை செய்ய தீர்மானிப்பதோ நிறைவேறாது.

(தொடரும்).

"தேவன் வாக்குத்தத்தம்பண்ணினதை நிறைவேற்ற வல்லவராயிருக்கிறாரென்று முழு நிச்சயமாய் நம்பி, தேவனை மகிமைப்படுத்தி, விசுவாசத்தில் வல்லவனானான்" [ரோமர். 4:21].

# வீடு சந்திப்பு ஊழியம்

திருச்சபையின் ஊழியங்களில் சபை மக்களின் வீடுகளை சந்தித்து அவர்களுடைய காரியங்களை விசாரித்து அவர்களுக்காக ஜெபம்பண்ணி ஆலோசனை கொடுக்கும் ஊழியம் சபையின் வளர்ச்சிக்கு மிகவும் முக்கியமான ஊழியமாகும்.

சபை கூடிவரும் நேரங்களிலும் பரிசுத்த ஆராதனைக்கு பின்பும் எல்லோரையும் விசாரித்து ஜெபிக்க நேரம் இல்லாதபடியால் வீடுகளில் அவர்களை சந்தித்து விசாரித்து ஜெபிக்க வேண்டியது அவசியமாகும். மேய்ப்பன் ஆடுகளின் நிலையை அறிந்து கொள்ள வேண்டும். சபை மக்களுடைய வீடுகளை சபையின் ஊழியர்கள் தான் சந்திக்க வேண்டும். அப்பவுல் பர்னபாவை நோக்கி: நாம் கர்த்தருடைய வசனத்தை அனுப்பியிருக்கிற சகல பட்டணங்களிலுமுள்ள சகோதரர்கள் எப்படி இருக்கிறார்கள் என்று போய்ப்பார்ப்போம் வாரும் என்றான் [அப். 15:36]. புதிய ஆத்துமாக்களை, குடும்பங்களை சந்திக்கும் போது அவர்களை மறுபடியும் தொடர்ந்து சந்தித்து அவர்களை சபையின் பிள்ளைகளாக மாற்றுவதற்கு இந்த ஊழியம் உதவுகிறது.

இந்நாட்களில் அநேகர் கையில் ஒரு வேதாகமத்தை எடுத்துக் கொண்டு வீடு வீடாக சென்று கொண்டிருக்கிறார்கள். அநேகர் தேவபக்தியை ஆதாயத் தொழிலாக, வயிற்று பிழைப்பிற்காக செய்கிறார்கள். இது வேதாகம மாதிரியல்ல [பிலி. 3: 18,19]. சபையின் மேய்ப்பர் தன் சபையின் ஆடுகளை விசாரிக்க வேண்டும்.

வீடு சந்திப்பின் மூலமாக சபை மக்களுக்கு ஆவிக்குரிய சரீரப்பிரகாரமான நன்மைகள் உண்டாகும். ஆசீர்வாதம் உண்டாகும். வீடுகளில் சமாதானம் உண்டாகும். அசுத்த ஆவிகள் விலகிப்போகும். பிசாசின் போராட்டங்கள் மாற்றப்படும். ஊழியர்கள் சமாதான வாழ்த்துதல் கூறி ஜெபித்தால் அந்த சமாதானம் உண்டாகும் (லூக். 10:5-7).

குடும்பத்தில் கணவனுக்கும், மனைவிக்கும் மனஸ்தாபம் உண்டாயிருந்தாலும் பிள்ளைகள் மூலமாகவும், உறவினர், நண்பர்கள் மூலமாகவும், எந்த ஒரு பிரச்சனை ஏற்பட்டாலும் சபை மக்கள் ஊழியக்காரரை அழைத்து ஆலோசனை பெற்று விடுதலை பெற்றுக் கொள்ளவேண்டும். சபை மேய்ப்பர்கள் ஆவிக்குரிய தகப்பன்மார்களாக இருக்கிறார்கள் (1 கொரி. 4:14,15). குடும்பத்திலோ, சகோதரர்களுக்குள்ளோ வழக்கு உண்டானால் பரிசுத்தவான்களை வைத்து தீர்த்துக் கொள்ளவேண்டும். உலக மனிதர்களையோ, உறவினர்களையோ நாடக்கூடாது [1 கொரி. 6:1-5; 1 தீமோ 5:17].

நம் வீடுகளில் ஆசீர்வாதம் உண்டாகும்படி பரிசுத்தவான்களை வீட்டிற்கு அழைத்து உபசரிக்க வேண்டும். என் நாமத்தினிமித்தம் ஒரு கலசம் தண்ணீர் கொடுக்கிறவனும் அதன் பலனை அடையாமற் போவதில்லை என்று கர்த்தர் சொன்னார் (மத். 10:40-42). குறைவுகள் மாற்றப்படும் [2 இராஜா. 4:1-7]; ஆசீர்வாதம் உண்டாகும் (2 இராஜா. 4:8-11,16).

புதிய ஆத்துமாக்கள், நண்பர்கள், உறவினர்களை சபை மேய்ப்பருக்கு அறிமுகப்படுத்தும்போது அவர்களுக்கும் சுவிசேஷத்தை அறிவித்து சபையைப்பற்றி அறிவித்து அவர்களை பூரண இரட்சிப்புக்குள்ளாக வழிநடத்த முடியும் (அப். 16:30-34).

அநேக சபைகளிலே சபை மக்களுக்கும் ஊழியக்காரருக்கும் தொடர்பே இருக்காது. சபை ஆராதனை முடிந்தபின் போய் விடுவார்கள். அவர்களுடைய பிரச்சனை போராட்டம் என்ன? குடும்ப நிலவரம்

என்ன? என்பதே தெரியாது. சபையானது சரீரமாக இருப்பதால் எல்லா விபரங்களும் ஊழியருக்கு தெரிந்திருப்பது அவசியம். சபையானது ஆவிக்குரிய ஆலோசனை மட்டுமல்ல, வேலை விஷயமாக, குடும்ப விஷயமாக உலகப்பிரகாரமான நல்ல ஆலோசனையும் கொடுக்க வேண்டும். சபை மக்கள் சுகித்திருக்கும்படியான சகல ஆலோசனைகளும் சபையில் இருந்து கொடுக்கப்படுகின்றது.

மேலும் யாராவது வியாதிப்பட்டால் சபையின மேப்பர்களை வர வழைக்க வேண்டும். அநேகர் இதை தெரியப்படுத்த மாட்டார்கள். பின்பு ஊழியர்கள் வந்து ஜெபிக்க வில்லை என்று குற்றம் சாட்டுவார்கள். வியாதி வந்தால் டாக்டரிடம் பணம் செலவழிக்க ஓடுவார்கள்; ஆனால் சபையின் மூப்பர்களை வரவழைத்து ஜெபிக்கலாம் என்ற விசுவாசம், நம்பிக்கை யில்லை [யாக்.5:14,15]. இது தவறாகும். சபை மக்கள்தான் ஊழியக்காரரை அழைத்துச் சொல்ல வேண்டும்.

இந்நாட்களில் அநேக கள்ள ஊழியர்களை வீடுகளை சந்திக்கிறோம் என்று நாடோடிகளாய் திரிகிறார்கள். கர்த்தரின் நாமத்தினால் உங்களை ஆசீர்வதிக்கிறோம் என்று வழிப்போக்கர் சொல்லுவதுமில்லை [சங். 129:8]. திருச்சபையின் ஊழியர்கள் தான் ஆசீர்வதிக்க முடியும்.

மாம்சத்தில் வந்த இயேசுகிறிஸ்துவை மறுதலிக்கிற அந்திகிறிஸ்துவின் ஊழியர்கள், யேகோவா சாட்சிகள் என்று வருகிறவர்களை வீட்டில் ஏற்றுக் கொள்ளகூடாது (2 யோவா. 7-11). மற்ற உபதேசத்தை கொண்டுவருகிறவர்கள், சபை மக்களின் விசுவாசத்தை கவிழ்த்திப்போடுவார்கள் [தீத்து. 1:10-11; 2 பேது. 2:1-3]. உங்களை கலக்குகிறவர்கள் தரிப்புண்டு போனால் நலமாயிருக்கும் [கலா. 5:12].

சில சபைகளில் ஊழியக்காரிகள் இரண்டு அல்லது மூன்று பேர் வீடுகளை சந்திக்கிறோம். சகோதரிகளுக்கு ஆலோசனை கொடுக்கிறோம் என்று சொல்லி குடும்பங்களில் பிரிவினை உண்டாக்கி சமாதான கேட்டை உண்டாக்கி விடுகிறார்கள். ஆகவே இவர்களையும் ஏற்றுக் கொள்ள கூடாது.

சபை மக்களின் குடும்பங்களில் ஆசீர்வாதம் உண்டாகும் போது சபை ஊழியர்களையும் மக்களையும் அழைத்து ஸ்தோத்திர கூட்டம் ஏற்பாடுசெய்து விருந்து உபசரணைகள் செய்து தேவனை மகிமைப்படுத்த வேண்டும். அப்படியே பிரச்சனைகள், பிசாசின் போராட்டங்கள், துக்க சம்பவங்கள் ஏற்படும்போது சபையை அழைத்து அதற்காகவும் உபவாசித்தோ, போராடி ஜெபித்தோ தீமைகள் மாற்றப்படும்படியாக ஜெபிக்க செய்வது அவசியமாகும். சபை மக்களின் ஆவிக்குரிய வளர்ச்சிக்கு வீடு சந்திப்பு ஊழியம் மிகவும் அவசியம்.

---

"உன் ஆடுகளின் நிலமையை நன்றாய் அறிந்து கொள்; உன் மந்தைகளின் மேல் கவனமாயிரு" [நீதி. 27:23].

---

## பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Eld. எடிசன் S/O பாஸ்டர் S. சுந்தர் ராஜ் | மினி D/O. ஜான்சன் | நெய்யாற்றின் கரை | 22-7-95 |

[தொடர்ச்சி]

# பெண்கள்

தெய்வ பக்திக்குரிய ஜீவகாருண்யம் சகல காரியங்களுக்கும் ஆதியாயிருப்பதால் பெண்களுக்குஜீவ காருண்யத்தை உபதேசிக்கவேண்டும். தன்னைப்போல்பிறரை நேசிக்கவேண்டும் என்கிற வேத வாக்கியம் சகல வேத சாஸ்திரங்களுக்கும் சாரசங்கீர்த்தனமாய் இருக்கின்றது. மனுஷரால் செய்யப்பட்டிருக்கிற சாஸ்திரங்களும், சட்டங்களும் விஸ்தாரமாயும், புதைபொருளாயும் பல வியாக்கியான கர்த்தாக்கள் ஒருவருக்கொருவர் பரஸ்பர விரோதமாகவும், ஒரு வேத வாக்கியத்தை பல வியாக்கியானங்களைச் செய்கிறார்கள். தன்னைப்போல் பிறரையும் நேசிக்கவேண்டும் என்ற வேத வாக்கியமானது மலைமேல் வைத்த தீபம் போல் யாவருக்கும் எளிதில் பயன் விளைவிக்கத்தக்கதாக விளங்குகிறது, அதற்கு வியாக்கியானம் வேண்டுவது இல்லை.

வேதாகமத்திலுள்ள வாக்கியங்கள் மிகவும் தெளிவானவையாகும். பசித்தவர்களுக்கு ஆகாரம் கொடுத்தல், தாகமுள்ளவர்களுக்குத் தண்ணீர் கொடுத்தல், விரோதியாயிருந்தாலும் அவர்கள் இக்கட்டில் அவர்களுக்கு உதவி செய்தல், கருவுக்குள் கடலையும், அணுவுக்குள் மலையையும் அடைப்பதுபோல கடவுள் விசயமாகவும், பிறர் விஷயமாகவும் நம்முடைய சொந்த விஷயமாகவும் நாம் அனுஷ்டிக்க வேண்டிய சகல நெறிகளும் கர்த்தருடைய வார்த்தைகளில் எழுதப்பட்டிருக்கிறது. ஒருவருக்கும் நாம் தீமை செய்யக் கூடாது. தீமை செய்யாமல் உபகாரம், நீதி செய்யவேண்டும். இவ்வாறே வேத வாக்கியத்தில் காணப்படுகிறது அதில் அடங்காத நீதி இல்லை.

பிறரை நேசிக்க வேண்டும் என்கிற கர்த்தருடைய வசனத்தின்படி அந்த நேசம் இருக்க வேண்டும். மாம்சீகமாக நேசம் இருக்கக் கூடாது. உலகத்திலே ஏழைகளும், பிச்சை எடுக்கிறவர்களும் அதிகமாக இருக்கிறார்கள். பிச்சை கேட்கிறவர்களுக்கு பிச்சை கொடுக்க வேண்டும். தான தர்மம் செய்ய வேண்டும். பரோபகாரம், காருண்யம் மிகவும் நல்ல சுபாவம்.

ஸ்திரீகள் ஏற்றத் தாழ்வு, ஜாதி வித்தியாசம் இவைகளை பாராட்டக் கூடாது. இக்காலத்தில் சில பொல்லாத ஸ்திரீகள் தங்களுடைய ஜாதியையும் சேர்த்துக் கொ[illegible] விரும்புகிறார்கள். பொதுவாக ஆண்களில் தான் சிலருக்கு பேரை தொடர்ந்து வாலும் இருக்கும்; பெண்களுக்கு அவ்விதமாக இருப்பதில்லை.

உலகத்தில் மனிதர்களெல்லாரையும் தேவன் ஒரே விதமாக படைத்திருக்கிறார். பரோபகாரம் இல்லாத ஜென்மம் பாழ். ஒருவன் சகல சாஸ்திரமும் சமணனாய், அகாயசூரனாய், ஜெகத் பிரக்கியாதி உள்ளவனாயிருந்தாலும் பரோபகார துண்யனாய் இருப்பானானால் அவனுடைய ஜென்மம் வியர்த்தம். ஒவ்வொருவரும் தன்னுடைய அந்தஸ்துக்குத் தக்கபடி பரோபகாரம் செய்வது பாரமல்ல. தனவான்கள் தரித்திரருக்கு அன்னவஸ்திர தானம் செய்யலாம். வித்வான்கள் எளிய பிள்ளைகளுக்கு வித்தியாதானம் செய்யலாம். பலவான்கள், பலவீனருக்குத் துணை செய்யலாம்.

துக்கமுள்ளவர்களுக்கு யாவரும் திருவசனத்தைச் சொல்லி துக்க நிவிர்த்தி செய்யலாம். வியாதிக்காரர்களை, ஆரோக்கியமுள்ளவர்கள் அடிக்கடி விசாரித்து அவர்களுக்கு வேண்டிய பரிகாரம் செய்யலாம். புத்தியில்லாதவர்களுக்கு புத்தியுள்ளவர்கள் தகுந்த சமயத்தைப் பார்த்து புத்தி சொல்லி திருத்தலாம். ஏழைகளுக்கு தன்னுடைய தேகம் வருத்தி பிரயாசப்பட்டாலும் அவர்களுக்கு உதவி செய்யலாம். இவ்வாறு ஒவ்வொருவரும் தங்கள் தங்களு

னுடைய சக்திக்குத்தக்கபடி உபகாரம் செய்தால் ஏழைகளுக்கெல்லாம் தரித்திரம் நீங்கும்.

கோடை வெயிலை தான் தாங்கிக்கொண்டு மற்றவர்களுக்கெல்லாம் நிழல் கொடுக்கிற விருட்சம் போல தங்களுக்கு வருகிற துன்பங்களை பாராட்டாமல் பிறருக்கு உபகாரம் செய்கிறவர்களே குணைத்துமர்கள் கையில் பொருள்களை வைத்துக்கொண்டு தரித்திரர்போல் பிச்சைக் கேட்டு வருகிற மாயக் கூட்டத்தாருக்கும், பாடு படத்தக்க திடகாத்திரர்களுக்கும் தப்பு செய்கிறவர்களுக்கும் பிச்சை கொடுப்பது அவர்களுடைய பொருளாசை சுகபோகம் பொய் முதலிய துர்குணங்களை விளைவிக்கக் கூடும். ஆகையால் பாடுபட சக்தி இல்லாத குருடர், முடவர் முதலிய அங்கயீனர்களுக்கும், வியாதியஸ்தர்களுக்கும், விருத்தாப்பியர்களுக்கும், தாய் தகப்பனற்ற பிள்ளைகளுக்கும், அனாதைகளுக்கும் வாழ்ந்து, கெட்டுப்போனபெரியோர்களும் நம்முடைய உபகாரத்திற்குப் பாத்திரர்களாயிருக்கிறார்கள்.

[தொடரும்]



"அன்றியும் நன்மை செய்யவும், தான தர்மம்பண்ணவும் மறவாதிருங்கள்; இப்படிப்பட்ட பலிகளின்மேல் தேவன் பிரியமாயிருக்கிறார்" [எபி. 13:16].



## நாத்திகம்

நாத்திகம் [Atheism] ஒன்றுமில்லை என்கிற மதம். ஆஸ்திகத்திற்கு விரோதம் நாத்திகம். லோகாயதர், பவுத்தர்கள் முதலியவர்கள் நாஸ்திகர் என்னப்படுகிறார்கள் Atheists, Infidels, Materalists.

நாஸ்திக மதத்தின் கொள்கை என்னவெனில் தேவனில்லை, வேதமில்லை, நன்மை தீமையில்லை, உலகம் நித்தியம், சகலமும் சுபாவமாயுண்டாகிறது, சர்வமும் மாயமென்கிறது, பதவியில்லை முதலியவைகளே. நாஸ்திக மதமுண்டாகிறதற்குக் காரணங்கள் மெய்யும் பொய்யும் இன்னதென்றும், மூலகாரணம் துணைக் காரணம் இன்னதென்றும், பகுத்தறியக் கூடாத சக்தியும், துன்மார்க்கமும் பெருமையுமே.

நாஸ்திகம் மனதைப் பாவத்தினால் கெடுத்து, புண்ணியத்தைப் பாழாக்கி, கல்வியை அசட்டை செய்து, விசாரணையை நீக்கி, அறத்தைப் பைத்தியமென்று கூறி, மனச்சாட்சியைக் கடினப்படுத்தி, கண்டதே காட்சி என்று மோசம் போக்கி நித்திய நரகத்திற்குப் பங்குள்ளதாக்குகிறது [சங். 14:1; யோ. 15:23; அப். 14:15; 1 யோ. 2:22; பிலி. 3:19]. ஒன்றுமில்லையென்று சொல்லுகிற சொல்லே நாஸ்திகத்தின்படிப்பார்த்தால் ஒன்றுமில்லை. ஆகையால் சர்வமும் நாஸ்திகம் என்பது அபத்தமே; நாத்திகமும் ஒருவகைப் பைத்தியமே.

# சிற்றாலயப் பிரதிஷ்டை

தூத்துக்குடியில் இறைவனுக்கென்று கட்டப்பட்ட புதிய எருசலேம் சபை சிற்றாலயத்தை 30-8-1995 புதன் கிழமை காலையில் தலைமைப் போதகர் **N. லாசர்** அவர்கள் திறந்து பிரதிஷ்டை செய்து இறைவனுக்கு காணிக்கையாக அர்ப்பணித்தார்கள் இயேசுவின் நாமத்தில்; என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இவண்
**PASTOR A. ArulaPPa,**
தூத்துக்குடி சபையார்

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   9 [திங்கள்] அக்டோபர் 1995
   6 [திங்கள்] நவம்பர் 1995
   6 [புதன்] டிசம்பர் 1995

2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs 15-00
   வெளிநாடு Rs 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :
   CHIEF PASTOR N LAZAR
   "NEW JERUSALEM CHURCH"
   CHURCH LANE, TILAK NAGAR,
   DARGA ROAD, BHANDUP,
   BOMBAY-400 078 INDIA.

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்

4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்

5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் உங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்

Edited, Printed and Published by: Chief Pastor N LAZAR, New Jerusalem Church Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078 Printed at New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 135 - OCT. '95




"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ
நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ,
எப்பொழுது வருவார்(ர)ென்று நீங்கள் அறியீர்கள்.
விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லா நக
துப சொல்லுகிறேன், விழித்திருங்கள்"

- மாற்கு 13 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப. 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கிறார்கள் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும் இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப. 1 : 1; 10:10-43)

CHIEF PASTOR N LAZAR

## இதழின் உள்ளே ..

# ஆசிரியர் உரை

இந்த உலக வாழ்வு அருமையாய் இறைவனால் நமக்கு அருளப்பட்டிருக்கிறது. ஜீவனும், சமாதானமும், செழிப்புமுள்ள வாழ்க்கையை மனிதர்கள் எல்லாரும் பெற்றுக் கொள்ள வேண்டும் என்பது இறை சித்தம். அந்த வாழ்வை மனிதன் அடைய கிறிஸ்து இயேசுவை விசுவாசிப்பதும்; விக்கிரக ஆராதனையையும், பாவத்தையும் விட்டு மனந்திரும்புவதும் அவசியம். இவ்விதமாய் மனிதன் இயேசுவினால் உண்டாகிற ஜீவனைப் பெற்று இந்த உலகத்திலே அவன் ஜீவனுள்ளவனாய் ஜீவிக்க முடியும்.

இந்த ஜீவன் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவோடும், உடன் விசுவாசிகளோடும் ஐக்கியமாயிருப்பதினால் மாத்திரம் ஒருவனில் நிலைக்கும், அவனில் அது வளர்ச்சி அடையும் (1 யோவா. 3:14-16; 1:1-3). சிலர் தாங்கள் தேவனை விசுவாசிக்கிறோம், தாங்கள் சரியாயிருக்கிறோம், ஜீவனில் இருக்கிறோம் என்று எண்ணிக் கொள்ளுகிறார்கள், வேதாகமம் அதை மறுக்கிறது. இறைவனோடும், உடன் விசுவாசிகளோடும் ஐக்கியமாயிருக்கிற திருச்சபையின் ஐக்கியத்திலேதான் ஜீவன் கிரியை செய்கிறது. அவன் ஜீவனில் பிரவேசிக்க இறைவன் அநுக்கிரகம் செய்கிறார். அவருடைய வருகையில் அவன் சபையாய், மறுமையின் ஜீவனுக்குள் பிரவேசித்து மகிழுவான் [யோவா. 17:21-23]. கர்த்தராகிய இயேசுகிறிஸ்து, தம்மை விசுவாசிக்கிறவர்களில் இருக்கவேண்டிய ஐக்கியத்தையும், ஒற்றுமையையும் திட்டமாய் குறிப்பிட்டுள்ளார்.

ஆனபடியினால் நித்திய ஜீவனில் நிலைத்திருப்போம். அதை பூரணமாய் அனுபவிப்போம், அதை இன்னும் பெற்று என்றென்றும் நீடித்து வாழ, இறை உலகத்திற்குள் பிரவேசிக்க. இயேசுவின் வருகையை எதிர்நோக்குவோம். ஆமென்!

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

[CHIEF PASTOR N. LAZAR]

(தொடர்ச்சி)

# கிறிஸ்தவ மார்க்கம்

## 1. இயேசு கிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகை-

### இரகசிய வருகை:-

ஆகாயத்தில் வருவதாகும். இரகசிய வருகை திருடன் வருகிற விதமாய் நினையாத நேரத்தில் இயேசு வருகிறபடியால் இரகசிய வருகை என்று அழைக்கப்படுகின்றது [லூக். 12:39,40; 2 பேது. 3:10; 1 கொரி. 15:52]. இயேசு பரலோகத்திலிருந்து மத்திய ஆகாயத்திற்கு இறங்கி வருவார் (1 தெச. 4:16,17).

இங்கே இயேசு கிறிஸ்து பரலோகத்திலிருந்து ஆகாயத்தில் இறங்கி வருவார் என்று குறிபிடப்பட்டுள்ளது. ஆம் அவர் தம்முடைய சபையை அழைத்துப்போகும்படி வானத்திலிருந்து (பரலோகத்திலிருந்து) இறங்கி வருகிறார். சபையானது மேகங்கள் மேல் அவர்களோடுகூட ஆகாயத்தில் எடுத்துக் கொள்ளப்படும் 1 தெச. 4:16 என்று எழுதப்பட்டுள்ளது [To meet the LORD in the Air] என்று திட்டமாய் எழுதப்பட்டிருக்கிறபடியால் அவர் ஆகாயத்தில்தான் வருவார் என்பது நிச்சயம். அது மாத்திரமல்ல ஆகாயத்தில் எடுத்துக்கொள்ளப்படுவோம் (Caught up together) நாமும் ஆகாயத்தில் எடுத்துக்கொள்ளப்படுவோம் என்பது நிச்சயம்.

எடுக்கப்படும் என்பதற்கு கிரேக்க பாஷையில் 'HARPAZO' என்றும், லத்தீன் மொழியில்'Raptvro' என்றும் எழுதப்பட்டிருக்கிறது. Repuro என்னும் லத்தீன் வார்த்தையிலிருந்து Rapture என்ற ஆங்கில வார்த்தை உண்டாயிற்று. அப். பவுல் மூன்றாம் வானம் வரை எடுக்கப்பட்டார் [2 கொரி. 12:2] என்பதற்கும்; சுவிசேஷகராகிய பிலிப்பு பரிசுத்த ஆவியினால் எடுக்கப்பட்டார் [அப். 8:39] என்பதற்கும் இதே வார்த்தை கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த வார்த்தைக்கு பலவந்தமாய் எடுத்துக் கொண்டு போவது என்று அர்த்தமாம். எக்காளம் தொனிக்கும்போது கிறிஸ்துவினுடையவர் உலகத்திலிருந்து பரிசுத்த ஆவியானவரால் ஆகாயத்திற்கு எடுத்துக் கொள்ளப்படுவார்கள்.

அதாவது நாம் ஆகாய மண்டலத்தில் இயேசுவை சந்திக்க எதிர்கொண்டு போவோம் பின்பு இயேசுவோடுகூட பரலோகத்திற்கு போவோம். அங்கே சில வருஷங்கள் தங்குவோம். இது எப்படியென்றால் ஆபிரகாமுடைய வேலைக்காரன் [எலியேசரல்ல. இங்கே வேலைக்காரனுடைய பெயர் குறிப்பிடப்படவில்லை] (ஆதி. 24: 1-66). ஈசாக்குடைய மனைவியாகிய ரெபெக்காள் ஆபிரகாமுடைய வேலைக்காரனால் வழிநடத்தப்பட்டு வரும்பொழுது மத்தியில் [வழியில்] வைத்து ஈசாக்கு அவளை ஏற்றுக்கொண்டு அவருடைய கூடாரத்துக்குக் கூட்டிக்கொண்டு போனார். இது போலவே தேவனுடைய ஆவியாகிய பரிசுத்த ஆவியானவரால் கிறிஸ்துவின் மணவாட்டியாக சபை ஆகாய மண்டலத்தில் எடுத்துக் கொள்ளப்படும். ஆவியானவரால் வழிநடத்தப்பட்டு மத்திய ஆகாயமண்டலத்தில் எடுத்துக் கொள்ளப்படும். ஈசாக்கு தன் மணவாட்டியை வழியில் வைத்து ஏற்றுக் கொண்டதுபோல இயேசுவானவர் தமது மணவாட்டியை ஆகாய மண்டலத்தில் வைத்து சந்தித்து எடுத்துக் கொள்ளுவார்.

ஈசாக்கு ரெபெக்காளை அவருடைய கூடாரத்திற்கு அழைத்துக் கொண்டு சென்றதுபோல இயேசுவானவரும் தம்முடைய மணவாட்டியாகிய சபையை நமக்காக ஆயத்தமாக்கப்பட்டிருக்கிற இடத்துக்கு கொண்டு போவார் [ஆதி. 24:62-67; யோ. 14:2,3; எபி. 11:10].

சபை பரலோகத்திற்குச் சென்று தேவனோடு பரலோகத்தில் இருக்கும்பொழுது பூமியில் அந்திக்கிறிஸ்துவினுடைய ஆளுகை நடைபெறும். மக்கள் தாங்கமுடியாத உபத்திரவப்படுவார்கள் (வெளி. 13-அதிகாரம்). இயேசுவானவருடைய வருகை மிகவும் சமீபத்திலிருக்கிறபடியால் பரிசுத்தவான்களை தேவன் ஆயத்தப்படுத்திக் கொண்டேயிருக்கிறார், கூட்டிச் சேர்க்கிறார். மணவாட்டியும் தன்னைத்தானே ஆயத்தப்படுத்த வேண்டும் (2 கொரி. 11:2-4; வெளி. 19:7).

இயேசு ஆகாயத்தில் வரும்போது அவருடையவர்கள் (1 கொரி. 15:23) கிறிஸ்துவுக்குள் நித்திரையடைந்தவர்கள் (மரித்தவர்கள்) 1தெச 4:14,16. மகிமையாய் உயிர்த்தெழுவார்கள். நாமும் அவர்களுடன் எடுத்துக் கொள்ளப்படுவோம் என்று வாசிக்கிறோம்.

### *கிறிஸ்துவினுடையவர்கள் என்றால் அர்த்தம் என்ன?*

1. "ஒருவன் கிறிஸ்துவுக்குள்ளிருந்தால் புது சிருஷ்டியாயிருக்கிறான்; பழையவைகள் ஒழிந்துபோயின, எல்லாம் புதிதாயின" [2 கொரி. 5:17]. புது சிருஷ்டி ஆவது எப்படி தேவ வசனத்தினாலும், நாம் ஜலத்தினாலும், ஆவியினாலும் பிறக்கும்போது புது சிருஷ்டியாகிறோம் [1கொரி4:15; 1பேது. 1:21; யாக். 1:18; யோவா. 3:3 5].

2. "கிறிஸ்துவினுடையவர்கள் தங்கள் மாம்சத்தையும் அதின் ஆசை இச்சைகளையும் சிலுவையில் அறைந்திருக்கிறார்கள்" (கலா 5:24). கிறிஸ்துவோடு தான் இணைக்கப்பட்டேன் என்பதை ஞானஸ்நானத்தின் மூலம் ஒவ்வொருவனும் வெளிப்படுத்துகிறான் அல்லது இணைக்கப்படுகிறான் [கலா 3:27; கொலோ. 2:12]. அப்படி கிறிஸ்துவோடு இணைக்கப்பட்டிருக்கிறோம் என்று அறிகிறவர்கள் தங்கள் மாம்சத்தையும் அதின் ஆசை இச்சைகளையும், உலக பெருமைகளையும் சிலுவையில் அறைந்துவிட்டார்கள் [கலா. 6:14].

3. வருகையில் பரிசுத்தவான்கள் எடுத்துக் கொள்ளப்படுவார்கள் என்று அப். யோவான் சொல்லுகிறார். யார் பரிசுத்தவான்? அவர் வரும்போது அவருக்கு ஒப்பாக இருப்போம். அவர்மேல் இப்படிப்பட்ட நம்பிக்கை வைத்திருக்கிற நாமும் அவர் சுத்தமுள்ளவராயிருக்கிறது போல நம்மையும் சுத்திகரித்துக் கொள்ளுவோம் (1 யோவா 3:2,3). இதுபோல தன்னை சுத்திகரித்துக் கொள்ளுகிறவன், தேவ சித்தம் செய்கிறவன், பரிசுத்தவான் ஆவான்.

### *நாம் பரிசுத்தமாவது எப்படி?*

ஜீவியத்திலும், உபதேசத்திலும் நாம் பரிசுத்தமடைய வேண்டும். உபதேசம் எப்படியிருந்தாலும் ஜீவியம்தான் முக்கியம் என்று சிலர் நினைக்கின்றார்கள். தேவ வசனத்தை நன்றாய் கவனித்தால் நாம் வாழ்க்கையிலும், உபதேசத்திலும் பரிபூரண பரிசுத்தமடைய வேண்டும் என்பதைக் காணலாம். பரிசேயர் நன்றாக உபவாசம் எடுத்தார்கள், தசமபாகம் கொடுத்தார்கள், பிரமாணத்தின்படி நடந்தார்கள், நன்றாய் ஜெபம் பண்ணினார்கள் ஆனால் அவர்கள் உபதேசத்தில் பரிசுத்தமில்லாதவர்களாயிருந்தபடியினால், குணபாவம் சரியில்லாதிருந்ததினால் இயேசுவானவர் அவர்களைக் கடிந்து கொண்டார் [மத். 23:25-33; 16: 5-12]. ஜீவியத்தில் பரிசுத்தம் அடைந்தபோதிலும் துர் உபதேசத்துக்கு அடிமைப்பட்டவர்களை அப். பவுல் சாத்தானிடம் ஒப்புக்கொடுத்தார். (1தீமோ. 1:20; 2தீமோ. 2:17,18). துர் உபதேசம் ஒருவனை விசுவாசத்திலிருந்து விழச்செய்யும் (அப். 20:29,30; வெளி. 2:20,21).

உபதேசத்தில் மாத்திரமல்ல ஜீவியத்திலும் பரிசுத்தமடைய வேண்டுமென்று

தேவன் விரும்புகிருர். கொரிந்து சபையில் ஒருவன் ஜீவியத்தில் தப்பிப் போனன். அவன் சபையை விட்டு விலக்கப்பட்டு சாத்தானுக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டான் [1 கொரி. 5:1-5]. ஆகையால் ஜீவியத்திலும், உபதேசத்திலும் பரிசுத்தமுள்ளவர்களாய் இருப்போமானல் இயேசு கிறிஸ்துவின் இரகசிய வருகையில் அவரை சந்திப்போம் (2 கொரி. 7:1). அவிசுவாசிகளிலிருந்து பிரித்தெடுக்கப்பட்ட அனுபவத்திற்குள் வராமலிருக்கும் ஒரு விசுவாசி பரிசுத்தமடைய முடியாது. ஆகையால் தேவனுடைய பிள்ளைகள் மாறுபாடுள்ள சந்ததியை விட்டு விலகி பரிசுத்தமடைய வேண்டும் (அப். 2:38-40; 2 கொரி. 6:14; 7:1).

அப். யாக்கோபு: நாம் அவருடைய வருகைக்காக பொறுமையுடன் காத்திருக்க வேண்டும். நீடிய பொறுமையோடு காத்திருக்க வேண்டும், இருதயத்தை ஸ்திரப்படுத்த வேண்டும். நாம் காத்திருக்க வேண்டும் (யாக். 5:7,8). காத்திருக்கிறவர்கள் ஒருவருக்கொருவர் முறையிடாமலிருக்க வேண்டும். அரைகள் கட்டப்பட்டவர்களாகவும், விளக்குகள் எரிகிறதாகவும் இருக்கவேண்டும் [லூக். 12:35-40; மாற். 13:36,37].

(தொடரும்)

"....கர்த்தர் வருகிருர்" (1 கொரி. 16:22).

(தொடர்ச்சி)

# திருச்சபை

சபையாக, சபையை ரட்சிக்கும்படிக்கே கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தம்மை ஒப்புக் கொடுத்தார். அந்தப்படியாக நாம் சிந்திக்க வேண்டிய காரியமென்னவென்றல், உலகம் ஒரு குடும்பமாக இருக்கிறது. மனுக்குலமாகிய பெரிய குடும்பத்தில் எல்லோரும் உறுப்புகளாகவும், ஜீரணமாகும் உடல்களாகவுகம் இருப்பதனுல் தனி ஒரு மனிதனுடைய குற்றம் எல்லோரையும் பாதிக்கின்றது எல்லா மனிதனுடைய குற்றமும், சாபமும் தனி மனிதனை பாதிக்கின்றதாயிருக்கிறது. இதுவே மனுக்குலத்தின் வாழ்க்கையிலே மிகவும் அழமாகவும், தெளிவாகவும் எழுதப்பட்ட பொதுமைபாட்டின் விதியாகும். உயிரினத்தின் ஒரு அங்கம் அல்லது பாவத்தினுல் ஏற்படும் வியாதி ஒரளவுக்கு அந்த உயிர் முழுவதையுமே பாதிக்கிறது. அது ஒரு பாகத்திலுள்ள ஆரோக்கியமும், ஆற்றலும் அந்த உயிரினம் முழுமைக்கும் நன்மை அளிக்கிறது.

ஒரு குடும்பத்தில் ஒருவருடைய முன்னேற்றம், வெற்றி, புகழ் ஆகியவற்றின் மாட்சி ஒரளவுக்கு அந்த முழு குடும்பத்துக்குமே பொருந்துகிறது. அக்குடும்பம் முழுவதையுமே பாதிக்கும். பாவத்தின் விளைவு 3-ம், 4-ம் தலைமுறை மட்டும் தொடர்கிறது. ஆனல் புண்ணியம்: என்னிடத்தில் அன்பு கூர்ந்து, என் கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்களுக்கோ ஆயிரம் தலைமுறை மட்டும் இரக்கம் செய்கிறவராயிருக்கிறேன் [யாத். 20:6]. இவ்வசனத்தின் படி பாவம், சாபம் ஆகியவற்றில் உள்ள தண்டனையைவிட, திருவருள், ஆசீர்வாதம் ஆகியவற்றின் நடபடிகளில் எல்லையில்லாத

வலிமையும், ஆற்றலும் பொருந்தியுள்ளது என்பதை அறிகிறோம்.

தீமையின் விளைவு மூன்று அல்லது நான்கு தலைமுறைகள் தாண்டிச் செல்கிறது. ஆனல் நன்மையின் விளைவோ ஆயிரம் தலைமுறை மட்டும் க ட ந் து செல்லும் (உபா. 7:9). எனவே இக்காரியம் கிறிஸ்துவின் கிரியைகளின் பயன்களின் உயிர்நாடி போன்ற தொடர்புடையது. கி றி ஸ் து தம்மை பாவமுள்ள மனிதனோடு ஒன்றித்துக் கொண்டதால் மனித இனத்தின் சகல குற்றங்களையும் தம்மேல் ஏற்றுக் கொண்டு அதின் விளைவுகளைச் சுமக்க வேண்டியதாயிற்று என்பதை பார்த்துள்ளோம். ஒருமைப்பாட்டு விதி இத்தகையது. ஆனல் இப்பொழுதோ அதே காரணத்திற்காக அவருடைய புண்ணியம் மனுக்குலத்தில் நன்மைகளுக்காக பயன்படுதல், அவருடைய புண்ணியம், நீதி நமக்கு உரித்தாகுகின்றது. அவர் கிரியையின் ஆசீர்வாதத்தில் நாமனைவரும் பங்கடைகிறோம். ஆகவே இரட்சிப்பு தனிமனிதனுக்கு மட்டும் உரியதன்று. அநேக தனி நபர்களைக் காப்பாற்றுவதற்காக கிறிஸ்து வரவில்லை அவர் உலக இரட்சகர். உலகத்தின் பாவங்களை சுமந்து தீர்க்கும்படியாக வந்தார் [யோவா. 1:29].

எனவே இரட்சிப்பில் கூட்டம்சம் உள்ளது. நாம் இரட்சிப்பைப் பற்றிய கிறிஸ்தவ சித்தாந்தத்தை நிறைவாக அறிய வேண்டுமாயின் இரட்சிப்பின் கூட்டம்சத்தை ம ற ந் து வி ட க் கூ டா து. ஆயினும் இரட்சிப்பின் கூட்டம்சத்தை உணர்ந்து வந்த நாம் அதிலுள்ள தனியான அம்சத்தையும் நாம் உணர்ந்து கொள்ள வேண்டும். அதாவது தனி மனித இரட்சிப்பும் அடங்கும்.

### இறையாட்சி:-

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இந்த உலகத்தில் இருக்கும் பொழுது இறையாட்சியைப்பற்றி பிரசங்கித்தார் [மத். 4:15,16]. அது விண்ணில் மட்டும் நடப்பதன்று. அது விண்ணிலிருந்து இறங்கி வருகிறது என்று சொன்னர் (லூக். 11:20). அவர்கள் மத்தியிலே அது கிரியை செய்கிறது என்று சொன்னர் அது வரப்போகிறதாகவும் இருக்கிறது என்று சொன்னர் [மத். 6:10]. அது விண்ணுலக தன்மையுடையதாக இருக்கும் என்று சொன்னர் (யோ. 8:36). உலகம் இறையாட்சிக்குள் கொண்டுவரப்படும் என்றும், அது மேலேயிருந்து உலகத்திற்கு அருளப்படுகிறது. கடவுள் இராஜ்ஜியம் உங்களுக்குள்ளே இருக்கிறது என்று இயேசு சொன்னர் (லூக். 17:21). இதனுடைய அர்த்தம் உள்ளே அ ல் ல து இடையே என மொழி பெயர்க்கலாம்.

கடவுளாட்சி நிச்சயமாக உள்ளான ஒரு நிகழ்ச்சியே. அது மனிதனுடைய இருதயங்களின் சம்பந்தமானது. புதிய உடன்படிக்கையினுடைய தீர்க்கத் தரிசனத்தில் அது உள்ளானது என்று தெளிவாய் தெரிகின்றது (மத். 26:28). என் பிரமாணத்தை நான் அவர்கள் இருதயத்தில் எழுதுவேன். பரலோக ராஜ்ஜியம் மனிதனுடைய உள்ளத்தில் ஒரு மெய்ப்பொருளாக நுழைந்து கொள்ளுமானல் நிச்சயமாக அது அவர்கள் உள்ளத்தில் ஆட்சி புரிகிற மெய்ப்பொருள் ஆகிறது.

புதிய உடன்படிக்கைப்படி கடவுளால் கடவுளோடு வருகிற புதிதான உறவாகும். நான் அவர்கள் கடவுளாயிருப்பேன் அவர்கள் என் ஜனங்களாயிருப்பார்கள் [எரே. 31;33]. அதே நேரத்தில் தா னே ஒருவன் மற்ற ஒருவனேடு கொள்ளும் புதிதும் நேர்மையுமான உறவாகிறது. எங்களுடைய ஐக்கியமானது பிதாவோடும் அவருடைய குமாரனுகிய இயேசு கிறிஸ்துவோடும் இருக்கிறது. அவர் ஒளியிலிருப்பது போல நாமும் ஒளியில் நடந்தால் ஒருவரோடொருவர் ஐக்கியப்பட்டிருப்போம் [1 யோ. 1:3-7]. கடவுளாட்சி என்று சொல்வது இரு வித ஐக்கியமுடையதாகும்

செங்குத்துக்கோடு கடவுள் மனிதனோடு கொண்டுள்ள ஐக்கியம். சமதளகோடு ஐக்கியம், மனிதன் மனிதனோடு கொள்ளும் ஐக்கியமாகும். இது இவ்வாறு இருப்பதினால் குடும்பம், பால், சமுதாயம், அரசியல், நாடு, குலம் ஆகியவை சம்பந்தமான எல்லா மனித உறவுகளையும் இது மாற்றக் கூடியதாக இருக்கிறது. நற்செய்தியை ஏற்றுக் கொண்ட எல்லா இடங்களிலும் பரிசுத்த ஆவியானவர் தமது வேலையை செய்கிறார். இடம் கொடுக்கும் அளவுக்கு வெவ்வேறு மாதிரிகளை நடப்பித்து வருகிறார்.

[தொடரும்]

"எல்லாவற்றையும் எல்லாவற்றாலும் நிரப்புகிறவருடைய நிறைவாகிய சரீரமான சபைக்கு அவரை எல்லாவற்றிற்கும் மேலான தலையாகத் தந்தருளினார்" [எபேசி. 1:23].

---

# வேத பாடம்

[தொடர்ச்சி]

## எண்ணாகமம்

### எண் 23:11,12

நாம் இறைவனுக்கு கீழ்ப்படிந்து இறைவனுடைய பிரியத்தை சம்பாதிக்க வேண்டும். இறைவனுடைய பிரியத்தின்படி நாம் ஜீவிக்க வேண்டும். அப்படியென்றால் பிசாசு நம்மை விட்டு ஓடிப்போவான் "தேவனுக்கு கீழ்பபடிந்திருங்கள்; பிசாசுக்கு எதிர்த்து நில்லுங்கள், அப்பொழுது அவன் உங்களை விட்டு ஓடிப்போவான்" "தேவனுக்கு கீழ்ப்படிந்திருங்கள்". தேவனுக்கு கீழ்ப்படிந்திருந்தால் தான் பிசாசை எதிர்க்க முடியும். சிலர் தேவனுக்கு, தேவனுடைய வார்த்தைக்குக் கீழ்ப்படிந்து நடக்காமல் சிலர் வைராக்கியத்தினாலும், வீண் பெருமையினாலும், துணிகரத்தினாலும் பிசாசை எதிர்க்கப் புறப்பட்டு தோல்வியடைந்து போகிறதுண்டு. முதலாவது தேவனுக்குக் கீழ்படிய வேண்டும். தேவ சித்தம் செய்யவேண்டும். தேவனுடைய சித்தத்தின்படி செயல்பட வேண்டும்; அப்பொழுது சாத்தான் நம்மைப் பார்த்து, தான் ஒரு பயங்கரத்தைக் கண்டு பதறி ஓடுகிறது போல அவன் ஓடிப்போவான் [யாக். 4:7]. யாக்கோபுக்கு விரோதமான மந்திரவாதமில்லை, இஸ்ரவேலுக்கு விரோதமான குறிசொல்லுதலுமில்லை. தேவன் என்னென்ன செய்தார் என்று கொஞ்சக்காலத்திலே யாக்கோபையும், இஸ்ரவேலையும் குறித்துச் சொல்லப்படும்.

தேவனுடைய ஜனங்களுக்கு தேவன் ஆயத்தம்பண்ணி வைத்திருக்கிற நன்மைகள் ஏராளமாயிருக்கிறது. அதை அனுபவிக்கிறவர்கள் அனுபவித்து களிகூறுகிறார்கள். அநேகர் கண்ணாடிப் பெட்டியிலே வைக்கப்பட்டிருக்கிற பொக்கிஷத்தைப்போல அவைகளை காணமாத்திரம் செய்கிறார்கள். அதை எடுத்து அனுபவிக்கவோ முடியவில்லை.

ஆனபடியினால் அவர்கள் தேவ ஜனங்களோடுகூட மந்தையின் மக்களாகி தேவனுடைய ஆளுகைக்குள் இருப்பார்களென்றால் அந்த நன்மைகளைப் பெறலாம் (சங். 31:19).

தேவன், தேவ ஜனங்களுக்கு ஏராளமாக நன்மைகளை அருளுகிறார், அருளப் போகிறார். "அந்த ஜனம் துஷ்ட சிங்கம்போல எழும்பும், பால சிங்கம்போல நிமிர்ந்து நிற்கும்". சிங்கம் மிருகங்களின் ராஜா என்று சொல்லப்படும். சிங்கம் ராஜாங்கத்துக்கு அடையாளமாயிருக்கிறது. பால சிங்கம் வல்லமையான சிங்கம் என்று சொல்லி பார்க்கிறோம். யூதா கோத்திரத்தை சிங்கத்துக்கு ஒப்பாக ஒப்பிட்டு இருக்கிறது [ஆதி. 49:9] யூதா பால சிங்கம் நீ இரை கவர்ந்து கொண்டு ஏறிப்போனாய்: என் மகனே, சிங்கம் போலும், கிழச்சிங்கம்போலும் மடங்கிப்படுத்தான்: அவனை எழுப்புகிறவன் யார்?

தேவ ஜனங்கள் ஒற்றுமையாய் தேவனுடைய சித்தத்தின்படி மந்தையாய் இருக்கும்பொழுது அவர்களுடைய சத்துருக்கள்மேல் அவர்களுக்கு ஜெயம் உண்டாகும். இது பிலேயாமின் தீர்க்கதரிசனம். பிலேயாம் வாயிலே தேவன் வாக்கருளினார் [எண். 23: 5,16].

### எண். 23:25,26

பிலேயாமின் தீர்க்க தரிசனம் பாலாக்கை அதிர்ச்சியடையச் செய்தது. பாலாக் பிலேயாமை நோக்கி: நீர் பொதுவாகச் சொன்னால் போதும்; நீர் அவர்களை ஆசீர்வதிக்கவும் வேண்டாம், சபிக்கவும் வேண்டாம் என்றான். அதற்கு பிலேயாம் பாலாக்கை பார்த்து; கர்த்தர் சொல்லுகிறபடியெல்லாம் செய்வேன் என்று உம்மோடே நான் சொல்லவில்லையா என்று சொன்னான்.

ஒரு உண்மையான தீர்க்கதரிசி கர்த்தர் சொல்லுவதையே சொல்லுவான் (எண். 22:20,35,38; 23:12,26; 24:12,13). இந்நாட்களிலே அநேகக் கிறிஸ்தவ ஊழியர்கள் தங்களை ஆவி பெற்றவர்கள் என்று சொல்லிக் கொள்ளுகிறார்கள். கர்த்தர் சபியாதவர்களை சபிக்கிறார்கள், கர்த்தர் ஆசீர்வதிக்கிறவர்களைச் சபிக்கிறார்கள். அப்படியென்றால் உண்மையான தேவனுடைய பிள்ளைகளை அவர்கள் சபிக்கிறார்கள் என்றால் அவர்களும் சபிக்கப்பட்டவர்களாவார்கள். உங்களை ஆசீர்வதிக்கிறவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்; உங்களை சபிக்கிறவன் சபிக்கப்பட்டவன் [எண். 24:9].

### எண். 23:27-29

ஆனால் பாலாக், பிலேயாமை வேறொரு முக்கியமான இடத்திற்கு அழைத்துச் செல்கிறான். அதாவது பேயோரின் கொடுமுடிக்கு. பேயோர் என்னும் விக்கிரக தெய்வத்தின் முக்கியமான கோயில் அந்த மலையில் இருந்தது. அங்கே அழைத்துக் கொண்டு போய் பிலேயாம் அங்கேயிருந்து இஸ்ரவேலர்களை சபிப்பது தேவனுக்குப் பிரியமாயிருக்கும் என்று பாலாக் நினைத்தான். அவனை எஷிமோனுக்கு எதிராயிருக்கிற பேயோரின் கொடுமுடிக்கு அழைத்துக் கொண்டு போனான். அப்பொழுது பிலேயாம் பாலாக்கை நோக்கி இங்கே எனக்கு ஏழு பலிபீடங்களைக் கட்டி, இங்கே எனக்கு ஏழு காளைகளையும், ஏழு ஆட்டுக்கடாக்களையும் ஆயத்தம் பண்ணும் என்றான். பிலேயாம் சொன்னபடி பாலாக் செய்து ஒவ்வொரு பீடத்தில் ஒவ்வொரு காளையையும், ஒவ்வொரு ஆட்டுக்கடாவையும் ஆக மொத்தம் 14 பலிகளைப் பலியிட்டான்.

தேவ ஜனங்களைச் சபிக்கிறதற்கு வெவ்வேறு இடங்களில் இருந்து முயற்சி செய்ததாக இதன் மூலம் பார்க்கிறோம்.

*எண். 24:1-9*

இஸ்ரவேலை ஆசீர்வதிப்பதே கர்த்தருக்குப் பிரியம் என்று பிலேயாம் கண்டார் என்று முதலாவது வார்த்தையிலே சொல்லப்பட்டிருக்கிறது. ஆனபடியினால் அவர் முன்போல் தேவ சித்தம் அறியப்போகாது நேராய் இஸ்ரவேலரை நோக்கிப் பார்த்தார். "தன் கண்களை ஏறெடுத்து, இஸ்ரவேல் தன் கோத்திரங்களின்படியே பாளயமிறங்கியிருக்கிறதைப் பார்த்தான்". தேவ ஆவி அவன் மேல் வந்தார் என்று எழுதப்பட்டுள்ளது.

கர்த்தருக்கு இது பிரியம், இஸ்ரவேலை ஆசீர்வதிப்பதுதான் கர்த்தருக்குப் பிரியம் இஸ்ரவேல் தேவனுடைய ஜனங்களாயிருப்பது, இஸ்ரவேலை தன்னுடைய ஜனங்களாய் அறிவிப்பது தேவனுக்குப் பிரியம். தேவனுக்கு பிரியமானவைகள் எவை என்று வேதாகமத்தில் பல காரியங்கள் சொல்லப்பட்டிருக்கிறது. அவைகளில் இஸ்ரவேலை ஆசீர்வதிப்பதும் ஒன்று என்று வேதாகமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

[தொடரும்]

கர்த்தரால் ஆசீர்வதிக்கப்பட்ட ஜனமே நீ பாக்கியவான் [உபா. 33:29].

---

# வாழ்க்கையின் மையப்பொருள்

*[சுவிசேஷம்]*

சூரியனும் கோள்களும்:-

தேவன் தமது ஆவியினால் வானத்தை அலங்கரித்தார் என்று வேதத்தில் (யோபு. 26:13) வாசிக்கிறோம். வானங்கள் தேவனுடைய மகிமையை வெளிப்படுத்துகிறது. அங்கே சூரிய, சந்திர, நட்சத்திரங்கள் உண்டு. அவர் கட்டளையிட அவைகள் சிருஷ்டிக்கப்பட்டன. நமது அண்மையில் காணப்படும் சூரிய மண்டலத்தில், சூரியனை மையமாக வைத்து, "புதன், வெள்ளி, வியாழன், பூமி, செவ்வாய், சனி, யுரேனஸ் நெப்டியூன், புளூட்டோ" போன்ற கோள்கள் நீள்வட்டப் பாதையில் சுற்றிக் கொண்டு வருகின்றன. சூரியனின் ஈர்ப்பு சக்தியினால் அவைகள் அவ்வாறு ஒழுங்காக இயங்கி வருகின்றன. சூரியனிலிருந்து கோள்கள் தூரமாக செல்லச்செல்ல, அவைகளின் மேல் சூரியனுடைய ஈர்ப்பு சக்தியும், சூரிய வெளிச்சமும் குறைந்து கொண்டே செல்கின்றன.

### நாடும் தலைநகரமும்:-

ஒரு நாட்டின் மையப்பொருள் அல்லது முக்கியமான இடம் அந்நாட்டின் தலைநகரமாகும். பண்டைக்காலத்தில் ஒரு நாட்டின் மேல் படையெடுத்துச் செல்பவர்கள் அந்நாட்டின் தலைநகரத்தை முற்றிகையிட்டு, தாக்கி, அதைக் கைப்பற்றிக் கொள்வார்கள். அப்பொழுது அந்த நாடு முழுவதும் அவர்களுக்கு அடிபணியும். ஏனென்றால் தலைநகரில் தான் அரசனும், மந்திரிகளும் மற்ற பிரதானிகளும் இருப்பார்கள். அங்குதான் அரண்மனையும், கருவூலங்களும் இருக்கும்.

### அணுவும் அணுக்கருவும்:-

மிகமிகச் சிறிய நுண்துகளுக்கு அணு என்று பெயர். அதை எலெக்ட்ரான் நுண்ணோக்கியின் மூலமாகத்தான் நாம் பார்க்க முடியும். அந்த நுண்ணோக்கியின் மூலமாக அணுவை ஆராய்ந்தால் அவ்வணுவிலும் மையப்பொருள் ஒன்று இருப்பதைக் காணலாம், அதற்கு அணுக்கரு என்று பெயர். ஓர் அணுவின் ஆற்றல், தன்மை மற்றும் எடை எல்லாம் அவ்வணுக்கருவினைப் பொறுத்தே அமையும்.

மேற்கூறிய சான்றுகளின் மூலமாக நாம் அறிந்து கொள்வது யாதெனில், கோள்களின் மையப்பொருள் சூரியன், நாட்டின் மையப்பொருள் அதன் தலைநகரம், அணுவின் மையப்பொருள் அணுக்கரு ஆகும். அதுபோல நமது வாழ்க்கையிலும் ஏதோ ஒரு மையப்பொருள் இருக்க வேண்டும். சிலருக்கு அது புகழாக இருக்கலாம். இன்னும் சிலருக்கு அது பணமாக [பொருளாசை] இருக்கலாம்; இன்னும் சிலருக்கு அது பதவி அல்லது அதிகாரமாக இருக்கலாம். இவ்வாறு நாம் அடுக்கிக் கொண்டே செல்லலாம். நமது வாழ்க்கையின் மையப்பொருள் இறைவனாக இருக்க வேண்டும்.

ஒருவனுடைய இருதயத்தின் நினைவு எப்படியோ அப்படியே அவனும் இருக்கிறான் என்று (நீதி. 23:7) கூறுகிறது. நாம் அநேக நேரங்களில் நம்முடைய வேலைகளைப் பற்றி அல்லது படிப்பைப் பற்றி அல்லது குடும்பத்தைப் பற்றி அல்லது இது போன்ற மற்றக் காரியங்களைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் இறைவனைப் பற்றி நாம் நினைக்கக் கூடிய நேரங்கள் மிகவும் குறைவு என்பதை அறிவோம். இது வருந்தப்படத்தக்கது ஏனெனில் மனிதன் இறைவனால், இறைவனுக்காகவே சிருஷ்டிக்கப்பட்டான். அவ்வாறு சிருஷ்டிக்கப்பட்ட மனிதன் இறைவனுக்காகவே இப்பூவுலகில் வாழ்ந்து இறைவனண்டை [முக்தி] சேர வேண்டும் என்பது தேவ திட்டமாகும்.

அமெரிக்க ஐக்கிய நாட்டில் ஜார்ஜ் வாஷிங்டன், ரஷ்யாவில் லெனின், பிரான்சில் நெப்போலியன், இங்கிலாந்தில் வின்ஸ்டன் சர்ச்சில், இந்தியாவில் காந்தியடிகள் போன்ற பெருந்தலைவர்கள் அந்நாட்டின் மக்கள் நலனுக்காக வாழ்ந்து உலக வரலாற்றில் பெரிய சாதனை செய்துள்ளார்கள்.

இன்று நம்முடைய நிலைமை என்ன? நாம் முற்றிலும் கிறிஸ்துவுக்காக வாழ்கின்றோமா? இந்த மகன் அல்லது இந்த மகள் எனக்காகவே வாழ்ந்தான் அல்லது வாழ்ந்தாள் என்று கிறிஸ்து நம்மைக் குறித்து சாட்சி கொடுப்பாரா? கிறிஸ்து நமக்காக மரித்தாரே, நாம் கிறிஸ்துவுக்காக என்ன செய்துள்ளோம். நாம் கிறிஸ்துவுக்காக எதை இழப்பதற்கு முன்வருகிறோமோ அது தான் பரலோகில் நம்முடைய பொக்கிஷம். இன்று கிறிஸ்துவினிமித்தம் பத்து ரூபாய் கொடுத்தால் அதுதான் இன்று பரலோக வங்கியில் நமது வரவு. தேவனுக்காக, தெய்வீக பணிகளுக்காக நீ இன்று செலவு செய்த நேரம் எவ்வளவு? ஜெபித்த நேரங்கள் எவ்வளவு காலம்? எந்த அளவு தேவனோடு இணைந்திருந்தாய்? என்று உன்னை நீயே ஆராய்ந்து பார். கிறிஸ்துவுக்காக நம்

முடைய வசதியை, பதவியை, ஜீவனை இழந்துவிட தயாராக இருக்கின்றோமா?

ஆராதனை நேரங்களிலும், பண்டிகை நாட்களிலும் காணிக்கைப் பெட்டியில் நாம் காணிக்கைகளைச் செலுத்துகிறோம். ஒருவனுடைய கொடையளவு அல்லது ஈகைத்திறன் என்பது அவன் அதில் எவ்வளவு பணம் செலுத்தினன் என்பதைப் பொறுத்தல்ல. அவன் தனக்காக எவ்வளவு மீதியாக வைத்திருக்கிறான் என்பதை வைத்தே நிர்ணயிக்கப்படுகிறது. அந்த ஏழை விதவையைப் பாருங்கள் அவள் தன் ஜீவனத்துக்கு உண்டாயிருந்த எல்லாவற்றையும் தேவனுக்காக கொடுத்துவிட்டாள் என்று மாற். 12:42-44 ல் வாசிக்கிறோம்.

ஓர் ஊரில் இரண்டு நண்பர்கள் வாழ்ந்து வந்தார்கள். அவ்விருவரில் ஒருவன் பணக்காரன். அவனுடைய தகப்பனார் வெளிநாட்டில் மிகுந்த வருமானம் உடைய ஒரு வேலையில் இருந்தார். மற்றொருவன் ஏழை. இவனுக்கு இவ்விதமான ஓர் எண்ணம் எப்பொழுதும் உண்டு. என்னுடைய நண்பன் மிகவும் வசதி படைத்தவன். ஆகவே எனக்கு தேவைப்படும் போதெல்லாம் உதவி செய்வான். ஒரு நாள் இரவில் இந்த ஏழை ஒரு சொப்பனம் கண்டான். அதில் இறைவன் அவனை நோக்கி மகனே! உனது நண்பனைப் பற்றியே நினைந்து முழு நம்பிக்கையாக இராதே. உனக்கு உதவி செய்ய வேண்டும் என்று அவன் நினைக்கலாம். அவனது தந்தையும் கூட அங்கேயிருந்து பணம் அனுப்பி வைக்கலாம். ஆனாலும் ஏற்ற நேரத்தில் உனது கையில் கிடைக்காமல் போக வாய்ப்புண்டு. அல்லது அவர்கள் உனக்கு உதவி செய்ய முடியாத சந்தர்ப்பங்கள் ஏற்படலாம். எனவே நீ எப்பொழுதும் இறைவனையே நம்பியிரு. அவர் எல்லா நேரங்களிலும், எந்த விதமான சூழ்நிலையிலும் உன்னைப் பாதுகாப்பதற்கு, இரட்சிப்பதற்கு வல்லவராயிருக்கிறார், என்றார். ஆகவே நமது வாழ்க்கையானது இறைவனை மையப்பொருளாக வைத்து பின்னப்பட வேண்டும்.

என் மகனே, உன் இருதயத்தை எனக்குத் தா! (நீதி. 23:26) என்று இறைவன் இயேசுகிறிஸ்து நம்மிடம் கேட்கிறார். நாம் நம்மைத் தேவனுக்கு முற்றிலும் ஒப்புக்கொடுப்போமாக. அவரை நமது ராஜாவாக இதய சிம்மாசனத்தில் அமர்ந்து அரசாள இடங்கொடுத்து ஏற்றுக் கொள்வோமாக. அப்பொழுது நம்முடைய வாழ்க்கை இறைவனால் மிகவும் ஆசீர்வதிக்கப்பட்டதாக இருக்கும்; கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை நீ விசுவாசி. அவரே உன் வாழ்க்கையின் மையப்பொருளாயிருக்கட்டும்.



"முதலாவது தேவனுடைய ராஜ்ஜியத்தையும் அவருடைய நீதியையும் தேடுங்கள், அப்பொழுது இவைகளெல்லாம் உங்களுக்குக் கூடக் கொடுக்கப்படும்" [மத். 6:33].



# நசரேயர், ரேகாபியர் எங்கே?

இஸ்ரவேலர்கள் தேவனால் தெரிந்தெடுக்கப்பட்ட ஜனம், அவர்கள் மூலம் உலகத்தை மீட்க வேண்டுமென்பது தேவனுடைய திட்டம். இந்த நாடோடிகளாய் திரிந்த எபிரேயர்களைத் தேவன் எகிப்துக்குக் கொண்டு போய் பெரிய ஜன சமுதாயமாக விடுவித்து, கானானுக்குள் வழிநடத்தினார் தனக்கு சாட்சிகளாய் இருக்கும்படியாக. ஆனால் அந்த ஜனமோ கானானுக்குள் வந்த பின் புரஜாதியாரின் மார்க்கானுசாரங்களைக் கற்றுக் கொண்டு விக்கிரக ஆராதனையில் விழுந்தார்கள் எரேமி. 10:2. இதற்கு முன்னோடிகள் அவர்கள் இராஜாக்களாகும். விக்கிரகாரதனையினிமித்தமும், சாரமற்ற வாழ்க்கையினிமித்தமும், இஸ்ரவேல் ஜனங்கள் சிறைபோனார்கள்; அவர்களுடைய அரசாட்சி வீழ்ச்சியடைந்தது: அவர்களை மேற்கொண்ட பாபிலோன், அசீரிய, எகிப்து என்னும் நாடுகள் அல்லது இஸ்ரவேலர்களைச் சுற்றியிருந்த புறஜாதிகள் இஸ்ரவேலருடைய சிறந்த மார்க்கத்தையாவது, பண்பாட்டையாவது வியந்ததாக ஒன்றுமில்லை. அவர்கள் கல்வெட்டுகளிலும் எபிரேயரைப்பற்றி சில விபரங்களே உண்டு. அவை இஸ்ரவேல் தேசம் பலதடவைகளில் கீழடக்கப்பட்டதையும், பிற அரசர்கள் வரி வசூல் பண்ணினதையும் மாத்திரம் அறிவிக்கின்றன.

எபிரேயர்கள் தங்கள் சரித்திரங்களைப் பெருமையாய்ப் பேசிக்கொண்டிருந்தனர்; ஆனால் அவர்கள் நாட்களிலிருந்த மக்கள் அதை கொஞ்சமும் பாராட்டவில்லை. எபிரேயரின் மேன்மையை பிற மக்கள் உணராதது போலவே, இன்றும் கிறிஸ்தவ மக்களை உலகத்தார் சற்றேனும் மதிக்கிறதில்லை, கிறிஸ்தவமானது உலகிற்கு ஈந்தளித்த பண்பையும், மார்க்கானுசாரத்தையும் பிறர் பாராட்டும்படிக்கு இந்திய கிறிஸ்தவ மக்கள் வாழ்கிறோமா? அல்லது தங்களுக்குள்ளே பெருமையாய்ப் பேசித்திரிகிறோமா?

தேநொபிலி போன்ற ரோமன் கத்தோலிக்க சந்நியாசிகள் தென்னிந்தியா (மதுரை) வந்து இந்து பிராமணர்களோடு பழகி அவர்களை மாற்ற அவர்களுக்குப் பிரியமான புறஜாதியாரின் மார்க்கமான சிலைவழிபாடு, தேர்த்திருவிழா, கொட்டு மேளம், பொட்டு, பூ, சாமி ஊர்வலம் செய்து அவர்களை இழுக்கப் பிரயாசப்பட்டு ஆன பலன் என்ன?

இன்று இந்துக்களைப்போல இவர்களுடைய திருவிழாவில் கோஷ்டி சண்டை, வெட்டு, குத்து என்று தினசரி தாளில் செய்திகளைப் படிக்கிறோம். விக்கிரகாராதனை பெருகுகிறது. விழுந்துபோன இஸ்ரவேலர்களைப் போல செழிப்பை உண்டாக்கும் தெய்வம் பாகால் என்று, அன்று இஸ்ரவேலர் வழிபட்டது போல் பெயர் கிறிஸ்தவர்களின் நிலை காணப்படுகிறது.

தேசத்தின் நாசத்துக்குக் காரணம் விக்கிரகாராதனையே! விக்கிரகாராதனை ஒழிய வேண்டுமானால் நசரேயர், ரேகாபியர் போல் கடவுளுக்கென்று முற்றிலும் அர்ப்பணஞ்செய்து கொண்டவர்களான உலகத்தை விட்டுப் பிரிந்து வாழும் மிகவும் வைதீகரான சில மக்கள் இருக்க வேண்டும். புதிய எருசலேம் மக்கள் அப்படிப்பட்டவர்களே! மற்ற சில கிறிஸ்தவர்களைப்போல் இவர்கள் புறஜாதிகளின் பயமுறுத்தல்களுக்குப் பயந்து விக்கிரகத்துக்கு சந்தா கொடுப்பதில்லை. நசரேயர், ரேகாபியரின் வாழ்க்கையானது, ஏனையோரைக் கடிந்து கொள்ளுகிறதாயும், கடவுளின் பரிசுத்தத்திற்கு சின்னமாயும் விளங்கிற்று. அப்படிப்பட்ட சில பக்தர்கள் நமக்குள் வாசம் செய்ய ஊக்கமளிக்க வேண்டும்.

நசரேயர்: நசீரர் NAZARITES 'நாசர்' என்ற பதத்திற்கு பிரிக்கிறது என்று அர்த்தம். ஆதலால் நசீரன் என்பவன் 'பிரிக்கப்பட்டவன் 'நியமிக்கப்பட்டவன்' ஏற்ப்ப

டுத்தப்பட்டவன் என்று அர்த்தமாம். இவர்கள் சர்வ அசுத்தங்களிலுமிருந்து பிரிக்கப்பட்டு கடவுளுடைய கட்டளைகளை நிறைவேற்றும்படி நியமிக்கப்பட்டவர்களும், யாவரும் அறியக்கூடிய அடையாளத்தினாலே அந்த நிலைக்கு ஏற்படுத்தப்பட்டவர்களுமாயிருந்தார்கள். ஆதலால் நசீரர் திராட்சைப்பழ ரசத்தைக் குடியாமலும் தங்கள் தலைமயிரைச் சிறையாமலும், [தாடியை எடுக்காமலும்,] பிரேதங்களைத் தொடாமலும், நியாயப்பிரமாணத்தில் விலக்கப்பட்ட ஆகாரத்தை புசியாமலுமிருந்தார்கள் (எண். 6:2; நியா. 13:5; 16:17; புல. 4:7; ஆமோ. 2:11). நசீர பொருத்தனை செய்தவர்கள் யேகோவாவின் பெயரிலே அதிக வைராக்கியமுடையவர்களாயிருக்க வேண்டும். நசீரர் பக்திமார்க்கத்தில் சிறந்தவர்களானதினால் எபிரேயர்கள் எல்லோரும் இவர்களை மேன்மைப்படுத்தினார்கள். சாமுவேல் தீர்க்கன், யோவான் ஸ்நாபகன், இயேசுவின் சகோதரர் நீதியுள்ள யாக்கோபு நசீரர்களே!

ரேகாபியர்: விக்கிரகாராதனையை ஒழிக்க கலகம் செய்த யெகூவுக்கு ரேகாபின் குமாரன் யோனதாப் உதவி கொடுத்து ஆகாபையும், அவனைச் சார்ந்தவர்களையும் அம்மார்க்கத்தையும் முற்றிலும் வெறுததாகப் பார்க்கிறோம் [2 இரா. 10 15]. இவனுடைய சந்ததியார் மகா பக்திவைராக்கியமுள்ளவர்களாயிருந்தார்கள் [எரே 35 1:11]. இவர்கள் திராட்ச்சைரசம் குடியாமலும் வீடுகளைக் கட்டாமலும், தானியங்களை விதையாமலும், திராட்சை தோட்டங்களை உண்டுபண்ணாமலும், நிலங்களை சொந்தமாக வாங்காமலும் எப்போதும் கூடாரங்களிலே ஜீவித்து வந்தார்கள். எரேமியா இந்த ஜனங்களுக்கு முன்பாகத் திராட்சைரசம் குடிக்கச் சொன்னபோது இவர்கள் அதற்குச் சம்மதிக்கவில்லை இதைக் கண்ட அவர் இவர்களுடைய பக்தியை மெச்சி, பாவம் செய்த யூதர்களுக்கு இவர்களை நல்ல முன்மாதிரியாக வைத்தார் [எரே. 35 12-19].

"ஊரோடு ஒத்துப்போ" என்ற தவறான பழமொழிப்படி வாழும் பெயர்கிறிஸ்தவரல்ல இன்றையத் தேவை! செருப்பையும், ஷுவையும் [SHOE] போட்டுக்கொண்டு ஜெபம் பண்ணுகிற மாயபக்தி கிறிஸ்தவனல்ல. ஜாமக்கார சண்டப் பிரசங்கிகளல்ல இன்றைய தேவை! ஜாதிவெறியினால், தள்ளாடுகிற இந்து கிறிஸ்தவர்களல்ல வேதாகமத்தைப் பின்பற்றுகிற யாத். 3:5; யோசு. 5:15; கொலோ. 3:11 உண்மை கிறிஸ்தவத்தை உலகிற்கு காட்டுகிற மெய்க்கிறிஸ்தவர்களே இன்றைய உலகத்திற்குத் தேவை! "நசரேயர் ரேகாபியர்" எங்கே? புதிய எருசலேம் மூலமாக உலகத்தில் பெருமாற்றம் உண்டாகிறதைப் கவனியுங்கள்!! தேவனும் வாக்களிக்கிறார்!!! [எரே. 35:19].

"ஆதலால் சகல நாட்களிலும் எனக்கு முன்பாக நிற்கத்தக்க புருஷன் ரேகாபின் குமாரனாகிய யோனதாபுக்கு இல்லாமற் போவதில்லையென்று இஸ்ரவேலின் தேவனாகிய சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார் என்றான்" (எரே 35:19).

16-9-1995 அன்று குஜராத் பாலாசினூர். வனக்புரி [DAM] புதிய எருசலேம் [பீனா] சபையில் 5பேர்கள் ஞானஸ்நானம் பெற்று திருச்சபையின் அங்கமானார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# பெண்கள்

[தொடர்ச்சி]

நம்முடைய வசீர சக்தியும் செல்வாக்கும் பெருக்கிக் கொள்ள வேண்டியது நம் ஒவ்வொருடைய கடமை. இவைகள் எல்லாவற்றிலும் இடையூறுகள் அதிக அபாயகரமானது. நமது சுயநல மனப்பான்மையாகும். பிறரிடம் இருந்து பிரித்து வைத்து நம்மை தனிமையாக்குவதில் இது தன்னிகரற்ற சாமர்த்தியம் வாய்ந்தது. இந்தக் குற்றத்தில் நாம் ஈடுபடும்பொழுது அது நமக்கே தெரியாமல் பேசுவதுதான் மிகப் பெரிய ஆச்சரியம். இந்த கெட்ட குணத்தை மிக எளிதாக நாம் போக்கிக்கொள்ளலாம். இதற்காக நாம் செய்ய வேண்டியது வேறு ஒன்றுமில்லை. நம்முடைய எதிரியின் ஸ்தானத்தில் நம்மை வைத்துப் பார்க்க வேண்டும். அவ்வளவுதான்; ஆனால் அந்த சுலபமான காரியத்தை யாருமே செய்வதில்லை. அதனால் நாம் அனுவசியமான துன்பங்களுக்கு ஆளாக நேருகிறது.

ஒரு முக்கியமான விஷயத்தை நாம் எப்போதும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அதாவது உலகத்தில் எந்த இரு மனிதர்களும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. இரட்டைக் குழந்தைகள்கூட குணத்தில் ஒருமைப்பட்டு இருப்பதில்லை. ஏனெனில் நாம் ஒவ்வொருவரும் தாயின் கருவில் வளரும்போதே பல்வேறு வித சூழ்நிலைகளில் உருவகமடைகிறோம்.

நாம் குழந்தைகளாயிருக்கும்போது நமது தாய் தந்தையர் அவர்களது பெற்றோர்களிடமிருந்து கற்றவற்றை தமது சொந்த அனுபவங்களோடு புனைந்து நமக்குப் போதிக்கிறார்கள். அதனால் நம் பெற்றோர்களின் குணத்தின் ஒரு பகுதி நம்மிடம் வந்து விடுகிறது. அதன் பிறகு நாம் பழகும் நண்பர்கள் மூலம், நாம் படிக்கும் புஸ்தகங்களின் மூலம் நமது குணங்கள் வேறுபாடு அடைகின்றன. மொத்தத்தில் மக்களிடையே காணப்படும் கோடிக்கணக்கான வித்தியாச குணங்களே உலகில் வாழ்விற்கு சுவையூட்டுகிறது. இதற்கு சில உதாரணங்களைக் குறிப்பிடலாம். நமக்கு பிரியமான ஒருவர் இறந்துவிட்டால் அதை நாம் ஒரு பெரிய துக்கமாகக் கருதுகிறோம் ஆனால் சைபீரியாவில் வாழும் சில இனத்தாரிடையே மரணம் என்பது ஒரு சந்தோஷ சம்பவமாகக் கருதப்படுகிறது.

மறுபிறப்பு கொள்கை இந்து தர்மத்தில் ஏட்டளவில் இருக்கிறது. அவர்களோ அதில் மனப்பூர்வமான நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். ஆகையால் இறந்தோர்கள் எனப்படுவோர் உண்மையில் புது வாழ்வடையப் போகிறவர்களே என எண்ணி அவர்கள் மிகவும் மகிழ்ச்சியடைகிறார்கள் இதே போல் ஆண், பெண் உறவு விஷயத்தில் உலகில் பல நேர்மாறான கருத்துக்கள் நிலவுகின்றன. நமது சமுதாயத்தில் கலியாணமான ஒரு பெண் பிறனொருவன் மீது விருப்பமுற்றால் அவளை விபச்சாரி என்று தூற்றுகிறோம். ஆனால் வட இந்தியாவில் உள்ள ஒரு இனத்தாரிடையே இதற்கு நேர்மாறான ஒரு பழக்கம் நிலவி வருகிறது. அங்கே ஒரு உத்தம பெண்மணி என கருதப்படுபவள் தன் கணவனுக்கு மட்டுமன்றி, அவன் உடன் பிறந்த சகோதரர்களுக்கும் மனைவியாக நடந்து கொள்ள வேண்டும், அது அவர்களுடைய கலாச்சாரம். வட இந்தியாவில் பெருமளவு மக்கள் மத்தியிலே இந்த நிலைமை காணப்படுகிறது.

நாம் செய்த ஒரு தவறுக்காக மற்றொருவர் நம்மைக் கோபித்தால் நாம் முகம் சுளிக்கிறோம். ஆனால் சீனக்காரர்களோ, ஜப்பானியரோ அப்படிச் செய்யமாட்டார்கள். பெரியவர்கள் தங்களை கோபித்துக் கொள்ளும் பொழுது அவர்கள் இனிமையாகப் புன்னகைப் புரிவார்கள். அவர்கள்

அப்படிப் பழக்கப்பட்டிருக்கிறார்கள். பெரியோரிடத்தில் தாம் வைத்திருக்கும் அன்பையும், மரியாதையையும் தெரிவிப்பதற்கு அவர்கள் கையாளும் வழி அது. அந்த உண்மையை புரிந்து கொள்ளவேண்டும். நம்மைக் காட்டிலும் பல விதத்திலும் மட்டமான ஒரு சிலர் நாம் நினைத்துப் பார்க்கக் கூடாத அதி உன்னத பதவியில் அமர்ந்திருக்கிறதைப் பார்க்கிறோம். அதன் அர்த்தம் என்ன? எல்லோரோடும் இணங்கிப் பழகும் இரகசியத்தை அவர்கள் அறிந்திருக்கிறார்கள் என்பதுதான்.

மனித வர்க்கத்தினிடையே காணப்படும் இத்தனை வித்தியாசங்களுக்கு மத்தியில் ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் நாம் எல்லோரும் சமமாக இருக்கிறோம். அதாவது நாம் பல அம்சங்களில் பலவீனர்களாயிருந்தாலும் அவற்றிற்கெல்லாம் ஈடுகட்டும் அளவுக்கு வேறு ஏதேனும் ஒரு குறிப்பிட்ட அம்சத்தில் மற்றவர்களைக் காட்டிலும் நிச்சயம் பலவான்களாகவே நாம் இருக்க முடியும். தேவன் நம்மை அப்படிப் படைத்திருப்பார்.

ஒவ்வொரு தனிப்பட்ட மனிதன் விஷயத்திலும் பிறரால் அவன் எவ்வளவுக்குத்தான் இழிவாகக் கருதப்படுபவனாக இருந்தாலும் இந்த சித்தாந்தம் நிரூபிக்கப்பட்டதாகும் என்பதில் சந்தேகம் வேண்டியதில்லை. ஆனால் அவனவனுக்கே உரிய அந்த சிறப்பான அம்சமானது சில பேரிடத்தில் குன்றின் மேலிட்ட தீபம்போல் பிரகாசமாய் விளங்கலாம். மற்றவர்களிடத்தில் குடத்திற்குள் வைத்த விளக்கு போல் மறைவாயிருக்கலாம். இரண்டுக்கும் அவ்வளவுதான் வித்தியாசம். இந்த உண்மையை விளங்கிக் கொண்டோமானால் உலகில் யாரையுமே நாம் அலட்சியமாக நினைக்க மாட்டோம். அதிகமான சுயமதிப்பு கூடாது. நம்முடைய சொந்த சக்தியை உணர்ந்திருக்க வேண்டியது மிக மிக அவசியம். ஆனால் அதே சமயத்தில் நம்முடைய தகுதிக்கு மிஞ்சி நம்மை நாமே மதிப்பிட்டுக் கொள்வது நமக்கு கேட்டினையே விளைவிக்கும்.

தாழ்ந்தவர்கள் என்று நாம் நம்மால் மதிக்கப்படும் சிலருடைய அபிப்பிராயத்தில் நாம் மிகத் தாழ்ந்தவர்களாய் இருக்கக் கூடும் என்பதை மறந்துவிடக் கூடாது. உதாரணமாக சீனாக்காரர்களை விட தாங்கள் மிக அழகாக இருப்பதாக பல வெள்ளைக்காரர்கள் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அதே வெள்ளைக்காரர்களைப் பற்றி சீனாக்காரர்கள் என்ன நினைக்கிறார்கள் தெரியுமா? வெள்ளைக்காரர்களின் வட்டமான பெரிய கண்களை பார்த்து விட்டு அவர்கள் எப்பொழுதுமே கோபாவேசத்தோடு இருக்கிறதாக சீனர்கள் கருதுகிறார்கள். ஏனென்றால் கோபம் கொள்ளும் போது மட்டும் தான் சீனர்களுக்கு கண் பெரியதாகும். வெள்ளைக்காரர்களின் பற்கள், சீனர்களுக்கு நாய்களின் பற்களை நினைவுருத்துகின்றன.

பொதுவாக கரைவு சரிவான சரீர கட்டுடைய பெண்கள்தான் கவர்ச்சிகரமானவர்கள் என்று நாம் கருதுகிறோம். ஆனால் மத்திய ஆப்பிரிக்காவில் உள்ள மக்கள் ரசனை இதற்கு நேர்மாறானது. அங்கெல்லாம் பருத்து, கொழுத்த பெண்களை அழகுடையவர்களாக எண்ணுகின்றனர். அப்படி கொழுக்க வைப்பதற்கென்று அங்கு தனி விடுதிகள் இருக்கின்றன. ஒரு பெண் புஷ்பவதியாகிவிட்டால் அவளை உடனே அவ்விடுதிக்கு அனுப்பி விடுவார்கள். அங்கே அவளுக்கு சத்தான ஆகாரம் கொடுக்கப்படும். உடம்பை தினசரி எண்ணெய் போட்டு பிடித்து விடுவார்கள். இப்படி பல வருஷங்கள் தின்று கொழுத்து ஒரு யானைக்குட்டி போல ஆன பிறகு அவள் அவ்விடுதியிலிருந்து ஊர்வலமாக அழைத்துச் செல்லப்படுவாள். உடனே அவளுக்குக் கல்யாணம் ஆகிவிடும்.

எஸ்கிமோக்கள் மிக அநாகரீகமானவர்கள் என்பது ஐரோப்பியர்களின் அபிப்பி

ராயம். ஆனால் தம் வகுப்பினர்களுக்குள்ளே உதவாக்கரையாகத் திரியும் வாலிபர்களை போங்கடா வெள்ளைக்கார பசங்களா என்று அவர்கள் திட்டுவார்களாம். அவர்கள் பாஷையிலே இது மிகவும் கடுமையான வசை மொழியாகும். மக்களுக்கு உணவு, உடை, கொள்கைகள், ரசனைகள், பழக்க வழக்கங்கள் எல்லாமே தேசத்துக்குத் தேசம், காலத்துக்குக் காலம், இனத்துக்கு இனம், ஏன்? நபருக்கு நபர் கூட வித்தியாசமாய் இருக்கின்றன என்பதை நாம் மறந்து விடக்கூடாது. இது இயற்கை அதே சமயத்தில் ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய அபிப்பிராயம்தான் மற்ற இனத்தவர்களை விட உயர்ந்தது எனவும் உறுதியாக நம்புகிறான். இதையும் நாம் கவனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

ஒருவன் தான் மிகவும் உயர்ந்தவன் என்ற தோரணையில் மற்றவரிடம் பேசும் போது அவர்கள் தன்னை உயர்வாக கருத வேண்டுமென்று அவர்கள் எதிர்பார்க்கிறார்கள் எனறு அர்த்தம். அதாவது இயல்பாகவே அவர்களிடம் உயர்ந்த தன்மை இல்லாததினால் தன் நடிப்பின் மூலமாயேனும் அதை உண்டுபண்ணிக் கொள்ள முயலுகிறார்கள்; இது மற்றவர்களுக்கு மிகவும் வெட்ட வெளிச்சமாகத் தெரிகிறது. அதன் பலன் என்ன? அவர்கள் அவனை வெறுக்கிறார்கள். அவனுக்குரிய நியாயமான மதிப்பைகூட கொடுக்கமறுக்கிறார்கள். நான் உன்னைவிட பெரியவன் என்ற மனப்பாவத்தோடு நம்மை அணுகுவானானால் அதற்காக அவனை நாம் வெறுக்க வேண்டியதில்லை.

பிரபலமான வக்கீல் ஒருவர் ஒரு வழக்கு சம்பந்தப்பட்ட கேஸ் கட்டுகளை மிகத் தீவிரமாக ஆராய்ந்து கொண்டிருந்தார். அப்பொழுது திடீரென்று ஒரு இளைஞன் அவர் அறைக்குள் பலவந்தமாக நுழைந்தான். உடனே வக்கீல் தன் பார்வையை அவன் பக்கமாகத் திருப்பி தயவு செய்து அந்த நாற்காலியில் சற்று உட்காருகிறீர்களா என்று மரியாதையாக கூறினார். அவனுக்கு கோபம் வந்துவிட்டது. நான் யார் என்று தெரியாமல் பேசுகிறீர். நான் மந்திரியின் மகன் என்றான், அவன் பெருமிதத்தோடு: வக்கீல், ஓஹோ! அப்படியானால் இரண்டு நாற்காலியில் உட்காருங்கள் என்று சொல்லி விட்டு தன் அலுவல்களைக் கவனிக்க ஆரம்பித்துவிட்டார். சுயநலப்பான்மையின் தன்மை இது. இதினிமித்தம் ஒருவர் இன்னொருவரை பரியாசம் பண்ணுகிறதும், தாழ்வாகப்பேசுகிறதும் தவறாகும்.

ஆனால் அவர்கள் நினைக்கவேண்டும்; அவர்களைப் பற்றி அடுத்தவர்கள் எவ்வளவு தாழ்வாக, மோசமாக நினைக்கிறார்கள். ஆனபடியால் பரியாசம் பண்ணுகிறதோ, பிறரை கிண்டல் செய்கிறதோ, தாழ்வாக எண்ணுவதோ கூடாது. இவ்விதமான குற்றங்களுக்குப் பெண்கள் சிக்கிக் கொள்ளாதபடிக்கு இறைவனுக்குப் பிரியமானவர்களாக இறைவனை மகிமைப் படுத்துவீர்களாக!

[தொடரும்]

"அந்தப்படியே ஸ்திரீகளும் நல்லொழுக்கமுள்ளவர்களும், அவதூறு பண்ணாதவர்களும், தெளிந்த புத்தியுள்ளவர்களும், எல்லாவற்றிலேயும் உண்மையுள்ளவர்களுமாயிருக்க வேண்டும்" 1 தீமோ. 3:11.

# ஜீவன்- நித்திய ஜீவன்

மத்தேயு 19:16-22. ஒரு நியாயசாஸ்திரி இயேசுவானவர் இந்த உலகத்தில் இருக்கின்றபொழுது அவரிடத்தில் வந்து: நல்ல போதகரே நித்திய ஜீவனை அடைவதற்கு நான் என்ன செய்ய வேண்டும் என்று கேட்டான். அதற்கு இயேசுவானவர் நீ ஜீவனில் பிரவேசிக்க விரும்பினால் கற்பனைகளைக் கைக்கொள் என்றார். அதற்கு அவன் எந்த கற்பனைகளை என்றான். கொலை செய்யாதிருப்பாயாக, விபச்சாரம் செய்யாதிருப்பாயாக, களவு செய்யாதிருப்பாயாக, பொய் சாட்சி சொல்லாதிருப்பாயாக, உன் தகப்பனையும், உன் தாயையும் கனம்பண்ணுவாயாக; உன்னிடத்தில் நீ அன்பு கூறுவதுபோல பிறனிடத்திலும் அன்புகூறுவாயாக என்பவைகளையே என்றார்.

அந்த வாலிபன் நான் இவைகளை சிறுவயது முதல் கைக்கொண்டிருக்கிறேன்; இன்னும் என்னிடத்தில் குறைவு என்ன என்றான். உனக்கு நித்திய ஜீவன் வேண்டுமென்றால் உனக்கு உண்டாயிருக்கிற ஐசுவரியத்தையெல்லாம் விற்று தரித்திரருக்குத் தானம் பண்ணிவிட்டு நீ என்னை பின்பற்றி வா என்று இறை இயேசு சொன்னார். அவன் மிகுந்த ஆஸ்தியுள்ளவனாயிருந்தபடியினால் இந்த வார்த்தைகளைக் கேட்டபொழுது துக்கமடைந்தவனாய் போய்விட்டான். கற்பனைகளிலெல்லாம் பிரதான கற்பனை "நீ உன் தேவனாகிய கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத்தோடும், உன் முழு ஆத்துமாவோடும், உன் முழு மனதோடும், உன் முழு பெலத்தோடும் அன்பு கூறுவாயாக" என்பதாம். அதற்கு அடுத்த கற்பனை நீ உன்னிடத்தில் அன்பு கூறுவதுபோல பிறனிடத்திலும் அன்பு கூறுவாயாக என்பதே. இவைகளுக்குள் நியாயப் பிரமாணமும், தீர்க்கதரிசனங்களெல்லாம் அடங்கி இருக்கிறது.

இவன் நான் கற்பனைகளைக் கைக்கொண்டிருக்கிறேன் என்று சொன்னபோதிலும் இயேசுவின் கட்டளைக்கு கீழ்ப்படிய விருப்பமில்லை. உலக ஆஸ்தி பாஸ்திகளிலே இவனுடைய ஜீவன் பின்னிக்கொண்டிருந்தது. இதினிமித்தம் அவன் பின்னிட்டு போய்விட்டான்.

ஜீவன்: ஜீவன் என்பது இயங்கும் தன்மையுள்ளது. மரித்தவர்கள் ஒரு நிழலாட்டமான வாழ்க்கையில் இருக்கிறார்கள். அவர்கள் எந்த கிரியையும் செய்யமுடியாதவர்களாய், நற்கிரியை ஆற்ற முடியாதவர்களாய் இருக்கிறார்கள் (சங். 8:11; ஏசா. 14: 9,10; 26:14). ஜீவன் செழிப்பும் சமாதானமும் நிறைவான தன்மையையும் குறிப்பிடும். வியாதிபபட்டு செயலற்ற தன்மை ஜீவன் என்று சொல்வதற்கில்லை. ஆகாரம் புஷிக்கிறதினால் மனிதன் பிழைக்கிறான் [ஆதி. 43:8; 2 இரா. 7:4].

மனிதன் சாக நியமிக்கப்பட்டவன். மீட்கப்படும்பொழுது வாழ்வைப்பெறுகிறான் (ஆதி. 20:7). பிணியாளி சுகமடையும் பொழுது அவன் வாழ்வை பெறுகிறான் (யோசு. 5:8; எண். 21:8; 2 இரா. 1:2; ஏசா. 38;9,16). ஆகையால் ஜீவன் என்றால் சமாதானமும் செழிப்புமான வாழ்க்கையாகும். மனிதன் ஜீவன் விரும்பி நீடித்த ஆயுளை விரும்புகிறான் [1 இரா. 3:11; நீதி 3:16; சங். 34:12; 91:16]. யாரையாவது வாழ்க என்று வாழ்த்தும்போது அதனுடைய அர்த்தம் அவர்கள் நீடிய ஆயுளையும், சமாதானத்தையும் செழிப்பையும் பெற்று சந்தோஷமாக வாழ வேண்டும் என்று அர்த்தமாம். இராஜா வாழ்க என்று வாழ்த்துதலின் அர்த்தம் இதுவே [1 சாமு. 10:24; 2 சாமு. 16:16]

கடவுளையன்றி ஜீவன் இல்லை. ஜீவன கடவுளால் அருளப்படுகிறது. ஆனபடியினால் இறைவனை ஜீவனுள்ள தேவன் என்று பல இடங்களிலே வேதத்தில் குறிப்பிட்

டிருக்கிறது. காணவும், கேட்கவும், பேசவும் எழுந்து நடக்கவும் செயலாற்றவும் முடியாத பதுமைகளுக்கு, சிலைகளுக்கு இறைவன் மாறுபட்டவர். அவர் ஜீவனுள்ளவர் என்பதை குறிப்பிடும்படியாக ஜீவனுள்ள தேவன் என்று வேதம் இறைவனைப்பற்றி திட்டமாய் வெளிப்படுத்துகிறது. கடவுளின் கட்டளைகளுக்கு கீழ்ப்படிவதினால் ஜீவனும் சமாதானமும் உண்டாகும் (உபா. 8:3).

இஸ்ரவேலர்கள் மரணமின்றி நீடித்து வாழ விரும்பினார்கள் [ஆப. 1:12; சங். 89: 47-49]. சில இடங்களில் கடவுளோடு உள்ள ஐக்கியத்தினால் ஜீவன் உண்டாகிறது என்று குறிப்பிடப்பட்டுள்ளது [சங்.16: 10,11; 73:22-28; யோபு 19:25,26]. ஆனால் நீதிமான்கள் வாரிக்கொள்ளப்படுவதையும், துன்மார்க்கர்கள் நிலைத்திருப்பதையும், கண்டு தேவ ஜனங்களில் வேறு சிந்தனைகள் உண்டாயிற்று. யோபுவில் வருகிற சம்பவம்போல் உலகத்தில் நடக்கிறதை கண்டு, ஜீவனென்று சொல்லப்படுவது இம்மையில் மாத்திரமல்ல, மறுமையில் இறைவனுடைய உலகத்தில் இறைவனோ கூட சுகித்திருப்பதே நித்திய ஜீவனென்று கண்டார்கள். ஆனபடியினால் உயிர்தெழுதலைப் பற்றிய நம்பிக்கைத் துளிர்த்தது இந்த உலகத்திலே வாழ்கிற ஒரு மனிதன் ஜீவனைப்பற்றி கவலையற்றவனாக வாழலாம் [மாற். 8:36,37; லூக். 15:13; கொலோ. 3:7]. உலகத்தில் நாம் ஜீவிப்பதற்கு ஆகாரம் தேவை (மத் 4:4; லூக். 12:15). ஆனால் அந்த போதகன் இயேசுவினிடத்தில் வந்து கேட்டது நித்திய ஜீவனை அடைவதற்கு நான் என்ன செய்ய வேண்டும்? என்பதாம்.

நித்தியமான ஜீவனை, நீடித்த வாழ்வை இறைவனோடுள்ள ஐக்கியத்தினாலே பெறமுடியும். கற்பனைகளை கைக்கொள்ள வேண்டும், இயேசுவை விசுவாசிக்க வேண்டும், அவரை பின்பற்ற வேண்டும். அப்பொழுது நித்திய ஜீவன் உண்டாகும். சிலர் கற்பனைகளை கைக்கொள்ளுவார்கள், இயேசுவை விசுவாசிக்கமாட்டார்கள். சிலர் இயேசுவை விசுவாசிப்பார்கள், கற்பனைகளை கைக்கொள்ளாமல் தங்களுக்கு நித்திய ஜீவன் கிடைக்கும் முக்தி அடைவோமென்று தவறாக எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். "நீ ஜீவனுக்குள் பிரவேசிக்க விரும்பினால் கற்பனைகளைக் கைக்கொள்; என்னை பின்பற்றிவா என்று இறை இயேசு திருவுளம் பற்றினார் மத்தேயு 19ம் அதிகாரம். ஜீவன், உலகத்தில் மனிதர்களுக்கு மாத்திரமல்ல பட்சிகள், பறவைகள், மிருகங்கள், ஊரும் பிராணிகள், நீர்வாழ் ஜந்துகள் இன்னும் அநேகருக்கு ஜீவன் உண்டாயிருக்கிறது. அதுவல்ல நித்திய ஜீவன் என்று சொல்லுகிறது ஜீவனும் சமாதானமும், சந்தோஷமுமாம். இதுவே நித்திய ஜீவன் (ரோம. 14:17). அது வரும் யுகத்திலும் தொடரக் கூடியதாக மனிதன் நித்தியமாய் வாழ்வளிக்கக் கூடியதாகவும் 1 தீமோ. 4:8; இப்பொழுது இறைவன் கிறிஸ்துவில் வெளிப்படுத்தியுள்ள வெளிப்பாட்டை பற்றிக்கொண்டு ஜீவிக்கிறவன், நடப்பவன் நித்திய ஜீவனை ஏற்றுக் கொள்ளபக்குவபடுத்தப்படுகிறான். நித்திய ஜீவன் அவனுக்கு அருளப்படுகிறது (மத். 25:46; மாற். 10:17,29; லூக். 10:28; யோவா. 5:29; 12:25; ரோம. 2:7; 6:22,23).

இந்த ஜீவன் கிறிஸ்துவின் உயிர்தெழுதலினால் உலகத்தில் பிரவேசித்தது. நித்திய ஜீவனுக்கு அஸ்திபாரம் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய உயிர்த்தெழுதலாகும் (2 தீமோ. 1:10). இயேசுகிறிஸ்து வந்து மனுமக்களுக்கு நித்திய ஜீவனை அருளினார். அவருடைய உயிர்த்தெழுதலினால் நம்பிக்கை உண்டாயிற்று (1 பேது. 1:3; 1 கொரி. 15:22,23; அப். 3:15). யோவான் எழுதின சுவிசேஷமும், நிருபங்களும் மனிதன் இந்த நித்திய ஜீவனை பெற்றுக் கொள்ளும்படியாக எழுதப்பட்டுள்ளது.

இயேசுவை தேவனுடைய குமாரனென்று விசுவாசிக்கவும் நித்திய ஜீவனை பெற்றுக் கொள்ளவும் இது எழுதப்பட்டுள்ளது [1 யோவா. 5:20]. விசுவாசி இவ்வுலகத்திலே நித்திய ஜீவனைப் பெறலாம் [யோவா 15:11; 17:1-3,14 27,16 33]. நித்திய ஜீவன் தேவனுடைய கற்பனைகளின்படி ஜீவிப்பதினாலும் தேவனை விசுவாசித்து அவர் அருளுகிற ஜீவனை ஞானஸ்நானம் பரிசுத்தாவியின் அபிஷேகத்தின் மூலமாக மறுபிறப்பினால் மனிதன் அடைகிறான் [யோவா. 3:3-5].

ஆனபடியினால் நித்திய ஜீவன் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய ஜீவனை இருக்கிறது. இயேசுவை விசுவாசித்து கிறிஸ்துவுக்குள்ளிருக்கிறவர்கள் இந்த ஜீவனை பெற்றுள்ளார்கள் [1 யோவா. 1:3,5,11-13] அந்த நியாயசாஸ்திரி கற்பனைகளை கைக்கொண்டான் இயேசுகிறிஸ்துவை விசுவாசிக்கவில்லை ஜீவனுள்ள கடவுளை அவன் விசுவாசிக்கவில்லை, நித்திய ஜீவனை அவன் பெற்றுக்கொள்ளவில்லை, நீ மனந்திரும்பி கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசி கற்பனைகளை கைக்கொள். இயேசுவை விசுவாசித்து கிறிஸ்துவை பின்பற்று; நித்திய ஜீவனை அடைவாய்.

"தேவனைத் தேடு"
"SEEK GOD"

Regd. No. 640068/84
Postal Regd. No. MH BY NE-94/84
Tamil Monthly Magazine

# சுவிசேஷம் [GOSPEL]

சுவிசேஷம் [GOSPEL]: சந்தோஷமான செய்தி (Glad tidings) ஜீவனையும் அழியாமையையும் வெளிப்படுத்தும் சத்தியம் (2 தீமோ. 1:10). கிருபையுள்ள தேவன் பாவிகளாகிய உலகத்தார் மேல் அன்பு கூர்ந்து, அவர்கள் இரட்சிப்படையும்படிக்கு சற்குருவும், மீட்பருமாக மனுஷவதாரம் பண்ணின இயேசுகிறிஸ்துவைக் கொண்டு, பரிசுத்தமுள்ள ஆவியின் ஏவுதலினாலே; பாவிகள் கிறிஸ்துவினுடைய புண்ணிய பலன்களை நம்பிப் புதிய குணத்தை அடைந்து, விசுவாசமும், அன்பும் உடையவர்களாகி, மோட்சத்தை சுதந்தரிக்கத்தக்க நீதிமான்களாகிய விதத்தைக் கற்பிக்கிற சத்திய வேதம், சுவிசேஷம் எனப்படுகிறது (கலா. 3:8) அது இயேசுகிறிஸ்துவைப் பற்றிய செய்தியே (1 கொரி. 15:1-4).

சுவிசேஷம் பிதாவினால் உண்டாயிருக்கிறபடியால் தேவனுடைய சுவிசேஷம் என்றும் [ரோம. 1:4]. அது தேவனுடைய கிருபையை வெளிப்படுத்துகிறபடியால் கிருபையின சுவிசேஷமென்றும் [அப். 20:24]. கிறிஸ்துவானவர் சுவிசேஷத்துக்குக் காரணரும் சுவிசேஷத்தின் பொருளுமாயிருக்கிறபடியாலே அது கிறிஸ்துவினுடைய சுவிசேஷமென்றும் (ரோ. 1:16). அது இரட்சிப்பைக் கூறி இரட்சிப்பை அளிக்கிறபடியினாலே இரட்சிப்பின் சுவிசேஷமென்றும், அதில் கிறிஸ்துவாகிய இராஜாவின் கட்டளைகள் அடங்கியிருக்கிறபடியால் அது இராஜ்ஜியத்தின் சுவிசேஷமென்றும் [எபே. 1:13 மத். 4:23], அதைப் போதகர் போதிக்கிறபடியால் போதகர் சுவிசேஷமென்றும் [2 தெச. 2:14] அது யாவருக்கும் பிரசங்கிக்கிறபடியால் பொதுவான சுவிசேஷமென்றும் [கலா. 2:8] அது தேவனுடைய மகிமையை வெளிப்படுத்தினபடியால், தேவனுடைய மகிமையின் சுவிசேஷமென்றும் (1 தீமோ. 1:11; 2 தெச. 2:14) சொல்லப்படுகிறது.

### அறிவிப்புகள்

1 முழு இரவு விழிப்பு ஜெபம்

6 [திங்கள்] நவம்பர் 1995
6 [புதன்] டிசம்பர் 1995

2 புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
ஆண்டு சந்தா Rs 15-00,
வெளிநாடு Rs 1[illegible]-00

அனுப்ப வேண்டிய விலாசம்:
CHIEF PASTOR N. LAZAR
"NEW JERUSALEM CHURCH"
CHURCH LANE, TILAK NAGAR,
DARGA ROAD, BHANDUP,
BOMBAY-400 078 INDIA.

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்

4 பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்

5. 'புதிய எருசலேம செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078 Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 136 - NOV. '95



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவான் என்று நீங்கள் அறியீர்கள்.. விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்."

- மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஞானஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (மத். 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும் அதிகாரங்களுமாகும் இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1:1; 10:40-43).

CHIEF PASTOR N LAZAR

## இதழின் உள்ளே

# ஆசிரியர் உரை

மனிதனுடைய மனமானது எதை ஒன்றை சிந்திக்கிறதோ அதையே, அதற்கடுத்த காரியங்களையே அடுக்கடுக்காக சிந்திக்க கூடியதாக இருக்கிறது. மனதை கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர வேண்டும்; நல்லதையே சிந்திக்க வேண்டும். நன்மையானதை யோசிக்க வேண்டும். அதற்கடுத்ததையே சிந்திக் வேண்டும். தீமையான யோசனைகள் சிந்தனைகளுக்கு இடங்கொடுக்கக் கூடாது. அவைகள் வரும்பொழுது உடனே அதை தடுத்து நன்மையானவதையும், உயர்ந்ததையும் நம்மை உயர்த்த கூடியதும், புகழக்கூடியதும் தேவனுக்கு பிரியமான நன்மையானதை சிந்திக்க வேண்டும். யாரைப்பற்றியுமே சிந்திக்கும் பொழுதும், நன்மையானவைகளையும் எடுத்துக் கொள்ள வேண்டும். நாம் சும்மா இருக்கும்பொழுது சிந்திக்கிறதை குறித்து நாம் கவனமாய் இருக்க வேண்டும்.

நன்மையானவைகளை, நல்லவைகளை சிந்திக்க வேண்டும், நல்ல திட்டங்கள் போட வேண்டும். நன்மை செய்ய வேண்டுமென்றே சிந்திக்க வேண்டும். தீமையை யோசிக்கிறவர்கள், தீய எண்ணங்களுக்கு இடம் கொடுக்கிறவர்கள், வஞ்சினம் கொள்ளுகிறவர்களே தவறுகிறார்கள். நன்மை செய்கிறவர்களுக்கோ கிருபையும், சத்தியமும் உண்டு (நீதி. 14:22). ஆனபடியினால் நன்மையை யோசிக்கிறவர்களுக்கு தேவனுடைய கிருபை கிடைக்கும், சத்தியமும் விளங்கும். தீமையை யோசிக்கிறவர்கள் தவறுகிறார்கள்.

ஆனபடியினால் தேவனுக்கடுத்தவைகளை, பரிசுத்தத்துக்கடுத்தவைகளை, நீதிக்கடுத்தவைகளை, ஒழுக்கத்துக்கடுத்தவைகளை நாம் சிந்திப்போமாக, எந்த நன்மையை செய்யலாம் என்று ஆலோசிப்போமாக. கடவுளுடைய அருள் நமக்கு கிடைக்க நாம் நன்மையே செய்வோம்.

கிறிஸ்துவுக்குள்,

[CHIEF PASTOR N. LAZAR]

# கிறிஸ்தவ மார்க்கம்

*(தொடர்ச்சி)*

இயேசு கிறிஸ்துவின் இரண்டாம் வருகையில் இரண்டு பாகங்கள், பிரிவுகள் உண்டென்று ஏற்கனவே கூறியிருக்கிறோம். முதற்பாகத்தில் கிறிஸ்துவுக்குள் நித்திரையாய் இருக்கிறவர்கள் அல்லது மரணமடைந்த பரிசுத்தவான்கள், உயிர்த்தெழுதலும், உயிரோடிருக்கிற சபை எடுத்துக் கொள்ளப்படுதலுமான சம்பவம் நிகழ்கிறது மரித்த மற்றவர்கள் உயிரடையவில்லை (வெளி 6:9,11) கிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகையில் முதல் பாகம் அல்லது இரகசிய வருகை நடக்கிறதற்கு முன்னால் நடைபெற வேண்டிய சில காரியங்கள் உண்டு.

ஆகாய மண்டலத்தில் காணப்படுகிற தடை சீக்கிரம் நீக்கப்பட வேண்டும். தடை செய்கிறவன் சாத்தான் என்றும், வலுசர்ப்பம் என்றும் சொல்லப்படுகிற பழைய பாம்பு. இப்பொழுது அவன் ஆகாய மண்டலத்தில், சிங்காசனத்தில் இருப்பிடத்தை ஸ்தாபித்து பூமியில் அவனுக்கு கீழ்ப்படிகிற மனிதர்கள் மேல் ஆளுகை செய்து வருகிறான் [எபே. 2:2].

அவன் முன்னொருமுறை பரலோகத்திலிருந்து கீழே தள்ளப்பட்டான்; அது முதற்கொண்டு மத்திய ஆகாயத்திலே தன் ஆளுகையை ஸ்தாபித்து அங்கேயிருந்து அவன் பூமியின்மேல் ஆளுகை செய்து வருகிறான் மத்திய ஆகாயத்திலிருந்தும் அவன் தள்ளப்பட போகிறான் (வெளி 12:7-12). இந்த சம்பவம் அவன் பூமியிலே விழ தள்ளப்படுகிற சம்பவமாகும். தான் பூமியிலே விழத்தள்ளப்பட்டதை அறிந்து தனக்கு பதிலாக தன்னுடைய பிரதிநிதியை பூமிக்கு அனுப்புகிறான் அவன்தான் அந்திகிறிஸ்து அந்திகிறிஸ்துவுக்கு சாத்தான், வலுசர்ப்பமானது தன் பலத்தையும், சிங்காசனத்தையும் கொடுப்பான் என்று வாசிக்கிறோம் [வெளி 13:1,2] அவன் தான் பாவ மனுஷனாகிய மிருகம் என்று சொல்லப்படுகிற அந்திகிறிஸ்து.

அந்திகிறிஸ்து வெளிப்பட்டாலொழிய கிறிஸ்துவினுடைய அந்த நாள் வராது [2 தெச. 2:3,7 8]. அந்திகிறிஸ்து வெளிப்படுவதற்கு முன்பு வெளி. 12:5 ம் வசனத்து சம்பவம் நிகழவேண்டும். அந்த பிள்ளை தேவனிடத்திற்கும், தேவனுடைய சிங்காசனத்தினிடத்திற்கும் எடுத்துக் கொள்ளப்பட்டபின்பு வானத்தில் யுத்தம் உண்டாகி தடை செய்கிறவனாகிய வலுசர்ப்பம் பூமியிலே தள்ளப்படுவான [வெளி. 12:5-10]

இப்படி சாத்தான் வான மண்டலத்திலிருந்து பூமியின் கீழ் தள்ளப்படும் சம்பவத்திற்கு பின்பே அந்திகிறிஸ்து வெளிப்படுவான் சபையானது சிறிது காலம் உபத்திரவக் காலத்துக்குள் கடந்துபோகும்; கிறிஸ்துவின் வருகை இருக்கும்; சபை எடுத்துக் கொள்ளப்படும் (வெளி. 12:13-17). கிறிஸ்துவின் வருகையில், இரண்டாம் பாகத்தில் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவும், தேவனும் பகிரங்கமாக பூமியிலே இறங்கி வருவார்கள். எல்லாருடைய கண்களும் அதைக் காணும்; விசேஷமாக யூதர்கள் அதை காண்பார்கள் தாங்கள் குத்தினவரை நோக்கிப் பார்த்து புலம்புவார்கள் [சகரி. 14:4 6; வெளி. 1:7].

இயேசுகிறிஸ்துவினுடைய பகிரங்க வருகையின்போது பழைய, புதிய ஏற்பாட்டு பரிசுத்தவான்களும், உபத்திரவ காலத்தில் மிருகத்தையாவது அதனுடைய சொரூபத்தையாவது வணங்காதவர்களும் அவன் முத்திரையை தரித்துக்கொள்ள மறுத்து அதனால் கொலை செய்யப்பட்ட ஆத்துமாக்களும், புதிய ஏற்பாட்டு பரிசுத்தவான்களோடுகூட பழைய ஏற்பாட்டு பரிசுத்தவான்களும் உயிரோடே எழுப்பப்பட்டு அவர்களோடுகூட சேர்ந்து இந்த பூமிக்கு

வருவார்கள். இப்பொழுது முதலாம் உயிர்த்தெழுதல் நிறைவேறுகிறது (வெளி. 20:4-6).

அந்நாட்களில் அந்திகிறிஸ்து யூதர்களோடுகூட ஒரு உடன்படிக்கை பண்ணி தேவாலயத்தை கட்டி முடித்திருப்பான். பின்பு தன்னையே தேவன்போல் காண்பித்து, தன்னை வணங்கும்படியாய் சொல்லுவான். அப்பொழுது யூதர்கள் அவனை எதிர்ப்பார்கள். அப்பொழுது அந்திகிறிஸ்து தன்னுடைய சேனைகளையெல்லாம் திரட்டிக்கொண்டு, யூதர்களை அழிக்கும்படியாக எருசலேம் பட்டணத்தைச் சூழ்ந்துகொண்டு அதை அழிக்க எத்தனிக்கும்போது கர்த்தராகிய இயேசுகிறிஸ்து, தம்முடைய பரிசுத்தவான்களோடும், சேனைகளோடும், தூதர்களோடும் பூமியிலே இறங்கி வருவார்.

அவருடைய பாதங்கள் ஒலிவ மலையின்மேல் நிற்கும். "என் தேவனாகிய கர்த்தர் வருவார், தேவரீரோடே எல்லா பரிசுத்தவான்களும் வருவார்கள்" [சகரி. 14:4 6; வெளி. 19:11,16,] அர்மெகதோனிலே யுத்தம் நடைபெறும். அந்திகிறிஸ்துவும், அவனுடைய சேனைகளும் தோல்வி அடைவார்கள். அந்திகிறிஸ்துவும், அவனுக்கு பிரச்சாரக்காரனாயிருந்து கிரியை செய்த கள்ளத்தீர்க்கதரிசியாகிய மிருகமும் பிடிக்கப்பட்டு அக்கினியும், கந்தகமும் எரிகிற நரகத்திலே தள்ளப்படுவார்கள் [வெளி. 19:19-21]. வலுசர்ப்பம் பிடிக்கப்பட்டு, அவன் தள்ளப்பட்டு ஆயிரவருஷம் அவன் கட்டப்பட்டு, பாதளத்தில் தள்ளி அடைக்கப்பட்டிருப்பான். பூமியிலே இயேசுகிறிஸ்துவினுடைய ஆயிரவருஷ அரசாட்சி ஸ்தாபிக்கப்படும். பரிசுத்தவான்கள் எல்லாரும் களிகூறுவார்கள். கிறிஸ்துவோடு கூட அவர்கள் பூமியிலே ஆளுகை செய்வார்கள்.

இந்த பூமி மனிதனுக்காக இதை ஆண்டு கொள்ளும்படி தேவன் அநுக்கிரகித்த அந்த ஆளுகை ஸ்தாபிக்கப்படும். இயேசு கிறிஸ்து சக்கரவர்த்தியாய் எருசலேமில் இருந்து உலகமுழுவதையும் ஆளுகை செய்வார். தேவனுடைய பரிசுத்தவான்கள் அங்காங்கு பட்டணங்களிலேயும் ஆளுகையிலிருப்பார்கள். "நல்லது உண்மையும் உத்தமமுள்ள ஊழியக்காரனே கொஞ்சத்தில் உண்மையுள்ளவனாயிருந்தாய் இதோ அநேகத்தின் மேல் அதிகாரியிரு" என்று இயேசுவானவர் சொன்ன வார்த்தை நிறைவேறும். "இதோ ஐந்து பட்டணத்துக்கு அதிகாரியாயிரு, பத்து பட்டணத்துக்கு அதிகாரியாயிரு" என வாக்குகளும் அந்த மகத்துவமான ஆளுகை பரிசுத்தவான்களுக்கு ஒப்புக்கொடுக்கப்படும் (தானி. 7:13,14,27,21; மத். 25,20-23; 19: 16-21; வெளி. 20:4-6; சங். 149:5-9).

இந்த ஆயிரவருஷமும கிரியைசெய்யக்கூடாதபடி வலுசர்ப்பமானவன் பாதாளத்துக்குதள்ளி அடைக்கப்படுவான். இயேசுகிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகையில், இரண்டாம்பாகம் மனுமக்களில் எல்லோரும் விரும்பிய சுபிட்சமான வாழ்வு, ஆசீர்வாதம், சாபம் நீங்கிய அநுக்கிரகம், நீதி, நேர்மை, நியாயம், சமத்துவம், ஒழுக்கம் இந்த பூமியிலே காணப்படும் எங்கும் செழிப்புண்டாயிருக்கும்; தேவனுடைய ஜனங்கள் ஆளுகையிலிருப்பார்கள். மற்றவர்கள் குடிகளாயிருந்து பணிபுரிவார்கள் இந்த ஆயிரவருஷ அரசாட்சியின் முடிவிலே நியாயத்தீர்ப்பு உண்டாகும்.

[தொடரும்]

"இதோ சீக்கிரமாய் வருகிறேன்; அவனவனுடைய கிரியைகளின்படி அவனவனுக்கு நான் அளிக்கும் பலன் என்னோடே கூட வருகிறது" [வெளி. 22:12].

# திருச்சபை

(தொடர்ச்சி)

உலக சரித்திரத்தில் திருச்சபை ஒரு முக்கியமான பதிவை ஏற்படுத்தியுள்ளது நற்செய்தி எவ்வாறு கல்யாண வாழ்க்கையைப் புதுப்பித்து, பெண்களின் நிலையை உயர்த்தியுள்ளது; அடிமைத்தளையிலிருந்து விடுதலையாக்கி விடுகிறது சமுதாயத்தின் பல்வேறு பிரிவுகளையுடைய மக்களுள் சமத்துவத்தை உண்டாக்கி நீதியை நிலைநாட்டியுள்ளது. பல்வேறு நாடுகள், இனங்களுக்கு நடுவே இருந்த தடுப்புச் சுவர்களைத் தகர்த்து எறிந்துவிட்டு, சகோதரத்துவத்துக்கும் அன்புக்கும் வழிவகுத்துள்ளது என்பதை சிந்தித்துப் பார்க்கவும் இக்கிரியைகளில் காணும் குறைகள் மனிதனுடைய உள்ளத்தில் இறையாட்சி இன்னும் ஆழ்ந்து பதியவில்லை என்பதைத்தான் எடுத்துக் காட்டுகிறது. ஆனால் இது இறையாட்சியின் குறைவல்ல, நற்செய்தியின் மூலமாய் உண்டான ஒழுக்க நெறிகள், சமுதாயம், அரசியலில், இந்தியாவில் புரட்சிகரமான மாற்றத்தை உண்டாக்கியிருக்கிறது. இவைகள் பழைய பாரம்பரிய பழக்க, வழக்கம் சித்தாந்தங்களை பெருமளவிற்கு மாற்றியிருக்கிறது. மாறுபாடையும்

காரணம் கிறிஸ்தவம், இந்து மத சீர்திருத்தம் தத்துவத்தின் பிரகாரம் ஆக முடியாது மேல் நாட்டு நாகரீக பண்பை கடைப்பிடித்தே அவர்கள் இந்த மாற்றத்தைக் கொண்டுவருகிறார்கள் அது ஐரோப்பியாவில் உண்டான பண்பாடாகும். அந்த பண்பாடு கிறிஸ்தவ நிலத்தில் விளைந்ததாகும். ஆனால் இது மேல் நாட்டு பண்பாடு என்று சொல்ல அவர்கள் விரும்பாததினால் தாங்கள் பிரஞ்சு புரட்சியிலிருந்து கற்றுக்கொண்டோம் என்று சொல்லுகிறார்கள். நற்செய்தியோடு கொண்ட தொடர்பினால் தான் புரட்சிகள் உண்டாயிற்று. அதினால் மக்கள் பிரஞ்சு புரட்சியைத் தொடர்ந்து சுயஉரிமை உண்டாயிற்று

இரட்சிப்பைப்பற்றிய கிறிஸ்தவ செய்தி முழுவதும் கிறிஸ்தவ சமயத்தின் செய்தியாகும். ஏனெனில் இரட்சிப்பு என்னவெனில் மனிதன் கடவுளோடு கொண்டுள்ள நேர்மையான உறவை மீண்டும் ஏற்படுத்துவதே அரும். ஆனால் கடவுளோடு கொள்ளும் தவறான உறவு மனித உறவில் அனைத்தையும் தீமையாக்கிப் போடுவதைப் போன்று இது இந்தியாவில், விசேஷமாக இந்தியாவின் தென்பாகத்தில், ஏன் இந்தியா முழுவதும் இந்துமத வளர்ச்சியினால் உண்டாயிருக்கிற ஜாதி வெறிகளும், கலகங்களும், கொலைகளும், பகைமைகளையும் பார்க்கிறோம்.

கிறிஸ்தவம் ஒன்றே இறையாட்சியை உலகத்தில் கொண்டு வந்திருக்கின்றது, கொண்டு வரும். இந்த புதிய ஒழுங்கு புதிய உடன்படிக்கையில் காண்பிக்கப்படுகிறது. நான் அவர்கள் அக்கிரமத்தை மன்னித்து அவர்கள் பாவங்களை நினையாதிருப்பேன் [எரே. 31:34]. கடவுளின் ஆட்சி மக்களின் மத்தியில் ஏற்படுத்தப்பட்டு அவர்களுடைய உள்ளங்களில் விரிவடைந்து வருகிறது. இது கிறிஸ்தவத்தினுடைய மேன்மையாகும். மனிதனால் மரணம் உண்டானது. கிறிஸ்துவினால் ஜீவன் உண்டாகிறது [ரோம. 5:12] கடவுள் நம்மை இருளின் அந்தகாரத்தினின்று விடுதலையாக்கி, தம்முடைய அன்பின் குமாரனுடைய இராஜ்ஜியத்தில் கொண்டு வந்து சேர்த்தார் (கொலோ. 1:13). கிறிஸ்து பிறப்பிலிருந்து ஒரு புது யுகம் உலகில் தோன்றியிருக்கிறது. இதை யாரும் மறுக்க முடியாது. இயேசுகிறிஸ்துவின் சர்வலோக முக்கியத்துவம் இங்கே காணப்படுகிறது

## திருச்சபை-:

இயேசுவின் போதனையில், உண்மை அப்போஸ்தலர்களுடைய நூல்களில்

அதனை அதிகமாக நாம் கடவுளுடைய இராஜ்யம் என்று பார்ப்பதில்லை. நற்செய்தி நூல்களில் 127 தடவை இந்த வார்த்தை வருகிறது. ஆனால் திருச்சபை என்று இரண்டு இடங்களில் மாத்திரம் வருகிறது (மத் 16:18; 18:17). புதிய ஏற்பாடு நூல்களில் இறையாட்சி என்பது 32 தடவை மட்டும் வருகிறது. ஆனால் திருச்சபை என்ற சொல் 110 தடவை வருகிறது. இந்த வெளிப்படையான முரண்பாடுகள் இருப்பினும் இரண்டு கருத்துக்களும் ஒன்றே என்றும், அது இயேசுவை மையமாகக் கொண்ட கருத்துக்கு. அப்போஸ்தலன் தனது சொந்த புதிய கருத்துக்களைப் புகுத்தினார் என்று நாம் எண்ணவேண்டாம். திருச்சபையைப் பற்றி இயேசு அருளின போதனை உயர்ந்த மறையாகிய மத். 16:18 உண்மையைக் காண்பிக்கிறது.

பல்வேறு பிரச்சனைகள் இருந்தபோதும் இயேசு விதையை ஊன்றினார். அதிலிருந்து பின்னல் சபை வளர்ந்துள்ளது என்று அறியலாம். அவர் திருச்சபையைப் பற்றிக் கண்ட காட்சி, அதை நான் இப்பொழுது அறிவிக்கப்போகிறதில்லை. ஆனால் அவர் தம்மைத்தாமே மேசியா என அறிந்தார் என்பது தர்க்கத்திற்கு இடமில்லாமல் நிரூபணமாயிற்று. எனவே மேசியா தாம் நிலைக்கத்தக்க மேசியாவின் ஜனங்களை இருக்கவேண்டுமென்பதை அறிந்திருப்பார். இயேசு வேண்டுமென்றே சீஷர்கள் குழு ஒன்றைக் கூட்டி கடவுளின் ஜனங்களுக்கு தலைமை தாங்க பன்னிரு சீஷர்களை ஏற்படுத்தினார். அதே சமயத்தில் அவருடைய இறையாட்சியின் கருவியாகவும் நியமித்தார். இவ்வுட்கருவிலிருந்து திருச்சபை வளர்ந்தோங்கியுள்ளது. எனவே திருச்சபையை இறையாட்சியுடன் இணைக்கவும் முடியாது, பிரித்து விடவும் முடியாது. இறையாட்சி திருச்சபையைக் காட்டிலும் பெரிதும் விசாலமுமான ஒன்றாகும். ஆனால் திருச்சபை மண்ணுலகில் இறையாட்சி வரவும், இவ்வுலகில் வளர்ந்து பெருகும் கருவியாகத் திகழ்கின்றது.

[தொடரும்]

✶ ✶

"தேவன் தமது சித்தத்தின்படி, அவயவங்கள் ஒவ்வொன்றையும் சரீரத்திலே வைத்தார்" (1 கொரி. 12:18).

✶ ✶

# அந்திரேயாக்கள் தேவை!

## [இன்றைய தேவை அந்திரேயாக்களே!] அல்லது (சாட்சிகள் தேவை)

இந்த உலகத்தில் எந்த ஒரு மனிதனும் பெயரும், புகழும் அடைய வேண்டுமானால், அவனைப்பற்றி எல்லாருக்கும்தெரியவரும்படியாக வானொலியிலும், தொலைகாட்சியிலும், செய்தித்தாள்களிலும், புத்தகங்களிலும் பிரபல்யபடுத்துகிறதை நாம் பார்க்கிறோம். ஒரு பொருள் அதிகமாக மார்க்கெட்டிலே விற்கவேண்டுமானால் விளம்பரபடுத்துவது அவசியம். அதற்காக எத்தனையோ மக்கள் அயராது உழைக்கிறதை நாம் பார்க்கிறோம். அதேபோல நம்முடைய இறைவனாகிய இயேசுகிறிஸ்துவை பற்றி அறிவிக்கவும் அவர் புகழ்பரப்பவும் ஆட்கள் தேவை.

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இந்த உலகத்தில் அவதரித்த போது அவரை தேவனுடைய குமாரன் என்று சாட்சி கொடுத்து அறிமுகப்படுத்தியது யோவான்ஸ்நானகன் [யோவா. 1:15, 30-34]. அவர் இயேசுவை குறித்து சாட்சி கொடுக்க தேவனால் அனுப்பப்பட்டவராயிருந்தார் (யோவா. 1:6-8). யோவான்ஸ்நானகன் தன்னுடைய சீஷரில் இருவருக்கு இயேசுவை "இதோ உலகத்தின் பாவத்தை சுமந்து தீர்க்கிற தேவ ஆட்டுக்குட்டி" என்று அறிமுகப்படுத்தினவுடனே, அவர்கள் இயேசுவிற்கு பின் சென்றார்கள் [யோவா. 1:35-37]. அவர்களில் ஒருவர் அந்திரேயா, அவர் இயேசுவை தேவன் என்று கண்டவுடனே தன்னுடைய சகோதரனாகிய சீமோன் பேதுருவிடம் மேசியாவை [கிறிஸ்துவை] கண்டோம் என்று சொல்லி, அவனை இயேசுவினிடத்தில் கூட்டிக் கொண்டுவந்தார் (யோவா. 1:40-42).

பிரதான அப்போஸ்தலனாகிய பேதுரு இறைவனாகிய இயேசுவை கண்டு கொள்ளும்படி அந்திரேயா செய்த ஊழியம் போற்றத்தக்கது நம்முடைய கர்த்தராகிய இயேசுவை பற்றிய நற்செய்தி காட்டுத் தீ போல பரவும் வல்லமையுள்ளது. ஒரு காட்டில் ஒரு மூலையில் ஒரு செடியில் தீயை பற்ற வைத்தால் அந்த காடுமுழுவதும் எரிந்துவிடும். அப்படிப்போல சுவிசேஷம் ஒருவர் சொல்ல, ஒருவர் கேட்டு இப்படியே உலகம் எங்கும் பரவிக்கொண்டு வருகிறது. பெரிய வல்லமையான ஊழியக்காரர்களும் சாதாரண விசுவாசிகள் மூலமாக சத்தியத்தை கேட்டு இரட்சிக்கப்பட்டு கர்த்தரால் வல்லமையாக எடுத்து பயன்படுத்தபடுகிறார்கள்.

ஒருவனுடைய அனுபவ சாட்சியானது பிரசங்கத்தை காட்டிலும் வல்லமை உள்ளது. பிலிப்பு நாத்தான்வேலிடத்தில் "இயேசுவை கண்டேன், வந்துபார்" என்று சொல்லி அவரும் தேவனை கண்டு கொள்ளும்படி செய்ததை வாசிக்கிறோம் (யோ. 1:44-50). ஒருவருடைய அனுபவம் மற்றவர்களை எளிதில் கவரக்கூடியதாக இருக்கிறது. ஒருவர் ஒரு வாஷிங் மெசின் வாங்க வேண்டுமென்று விரும்புகிறார் என்று வைத்துக்கொள்ளுவோம், அவர் அந்த மெஷினை உபயோகப்படுத்துகிறவரிடம் விசாரிக்கிறார்: அந்த மனிதன் அந்த கம்பெனி மெஷின் நன்றாக இருக்கிறது, ரிப்பேரே ஆகவில்லை என்று சாட்சி சொன்னால், உடனே அதே மெஷினை வாங்குவதற்கு தூண்டப்படுவாரல்லவா? அப்படியே இயேசுவின் மூலமாக நன்மை பெற்றவர்களின் சாட்சி மற்றவர்களையும் அவர் பால் ஈர்த்துவிடும்.

தேவனே, அவரைப் பற்றி சாட்சி சொல்ல முடியாது [யோவா. 5:31-34]. அவரைப் பற்றி சாட்சி சொல்ல சாட்சிகள் தேவை. நான் தேவன் என்பதற்கு நீங்களே சாட்சிகள் என்று கர்த்தர் கூறுகிறார். நம்முடைய வாழ்க்கையில் இயேசுவைக் கண்டவர்கள், மற்றவர்களுக்கும் அறிவிக்க வேண்டும். தான் செய்த எல்லாவற்றையும் எனக்கு சொன்னார் என்று சாட்சி சொல்ல அந்த (சமாரிய) ஸ்திரீயினுடைய வார்த்தையினிமித்தம் அந்த ஊரிலுள்ள சமாரியரில் அநேகர் அவர்மேல் விசுவாசமுள்ளவர்களானார்கள் (யோவா. 4:39).

அற்புத அதிசயங்களை வாழ்க்கையில் அனுபவித்தவர்கள், தைரியமாய் பிறருக்கு அறிவிக்க வேண்டும். வேதபுரட்டர்கள் நிறைந்த இந்த நாட்களில் சாட்சி சொல்லும்போது உபதேசங்களைக் குறித்து வாக்குவாதம் பண்ணக்கூடாது "நான் குருடனாயிருந்தேன்; இப்போது காண்கிறேன்" இது ஒன்றுதான் எனக்கு தெரியும் ..

பிறவிக்குருடனுடைய கண்களை ஒருவன் திறந்தானென்று உலகமுண்டானது முதல் கேள்விப்பட்டதில்லையே, அவர் தேவனிடத்திலிருந்து வராதிருந்தால் ஒன்றும் செய்யமாட்டாரே [யோவா. 9:25-33] என்று

பிறவிக்குருடன் சாட்சியிட்டது போல. மேலான காரியங்களை சபைக்கு வந்து பாருங்கள் என்று அழைத்து வர வேண்டும். ஊழியர்கள் மட்டும்தான் சுவிசேஷம் அறிவிக்க வேண்டும் என்றல்ல; விசுவாசிகள் சுவிசேஷத்தை சாட்சியாக அறிவிக்க வேண்டும். குடும்பத்தினருக்கு, உற்றார், உறவினர்களுக்கு, நண்பர்கள், தெரிந்தவர்கள், அறிமுகமானவர்கள் அனைவருக்கும் நாம் சுவிசேஷத்தை அறிவிக்க கடமைப்பட்டிருக்கிறோம்.

அடிமையாக சிறைபிடிக்கப்பட்டுபோன இஸ்ரவேல் தேசத்து பணிப்பெண்ணின் சாட்சி மூலமாக, சீரியா தேசத்து படைத்தளபதி நாகமானின் குஷ்டரோகம் மாறினது, சீரியா தேசம் முழுவதும் இந்த இரட்சிப்பை கண்டது (2 இராஜா 5:1-4). அவளுடைய சாட்சி போற்றதகுந்தது எலிசா என்கிற தேவனுடைய மனுஷன் இருக்கிறார், அவரிடத்தில் போனால் குஷ்டரோகத்தை நீக்கிவிடுவார் என்றாள். இஸ்ரவேலிலே தீர்க்கதரிசி உண்டென்பதை அறிந்து கொள்ள வேண்டும் [2 இராஜா. 5:8] நாகமான் குஷ்டரோகம் நீங்கினது மட்டுமல்ல, அவன் மனம் திரும்பினான். "உமது அடியேன் இனி கர்த்தருக்கே அல்லாமல் அந்நிய தேவர்களுக்கு சர்வாங்க தகனத்தையும், பலியையும் செலுத்துவதில்லை" என்றான் [2 இராஜா. 5:17].

தேவனுடைய பிள்ளைகளே! பாவத்திலும், ரோகத்திலும், வியாதியிலும், பிசாசின் பிடியிலும் சிக்கி வேதனைபபடுகிற மக்களுக்கு தேவனைப்பற்றியும், தேவன் கிரியை செய்கிற திருச்சபையைப்பற்றியும்; தேவனால் அதிகாரப்படுத்தப்பட்டு அனுப்பப்பட்டுள்ள அப்போஸ்தலரும், தீர்க்கதரிசியுமான தேவ மனிதரைப்பற்றியும் பறைசாற்றுவது நம்முடைய கடமையல்லவா! "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்பது போல மற்றவர்களும் இரட்சிக்கப்பட நாம் பிரயாசப்படுவோமாக! அந்திரேயாவைப் போல, பிலிப்பை போல, பிறவிக்குருடனைப்போல, சமாரிய ஸ்திரீயைப் போல, நாகமானின் வேலைக்காரியைப் போல சாட்சி கொடுக்கதக்க ஆட்களையே தேவன் தேடிக்கொண்டிருக்கிறார், நீங்கள் ஆயத்தமா? அவரைக் குறித்து கேள்விப்படாதவர்கள் எப்படி விசுவாசிப்பார்கள்? சமாதானத்தைக் கூறி, நற்காரியங்களைக் சுவிசேஷமாய் அறிவிக்கிறவர்களுடைய பாதங்கள் எவ்வளவு அழகானவைகள... [ரோம. 10:14,15].

"ஆத்துமா ஆதாயம் செய்கிறவன் ஞானமுள்ளவன் நீதி. 11:30.

## பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Bro. எலிசா | Sis. எலிசபெத் | துரைச்சாமிபுரம் | 11-10-95 |

# உனக்காக நான் என்ன சொல்லி ஜெபிக்க?

கப்பர் நகூமில் நூற்றுக்கு அதிபதி ஒருவனுக்குப் பிரியமான வேலைக்காரன் வியாதிப்பட்டு மரண அவஸ்தியாக இருந்தான். இயேசுவானவர் வந்து குணமாக்க, வேண்டிக் கொள்ளும்படி யூதருடைய மூப்பரை அவரிடத்தில் அனுப்பினான். அவர்கள் இயேசுவினிடம் வந்து. "அந்த நூற்றுக்கு அதிபதி நம்முடைய ஜனத்தை நேசிக்கிறான், நமக்கு ஒரு ஜெப ஆலயத்தையும் கட்டினான், ஆகையால் அவனுக்கு நீர் இந்த தயவு செய்கிறதற்கு பாத்திரவானாக இருக்கிறான்" என்று சொல்லி அவரைக் கருத்தாய் வேண்டிக் கொண்டார்கள். அப்பொழுது இயேசு அவர்களுடனேப் போய் வேலைக்காரனை சுகப்படுத்திவிட்டார் (லூக். 7:1-10).

அநேகர் தேவ மனிதர்களிடம் வந்து ஐயா, எனக்காக ஜெபம் பண்ணுங்கள். எங்கள் வீட்டில் வியாதி நீங்க ஜெபம் பண்ணுங்கள், கடன் நீங்க ஜெபம் பண்ணுங்கள், பிரச்சனை நீங்க ஜெபம் பண்ணுங்கள், திருமணம் நடக்க ஜெபம் பண்ணுங்கள், சண்டை நீங்க ஜெபம் பண்ணுங்கள், இப்படி பற்பல ஜெபபட்டியல்களைக் கொடுப்பதுண்டு. உங்களுக்காக என்ன சொல்லி ஜெபம் பண்ண?

நீங்கள் இந்த தயவைப் பெற்றுக் கொள்ள எந்த விதத்தில் பாத்திரமாயிருக்கிறீர்கள் என்று சொல்லி ஜெபம் பண்ண? ஆண்டவரே இந்த ஐயா அல்லது சகோதரன், காயுவைப்போல சகோதரருக்கும் அந்நியருக்கும் அன்பு காட்டி உதவி செய்தது போல் சபைக்கு ஆதரவாய் இருக்கிறார்கள் ஆகவே இவர்கள் ஆத்துமா வாழ்கிறதுபோல் எல்லாவற்றிலும் வாழ்ந்து சுகமாக இருக்க வேண்டுகிறேன் என்று சொல்லி ஜெபிக்கவா? (3 யோ. 2) அல்லது ஆண்டவரே இந்த அம்மா அல்லது சகோதரி தபித்தாள் அம்மாவைப் போல் ஏராளமான நற்கிரியைகளை செய்திருக்கிறார்கள், தானதர்மங்களை செய்திருக்கிறார்கள், விதவைகள் அநேகரை காப்பாற்றி இருக்கிறார்கள், ஆகவே இந்த அற்புதச் செயலை இந்த அம்மா வீட்டிலே நடப்பிக்க வேண்டும் என்று சொல்லி ஜெபிக்கவா? (அப். 9: 36-41). அல்லது கர்த்தாவே, இவர்கள் பிலிப்பியரைப்போல் பரிசுத்தவான்கள் வறுமையாக இருக்கையில், தங்கள் குறைச்சலிலும் உதாரத்துவமாய் கொடுத்தார்களே, ஆகவே இவர்கள் வறுமையைப் போக்கி இவர்களை ஆசீர்வதிப்பீராக என்று சொல்லி ஜெபிக்கவா? [பிலி. 4:14-19]. உங்களுக்காக நான் என்ன சொல்லி ஜெபிக்க? தேவ தயவை நீங்கள் பெற்றுக் கொள்ள நீங்கள் எவ்விதத்திலும் பாத்திரவான்களாக இராதபட்சத்தில், உங்களுக்காக தேவ மனிதர்கள் ஜெபித்தால், கர்த்தர் நீ இந்த ஜனத்துக்காக விண்ணப்பம் பண்ண வேண்டாம், அவர்களுக்காக மன்றாடவும், கெஞ்சவும் வேண்டாம், அவர்கள் தங்கள் ஆபத்தினிமித்தம் என்னை நோக்கி கூப்பிடும்காலத்தில் நான் அவர்களைக் கேளாதிருப்பேன் என்று ஒருவேளை சொல்லி விடக்கூடுமே நான் என்ன செய்வேன். நீங்கள் தேவ தயவைப் பெற்றுக் கொள்ள பாத்திரவான்களாக நடந்து கொள்ளுங்கள், "உனக்காக நான் என்ன சொல்லி வேண்டிக் கொள்ள"

"உனக்கு நான் என்ன செய்யவேண்டும்? ராஜாவினிடத்திலாவது, சேனாபதியினிடத்திலாவது உனக்காக நான் பேசவேண்டிய காரியம் உண்டோ..." (2 ராஜா. 4:13)

கிறிஸ்மஸ் செய்தி:

# மனித அவதாரம்

விண்ணுநவானார்-ஆதி
மண்ணுருவானார்-ஏதும்
தன்னிகரில்லாத-ஜோதி
மண்ணுருவானார்.

இறைவன் மனுக்கோலம் பூண்ட வரலாறே கிறிஸ்மஸ் பண்டிகை. முன்னொரு காலத்தில் வட இந்தியாவில் அரசனொருவர் இருந்தார். அவர் தீவிர பக்தர். அவருடைய மந்திரியோ ஒரு இரகசிய கிறிஸ்தவர். ஒரு நாள் அரசன் மந்திரியிடம் இறைவன் யார் என்று கேட்டார். அப்பொழுது மந்திரி கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் அவதாரத்தைப்பற்றி சொன்னார். அரசன் அது எப்படி மனிதனை இரட்சிக்க இறைவனே வரவேண்டுமா? அவருடைய தூதர்களில் ஒருவனை அனுப்பினால்போதுமே! என்றான். மந்திரி எவ்வளவோ விளக்கியும் அரசன் ஏற்றுக் கொள்ளவில்லை.

இப்படியிருக்க ஓர் நாள் அரசன் நதியில் உலாவ சென்றான். அரசன் உல்லாசப் படகில் ஏறி நதியில் அங்குமிங்கும் நீர் தேக்கத்தில் உலாவிக் கொண்டிருந்தான்; மந்திரியும், சேனைத்தலைவனும் உடனிருந்தனர். சிலபடகுகள், போர்வீரர்கள் பாதுகாவலாக கூடவே சென்றனர். கரையோரத்தில் அநேக ஜனங்களும், சுவான்களும், நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர். அதன் முன்னால் ராஜகுமாரனை வளர்க்கிற செவிலித்தாயும் குழந்தையைக் கையில் தூக்கிக் கொண்டு விளையாட்டுக் காட்டிக் கொண்டிருந்தாள். அரசனும் தன்னுடைய மகனைப் பார்த்து கையசைத்தார்.

இப்படி இருக்கையில் திடீரென்று அந்த ஆயா அரசனுடைய குழந்தையைத் தூக்கி, தண்ணீரின் ஆழத்திலே எறிந்தாள். அதைப்பார்த்த அரசன் அதிர்ச்சியடைந்து வேகமாய் தண்ணீரில் பாய்ந்தான். உடனே மந்திரியும், சேனாபதியும் போர்ச்சேவகரில் பலரும் கூட தண்ணீரில் பாய்ந்து அரசன் சென்ற திசையை நோக்கி வேகமாய் நீந்தினர்; அரசன் நீந்தி சென்று தன் குழந்தையைத் தூக்கினான். அது அசல் குழந்தையல்ல, அரச குழந்தையைப்போல் செய்யப்பட்டிருந்த பொம்மை; அதை மந்திரி வாங்கிக் கொண்டான்; அரசன் திகைத்தான்; எல்லோரும் கரையேறினார்கள்.

மந்திரி, ராஜாவிடம் வினவினார், என்ன மஹாராஜா தண்ணீரில் பாய்ந்து விட்டீர்கள்? நான் இருக்கிறேனே, நம்முடைய சேனாபதி ஆஜானுபவானாக இருக்கிறாரே அவருக்கு கட்டளையிட்டிருக்கலாமே, வீராதிவீரர்களும், தீராதிதீரர்களுமான நம்முடைய சேவகர்கள் இருக்கிறார்களே, அவர்களிடம் சொல்லி செய்திருக்கலாமே என்க; அரசன் என் மகனானதால் நான் தண்ணீரில் குதித்து விட்டேன் என்றார்.

அப்பொழுது மந்திரி பாருங்கள் நாமெல்லோரும் தேவனுடைய பிள்ளைகளானதால் தேவன் ஒரு தூதனுக்கு கட்டளையிடாமல், வேறுயாரையும் அனுப்பாமல் தாமே இவ்வுலகத்துக்கு வந்தார், நம்மை மீட்கும்படி என்றார். அரசன் மந்திரியின் விவேகமான ஏற்பாட்டையும், விவேகத்தையும் எண்ணி மகிழ்ந்து இயேசுகிறிஸ்துவை தன் சொந்த தெய்வமாக, ஆண்டவராக ஏற்றுக் கொண்டார். பாருங்கள் தேவனுடைய அன்பு, விழுந்துபோன தேவ தூதர்களை மீட்டு இரட்சிக்க ஏற்பாடு செய்யவில்லை. ஆபிரகாமின் மரபை ஏற்றுக் கொண்டு தம்முடைய சகோதரருக்கு ஒப்பாக வேண்டி மனிதனாய் இவ்வுலகத்திற்கு வந்தார்.

அதனால் நாம் தேவனுடைய சகோதரரும், சகோதரிகளுமாகிறோம். இறைவன்

நம்மைப்போல் மனிதனாய் வந்து நம்மை தெய்வ குடும்பத்தின் அங்கமாய், சகோதர, சகோதரிகளாக்கினார் அல்லேலூயா! அவர் நம்மை இரட்சிக்க வந்தார். இதோ உங்களுக்கு நற்செய்தியைச் சொல்லுகிறேன். கர்த்தராகிய கிறிஸ்து என்னும் இரட்சகர் உங்களுக்காக தாவீதின் ஊரிலே பிறந்திருக்கிறார்!! பிறந்த குழந்தையைத் தொழுது கொள்ளுங்கள்!!!

"....இதோ எல்லா ஜனத்துக்கும் மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கும் நற்செய்தியை உங்களுக்கு அறிவிக்கிறேன்" [லூக். 2:10].

# வேத பாடம் *[தொடர்ச்சி]*

## எண்ணாகமம்

### *எண் 23:11,12*

தேவ ஜனங்களை ஆசீர்வதிப்பதே தேவனுக்குப் பிரியம். தேவ ஜனங்கள் ஆசீர்வாதத்தைப் பெற வேண்டும். அவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்களாயிருப்பார்கள். அவர்களை யாரும் சபிக்கவோ, தாழ்த்திப்போடவோ முடியாது. அவர்களுடைய பாவங்களே அவர்களைத் தாழ்த்திப்போடும். அவர்கள் தேவனுடைய கற்பனைகளை மீறி நடந்தால் தேவன் அவர்களை தண்டிப்பார். ஆனால் முற்றிலுமாக கைவிடமாட்டார். பிலேயாம் இஸ்ரவேல் ஜனங்களை நோக்கிப்பார்த்தான் அப்பொழுது தேவ ஆவியானவர் அவர்கள் மேல் இறங்கி வந்தார் என்று நாம் வாசிக்கிறோம்.

எல்லா உண்மையான தீர்க்கதரிசிகளிலேயும் தேவ ஆவியானவர் இறங்குகிற விதமே, தேவ ஆவியானவர் இறங்கி வந்தார். பிலேயாம் ஒரு உண்மையான தீர்க்கதரிசியாயிருந்தான் என்று இதன் மூலம் அறிந்து கொள்ளுகிறோம். ஆனால் சிறிது நாட்களிலே அவன் பொருளாசையில் விழுந்து இஸ்ரவேல் ஜனங்களை விழுந்துபோகும்படியான துர் ஆலோசனை சொன்னான் என்பதையும், வேதாகமத்தின் மூலமாக நாம் அறிகிறோம்.

இங்கே நாம் பார்க்கின்ற இந்த சம்பவம் பிலேயாமுடைய மூன்றாவது தீர்க்கதரிசனமாகும்.

### *எண். 24:3,4*

பேயோரின் குமாரன் பிலேயாம் சொல்லுகிறதாவது கண் திறக்கப்பட்டவன் உரைக்கிறதாவது, சர்வ வல்லவரின் தரிசனத்தைக் கண்டு தாழவிழும்போது தேவன் அருளும் வார்த்தைகளைக் கேட்டு கண் திறக்கப்பட்டவன் விளம்புகிறதாவது என்று கூறப்பட்டுள்ளது. பிலேயாம் ஞானதிருஷ்டி அடைந்ததாய் நாம் இதன் மூலம் அறிகிறோம். ஆவிகுறிய பார்வை அவனுக்கு உண்டாயிற்று. உன்னதமானவர் அளித்த

அறிவை அறிந்து சர்வ வல்லவரின் தரிசனத்தைக் கண்டு தாழவிழும்போது கண் திறக்கப்பட்டவன் விளம்புகிறதாவது என்று (வச. 16)ல் எழுதப்பட்டுள்ளது. ஞானதிருஷ்டி அடைந்த சம்பவத்தை அப் 10 10; 22:17 ஆகிய வசனங்களில் [அப் பவுல்.] வாசிக்கிறோம்.

இஸ்ரவேலில் கூடாரத்தில் வரிசை வரிசையாக அமைக்கப்பட்டிருந்தது. அவைகள் பரவிப்போகிற ஆறுகளைப் போலவும், நதியோரத்திலுள்ள தோட்டங்களைப் போலவும்; கர்த்தர் நாட்டின சந்தனமரங்களைப் போலவும், தண்ணீர் அருகே உள்ள கேதுரு விருட்சங்களைப் போலவும் இருக்கிறது.

கர்த்தர் தம்முடைய ஜனங்களை தமக்கென்று இந்த உலகத்திலே ஸ்தாபிக்கிறார். அவர்களை தண்ணீர் ஓரத்தில் உள்ளவர்களாக கூறப்பட்டுள்ளது. இதன் அர்த்தம் என்னவென்றால் அவர்கள் எப்பொழுதும் கனி கொடுக்கிற வாழ்க்கை உடையவர்களாக காணப்படுவார்கள். "நீதிமான் பனையைப்போல் செழித்து, லீபனோனிலுள்ள கேதுருவைப் போல் வளருவான்" என்று சங். 92:12ல் சொல்லப்பட்டுள்ளது. சங். 104:16; ஏசா 60:21 நாம் வாசிக்கும்பொழுது இறைவன் தமது ஜனங்களை இவ்விதமாக தமக்கென்று இந்த உலகத்திலே ஸ்தாபித்திருக்கிறார் என்று வாசிக்கிறோம்.

இறைவனுடைய மக்கள் இறைவன் தமக்கு சாட்சியாக இருக்கும்படியாக அவரால் நாட்டப்பட்டவர்களாயிருக்கிறார்கள். அவர் மகிமைப்படும்படி அவருடைய கரத்தின் கிரியைகளாயிருக்கிறார்கள் [ஏசா. 60:21; எரே. 51:18; 17:18]. அவர்களுடைய நீர்ச்சால்களிலிருந்து தண்ணீர் பாயும்; அவர்கள் வித்து திரளான தண்ணீர்களில் பரவும்; அவர்களுடைய ராஜா ஆகாகைப் பார்க்கிலும் எந்த அரசனைக் காட்டிலும் மேன்மையாய்; கர்த்தராகிய இயேசுகிறிஸ்து சக்கரவர்த்தியாய் உலகத்தை ஆளுகை செய்யப் போகிறார்; அவர்கள் ராஜ்ஜியம் மேன்மையடையும்; தேவனுடைய ஜனங்களுடைய ஆளுகை உலகில் ஸ்தாபிக்கப்படும் என்று பிலேயாம் சொல்லுகிறார்.

பிலேயாம் இந்த தீர்க்கதரிசனத்தைச் சொல்லும்பொழுது இஸ்ரவேலர்களுக்கு ராஜாவாக எழும்பப்போகிற மேசியாவைப்பற்றி இந்த தீர்க்கதரிசனம் சொல்லுகிறதாகப் பார்க்கிறோம். இது நிச்சயமாக நடைபெறப்போகிற சம்பவம் தானியேல் தீர்க்கதரிசனத்தில் சொல்லியிருக்கிறார். தேவன் இஸ்ரவேல் ஜனங்களை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணின சம்பவம் (வச 7.8). தேவன் இஸ்ரவேல் ஜனங்களை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினார்; காண்டாமிருகத்துக்கொத்த பெலன் அவர்களுக்கு உண்டு; அவர்கள் தங்கள் சத்துருக்களாகிய ஜாதிகளைப் பட்சித்து, அவர்கள் எலும்புகளை நொறுக்கி, அவர்களைத் தங்கள் அம்புகளாலே எய்வார்கள். கர்த்தர் தமது ஜனங்களை விடுதலையாக்கி அயத்தப்படுத்தினால் புறஜாதிகளை அடக்கி ஆள்வார்கள். சிங்கம்போலவும், துஷ்ட சிங்கம்போலவும் மடங்கிப் படுத்துக் கொண்டிருக்கிறார்கள்; அவர்களை எழுப்புகிறவன் யார்? உங்களை ஆசீர்வதிக்கிறவன் ஆசீர்வதிக்கப்பட்டவன், உங்களை சபிக்கிறவன் சபிக்கப்பட்டவன் என்றான் என்பதாம்.

தேவனுடைய ஜனங்களை ஆசீர்வதிக்கிறதினால் ஆசீர்வாதமும், அவர்கள் சபிக்கிறதினால் சாபமும் உலகத்தில் நிகழும். மெய்யாய் தேவனுடைய உண்மையான ஊழியர்கள் கெட்டுப்போகிறவர்களுக்கு மரணவாசனையாகவும், இரட்சிக்கப்படுகிறவர்களுக்கு ஜீவ வாசனையாகவும் இருக்கிறார்கள். அவர்களை கண்டவர்கள் கனம் செலுத்தி அவர்களுடைய வார்த்தைக்கு கீழ்ப்படிந்தால் இரட்சிப்பும், ஆசீர்வாதமும் பெறுவர்.

அவர்களை எதிர்த்து, தூஷித்து, அவர்களுக்கு விரோதமாய் கிரியை நடப்பிக்கிறவர்கள் ஆத்தும மரணத்தையும், சரீர மரணத்தையும் அடைவார்கள் [2 கொரி. 2:14-17].

தேவ ஜனங்களை ஆசீர்வதிக்கிறவர்கள் ஆசீர்வதிக்கப்படுவார்கள், சபிக்கிறவர்கள் சபிக்கப்படுவார்கள். ஆபிரகாமுக்கு தேவன் அருளிய வாக்குத்தத்தத்தில் இவ்வாறு வாக்கருளினார். உன்னை ஆசீர்வதிக்கிறவர்களை ஆசீர்வதிப்பேன்; உன்னை சபிக்கிறவர்களை சபிப்பேன் என்று தேவன் மிகவும் திட்டமாகச் சொல்லியிருக்கிறார் (ஆதி. 12:3). இந்த நாட்களில் அது நிறைவேறுகிறதை நாம் பார்க்கிறோம். மெய்யான சபையை எதிர்த்ததினால் சிதறிப்போன சில கூட்டங்கள் உண்டு; தண்டிக்கப்பட்டவர்கள் உண்டு. சமாதானத்தை இழந்துபோனவர்கள் உண்டு; ஆவிக்குரிய பிரகாரம் மாத்திரமல்ல, சரீரப்பிரகாரமுமாக செத்துப்போனவர்கள் உண்டு; இதை நாம் அனுபவத்தில் காண்கிறோம்.

கடவுளுடைய ஜனங்கள் தேவனுக்கு உண்மையாய் இருந்து அவரை மகிமைப்படுத்திக் கொண்டிருக்க வேண்டும். மற்றபடி எந்த துன்மார்க்கர்களுடைய சதிமோசங்களுக்கும் பயப்பட வேண்டிய தேவையில்லை. கர்த்தர் தம்முடைய ஜனங்களை உயர்த்துகிறார். யாரும் தாழ்த்த முடியாது. கர்த்தர் ஒருவனை தாழ்த்தினால் யாரும் உயர்த்த முடியாது. ஆனால் இஸ்ரவேல் ஜனங்கள் வல்லமையுள்ள ஒரு இராஜ்ஜியமாக எழும்பப்போகிறார்கள். இஸ்ரவேலில் பின்னால் வரப்போகிற ராஜாவைக் குறித்து இங்கு சொல்லப்பட்ட சம்பவம் நிகழ்ந்து முடியும். மேசியாவினுடைய அரசாட்சி ஸ்தாபிக்கப்படும். உலகமுழுவதிலும் தேவனுடைய ஜனங்கள் வல்லமையுடையவர்களாகக் காணப்படுவார்கள்.

பிலேயாமுடைய தீர்க்கதரிசனம் மிகவும் திட்டமாயுள்ளது. அவைகள் நிகழ்கின்றன, நிகழப்போகின்றன. இதைத் தொடர்ந்து வசனம் 10 முதல் 14 முடிய பாலாக் பிலேயாமிடம் கோப மூண்டவனாகி, கையோடே கைதட்டி, பிலேயாமை நோக்கி: என் சத்துருக்களைச் சபிக்க உன்னை அழைத்தனுப்பினேன். நீயோ இந்த மூன்று முறையும் அவர்களை ஆசீர்வதிக்கவே ஆசீர்வதித்தாய் என்று சொல்லுகிறான்.

கடவுளால் ஆசீர்வதிக்கிறவர்கள்; கடவுளால் உயர்த்தப்படுகிறவர்கள், உயர்த்தப்படவே செய்வார்கள்.

## எண் 24:12-15

அப்பொழுது பிலேயாம் பாலாக்கை நோக்கி: "பாலாக் எனக்குத் தன் வீடு நிறைய வெள்ளியும், பொன்னும் கொடுத்தாலும், நான் என் மனதாய் நன்மையாகிலும், தீமையாகிலும் செய்கிறதற்குக் கர்த்தரின் கட்டளையை மீறக்கூடாது; கர்த்தர் சொல்வதையே சொல்வேன் என்று, நீர் என்னிடத்திற்கு அனுப்பின ஸ்தானாபதிகளிடத்தில் நான் சொல்லவில்லையா? இதோ நான் என் ஜனத்தாரிடத்திற்குப் போகிறேன்: பிற்காலத்திலே இந்த ஜனங்கள் உம்முடைய ஜனங்களுக்குச் செய்வது இன்னதென்று உமக்குத் தெரிவிப்பேன் வாரும் என்று சொல்லி, அவன் தன் வாக்கியத்தை எடுத்துரைத்து பேயோரின் குமாரனாகிய பிலேயாம் சொல்லுகிறதாவது, கண் திறக்கப்பட்டவன் உரைக்கிறதாவது" என்று மறுபடியும் தீர்க்கதரிசனம் சொல்லுகிறான்.

பிலேயாமின் நான்காவது தீர்க்கதரிசனம் எண். 24:14-19 வரையில் எழுதப்பட்டிருக்கிறது. மேசியாவை நான் திட்டமாகத் தரிசிப்பேன் என்று சொல்லுகிறான். இஸ்ரவேலிலிருந்து, யாக்கோபிலிருந்து ஒரு நட்சத்திரம் உதிக்கும்; ஒரு செங்கோல் இஸ்ரவேலிலிருந்து

எழும்பும்; அது எல்லா புறஜாதிகளையும் தள்ளிப்போட்டு ஆட்சிக்கு வரும். யாக்கோபிலிருந்து தோன்றும் ஒருவர் ஆளுகை செய்வார்; பட்டணங்களில் மீதியானவர்களை அழிப்பார் என்றான். தேவ ஜனங்களுடைய ஒரே நம்பிக்கை கர்த்தராகிய இயேசுவினுடைய இரண்டாம் வருகையும் அதைத் தொடர்ந்து நடக்கும் சம்பவங்களும். 1000 வருஷ அரசாட்சி பூமியில் நிலைநாட்டப்படுவது. தேவ ஜனங்கள் இந்த உலகத்தின் மேல் ஆளுகையில் இருப்பார்கள் என்றும்; மற்றவர்கள் பணிபுரிவார்கள். ஆளப்படுவார்கள் என்றும்; உலகமுழுவதும் தேவ இராஜ்யம் ஸ்தாபிக்கப்படும் என்றும் அறிந்து கொள்ளுகிறோம்.

யாக்கோபிலிருந்து ஓர் நட்சத்திரம் உதிக்கும் என்ற இந்த தீர்க்கதரிசனத்தின் பிரகாரம் கர்த்தராகிய இயேசுகிறிஸ்து குழந்தையாய் இந்த உலகத்திற்கு வந்திருந்த பொழுது வான சாஸ்திரிகள் கணித்து இஸ்ரவேலருக்கு ராஜாவாக ஒருவர் பிறந்திருக்கிறார் என்று இந்த தீர்க்கதரிசனத்தின் பிரகாரம் கண்டுபிடித்து கிழக்கிலிருந்து பிரயாணப்பட்டு ஒன்றரை வருஷமாக பிரயாணப்பட்டு வந்து குழந்தையை கண்டு, அதைத் தொழுது கொண்டு அதற்குக் காணிக்கை செலுத்தினார்கள் என்று வாசிக்கிறோம் (மத். 2:11) மீதியானவைகளும் நிறைவேறும் காலம் சமீபமாயிருக்கிறது.

(தொடரும்)

---

"சமாதான கர்த்தர் வருமளவும் செங்கோல் யூதாவை விட்டு நீங்குவதும் இல்லை..." [ஆதி. 49:10]

---

## ஞானஸ்நானம் பெற்று திருச்சபையோடு சேர்த்து கொள்ளப் பட்டவர்கள்:-

| நாள் | கிளை | நபர்கள் |
|---|---|---|
| 29-10-95 | பம்பாய் | 04 |
| 24-10-95 | வள்ளியூர் | 29 |

# ஜாதி
## (People, Nation)

1. ஒரு இராஜ்ஜியத்தார் (வெளி. 7:8).

2. அஞ்ஞானிகள் (சங். 117:1; ஏசா 55:5).

3. மிருக ஜீவன்கள் (ஆதி. 1:24;7:14).

இந்து தேசத்திலுள்ள வேற்றுமை (Caste) போல எகிப்தியர், பார்ஸியர், கிரேக்கர் முதலிய அஞ்ஞானிகளுக்குள்ளும் வேற்றுமை இருந்தது. இத்தேசத்தில் பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் என்ற நாலு விதமான வருணமல்லாமல் வேறே ஜாதிகளுமுண்டு. இந்த விஷயம் இந்து மதத்தைச் சேர்ந்த தென்பதற்குச் சந்தேகமில்லை. ஆகையினாலே ஞானஸ்நானம் பெறுகிற கிறிஸ்தவர்கள் அஞ்ஞானச் சடங்கு ஒழுக்க முதலிய சைவசமயத்துக்கும் வைஷ்ணவ சமயத்துக்குமுரிய விபூதி நாமமுதலியவைகளைத் தள்ளுகிறது போல, வீணான ஜாதி வேற்றுமைகளையும் தள்ளுகிறது; மெய்யுணர்வுக்கு இலட்சணமாயிருக்கும்.

ஜாதி வித்தியாசமும், குடும்பப்பெயரும் ஒன்றல்ல அதெப்படியெனில் இந்துக்களுக்குள்ளிருக்கிற நாலு ஜாதிகளுக்குள்ளும் [வர்ணம்] பல ஜாதி பிரிவுகள் உண்டு. மேலும் திரவியம், உத்தியோகம், வம்சம் முதலியவைகளினாலும் வித்தியாசமுண்டு. ஜாதி வேற்றுமை அஞ்ஞானத்திற்கு அஸ்திபாரமானபடியால் கிறிஸ்தவர்கள் இந்த அஸ்திபாரத்தை பலப்படுத்தவல்ல, இதைப் போக்கப் பிரயாசைப்படவேண்டும் தேசத்திற்கு இந்த ஜாதியினாலே கேட்டேயொழிய நன்மை ஒன்றுமில்லை.

எப்படியெனில் இது மேல் ஜாதிகளுக்குள்ளே அகந்தையான பெருமையையும், கீழ்ச் ஜாதிகளுக்குள்ளே அறிவீனத்தையும், அடிமைத்தனத்தையும் உண்டுபண்ணுகிறது மன்றி, பற்பல ஜாதிகளுக்குள்ளும் எப்போதும் பகைமையையும், பொறாமையையும், சண்டைகளையும் உண்டுபண்ணுகிறது. கிறிஸ்துவுக்காக நிந்திக்கப்படுகிற கிறிஸ்தவர்கள் வெட்கமில்லாமல் தங்களுக்குள் வேற்றுமை செய்வானேன்? அன்பும், தாழ்மையும் கிறிஸ்தவனுக்கு இரண்டு கால்கள். ஜாதி வித்தியாசமென்கிற விலங்கு விசுவாசமென்கிற வழியிலே அவைகளைச் செல்லவிடாது. ஜாதி வித்தியாசம் எங்கே உண்டோ அங்கே சுயாதீனமில்லை; எங்கே சுயாதீனமில்லையோ அங்கே கர்த்தருடைய ஆவியுமில்லை.

ஜாதி வித்தியாசத்தைக் கைக்கொள்ளுகிறதினால் பிரயோஜனமென்ன? அது தேவ பக்திக்கு உதவியாயிருக்குமோ? கிறிஸ்துவாகிய தலையைப்பற்றியிருக்கிற அவயவங்கள் சம்பந்தப்பட்டதாயிருக்க வேண்டியதல்லவா? [கொலோ. 3:11,14,15] கிறிஸ்துவுக்குள்ளிருக்கிற ஐக்கியத்தைப் பிரிக்கக்கூடுமா? காண்கிற சகோதரனைச் சிநேகியாதவன் காணப்படாத கர்த்தரைசிநேகிக்கக் கூடுமா? [1 யோவா. 3:14,18; பிலி. 2:2-5] அழிந்துபோகிற காரியங்களாகிய புசிப்பிலும், குடிப்பிலும், விவாக சம்பந்தத்திலும் வித்தியாசம் பண்ணுகிறவன் ஆவியின் சம்பந்தக்துக்கடுத்த ஞானக்காரியங்களில் ஒருமித்திருப்பானா? [ரோம. 14:17] ஒரு இராஜ்யம் தனக்குள் தானே பிரிந்திருந்தால் நிலை நிற்கக் கூடுமா [மத். 12:25].

கிறிஸ்து நமக்காக அவருடைய திவ்ய மகிமைகளை விட்டு வந்த போது நாம் பாவத்திலுண்டான ஜாதி வித்தியாசத்தை மேன்மையாய் பற்றிக் கொண்டிருப்போமா? அஞ்ஞானிகளென்னப்பட்டவர்கள் கூட இகழுகிற ஜாதிவித்தியாசத்தை நாம் மேன்மைப் படுத்தி இந்தியாவிலிருக்கும் அஞ்ஞானிகள் நம்முடைய உபதேசத்துக்கும் நடக்கைக்கும் வித்தியாசத்தைக் கண்டு நம்மை அவர்கள் குற்றப்படுத்த இடங்

கொடுத்து அவர்களுடைய மெய்யான குணப்படுதலுக்கு இடமுண்டாயிருப்போமா? [யோவா 13:34; 1 பேது 4:16; 2 கொரி. 6: 14,18; கலா. 4:9] தேவன் சுத்தமாக்கினதை அசுத்த மென்றெண்ணாதே! (அப் 10:15.35)

இந்திய கிறிஸ்தவர்களே! மெய்க்கிறிஸ்வர்களாகுங்கள்!! பாதி இந்து பாதி கிறிஸ்தவர்களாக இருக்காதீர்கள் திரிசங்கு சொர்க்கத்தில் ஊசலாடாதீர்கள். நோக்கிப்பாருங்கள் புதிய எருசலேமை; கிறிஸ்தவம் புதிய எருசலேமாய்ப் பரவுகிறது!

"ஒரே சரீரமும் [சபை] உண்டு"
எபேசி. 4:4.

# நாம் கிறிஸ்துவுக்கு சிநேகிதர்!

ஒருவன் தன் சிநேகிதருக்காக தன் ஜீவனை கொடுக்கிற அன்பிலும்அதிகமான அன்பு ஒருவரிடத்திலுமில்லை நான் உங்களுக்கு கற்பிக்கிற யாவையும் நீங்கள் செய்வீர்களானால், என் சிநேகிதராயிருப்பீர்கள். இனி நான் உங்களை ஊழியக்காரரென்று சொல்லுகிறதில்லை, ஊழியக்காரன் தன் எஜமான் செய்கிறதை அறியமாட்டான நான் உங்களை சிநேகிதர் என்றேன். ஏனெனில் என் பிதாவினிடத்தில் நான் கேள்விப்பட்ட எல்லாவற்றையும் உங்களுக்கு அறிவித்தேன் (யோவா 15-13-15).

கிறிஸ்துவானவர் இவ்வுலகில் இருந்தபோது அநேக காரியங்களை தம்முடைய சீஷர்களுக்கு தெரியப்படுத்தினார். அவர் சொன்ன சில காரியங்களை [உபதேசங்களை] அவருடைய சீஷர்கள் புரிந்து கொள்ளமுடியாமல் தவித்தார்கள். தம்மை மேய்ப்பனாகவும் சீஷர்களை ஆடுகளாகவும் பாவித்து உபதேசித்தார் நான் மெய்யான திராட்சைசெடி நீங்கள் கொடிகள் என்றார். நான் உலகத்திலிருக்கையில் உலகத்துக்கு ஒளியாயிருக்கிறேன என்றவர் நீங்கள் உலகத்துக்கு வெளிச்சமாயிருக்கிறீர்கள் என்றார் இப்படியெல்லாம் சொன்ன நம்முடைய இயேசுகிறிஸ்து இங்கு யோவா. 15:13-15ல் நாம் அவருடைய சிநேகிதர் என்றார்.

இவ்வுலகில் வாழும் ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு சிநேகிதன் இருப்பான். ஒருவன் நல்லவனாயிருந்தாலும் சரி, கெட்டவனாயிருந்தாலும் சரி, அவனுக்கு கட்டாயம் ஒரு சிநேகிதன் இருப்பான். ஒருவன் மற்றொருவனிடம் காட்டும் அன்பே நட்பு என்று சொல்லப்படுகிறது. உண்மையான நட்பு என்றால் ஒருவன் தன்னை நேசிக்கிறதுபோல் பிறனையும் சிநேகிக்க வேண்டும். ஒவ்வொரு மனிதனும் பிறனை சிநேகிக்க வேண்டும்; அதேபோல பிறனால் சிநேகிக்கப்படவும் வேண்டும். கிறிஸ்து இங்கு நம்மை அவருடைய சிநேகிதர் என்று சொல்லுகிறார்! இது முக்கியமாய் அவருடைய ஊழியர்களைக் குறிப்பிட்டாலும் இயேசுவை விசுவாசிக்கிற எல்லாருக்கும் பொருந்தும் இதிலே மூன்று அம்சங்கள் அடங்கியுள்ளது

1 உண்மையான சிநேகம் என்றால் என்ன என்பதை விளக்குகிறார் (வச. 13).

2. அவருடைய கற்பனைகளை நாம் கைக்கொள்ள வேண்டும் என்கிறார் (வச. 14).

3. அவர் எதையெல்லாம் அறிந்தாரோ அதையெல்லாம் நமக்கு தெரிவித்து விட்டார் (வச. 15).

1. உண்மையான சிநேகிதன் தன் சிநேகிதனுக்காக ஜீவனையே கொடுப்பான். என்றார். கிறிஸ்து அதை செயலிலே காண்பித்தும் விட்டார். அவர் நமக்காக தமது ஜீவனையே கொடுத்ததினால் நாம் அவருடைய சிநேகிதர்கள் என்பது தெளிவாயிற்று.

2 இறைவனாகிய இயேசுவின் பிரமாணங்களை அவர் கற்பித்தவைகளை நாம் கைக்கொண்டோமானால் நாம் அவருடைய சிநேகிதராயிருப்போம். என்கிறார். கிறிஸ்து நம்மை சிநேகிக்கிறார் என்பதற்கு அடையாளமாக தமது ஜீவனையே நமக்காக கொடுத்தார். இப்பொழுது நாம் அவரை சிநேகிக்கிறோம் என்று எப்படி காண்பிப்பதென்றால் அவருடைய கற்பனைகளின்படி நாம் நடப்பதினால்தான் காண்பிக்கமுடியும் அப்படி நாம் செய்வோமானால் நாம் அவரை சிநேகிக்கிறோம் என்பது நிச்சயம். ஆபிரகாம் தேவன் தனக்கு கட்டளையிட்ட எல்லாவற்றையும் செய்தார். அவர் வெறும் விசுவாசம் மாத்திரம் கொள்ளாமல் அந்த விசுவாசத்தை கிரியையில் காண்பித்து "தேவனுடைய சிநேகிதன்" என்கிற பெயரை பெற்றுக்கொண்டார் (யாக். :21) நாமும் இயேசுவை விசுவாசிக்கிறோம் என்றால் அதை கிரியையில் காண்பிக்கவேண்டும். இயேசு நமக்கு என்ன கட்டளைகளை போட்டிருக்கிறாரோ அதை அப்படியே ஏற்றுக்கொண்டு அதற்கு கீழ்ப்படிவோமானால் நாம் அவருக்கு சிநேகிதராயிருப்போம்.

3. இயேசுகிறிஸ்து தமது பிதாவினிடத்தில் கேள்விப்பட்ட எல்லாவற்றையும் நமக்கு அறிவித்துவிட்டார். அவர் சொல்லும்போது ஊழியக்காரன் தன் எஜமான் செய்கிறதை அறியமாட்டான். தேவன் நம்மை சிநேகித்ததினால் நமக்கு தம்முடைய பிதாவினிடமிருந்து அவர் கேள்விப்பட்ட எல்லாவற்றையும் நமக்கு தெரிவிப்பதற்கு பரிசுத்த வேதாகமத்தை தமது கையில் ஒரு புஸ்தகமாக எழுத கொடுத்துவிட்டார். அதற்கு துணை செய்தது பரிசுத்த ஆவியானவரே. அப்போஸ்தலர்கள் இயேசுவினிடமிருந்து கேள்விப்பட்ட எல்லாவற்றையும் எழுதுவதற்கு பரிசுத்த ஆவியானவர் அவர்களுக்கு எல்லாவற்றையும் ஞாபகமூட்டினார் [2 தீமோ. 3:16; 2 பேது 1:21]. நாம் இயேசுகிறிஸ்துவை சிநேகித்து அவரை விசுவாசிக்கிறபடியால் பிதாதாமே நம்மை சிநேகிக்கிறார் [யோவா. 16.27] வேதாகமத்தில் சில சிநேகிதர்களை குறித்து எழுதப்பட்டுள்ளது; அப்படியே கிறிஸ்துவும் நமக்கு இருக்கிறார்.

1. "தேவனும் ஆபிரகாமும் சிநேகிதர்கள்" (2 நாளா. 20:7). ஆபிரகாமை தேவன் சிநேகித்தபடியால் அவரை அவருடைய சுய ஜனத்தாரிடத்திலிருந்து வேறுபிரித்தார் [வெளியே அழைத்தார்]. அவர் அதற்கு கீழ்ப்படிந்ததினால் தேவன் அவரை அதிகமாக ஆசீர்வதித்தார். கீழ்ப்படிதல் (தேவனுடைய வார்த்தைக்கு) அதிகமாக ஆசீர்வாதத்தை கொண்டுவரும். பலியைப்பார்க்கிலும் கீழ்ப்படிதலும், ஆட்டுக்கடாக்களின் நிணத்தைபார்க்கிலும் செவிக்கொடுத்தலும் உத்தமம் [1 சாமு 15:22]. சவுல் கீழ்ப்படியாமை காண்பித்ததினால் ராஜ்யபாரத்தை இழந்தான். ஆதாமும், ஏவாளும் கீழ்ப்படியாமை காண்பித்ததினால் ஏதேன் தோட்டத்திலிருந்து விரட்டப்பட்டார்கள் நாமோ ஆபிரகாமைப்போல் கீழ்ப்படிந்து அவருடைய சிநேகிதர் என்று அழைக்கப்படுவதற்கு பாத்திரவான்களாய் மாறுவோமாக

2. "தாவீதும் யோனத்தானும் சிநேகிதர்கள்" (1 சாமு. 18 1) இந்த யோனத்தான் தாவீதுக்காக தன் தகப்பனிடத்தில் பேசினான். அவருடைய [தாவீதுடைய] உயிரை காப்பாற்ற பல பிரயத்தனங்களை கையாண்டார். ஆனால் யோனத்தான் செய்த தவறு, அவர் தாவீதோடுகூட இராமல் தன் வீட

டிற்கு கடந்து சென்றுரென்றும் பெலிஸ்தர்களோடு இஸ்ரவேலர் செய்த யுத்தத்தில் யோனத்தான் கொல்லப்பட்டார் என்று வாசிக்கிறோம் (1 சாமு. 23:18; 31:2) ஆனால் இந்த யோனத்தான் தாவீதோடுகூட காட்டிலே இருந்திருந்தால் அவர் மரிக்காமல் தாவீதோடுகூட ஒருவேளை அரசாட்சி செய்திருப்பார். நாம் கர்த்தரை பின் தொடர்ந்து அவரோடு இருக்க நம் மனம் வாஞ்சிக்குமேயானால் நமக்கு உயர்ஸ்தானங்களும், பதவிகளும் ஆயிரம் வருட அரசாட்சியில் கிட்டும்.

3. "தாவீதும், ஊசாயும் சிநேகிதர்கள்" (2 சாமு. 15:37). இந்த ஊசாய் தாவீதுக்கு நேரிட இருந்த ஒரு பெரிய ஆபத்திலிருந்து தாவீதை காப்பாற்றி விடுகிறார் (2 சாமு.17: 1–22). நாம் கிறிஸ்துவோடு சரியாக சிநேகமாயிருந்தால் அவர் நம்மை ஆபத்திலிருந்து விடுவித்து விடுவார். இப்பொழுதும் அவர் அநேகந்தரம் நம்மை விடுவிப்பதை நாம் காண்கிறோம். அதினால் தேவன் நம்மை சிநேகிக்கிறார் என்பதை தெளிவுபடுத்துகிறார்.

4. "எலியாவும், எலிசாவும் சிநேகத்திற்கு அடையாளமாயிருக்கிறார்கள்" 2 இராஜா. 2:1–14. எலியாவோடுகூடவே இருந்த இந்த எலிசா கடைசி நேரத்தில் இரட்டிப்பான ஆசீர்வாதம் தனக்கு வேண்டும் என்று கேட்டு, அதை பெற்றும் கொண்டார் (2 இராஜா. 2:9–14) எலியாவை கர்த்தர் எடுத்துக் கொள்ளப்போகிறார் என்பதை எல்லா தீர்க்கதரிசியின் புத்திரரும் அறிந்திருந்தார்கள் ஆனாலும் ஆசீர்வாதம் வேண்டி கேட்டுக் கொண்ட எலிசாவுக்கே அது கிடைத்தது. தேவனும் நமக்கு இரட்டிப்பான நன்மைகள் தருவேன் என்று வாக்களித்திருக்கிறார் நாம் அவருடைய சிநேகிதரானால் நாம் உரிமையோடு அதை வாஞ்சித்து கேட்டு பெற்றுக்கொள்ளுவோமாக! நீர் அவரோடு பழகி சமாதானமாயிரு! அப்பொழுது உமக்கு நன்மையுண்டாகும் (யோபு 22:21)

நல்ல நண்பன் ஒவ்வொருவருக்கும் தேவை.

நண்பன் எதற்காக இருக்கிறார்?

1. நமது அந்தரங்க காரியங்களை பகிர்ந்து கொள்ள.

2. நமக்கு நல் ஆலோசனை கொடுக்க.

3. நாம் புகழடைய.

4. நமது வாழ்க்கையில் உயர்வடைய.

இயேசு நமக்கு நண்பராயிருப்பதினால் நாம் அவரிடம் எதையும் கேட்டு பெற்றுக் கொள்ள நமக்கு உரிமையுண்டு [லூக் 11: 5-9] இயேசு லாசருவை சிநேகித்தபடியால் அவரை உயிரோடு எழுப்பினார் [யோவா. 11:3-45]. தேவன் யாக்கோபை சிநேகித்தார் (ரோம. 9:13). ஒருவன் தன் சிநேகிதனோடு பேசுவதுபோல கர்த்தர் முகமுகமாய் மோசேயோடு பேசினார் [யாத். 33:11]. தேவன் எல்லாக்காலத்திலும் நம்மை சிநேகிக்க நாம் அவருக்கு பிரியமாய் நடப்போமாக! நாமும் எல்லா காலத்திலும் இயேசுவை சிநேகிப்போமாக!! கர்த்தர் இஸ்ரவேலை சிநேகித்தார் (1 இராஜா. 10 9; 2 நாளா. 2:11; 9.8)

நல்ல நண்பராக நாம் இயேசுவை ஏற்றுக் கொண்டோமானால் நமது சந்தோஷம் இரட்டிப்பாகவும் துக்கம் பாதியாகவும் மாறிவிடும். "இயேசுவே நீரே என்னுடைய சிநேகிதர்" என்று நாம் சொல்லுவோமாக!

"அன்பு . . . சகலத்தையும் தாங்கும் . . ." [1 கொரி. 13:7].

"தேவனைத் தேடு"
"SEEK GOD"

Regd. No 040033/84
Postal Regd. No. MH BY NE-84/94
Tamil Monthly Magazine

# கத்தோலிக்கு
## (Catholic)

கி.பி. 381 வருஷம். உத்தமராகிய மகாதேயோதோசி என்ற இராயனுடைய காலத்தில், கொன்ஸ்தந்தீநுபுரி என்கிற இடத்தில் இரண்டாம் பொதுவான யோசனைசங்கம் கூடினபோது; இராயருடைய கட்டளையின்படி மெய்யான உபதேசத்தை நம்புகிற கிறிஸ்தவர்கள், கத்தோலிக் என்றபொது சபையார் என்னப்பட்டார்கள். ரோமன் மார்க்கத்தார் இந்த நாமத்தை தங்களுக்கடுத்ததாக நியாயமில்லாமலே தரித்துக் கொள்ளுகிறார்கள். சாதாரண சத்திய சங்கம என்கிறபெயர், மெய்யான கிறிஸ்து சபைக்குப் பூர்வ காலத்திலே தானே தரிக்கப்பட்டிருந்தது. கத்தோலிக் என்றால் மெய்யான உபதேசத்தைக் கைக்கொள்ளுகிற பொதுச் சபையார் என்று அர்த்தமாம.

### அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்

   6 [திங்கள்] நவம்பர் 1995
   6 [புதன்] டிசம்பர் 1995

2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :
   CHIEF PASTOR N. LAZAR
   "NEW JERUSALEM CHURCH"
   CHURCH LANE, TILAK NAGAR,
   DARGA ROAD, BHANDUP,
   BOMBAY-400 078 INDIA.

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.

4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்

5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 137 - DEC. '95

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவுகிற நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ரெ)ன்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்."

- மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனபபட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும் அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப் 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

அன்பான தேவனுடைய பிள்ளைகளுக்கு கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினால் வாழ்த்துக்கள் பல. ஆண்டின் இறுதியை நெருங்கிக் கொண்டிருக்கிறோம். நாம் ஆண்டவருக்காக செய்தது என்ன? ஆண்டவருக்காக சாதித்தது என்ன? ஜீவித்தது என்ன? என்று ஆலோசிப்போமாக. கர்த்தருடைய வெளிச்சத்திலே நம்மை பார்ப்போமாக. கர்த்தராகிய இயேசுவினுடைய வருகை நெருங்குகிறது. குறிக்கப்பட்ட காலத்தில் ஒரு வருஷம்குறையப் போகிறது. நாம் தேவனுடைய வருகைக்கு உற்சாகத்தோடு ஆயத்தப்படுவோமாக.

இந்த உலகத்திலே துன்பமும், துக்கமும், துரோகமும், மனக்கவலைகளும், வியாதிகளும், நன்றிக்கேடுகளும், பிரச்சனைகளும் இருக்கத்தான் செய்யும். பிரச்சனைகள் கூடும்பொழுது நாம் பரலோகத்தை நோக்கிப்பார்ப்போமாக. தேவனுடைய ஜனங்களுக்கு இளைப்பாறுகிற காலம் இனி வருகிறதாயிருக்கிறது. இங்கே எல்லாம் நிறைவாக இருந்தால் நாம் மோட்சத்தை தேடமாட்டோம்.

ஆகையால் நீ உன் தேவனை சந்திக்க ஆயத்தப்படு. உன்னுடைய தேவனுடைய சந்நிதானத்தில் குற்றமற்றவனாய் நிற்க உன்னுடைய கடமையைச் செய். உற்சாகத்தோடு ஊழியம் செய்து, உழைத்து வெகுமானங்களைப் பற்றிக்கொள். வாக்குத்தத்தம் நிறைவேறும். உன்னாலும் உலகத்திற்கு ஆசீர்வாதம் உண்டாகும். தேவ நாமம் மகிமைப்படும். நீயும் சந்தோஷம் அடைவாய்; ஆசீர்வதிக்கப்படுவாய்!

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR)

# கிறிஸ்தவ மார்க்கம்

(தொடர்ச்சி)

கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகையின் முதல் பாகத்தில் கிறிஸ்துவுக்குள் மரித்திருக்கிற பரிசுத்தவான்கள் முதலாவது எழும்புவார்கள்; உயிரோடிருக்கிற, ஆயத்தமாயிருக்கிற பரிசுத்தவான்கள் மறுரூபமாக்கப்பட்டு, எடுத்துக்கொள்ளப்படுவார்கள். இடையில் இரண்டு தீர்க்கதரிசிகள் தேவனால் அனுப்பப்பட்டு மரித்து மூன்றும் நாள் உயிரோடெழும்புவார்கள், வெளி. 11 அதிகாரம் அப்பொழுது மரித்த மற்ற பக்தர்கள் உயிர்த்தெழுப்பப்பட்டிருக்க மாட்டார்கள். அவர்களும் இரத்தசாட்சிகளும் இறைவனை நோக்கி: அவர்கள் பரிசுத்தமும், சத்தியமும் உள்ள ஆண்டவரே, தேவரீர் பூமியின் மேல் குடியிருக்கிறவர்களிடத்தில் எதுவரைக்கும் நியாயத்தீர்ப்பு செய்யாதபடி மௌனமாய் இருப்பீர் என்று மகா சத்தமாய் கூப்பிட்டார்கள். அப்பொழுது அவர்கள் ஒவ்வொருவருக்கும் வெள்ளங்கிகள் கொடுக்கப்பட்டது.

அன்றியும் அவர்கள் தங்களைப்போல் கொலை செய்யப்படபோகிறவர்களாகிய தங்கள் உடன் பணிவிடைக்காரர்களும் தங்களுடைய சகோதரர்களுமானவர்களுடைய தொகை நிறைவாகுமளவும் இன்னும் கொஞ்ச காலம் இளைப்பாற வேண்டுமென்று அவர்களுக்குச் சொல்லப்பட்டது (வெளி. 6:9-11) இயேசுகிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகையின், இரண்டாம் பாகத்தில் புதிய ஏற்பாட்டில் மீதியுள்ள தேவபக்தர்களும், பழைய ஏற்பாட்டிலுள்ள பரிசுத்தவான்களும் உயிர்த்தெழுவார்கள். இதுவே முதலாம் உயிர்த்தெழுதல். முதலாம் உயிர்த்தெழுதலில் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் முதலாம் வருகையில் ஆரம்பித்து இரண்டாம் பாகத்தில் அது நிறைவடையும். அந்த ஆத்துமாக்கள், சிரச்சேதம் பண்ணப்பட்டவர்களெல்லாரும் உயிர்த்து கிறிஸ்துவுடனே கூட ஆயிரம் வருஷம் அரசாண்டார்கள். மரணமடைந்த மற்றவர்களெல்லாரும் ஆயிரம் வருஷம் முடியும்வரையும் உயிரடையவில்லை. இதுவே முதலாம் உயிர்த்தெழுதல்.

முதலாம் உயிர்த்தெழுதலுக்கு பங்குள்ளவன் பாக்கியவானும், பரிசுத்தவானுமாயிருக்கிறான்; இவன் மேல் இரண்டாம் மரணத்திற்கு அதிகாரமில்லை. இவர்கள் தேவனுக்கும், கிறிஸ்துவுக்கும் முன்பாக ஆசாரியராயிருந்து அவரோடேகூட ஆயிரம் வருஷம் அரசாட்சி செய்வார்கள் (வெளி. 20:4-6); முதலாம் உயிர்த்தெழுதல் முடிவடைகிறது.

இதைத் தொடர்ந்து ஆயிர வருஷ அரசாட்சியின் முடிவில் சாத்தான் மறுபடியும் கட்டவிழ்க்கப்பட்டு விடுதலையாவான் [வெளி. 20:7]. ஆயிர வருஷ அரசாட்சியிலே பாவிகள் இருப்பார்கள். ஆனால் அவர்கள் பாவம் செய்ய முடியாது. ஆனாலும் தங்களுடைய தெய்வங்களையோ, துர்க்கிரியைகளையோ, தங்களுடைய கெட்ட குணங்களையோ மாற்றிக்கொண்டு இறைவனை அவர்கள் விசுவாசிக்கவோ, தேடவோ மாட்டார்கள். இப்பொழுதே மனந்திரும்பி இயேசுவை ஏற்றுக் கொள்ளாதோர் கிருபையின் வாசல் அடைபட்ட பின்பு இரட்சிக்கப்படுவது அரிது

சாத்தான் கட்டவிழ்க்கப்பட்டவுடனே அவன் இந்த பொல்லாத ஜனங்களையெல்லாம் கூட்டிக்கொண்டு கடவுளுக்கு விரோதமாய், தேவ ஜனங்களுக்கு விரோதமாய், பரிசுத்த நகருக்கு விரோதமாய் யுத்தம் செய்யும்படியாகக் கூட்டுவான் [வெளி. 9:20; 20:7-10]. அப்பொழுது வானத்திலிருந்து அக்கினி இறங்கி அவர்களெல்லாரையும் பட்சிக்கும்; சாத்தான் மறுபடியும் அவன் தன்னுடைய கடைசி நியாயத்தீர்ப்பை அடைந்து ஏற்கெனவே அந்திகிறிஸ்துவும்,

தள்ளப்பட்டிருக்கிற கள்ளதீர்க்கதரிசியும் கந்தகமும், அக்கினியும் எரிகிற கடலிலே தள்ளப்படுவான்; அவனுடைய முடிவு இதுவே அதற்கு பின்பு அந்த நாள் முதற்கொண்டு இந்நாள் வரை பிறந்து மரித்த மக்களும் உயிரோடிருக்கிற மற்ற ஜனங்களும் பூலோகத்தில் காணப்படாத மக்களெல்லாரும் உயிரோடு எழுப்பப்பட்டு அவர்கள் நியாயதீர்ப்படைவார்கள் இது கடைசி நியாயத்தீர்ப்பு என்று அழைக்கப்படுகிறது.

நியாயத்தீர்ப்பு ஏற்கெனவே உலகத்தில் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது; ஆனல் முடிவான நியாயத்தீர்ப்பு கடைசியில் நடைபெறும்; அது மனிதனுடைய எல்லா கிரியைகளையும் குறித்து நியாயவிசாரணையாகும். "அன்றியும் அறியாமை உள்ள காலங்களில் தேவன் காணாதவர்போலிருந்தார் இப்பொழுதோ மனந்திரும்ப வேண்டுமென்று எங்குமுள்ள மனிதரெல்லாருக்கும் கட்டளையிடுகிறார்". மேலும் ஒரு நாளை நியமித்திருக்கிறார் அந்நாளில் தாம் நியமித்த மனிதனைக் கொண்டு நீதியாய் நியாயந்தீர்ப்பார் [அப். 17:30,31; பிரச. 12:13; ரோம. 2:16].

மனிதன் மனந்திரும்பி மெய்யான இறைவனைக் கண்டு, தொழுது கொண்டு இவ்வுலகத்தில் தேவ பக்தியுள்ள வாழ்க்கை வாழ்ந்து, முக்தியடையும் படியாக இவ்வுலகத்தில் அனுப்பப்பட்டிருக்கிறான். அதை அவர்கள் செய்ய தவறும் பொழுது அவர்களுடைய துர்கிரியைகளுக்கான தண்டனையை அவர்கள் அனுபவிக்க வேண்டியதே. கிறிஸ்துவைபபற்றிய பிரசங்கத்தை அநேகர் அற்பமாய் எண்ணலாம். ஆனல் கிறிஸ்துவை விசுவாசிக்கிறவர்கள் மனந்திரும்பி, பாவத்தை விட்டு விலகி பரிசுத்த வாழ்க்கை வாழ்கிறதையும் முக்தி வாழ்க்கை வாழ்கிறதையும் நற்கிரியைகள் செய்கிறதையும் நாம் பார்க்கிறோம்.

கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்தைக் குறித்து அப். பவுல் பேலிக்ஸ் என்பவர் பட்ட அந்த கவர்னருக்கு போதித்த பொழுது அவன் அதை கேட்டான்; ஆனல் அவன் ஏற்றுக் கொள்ளவில்லை. அவனுடைய பாவ வாழ்க்கையை விட அவனுக்கு மனமில்லை, அவன் நீதியையும், இச்சையடக்கத்தையும், இனிவரும் நியாயத்தீர்ப்பையையும் குறித்து பேசுகையில் பேலிக்ஸ் பயமடைந்து இப்போது நீ போகலாம். எனக்கு சமயமான பொழுது உன்னை அழைப்பிப்பேன் என்றான் (அப். 24:25).

நியாயதீர்ப்பு ஆங்காங்கு பாவம் மிஞ்சி போகும்போது அவைகள் தண்டனை கொண்டுவருவதை நாம் பார்க்கிறோம். ஆனல் அதுமுடிவான தண்டனையல்ல; முடிவான நியாயத்தீர்ப்பே இனி வருகிறதாயிருக்கிறது. கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவும் அவருடைய பரிசுத்தவான்களும் இந்த நியாயதீர்பபை நடத்துவார்கள் [தானி. 7:10,21; சங். 149:6–9; வெளி. 20:11 15]. அதைத் தொடர்ந்து இந்த வானம், பூமி சுட்டெரிக்கப்படும்; புதிய வானம், புதிய பூமியை இறைவன் சிருஷ்டிப்பார்; புது வாழ்வு, புது யுகம் ஆரம்பமாகும்.

[முற்றும்]

"நானே வழியும், சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன; என்னாலேயல்லாமல் ஒருவனும் பிதாவினிடத்தில் வரான்"

யோவா. 14:6.

(தொடர்ச்சி)

# திருச்சபை

புதிய ஏற்பாட்டின் திருச்சபையைக் குறிப்பதற்கு பல உருவங்கள் கையாளப்பட்டுள்ளன. அவைகள் வெவ்வேறு வகைகளில் திருச்சபையின கூட்டு தன்மைகளை வெளிப்படுத்துகிறது. அப். பவுல் திருச்சபையை சில வேளைகளில் கடவுளின் ஆலயம் (1 கொரி. 3:16; 2 கொரி. 6:14; எபே. 2:22). எனக் கூறினுர். இவ்வுருவகம் திருச்சபையின் வாழ்க்கையைப் பற்றி கருத்தை கொடுக்காவிடினும் அதின் ஐக்கியத்தைப் பற்றி அறிவிப்பதற்குப் பொருத்தமாகும் [உருவகமாகும்]. ஒலிவ மரத்தைப்பற்றிய உருவகம் ரோம. 11:17 லும் பரி. யோவான திராட்சைசெடி (யோ. 15:1-6 என்ற உருவகத்தில் எழுதியிருக்கிறார், அங்க வாழ்க்கையும் இவ்வுருவங்களில் திருச்சபையின் கூட்டு வாழ்க்கையும் அறிவுறுத்தப்படுகிறது. உடலில் என்ற உருவகத்தில் இவ்வம்சம் இதிலும் சற்று அதிகமாகவே காணப்படுகின்றது (ரோம. 12:15; 1 கொரி. 10:17,12; 13:27; எபே. 1:23; 2:16; 3:6; 4:4,12,16; 5 23,30; கொலோ. 1:18; 2:19; 3:15)

கிறிஸ்து உடலின தலை. விசுவாசிகள் அதின அங்கங்கள இத்தகைய உயரிய உருவகங்கள கிறிஸ்து தாமே திருச்சபையின் ஒரு பாகமாக அமைகிறதை காண்கிறோம். அடிமரம் முழுமரத்தின் ஒரு பாகமாகும் தலை உடலின் பாகமாகவும் கிறிஸ்து தமது திருச்சபையின் பாகமாக இருக்கிறார். இவ்வகை உருவகங்களிலிருந்து திருச்சபையின் விசுவாசிகளைக் கொண்டதொரு வெறும் சங்கமெனறும் என்னுவது தவறு. திருச்சபை விசுவாசிகளைக் கொண்டதோர் அங்க ஐக்கியம் அல்லது கிறிஸ்து தாமே தம்மில் விசுவாசம் கொள்ளும் அனைவரையும் தம்மோடு இணைத்துத் திருச்சபையாய் விளங்குகிறார் எனக் கொள்ளலாம். அடிமரம் தான கிளைகளை ஆதரிக்கின்றது திருச்சபை விசுவாசிகளுக்கு முன்னுல் உள்ளதா? அன்றி விசுவாசிகள் திருச்சபைக்கு முன்னுல் உள்ளனரா? என்ற பழைய கேள்விக்கு முந்திய கேள்விக்கு விசாலமாய் தீர்ப்பு அளிப்பதற்கு காரணம் உள்ளது. கிறிஸ்து தாமே திருச்சபையின் உயிராக உள்ளார், உடல் என்ற உருவகத்தின் துணைகொண்டு இவ்வுண்மை மிகவும் அதிகமாய் வலியுறுத்தப்படுவதால், திருச்சபை, கிறிஸ்து திரு அவதாரத்தின் தொடர்ச்சி என சொல்லப்படுகிறது.

திருச்சபை, கிறிஸ்து இந்த உலகத்தில் தொடர்ந்து நடத்தும் கருவியாய் விளங்குவதால் இக்கருத்து பொருத்தமாகும். கிறிஸ்துவின் உடல் அவர் மாம்சத்தில் இருந்த நாட்களில் எவ்வாறு உலகில் அசைவதற்கும், வாழ்வதற்கும், ஊழியத்தற்கும் கருவியாக அமைந்ததோ அதைப் போன்று திருச்சபை. இப்பொழுது அவர் உலகில் வாழ்வதற்கும், அசைவதற்கும், பணியாற்றுவதற்கும் வாகனமாய் அமைந்துள்ளது. அவர் மாம்சத்தில் இருந்த நாட்களில் அவரைப்போலவே அநேகர் நாசரேத்தூரில் வாழ்ந்து வந்தனர். அவர்களில் ஒருவர் கடவுளின் திரு. அவதாரமாக இருந்தார்.

அதைப்போலவே இக்காலத்தில் உள்ள அநேக மநுக்குல சங்கங்களுக்கும் சமுதாயங்களுக்கும் நடுவே கிறிஸ்துவின திரு அவதாரமாக விளங்கும் ஒரு திருக் கூட்டம் உண்டு. இந்த காரியம் சமுதாயத்தின் ஏனையவற்றினின்றும் முற்றிலும் வேறுபாடாய் காணப்படும். எனினும் திருச்சபையைப் பற்றி வழங்கப்படும் திருஅவதார சொற்கள், முற்றிலும் அவ்வாறு சொல்ல முடியாது. ஏனெனில் அதில் உருவகமாக மாத்திரமே உபயோகப்படுத்த முடியும். கிறிஸ்து மாம்சத்தின் திரு அவதாரமாய் இருந்த அதே கருத்தில் திருச்சபையை அவதாரமாக நாம் எண்ண முடியாது.

ஆனல் திருச்சபை இறைவனுடைய திட்டமாயிருக்கிறபடியினல் திருச்சபையை இரட்சிக்க இயேசு தம்மை ஒப்புக் கொடுத்தார் (கொலோ. 1:20). ஒன்றை நாம் மறந்து விடக்கூடாது. கிறிஸ்து மாம்சத்தில் பாவமற்ற திரு அவதாரமாயிருந்தார் (யோ. 8:46; எபி. 4:15). ஆனல் திருச்சபையிலுள்ள காரியம் அப்படியல்ல. திருச்சபை பாவமற்றதுமன்று, வாழுவாவரம் பெற்றதுமன்று, இவ்வுண்மையை மறந்து விட்டால் ஒரு பொருள் தவருக முடியும். திருச்சபையானது கிறிஸ்துவின் அவதாரமாயிருப்பதால் அதில் வளர்ந்துள்ள யாவும் அவராலே ஆக்கப்படுகின்றன என்று சிலபேர் விவாதிக்கலாம். அது நிச்சயமாக அப்படியல்ல. திருச்சபையின் உள்ளே வேறு சக்தியும் புகுந்து செயல்படுகின்றன. பாவமுள்ள மனித சித்தங்கள் அடிக்கடி ஆண்டவரின் திரு சித்தங்களைக் கெடுத்து விடுகின்றன. எனவே நோய்கள் எனக் கூறக்கூடிய அநேக காரியங்கள் திருச்சபையில் உள்ளன. அவைகள் சுகமாக்கப்பட வேண்டும். கொப்புளங்கள், கழலைகள் என கூறத்தக்கவைகளை அகற்றிவிட வேண்டும். இந்த வேலை கண்டிப்பாக செய்ய வேண்டும்; நடந்தேறுகிறது.

### சபையில் அங்கமாவதும், நிலைத்திருப்பதும்.

ஒரு மனிதன் இரட்சிக்கப்படுவதற்கு அவன் செய்ய வேண்டிய சில காரியங்கள் உண்டு அவன் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை தேவனுடைய குமாரனென்று விசுவாசிக்க வேண்டும்; கிறிஸ்து என்று விசுவாசிக்க வேண்டும்; கிறிஸ்து என்ருல் "அபிஷேகிக்கப்பட்டவர்" என்று அர்த்தம் மனம் திரும்பி விசுவாசிக்க வேண்டும்; மனந்திரும்பி கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசிக்கிறது மாத்திரமல்ல அவன் இயேசுவை தேவனுடைய குமாரனென்று அறிக்கை செய்ய வேண்டும். "நீதியுண்டாக இருதயத்தில் விசுவாசிக்கப்படும் இரட்சிப்புண்டாக வாயினுலே அறிக்கைப் பண்ணப்படும்" (ரோம. 10:9,10) "மனுஷர் முன்பாக என்னை அறிக்கை செய்கிறவர்களைக் குறித்து நானும் பிதாவின் முன்பாக அறிக்கை செய்வேன் என்று கர்த்தராகிய இயேசு சொல்லி இருக்கிருர் [மத். 10:32].

இயேசுவே கிறிஸ்து என்று நல்ல அறிக்கை தீமோத்தேயு செய்ததாக (1 தீமோ 6:12)ல் எழுதப்பட்டிருக்கிறது. இயேசுவே கிறிஸ்து என்று அறிக்கை செய்ய வேண்டியது ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் கடைபிடிக்க வேண்டிய உண்மையாகும். ஒரு ஊழியர் முன்னிலையிலோ, அல்லது ஒரு திருச்சபையிலோ நான் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசிக்கிறேன்; அவரை என் ஆண்டவரும் இரட்சகருமாக ஏற்றுக் கொள்ளுகிறேன்; அவர் எனக்காக மரித்தார், அவர் என்னுடைய இரட்சகர் என்று அறிக்கை செய்ய வேண்டியது அவசியமாகும்.

ஒரு மனிதன் இரட்சிக்கப்பட செய்ய வேண்டிய காரியத்தில் மிக முக்கியமானது அடுத்த கட்டமாகும். அவன் மூழ்கி ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ள வேண்டும். இந்நாட்களில் ஞானஸ்நானத்தைக் குறித்து அநேக தர்க்கங்களிருக்கின்றன. சிலர் குழந்தை ஞானஸ்நானம் சரியென்றும், சிலர் தெளிப்பு ஞானஸ்நானம் கொடுக்கலாமென்றும், சிலர் அப்படியும், சிலர் இப்படியும் சொல்லுகிருர்கள். சிலர் ஞானஸ்நானமென்ருல் தண்ணீரில் ஞானஸ்நானம் எடுக்கிறதல்ல வசனத்தால் ஞானஸ்நானம் எடுப்பது தான் ஞானஸ்நானம் என்று சொல்லி வாயில் வந்ததை உளறுகிறார்கள்.

ஒரு மனிதன் இரட்சிக்கப்பட அவன் மனந்திரும்பி கர்த்தராகிய இயேசுவை விசுவாசித்து பாவமன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ள வேண்டும். எருசலேம் நகரத்தாரும், யூதேயா தேசத்தாரும் யோர்தான் நதியில் யோவானுக்கு ஏற்பு

பாவங்களை அறிக்கை செய்து யோவானால் யோர்தான நதியில் ஞானஸ்நானம் பெற்றார்கள் [மத். 3 5,6]. ஞானஸ்நானம் பெறும்படியாக கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவும் அங்கே வந்தார்; யோவான் ஸ்நாபகன் அவருக்கு தடைசெய்த பொழுது, இப்பொழுது இடங்கொடு இப்படி எல்லா நீதியையும் நிறைவேற்றுவது நமக்கு ஏற்றதாய் இருக்கிறது என்று சொன்னார் (மத். 3:14,15). ஞானஸ்நானம் தண்ணீரிலே மிகுதியான தண்ணீர் அங்கிருந்தபடியினால் யோவான் ஞானஸ்நானம் கொடுத்து வந்தார் (யோவா. 3:23) என்றும்; கிறிஸ்துவும் ஞானஸ்நானம் கொடுத்து வந்தார் [யோ. 3:22] என்று வாசிக்கிறோம். யோவானிடம் ஞானஸ்நானம் பெற்று கரையேறின பொழுது ... என்று இயேசுகிறிஸ்துவைப பற்றி எழுதப்பட்டுள்ளது [மத். 3:16].

ஞானஸ்நானம் பெறுவதற்காக கந்தாகே என்பவளுடைய மந்திரியும், பிலிப்பும் தண்ணீருக்குள் இறங்கினார்கள்; பிலிப்பு அவருக்கு ஞானஸ்நானம் கொடுத்தார் என்று வாசிக்கிறோம் [அப். 8:37;38]. நான் ஜலத்தினாலே உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கிறேன்; எனக்கு பின்னால் வருகிறவர் ஆவியினாலும், அக்கினியாலும் உங்களுக்கு கொடுப்பார் என்று யோவான் ஸ்நானகன் சொன்னார் (யோவா. 1:26). ஞானஸ்நானம் மிகுதயான தண்ணீரிலே இறங்கி கொடுக்க வேண்டும்; ஞானஸ்நானம் ஒரு அடக்க ஆராதனைக்கு அடையாளமாக இருக்கிறது (ரோம. 6.3,4; கொலோ 2:12); அது மல்லாக்க தண்ணீரில் மூழ்க் கொடுக்க வேண்டும்; 'பிதா குமாரன், பரிசுத்தாவின் ஆவியின் நாமத்தினால்' கொடுக்க வேண்டும்; ஒருவர் ஞானஸ்நானம் பெறும் பொழுது பிதா, குமாரன், பரிசுத்தாவியாகிய தெய்வத்துக்கு ஒப்பு கொடுக்கப்படுகிறார்.

இயேசுவினுடைய கட்டளையின் பிரகாரம் ஞானஸ்நானம் கொடுப்பதே கிறிஸ்து ... ஞானஸ்நானம் கொடுப்ப தாகும். இயேசுகிறிஸ்துவினுடைய கட்டளை [மத். 28:18-20] தேவன் ஆதி சபையிலே இரண்டு காரியம் செய்து கொண்டு வந்தார்.

1 தினந்தோறும் மக்கள் இரட்சிக்கப்பட்டார்கள்.

2. இரட்சிக்கப்படுகிறவர்களை தேவன் சபையிலே சேர்த்து கொண்டு வந்தார். [அப். 2:47].

பெந்தேகோஸ்தே அன்றய தினமே மூவாயிரம் பேர் சேர்த்து கொள்ளப்பட்டார்கள் (அப். 2:41). ஞானஸ்நானம் பெறுகிற மக்கள் இரட்சிக்கப்படுகிறார்கள் விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான் (மாற் 16:16). விசுவாசத்தோடு ஞானஸ்நானம் பெற வேண்டும். குழந்தைகள் விசுவாசிக்க முடியாது, அவைகள் மனந்திரும்ப வேண்டிய அவசியமில்லை, திரும்பவும் முடியாது. விசுவாசிக்க திராணியுள்ள, வயதுள்ள குழந்தைகள், வாலிபர்கள், பெரியவர்கள் ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளலாம் ஒரு மனிதன் இயேசுகிறிஸ்துவை விசுவாசிக்கிறானென்றால் கண்டிப்பாக ஞானஸ்நானம் பெற்று திருச்சபையின் அங்கமாக வேண்டும்.

அவ்விதமாக ஞானஸ்நானம் பெறாமல் ஒருவன் கிறிஸ்தவனாக முடியாது (கலா. 3:27). ஞானஸ்நானத்திலே கிறிஸ்துவோடு கூட ஐக்கியப்படுகிறார்கள், இணைக்கப்படுகிறார்கள் [கொலோ. 2:12] தண்ணீரில் முழுகி ஞானஸ்நானமில்லாமல் இப்பொழுது நாம் பார்த்த சத்தியங்களொன்றையும் நடைமுறைபடுத்த முடியாது. அனபடியினால் ஞானஸ்நானம் முக்கியம்; அவ்விதமாய் திருச்சபையின் அங்கமாக வேண்டும். இதற்கு மாறாய் கிறிஸ்தவ உலகத்தில் பல விதமான குழப்பங்களையும், பல தவறான உபதேசங்களையும் உண்டுபண்ணி ஞானஸ்நானத்தை அவர்கள் குழப்புகிறார்கள் [குவேக்க இயக்கம், இரட்சணிய சேனை இயக்கம்] போன்ற கூட்டங்களை தவிர,

எல்லா திருச்சபைகளிலும் ஞானஸ்நானம் ஒருவனை திருச்சபையின் அங்கமாக ஆக்குகிறது என்பதை நாம் அறிவோம். ஒருவன் ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளும் போது அவனுடைய பெயர் பரலோகத்தில் ஜீவ புத்தகத்தில் எழுதப்படுகிறது. சர்வ சங்கமாகிய சபையினிடத்திற்கும் என [எபி. 12:23 ல் நாம் வாசிக்கிறோம் உங்களுடைய நாமங்கள் ஜீவ புத்தகத்தில் எழுதப்பட்டிருக்கிறபடியால் சந்தோஷப்படுங்கள் என்று இயேசு சொன்னார் [லூக். 10:20].

நீ ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டாயா இல்லையென்றால் ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ள வேண்டும். பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தினாலே பெற்றுக் கொள்ள வேண்டும், ஞானஸ்நானம் பெறாதவரை நீ கிறிஸ்தவனல்ல.

[தொடரும்]

"விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான்"

மாற். 16:16

# வேத பாடம் [தொடர்ச்சி]

## எண்ணாகமம்

### எண் 25.1-4

இஸ்ரவேலர் சித்தீமில் தங்கியிருக்கையில் ஜனங்கள், மோவாபின் குமாரத்திகளோடு வேசித்தனம்பண்ணத் தொடங்கினார்கள். அவர்கள் தங்கள் தேவர்களுக்கு இட்ட பலிகளை விருந்துண்ணும்படி ஜனங்கள் போய், புசித்து அவர்கள் தேவர்களை பணிந்து கொண்டார்கள். இப்படி இஸ்ரவேலர் பாகால்பேயோரை பற்றிக்கொண்டார்கள். ஜனங்கள் சித்தீமிலிருக்கும்போது மோவாபிய குமாரத்திகளோடு வேசித்தனம் பண்ணினார்கள் என்று எழுதப்பட்டிருக்கிறது. சித்தீம், யோர்தானுக்கு இக்கரையில் மோவாபின் சமவெளியிலே கடைசியில் அவர்கள் தங்கியிருந்த இடம் அடிமைத்தனத்திலிருந்து விடுதலையாகி, பார்வோனின் பயங்கரத்திலிருந்து தப்பி ஞானஸ்நானம் போன்ற அனுபவத்தைக் கடந்து வந்து, வான மன்னாவினால் போஷிக்கப்பட்டு, கன்மலையின் தண்ணீரைக் குடித்து, ஆவிக்குரிய ஆசீர்வாதங்கள், நன்மைகளைப் பெற்று நாற்பது ஆண்டுகளாக கடும் பிரயாணத்தில் தேவனுடைய பல அற்புதங்களையும், அதிசயங்களையும் கண்டனுபவித்து கானானின் ஓரமாக நதிக்கரை ஓரமாக வந்திருக்கிறார்கள். நதியை தாண்டினால் கானான் [எண். 33:49].

பிலேயாம், பாலாக்கை பிரியப்படுத்த ஒர் துர் உபதேசம் அவனுக்குச் சொல்லிக் கொடுத்தான். இஸ்ரவேல் ஜனங்களை யாரும் அழிக்க முடியாது; ஜெயிக்க முடியாது. ஆனால் தேவனே அவர்களை அழிக்க, அவர்களை தண்டிக்க நான் ஒரு வழி சொல்லுகிறேன். உங்களுடைய கடவுளுக்கு நீங்கள் பண்டிகை என்று கொண்டாடி, அதிலே பலிவிருந்துகள் ஏற்பாடு செய்து; இஸ்ரவேலர்களை அந்த விருந்துக்கு அழைத்து உங்

களானைய விக்கிரக ஆராதனையில் கலந்து கொள்ளும்படி கூப்பிடுங்கள். அதன் மூல மாக அவர்கள் விக்கிரக ஆராதனை செய்து, வேசித்தனம் செய்து, பாவம் செய்து, வீழ்ச்சி அடைவார்கள்; இறைவன் அவர்களை தண்டிப்பார் இவ்விதமாய் இவர்கள் மூறிய அடிக்கப்படுவார்களென்று பிலேயாம் ஆலோசனை சொன்னான். மோவாபியர், விக்கிரக ஆராதனையில் அருவருப்பான காமவிகார நடவடிக்கைகள் அந்த மதத்தினு டைய கொள்கையாகும். விக்கிரகாராதனைமதங்களெல்லாம் காமவிகாரத்தோடு சம்பந்தப் பட்டிருக்கிறது. அது அவர்களுடைய கலாச்சாரம், தேவஜனங்களை அந்த பாவத்தினால் விழ்த்தும்படியாய் சாத்தான கிரியை நடப்பிக்கிறான். அவர்கள் விருந்துண்டு அந்த ஜனங்களோடு கூட கலந்து விபச்சாரம் செய்தார்கள்.

இந்நாட்களிலேயும், அன்பு என்கிற பெயரிலே அசுத்த வாழ்க்கை, காமவிகார நடக் கைகள் நிறைந்து போய்க்கொண்டிருக்கிறதை நாம் பார்க்கிறோம். இது பிலேயாமின் உபதேசம் என்றும்; யேசபேலின் தீர்க்கதரிசன ஊழியம் என்றும்; வேதாகமத்தில் குறிப் பிடப்பட்டுள்ளது [எண். 31 16; வெளி. 2:14,20]. அவிக்குரிய வாழ்க்கையிலிருந்து மனி தனை விழச்செய்யும்படியாய் சாத்தான் கையாடுகிற கடைசி ஆயுதம் ஸ்திரீகளாம். இதி னிமித்தம் நாலாயிரம் தலைவர்கள் மோசேயினால் தூக்கிலிடப்பட்டார்கள்; கொலை செய்யப் பட்டு மரத்திலே தூக்குதண்டனை அவர்களுக்கு நிகழ்த்தப்பட்டது [எண். 25:4]; ஆங்கில வேதாகமத்தைப் பார்க்கவும்

நியாதிபதிகளுக்கு, மோசே கட்டளையிட்டார். அப்படி செய்தவர்களையெல்லாம் கொலை செய்து போடுங்கள் என்று; அவ்விதமாய் கொலை செய்யப்பட்டவர்கள் 23000 பேர். இதில் தலைவர்கள் 1000 பேர் சேர்த்து இருபத்தி நாலாயிரம் பேர் [1 கொரி. 10:8; எண். 25:9]. இது பிலேயாமின் வழியென்று சொல்லப்படுகிறது. செம்மையான மார்க்கத்தை, சுத்தமான உபதேசத்தை வெறுத்து, விபச்சாரம் செய்ய வழி தேடுகிற தவறான மார்க்கத்திற்கு பிலேயாமின் வழி என்றும், செம்மையான வழிவிட்டு பின்மாறி போகுதல் என்று அர்த்தம் [2 பேது. 2:16]. எப்போதுமே விக்கிரக ஆராதனையோடு கூட போஜனமும், கிண்டலும், பாட்டும், கூச்சலும், கும்மாளமும், பலவிதமான கேளிக் கைகளும், ஆடல், பாடல் சத்தமும் காமவிகார நடவடிக்கைகளும் உண்டாயிருக்கும் [யாத். 32:1 6,18,19].

மோவாபிய குமாரத்திகள் மிகவும் சௌந்தர்யமும், அழகுமுள்ளவர்களுமாய் இருந் தார்கள். அவர்கள் அழைப்பு இஸ்ரவேலின் வாலிபர்களையும், தலைவர்களையும் அழைத்து வரச்செய்து விக்கிரக ஆராதனைக்கு படைக்கப்பட்டவைகளை புசிக்கச்செய்து வேசித் தனத்திற்கு வழிநடத்தினார்கள். அநேகம் தங்கள் வேசித்தன நடக்கையினால், தாங் களுக்கு பக்தர்களை கூட்டினார்கள். ஒருமனிதனிடம் இப்படி கேள்வி கேட்கப்பட்டது நீர் வெள்ளைக்காரனாயிருந்து இப்படி இந்த மதத்திலே சேர்ந்து இப்படி மொட்டையடித் துக் கொண்டு வேஷம்போட்டு திரிகிறீயே! என்ன விசேஷம் என்று கேட்ட போது அதெல்லாம் ஒன்றுமில்லை யாது (ENJOY) ஆக இருக்கிறதற்கும் சந்தோஷப்படுவதற்கும் வாய்ப்பிருக்கிறது; அதற்காக இப்படி வேஷமாறியிருக்கிறேன் வேறு ஒன்றுமில்லை என பதில் சொன்னார் அந்த மனிதர். ஆம் விக்கிரகாராதனையோடு வேசித்தனம் சம்பந்தப் பட்டிருக்கிறது. பிசாசினுடைய உபதேசத்தை பின்பற்றுகிறவர்களெல்லாரும் வேசித்தனத் திலே விழுவார்கள். கானானில் காலூன்ற பிரவேசிக்கபோகிற சமயத்திலே வேசி தனத்திலே விழுந்தார்கள்; இருபத்தி நாலாயிரம் பேர் செத்தார்கள். இந்த தீமைக்கு

தேவ ஜனங்கள் விலகியிருப்பது தேவ கிருபையினால் மாத்திரமே. சுத்தமான உபதேசமும், மெய்தேவ ஆராதனையும் பரிசுத்தத்தைக் கொடுக்கும். இல்லையெனால் வீழ்ச்சி யுண்டாகும்.

## எண். 25:4-8

இந்த பாவத்தில் அநேகம் பேர் கிட்டத்தட்ட ஆயிரம் தலைவர்கள் வேசித்தனத்தில் சம்பந்தப்பட்டிருந்தார்கள் அவர்களுக்கு மோசே தூக்கு தண்டனை போட்டார். நியாயாதிபதிகளை நோக்கி: இவ்விதமாய் பாவஞ்செய்கிறவர்களையெல்லாம் கொன்று போடுங்கள் என்று கட்டளையிட்டார். இப்படி இருக்கும்பொழுது மீதியானிய ஸ்திரீ ஒருத்தியை இஸ்ரவேலின் தலைவரிலொருவன் பாளையத்துக்குள் அழைத்து கொண்டு வந்து அவனுடைய கூடாரத்தில் அவளை கொண்டுபோய், அவர்கள் இருவரும் சேர்ந்திருக்கிறதை கண்ட பினெகாஸ் கோபங்கொண்டெழுந்து ஒரு ஈட்டியை எடுத்துக் கொண்டுபோய் இரண்டுபேரையும் சேர்த்து ஊடுருவ குத்திகொன்று போட்டார். இதினிமித்தம் இஸ்ரவேலிலுண்டான தேவக்கோபம் நீங்கிற்று. அவ்விதமான பாவம் செய்த அந்த மனிதனுடைய பெயர் சிம்ரி. அவன் சிமியோனின் வம்சத்தில் ஒரு பிரபுவாயிருந்தவன். அந்த ஸ்திரீயின் பெயர் கஸ்பி. அவளுடைய தகப்பன் மீதியானுடைய தகப்பனும் ஜனங்களுக்கு தலைவனும் இருந்தான் அவன் பெயர் சூர்.

சூரின் குமாரத்தி கஸ்பி. இது பிலேயாமின் வஞ்சனையான போதனை இந்த போதனை எங்கும் பரவி வருகிறது. மதம், கூட்டம், கொண்டாட்டம் என்கிற பெயரிலே வேசித்தனம் பண்ணும்படியாய் சாத்தான் தூண்டுகிறான். மெய்யானத் திருச்சபை மாத்திரம் இந்த பாவத்திலிருந்து மக்களை விடுதலையாக்கும். பாவம் நிகழாமல் தடுக்கும். அப்படியே மீறுதல் செய்கிறவர்கள், சபை நீக்கம் செய்யப்பட்டு விரட்டப்படுவார்கள் 1 கொரி. 5ம் அதிகாரம் எலேயாசார் இவ்விதமாக தேவனுக்கு பக்திவைராக்கியம் காட்டியதினிமித்தம் ஆசாரிய உடன்படிக்கை உண்டாயிற்று [எண். 25:10-12] வேதாகமத்தில் காணப்படுகிற உடன்படிக்கையில் இதுவும் ஒன்றாகும் தேவன் ஆசாரியருடன் உடன்படிக்கை செய்திருக்கிறார் அவர்கள் கர்த்தருக்காக வைராக்கியமுள்ளவர்களாய் இருக்க வேண்டும். பரிசுத்த வாழ்வு வாழவேண்டும், வேதத்தைப் போதிக்க வேண்டும் (மல் 2:4,5) பிலேயாம் இவ்விதமான துர்போதனை கொடுத்து சாத்தானுடைய கருவியாய் செயல்பட்ட நிமித்தம் அவனும் கொலை செய்யப்பட்டான் [எண். 31:8]

அவனை குறித்து பரிசுத்த ஆவியானவர் குறிப்பிடும் போது இஸ்ரவேல் ஜனங்கள், எதிரிகள் எல்லாரையும் வெட்டும்பொழுது குறிசொல்லுகிறவனாகிய பிலேயாமையும் வெட்டிக் கொன்றார்கள் என்று நாம் (யோசு 13:21,22)ல் வாசிக்கிறோம். நல்ல தீர்க்கதரிசியாயிருந்தான்; பொருளாசைக்கும் மாம்சத்துக்கும் இடங்கொடுத்து தேவனுடைய ஜனத்தை பகைத்தான்; சாத்தான் அவனுக்குள் புகுந்தது. அவன் குறிசொல்ல ஆரம்பித்தான்.

இந்நாட்களிலும் அநேகர் தீர்க்கதரிசனம் என்று சொல்லுகிறார்கள்; இவர்களுடைய முடிவும் இப்படியே இருக்கும். இந்த அசுத்த ஆவிகள் வேசித்தனத்துக்கு நடத்தும். அதற்கு ஆதாரமாயிருக்கும்; பரிசுத்தத்தை வெறுக்கிற ஜாதிகளுமுண்டு.

[தொடரும்]

# மகதலேனா மரியாளுடைய அன்பு

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இவ்வுலகில் ஊழியம் செய்து கொண்டிருக்கும்போது அநேகம் பெண்களும அவருக்கு பின் சென்று ஊழியம் செய்து கொண்டு வந்தார்கள். அவர்களில் சிலருடைய பெயர்கள் மாத்திரமே வேதாகமத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. அநேகம் ஸ்திரீகள் வியாதியிலிருந்தும் பொல்லாத ஆவிகளிலிருந்தும் இயேசுவால் விடுவிக்கபபட்டவர்கள் [லூக் 8:2,3]. இவர்கள் எல்லோரையும் பார்க்கிலும் மகதலேனா மரியாள் இயேசுவின் மேல் அதிகம் அன்புள்ளவளாயிருந்தாள்

இயேசு இவ்வுலகில் ஊழியம் செய்த போது அநேக அற்புத அடையாளங்கள் செய்து மக்கள் சுபிட்சமாக வாழ உதவி செய்தார். அவர் செய்த நன்மைக்கு அநேகர் நன்றியுடையவர்களாயிருந்தார்கள். அநேகர் நன்றிக்கெட்டவர்களாயிருந்தார்கள்; [10 குஷ்டரோகிகளில் ஒருவனே வந்து தேவனை மகிமைபபடுததினன் லூக். 17:11-19]. நன்றியுள்ளவர்களாய் இருந்தவர்களில் இந்த மகதலேனா மரியாள் அம்மாளும் ஒருவர். இவள் ஒன்றும், ஒரு பெரிய பரிசுத்தவாட்டி அல்ல ஆனால் கர்த்தர் இவளுக்கு இறங்கி அவளிடத்திலிருந்து ஏழு பிசாசுகளை துரத்தவிட்டார் [மாற் 16,9,10; லூக். 8 2]

தேவன் தனக்கு செய்த நன்மையை எண்ணி இவள் தனது வாழ்க்கையையே கர்த்தருக்கு ஊழியம் செய்ய அர்ப்பணித்து விட்டாள். மக்தேலா என்று சொல்லபபட்ட ஒரு ஊரில் இவள் இருந்தபடியால் இவளுக்கு மகதலேனா மரியாள் என்ற பெயர் வழங்கபபட்டிருந்ததாக தெரிகிறது. மேலும் இவள் ஒரு கனம்பொருந்திய ஸ்திரீயாகவும் தெரிகிறது தங்கள் ஆஸ்திகளால் இயேசுவுக்கு இந்த ஸ்திரீகள் ஊழியஞ் செய்து கொண்டு வந்தார்கள் [லூக். 8:3]

இந்த பெண்கள் ஆண்டவராகிய இயேசுவுக்கு என்ன ஊழியம் செய்தார்கள் என்று நாம் அறியாவிட்டாலும் இவர்கள் இயேசுவானவர் செல்லும் இடங்களுக்கெல்லாம் அவரோடே கூடவே சென்றதாக வேதம் கூறுகிறது. புதிய ஏற்பாட்டின் புதுமை பெண்ணாக நாம் மகதலேனா மரியாளை எடுத்துக் கொள்ளலாம். இந்த அம்மாளைப் பற்றி வேதத்திலுள்ள சில குறிப்புகளை கவனிப்போமாக!

a. ஏழு பிசாசுகள் நீங்கினபடியால் அதிகம் அன்பு செலுத்தினால் (லூக். 8:2).

b. தன் ஆஸ்திகளைக் கொண்டு இறைவனுக்கு ஊழியம் செய்தாள் (லூக். 8:2)

c. எங்கும் அவருக்கு பின் செல்ல தீர்மானித்தாள் (கல்வாரி வரையில்) [லூக். 8:3].

d. இயேசுவுடனே கூட கலிலேயாவிலிருந்து எருசலேமுக்கு வந்தாள் (லூக் 27 55,56).

e. இயேசுவின் பாடுகள் அத்தனையும் நேரில் கண்டாள் [மத். 27:55]

f. இயேசுவை அடக்கம்பண்ணின கல்லறையை பார்த்தாள் (மாற். 15:47) சாயங்காலமான பின்பும் கூட அதற்கெதிரே உட்கார்ந்தாள் (மத். 27.61).

g. தன் ஆண்டவருக்கு மூன்றாம் நாளில் சுகந்தவர்க்கம் இடவேண்டிய அவசியம் தினமே அதை ஆயத்தம் செய்தாள் (வாசனை வைத்தாள் [லூக். 23:55,56].

h. கற்பனையின்படி ஓய்வு நாளில் ஓய்ந்திருந்தார் (லூக் 23:56).

i. அதிகாலமே எழுந்து கல்லறையினிடத்திற்கு வந்தாள் [மத். 28 1].

புது வருட செய்தி:

# பேழைக்குள் வாருங்கள்!

பேழை ARK: நோவா காலத்தில் ஜலப்பிரளயமுண்டானபோது நோவாவும் அவனோடிருந்தவர்களும் இரட்சிக்கப்பட்ட கப்பல் [ஆதி.6:14-22; எபி.11:7]. தண்ணீரின் மேல் ஓடும்படிக்கல்ல, அதின் மேல் மிதக்கும்படிக்கே பேழை செய்யப்பட்டபடியால் அதற்கு சுக்கானும, பாய் மரமும், துடுப்பும் இருந்ததில்லை. வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிற அத்தனை ஜீவ ஜந்துக்களையும்; அவைகளுக்கேற்ற உணவுகளையும் பேழை அடக்கிக் கொள்ளுமா என்று சிலர் கேட்கிறார்கள். இதனாலே அவர்களுடைய அறியாமை தோன்றுகிறதல்லவா?

அந்தப் பேழை 300 முழ நீளம், 50 முழ அகலம், 30 முழ உயரமுமாய் 3 தட்டுகளுள்ளதுமாய் இருந்தது. அந்த அளவை இப்பொழுதிருக்கிற பெரிய யுத்தக் கப்பல்கள் ஒன்றின் அளவோடு ஒத்துப் பார்க்கிறபோது அப்படிப்பட்ட கப்பல்களில் 13 கப்பல்களிலே வைக்கப்படுகிற சாமான்களை அந்த ஒரே பேழை அடக்கிக் கொள்ளுமென்று தோன்றுகிறது. அந்த கணக்கின்படி 1800 பெரிய பீரங்கிகளும் யுத்த சாமான்களுமல்லாமல் 20000 மனிதர்களும் 6 மாதத்திற்கு அவர்களுக்கு வேண்டிய தின்பண்டங்களும் அதிலே இருக்கலாம். ஆதலால் 8 பேர்களும் ஏறக்குறைய 250 ஜோடு மிருகங்களும், பட்ஷிகளும், பூச்சிகளும், பன்னிரண்டு மாதத்திற்கு அவைகளுக்கு வேண்டிய உணவும் அந்தப் பேழையில் இருக்கமுடியும்.

2. இயேசுகிறிஸ்துவின் திருச்சபை பாவிகளுக்கு அடைக்கலமானபடியால் பேழை என்னப்படுகிறது.

3. பரம ஞானம், பேழையை உண்டுபண்ணினதுபோலக் கிறிஸ்துவினாலுண்டான இரட்சிப்பும், பரம ஞானத்தாலுண்டாகிறதினாலும் ஆதி 6: 14-16. 1 பேது 1:20 பேழையிலிருந்தவர்களுக்கு வேண்டியதெல்லாமிருந்ததுபோல விசுவாசிகளுக்குத் திருச்சபையில் வேண்டிய நன்மைகளிருக்கிறபடியினாலும் ஆதி 6 21; ஏசா 55:2; எபி 5:9

4. பேழையிலிருந்தவர்களெல்லோரும் இரட்சிக்கப்பட்டது போலக் கிறிஸ்துவை விசுவாசித்துத் திருச்சபைக்குட்படுகிற எல்லாரும் இரட்சிக்கப்படுகிறபடியாலும் நீதி. 1:10; ஏசா 26 20,21; 28:16. 1 பேது 2:6,8; அப். 2 47. கிறிஸ்துவின் திருச்சபை பேழை எனப்படுகிறது.

இந்தக் கடைசி காலத்தில் திருச்சபையாகிய பேழையைக் கட்ட தேவன் ஒருவருக்குக் கட்டளையிட்டிருக்கிறார். வேறு ஒருவருக்கும் தேவன் கட்டளையிடவில்லை. அவருக்கே அந்திபார அளவை எட்ட திட்டங்களைத் தேவன் வெளிப்படுத்தியிருக்கிறார் கிறிஸ்து தரிசனமாகி ஒப்புக்கொடுத்து அதிகாரப்படுத்தி கட்டளையிட்டிருக்கிறார். வாருங்கள் வந்து "புதிய எருசலேம் சபையில்" சேருங்கள். "நோவாவும் அவனோடே பேழையிலிருந்த உயிர்களும் மாத்திரம் காக்கப்பட்டன"

(ஆதி. 7:23).

J. கர்த்தருடைய சரீரத்தை காணுமல் அதை சீஷர்களுக்கு அறிவிக்க ஓடினுள் [யோவா. 20:1,2].

K. பேதுருவும், யோவானும் திரும்பி தங்கள் வீடுகளுக்கு சென்றபின்பும் இயேசுவின் சரீரத்தை காண வாஞ்சித்து அங்கே நின்று அழுதாள் (யோவா. 20:10,11).

L. தேவ தூதர்களிடம் தன் ஏக்கத்தை தெரிவித்தாள் [யோவா. 20:12,13].

M. இயேசுவை தோட்டக்காரர் என்றெண்ணி என் ஆண்டவரை நான் போய் எடுத்துக் கொள்ளுவேன் என்று அவரிடமே கூறினுள் (யோவா. 20:14,15).

n. உயிர்த்தெழுந்த கர்த்தரை முதலாவது தரிசிக்கும் கிலாக்கியத்தை பெற்ருள் [மாற். 16:9,10].

0. இது கர்த்தருடைய சத்தம் என்று அறிந்தவுடனே 'ரபூனி' என்று அவரை அழைத்தாள் (யோவா. 20:16).

P. தான் கர்த்தரை தரிசித்ததை குறித்து சீஷர்களுக்கு அறிவிக்க ஓடினுள் (யோ. 20:18).

மேலே குறிப்பிட்டுள்ளவைகளில் பல ஆவிக்குரிய அர்த்தங்கள் அடங்கியுள்ளன.

1. அவள் இருளின் அதிகாரத்திலின்று ஆச்சரியமான ஒளியினிடத்துக்கு வரவழைக்கப்பட்டாள். நாமும் முன் சாத்தானுக்கு அடிமைகளாயிருந்தோம்; இப்பொழுது இயேசு கிறிஸ்துவின் இரத்தத்தின் மூலம் தேவனுடைய பிள்ளைகளாகும் கிலாக்கியத்தை பெற்றுள்ளோம்.

2. தனக்குண்டான எல்லாவற்றையும் கிறிஸ்துவினுடைய பணிக்கென்றே செலவிட்டாள். ஒன்றையும் அவள் தனக்கென்று வைத்துக் கொள்ளவில்லை. நாமும் அப்படி செய்வோமாக!

3. இறைவனுகிய இயேசு எங்கு செல்கிருரோ அங்கேயே செல்ல அவள் தீர்மானித்தாள். அவள் முழுவதுமாக இறைவனை பற்றிக் கொண்டாள்.

4. கலிலேயாவிலிருந்து இயேசு எருசலேமுக்கு வந்தபோது, அவருடனேயே கூட எருசலேமுக்கு வந்து அங்கு இறைவனுக்கு ஏற்பட்ட எல்லா பாடுகளையும் அவள் நேரில் கண்டாள். நாமும் அடிக்கடி இயேசுவின் பாடுகளை கண்முன் நிறுத்தி அதை தியானிக்க வேண்டும்

5. கடைசி வரை தன் ஆண்டவரை என்ன செய்யப்போகிருர்கள், எங்கே அடக்கம் பண்ணப்போகிருர்கள் என்பதை காண வாஞ்சையாயிருந்து அதை கண்ட பின்பே வீட்டிற்கு திரும்பினுள். நகரத்தின் புறம்பே அந்த சாயங்கால வேளையில் பயம் ஏதுமின்றி அவள் கல்லரையருகே உட்கார்ந்திருக்கிறதை நாம் சிந்திக்கும்போது "பூரண

## பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| ELd Bro. M. சாதுசுந்தர்சிங் | Sis. T. எஸ்தர் ராணி | கோவில்பட்டி | 2-11-95 |
| Bro எபிநேசர் | Sis ஜெபா கிறிஸ்து மேரி பாய் | J. மெட்டூர் | 14-11-95 |

அன்பு, பயத்தை புறம்பே தள்ளும்'' என்கிற வசனம் எவ்வளவு உண்மையுள்ளது என்பதை உணரலாம்.

6. மறுநாள் ஓய்வுநாள் அதினால் அன்றைய தினமே சுகந்தவர்க்கம் வாங்கி ஆயத்தம்பண்ணி வைத்தாள். கிறிஸ்துவின் சரீரமாகிய சபையை வாசனை வீச செய்ய நாம் என்ன பிரயாசம் எடுக்கிறோம்? அவருடைய சரீரம் பாதுகாக்கப்பட வேண்டும் என்று அவள் விரும்பினாள். நாம் சபையை பாதுகாக்க ஏதேனும் முயற்சிகள் எடுக்கிறோமா? நாளை ஏதும் செய்ய முடியாமல் போய்விடும் இன்றே நீ எண்ணுவதை செய்து முடித்து விட்டாயானால் உனக்கு நலம்

7. கற்பனையை அவள் கடைபிடித்தாள். நாம் அப்படி செய்கிறோமா? அல்லது அது ஏனோதானோவென்று இருக்கிறோமா? தேவன் நமக்கு கிருபையின் காலம் கொடுத்திருக்கிறார். அதற்காக நியாயப்பிரமாணம் மீறப்பட கூடாது. அது இல்லாவிட்டால் பாவம் இன்னதென்று நான் அறிந்திருக்க முடியாதே என்று அப். பவுல் கூறுகிறார்.

8. அவள் அதிகாலமே எழுந்து ஆண்டவருடைய சரீரத்தை காண சென்றாள். நாமும் அதிகாலமே இறைவனை தரிசிக்க கற்றுக் கொள்ள வேண்டும்

9. சரீரம் இல்லையென்று கண்டபோது அதை ஓடிப்போய் சீஷர்களுக்கு அறிவித்தாள் அவர்களாகிலும் அதை தேடுவார்கள் என்று எண்ணினாள்; என்னே அவளுடைய அன்பு!

10. சீஷர்கள் துக்கத்தோடு இயேசுவின் சரீரத்தை காணாமல் தங்கள் இடங்களுக்கு சென்றுவிட்டபோதும் இவள் விடாப்பிடியாக அங்கே நின்று அழுதுக்கொண்டிருந்தாள். அவளுடைய ஒரே வாஞ்சை மரித்த தன் ஆண்டவருடைய சரீரத்தை எப்படியாவது பார்த்து அதற்கு சுகந்தவர்க்கமிட வேண்டும் என்பதே! அவள் தன் குறிக்கோளை நிறைவேற்ற மிக கடுமையான பிரயாசயெடுத்தாள்; நாம் அப்படி இருக்கிறோமா?

11 தன்னிடத்தில் விசாரித்த தேவ தூதர்களிடம் தன் மனதின் ஏக்கத்தை தெரிவித்தாள், நீ என்ன தேடுகிறாய் என்பதை ஊழியக்காரரிடத்தில், உன்னை விசாரிக்கிறவரிடத்தில் சொல்லி விடு.

12. இயேசுவிடமே அவருடைய சரீரத்தை கேட்டாள், ஏனெனில் அவரை தோட்டக்காரர் என்று எண்ணியிருந்தாள் அவர் பேசும் போது, அவளிடத்தில் விசாரிக்கும் போது அவள் அவரை அறிந்து கொள்ளவில்லை. அவர் மரித்து விட்டபோதும் என்

## ஞானஸ்நானம்

23-11-95 அன்று தலைமை சபை (பம்பாய்) யில் 10 பேர்கள் திருமுழுக்கு பெற்று திருச்சபையாய் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள் என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

ஆண்டவரை வைத்த இடத்தை எனக்கு சொல்லும், நான் போய் அவரை எடுத்துக் கொள்ளுவேன் என்றாள். அவள் உண்மையாகவே அவரை எல்லோரை காட்டிலும் அதிகம் நேசித்தாள்.

13. தன்னுடைய பெயரை சொல்லி கூப்பிட்ட உடனேயே இவர்தான் நம் ஆண்டவர் என்று அறிந்து 'ரபூனி' என்றாள். அவர் உயிரோடிருந்தபோது ஒரு வேளை அவளை பெயர் சொல்லி கூப்பிட்ட சத்தத்திலே இயேசு அவளை அழைத்திருக்கலாம். தேவன் நம்மை பேர் சொல்லி அழைக்கிறாரா என்று கவனமாய் கவனிக்க வேண்டும். சாமுவேல் சிறுவயதிலே இறை சத்தத்தை கேட்கும் சிலாக்கியத்தை பெற்றார். நாமும் ஆண்டவர் நம் பெயரை சொல்லி அழைக்கத்தகாத அவரிடம் அதிக அன்பு செலுத்துவோமாக!

14. இவளுடைய வாஞ்சையை கர்த்தர் கண்டு முதலாவது இவளுக்கே தரிசனமானார். மரித்துப்போன ஆண்டவருடைய சரீரத்தை காண வாஞ்சித்து அவரை உயிருள்ளவராக அவள் கண்டு பிறருக்கு சாட்சி கூறும் ஒரு மாபெரும் சிலாக்கியத்தை அவள் பெற்றுக் கொண்டாள்; நாமும் இப்படிப்பட்ட மேன்மையானதை தேடுவோமாக!



## புதிய சந்தா அறிவிப்பு

*1996* - முதல் "புதிய எருசலேம் செய்திக்கு" ஆண்டு சந்தா விபரம்:-

ஒரு ஆண்டு சந்தா: உள்நாடு [இந்தியா] Rs. 30/=
வெளிநாடு Rs. 400/=

ஆயுள் சந்தா: உள்நாடு [இந்தியா] Rs. 2000/=
வெளிநாடு Rs. 8000/=

பேப்பர் விலையேற்றமும், பத்திரிக்கை தயார் செய்து அனுப்புவதிலும் செலவு அதிகப்பட்டிருக்கிறபடியினால் வாசகர்கள் இந்த புதிய சந்தா அறிவிப்பை ஒரு பொருட்டாக எண்ணமாட்டீர்கள் என்று எண்ணுகிறோம். இறைபணியாகிய இந்த எழுத்துப்பணியில் நீங்களும் பங்குபெற்று ஊழியத்தை தாங்கும்படி கேட்டுக்கொள்ளுகிறோம். ஆயுள் சாந்தாவை 3 அல்லது 4 தவணைகளில் செலுத்தலாம், மொத்தமாய் செலுத்துகிறவர்களுக்காகவும் கர்த்தரை ஸ்தோத்தரிக்கிறோம்; "உங்கள் பலன் பெருகும்".

## ஆங்கில இதழ்

1996 முதல் புதிய எருசலேம் சபையிலிருந்து "New Jerusalem News" என்ற ஆங்கிலப் பத்திரிக்கை வெளியிடப்படவிருக்கிறது. பத்திரிக்கை தேவையானோர் தங்கள் விலாசத்தை

**"NEW JERUSALEM NEWS"**
**Post Box 17730,**
**Bhandup, Bombay 400078.**

என்ற விலாசத்திற்கு அனுப்பி தங்களுடைய பெயர்களை பதிவு செய்து கொள்ளும்படி கேட்டுக் கொள்ளுகிறோம்.

நமக்கு விரோதமாக பேசுவதும், செயல்படுவதும், நீதிக்கேடு செய்வதும், பாவம் செய்வதையும் காணும்போது, நமக்குள் எரிச்சலும், கோபமும், வழக்குகளும், சண்டைகளும், கசப்பும், பகைமையும், பொறுமையும், பழிவாங்கும் உணர்வுகளும், இப்படி பலவித உணர்ச்சிகளுக்கு நாம் கீழ்ப்படுத்தப்படுவதுண்டு. இதனால் நமது சமாதானம் கெட்டு, நித்திரை கெட்டு, சுகவீனம் அடையவும், நமது வேலைகளை சரிவர செய்யாமலும் போவதால் நாமே அதிக நஷ்டத்திற்குள் ஆவோம்.

பொதுவாக ஒருவர் பேரில் நாம் குறைகூறுவதால் நமக்குள்ளே அதாவது நம் மனதுக்குள்ளே ஒரு நியாய விசாரணை நடத்துவதும், வழக்கிலே எதிராளியை குற்றவாளியாகத் தீர்ப்பதும், தண்டனையை நிறைவேற்றுவதுமான செய்கையோ, நம் மனதுக்குள்ளே ஒரு யுத்தத்தை [War] நடத்துகிறோமென்றாலோ, நிச்சயமாக அது தேவனால் உண்டானதல்ல. நமக்கென்னவோ நாம் சரியாகத்தான் செய்கிறோம் என்று பெருமைப்பட்டுக் கொள்ளலாம். ஆனால் யாக்கோபோ இது லௌகீக சம்பந்தமானதும், ஜென்ம சுபாவத்துக்குரியதும், பேய்த்தனத்துக்கடுத்ததாயும் இருக்கிறது என்று பரிசுத்த ஆவியினால் சொல்லுகிறார் [யாக். 3:14,15].

ஒரு சகோதரன் எனக்கு விரோதமான சில கிரியைகள் செய்திருந்தார். எனக்கோ மிகவும் எரிச்சலாக இருந்தது. இரவிலே நான் ஜெபம்பண்ண முழங்கால் போட்டு, கர்த்தரை ஸ்தோத்தரித்து, ஆவியினால் நிரம்பி பல பாஷைகளைப் பேசி, விண்ணப்பங்களை ஏறெடுத்துக் கொண்டிருக்க ஆவியானவரும் ஒத்தாசை செய்து, எனக்குள்ளிருந்து ஆமென் என்றும், அல்லேலூயா என்றும் சொல்லிக் கொண்டிருந்தார். ஜெபம் நடந்து கொண்டிருக்கையிலே அந்த சகோதரன் செய்த காரியம் நினைவில் வரவே, ஜெபத்தை விட்டுவிட்டேன், என் இருதயத்தில் சகோதரனுக்கு விரோதமாக யுத்தத்தை ஆரம்பித்தேன். சகோதரனுக்கு விரோதமாக தேவனிடம் முறையிட ஆரம்பித்தேன் நீண்ட நேரம் சென்றது. யுத்தம் ஓயவில்லை. இந்த யுத்த வேளையில் ஆவியானவர் போன இடம் தெரியவில்லை, வல்லமையுமில்லை, ஆமெனும் இல்லை, அல்லேலூயாவுமில்லை. கர்த்தர் நீண்ட நேரம் மவுனமாகிவிட்டார். பின்னர் அமைதியாக சொன்னார்,

"கிறிஸ்து இவனுக்காகவும் மரித்தாரே" என்று. உடனே ஆவிக்குரியவனான எனக்கு அறிவு வந்தது; என் விண்ணப்பம் நேர் எதிரிடையானது; கர்த்தாவே இந்த சகோதரனை ஆசீர்வதியும், அவனுடைய அறிவீனத்தைப் பொறுத்தருளும், அவனை நல்வழிப்படுத்தும், இவனுடைய துர்க்கிரியைகளைத் தாங்க பெலன் தாரும் என்று ஜெபத்தைத் திருப்பிய மாத்திரத்தில்; போனவர் வல்லமையோடு திரும்பி வந்தார். மீண்டும் ஆவியினால் நிரப்பப்பட்டேன். சமாதானம் உண்டானது, சந்தோஷமும் அடைந்தேன என்கிறார் ஒரு சகோதரர்

இதுவல்லவோ சுத்தமுள்ளதும், சமாதானமும், சாந்தமும், இணக்கமுள்ளதும், இரக்கத்தாலும், நற்கனிகளால் நிறைந்ததும், பட்சபாதமில்லாததும், மாயமற்றதுமான பரத்திலிருந்து வருகிற தேவ ஞானம் [யாக். 3:17].

நாம் யோக்கியமாக நடந்து கொள்கையில் யாதாமொருவன, தீமை செய்வானால், தீமைக்கு தீமைசெய்து பழிவாங்க நினையாமல், அந்த வேலையை கர்த்தரை செய்ய சொல்லி விட்டு, நாம் சமாதானமாக இருக்க வேண்டுமென்கிறார் அப்

பவுல் ரோம. 12:17-19 மற்றவர்களைக் குறித்து நமக்கு சமாதானம் கெட்டுப் போவதற்கு இரண்டு காரணங்கள் உண்டு.

1. தப்பாக புரிந்து கொள்ளுதல்.

2. மற்றவர்களின் நிலை அறியா தன்மை

நம்மை சூழ்ந்து இருக்கிற மனிதர்களை நாம் அறிந்த அறிவு. நாபால் என்றொரு பைத்தியம் இருந்தது. அவனை ஒரு பெரிய மனுஷன் என்று தாவீது எண்ணி, உபகாரம் பல, செய்து வந்தார் ஒரு நாள் உபகாரம் செய்துள்ளோமே என்று, உதவி கேட்டுப் போக, நாபால் தாவீதின் மனுஷரை நன்றாக வைத்து, திரும்பி அனுப்பி விட்டான். தாவீதுக்கு பயங்கர ஆத்திரம் வந்தது. கொலை வெறி உண்டானது. நாபாலை பழிவாங்க தீவிரமாய் இறங்கி வந்தார். வழியிலே நாபாலின் மனைவி தாவீதை சந்தித்து, நாபால் ஒரு பைத்தியம் என்று விளங்கச் செய்தாள். தாவீதின் கோபம் தணிந்து சமாதானத்தோடே திரும்பி போய் விட்டார். பைத்தியத்தைக் கர்த்தர் அடித்தார். பைத்தியம் பத்து நாளில் செத்துப் போய் விட்டது [1 சாமு. 25ம் அதிகாரம்].

யார் மீது உனக்கு கோபம்?

யார் மீது உனக்கு எரிச்சல்?

யார் மீது உனக்கு கசப்பு?

யார் மீது உனக்கு அங்கலாய்ப்பு?

யார் மீது உனக்கு வெறுப்பு?

யார் மீது உனக்கு வழக்கு?

யார் மீது உனக்கு பகை?
உனக்கு சமாதானம் உண்டாவதாக.

ஏன் இப்படிச் செய்கிறார்கள தெரியுமா? அவர்கள் மனுஷ ரூபத்திலுள்ள பிசாசுகள் (யோவா. 6:70). முட்செடி போய் திராட்சப்பழம் தேடி கிடைக்கவில்லை என்று கோபமடைந்து; கையினால் பிய்த்து எரியலாமா? கர்த்தர் அதை சுட்டெரிப்பார்.

ஏன் இப்படி எதிரிடையாக பேசுகிறார்கள் தெரியுமா? அது அவர்கள் ஜென்ம சுபாவம் [1 கொரி. 2.14). ஐயோ முள் குத்துகிறதே என்று எரிச்சலடையலாமா? கர்த்தர் அதை அகற்றி விடுவார் [யூதா18,19].

ஏன் இப்படி அநியாயம் செய்கிறார்கள் தெரியுமா? கர்த்தர் தீங்கு நாளுக்கென்று அவர்களை உருவாக்கி இருக்கிறார் [நீதி. 16:4].

(தொடரும்)

✻ ✻

"தேவ சமாதானம் உங்களுடைய இருதயங்களில் ஆளக்கடவது: இதற்கென்றே நீங்கள் ஒரே சரீரமாக அழைக்கப்பட்டீர்கள் நன்றியறிதலுள்ளவர்களாயுமிருங்கள் [கொலோ. 3:15].

✻ ✻

